# ஆங்கிலேயரின் சமுதாய வரலாறு-I

## (English Social History - I)

ஆசிரியர்

ஜி. எம். டிரெவெலியன்

தமிழாக்கம்

சி. ஈ. இராமச்சந்திரன்




தமிழ் வெளியீட்டுக் கழகம்

தமிழக அரசு

தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண் — 176

# ஆங்கிலேயரின் சமுதாய வரலாறு-I

## (English Social History-I)

(சாஸர் முதல் விக்டோரியா அரசிவரை
ஆறு நூற்றாண்டுகள்—ஒரு கண்ணோட்டம்)

ஆசிரியர் :
ஜி. எம். டிரெவெலியன்

தமிழாக்கம் :
சி. ஈ. இராமச்சந்திரன், எம்.ஏ., எம்.லிட்.,
இந்திய வரலாற்று விரிவுரையாளர்,
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை.




தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழக அரசு

First Edition—December 1968

B.T.P. No. 176



**English Social History-I**

**G. M. Trevelyan**

*Translation*

**C. E. Ramachandran**

**Price Rs. 6–50**

This Tamil edition of 'English Social History', by G. M. Trevelyan is published by arrangement with Messrs. Longmans, Green and Company Limited, London.

Printed by
Kumaran Press,
298, Mint Street,
Madras-1.

# அணிந்துரை

(திரு. இரா. நெடுஞ்செழியன், தமிழகக் கல்வி-தொழில் அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கி ஏழு ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ., வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வருகின்றனர். தொடக்கத்தில் இருந்த இடர்ப்பாடுகள் மெல்ல மெல்ல மறைந்துவருகின்றன. நாடு முழுதும் பரந்துள்ள மாணவர் களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன்வந்துள்ள கல்வி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறை களில் நூல்கள் எழுதித் தர முன்வந்துள்ள நூலாசிரியர்களின் தொண்டுணர்ச்சி, இவற்றின் காரணமாக இத் திட்டம் நம் மிடையே மகிழ்ச்சியும் மனநிறைவும் தரத்தக்க வகையில் நடை பெற்று வருகிறது.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு. அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், தத்துவம் ஆகிய பல துறைகளில் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ் வெளியீட்டுக் கழகம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றுன 'ஆங்கிலேயரின் சமுதாய வரலாறு-I' என்ற இந் நூல் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் 176 ஆவது வெளி யீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 211 நூல்கள் வெளி வந்துள்ளன.

கணக்கிலடங்காத் தடைகளை எல்லாம் அகற்றித் தமிழன்னை கல்லூரிக் கலை மண்டபத்தில் கொலு வீற்றிருக்கிருள். எனவே, இவ்வன்னையை வாழ்த்துவோமாக. உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெற வேண்டும்; அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். சென்னைப் பல்கலைக்கழகத்தின் பலவகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# முன்னுரை

சில ஆண்டுகளுக்கு முன்னே (1941) வெளிவந்த நூல்களின் துணையோடு, இன்றுவரை அறியப்பட்ட கருத்துகளைக் கொண்டு இந்நூலை எழுத நான் முயன்றிருப்பினும், இப் புத்தகத்தின் பெரும்பகுதி முதல் உலகப் போருக்குமுன்பே எழுதப்பட்டுவிட்டது. இந்நூலை நான் எழுத முற்பட்டபோது, ஆங்கிலேயரின் சமுதாய வரலாற்றை உரோமானியர் காலந்தொட்டு இன்றுவரை எழுதத் திட்டமிட்டேன். பதினான்காம் நூற்றாண்டுக்கு முற்பட்ட பகுதியை எழுதுவது மிகக் கடினமானது என்று நினைத்து அப்பகுதியை இறுதியில் எழுத நிச்சயித்தேன். ஆயின் நான் திட்டமிட்ட வண்ணம் இந்நூலை முடிக்க முடியாமல் செய்துவிட்டது உலகப் போர். பதினான்காம் நூற்றாண்டு முதல் பத்தொன்பதாம் நூற்றாண்டு முடிய, நான் ஏற்கெனவே எழுதி முடித்த அத்தியாயங்கள் தொடர்ச்சியாக ஆறு நூற்றாண்டுக் காலத்திற்கு ஆங்கிலேயரின் சமுதாய வரலாற்றை எடுத்துக் காட்டுகின்றமையால் சிலரேனும் இம்முயற்சிக்கு வரவேற்பு அளிப்பார்கள் என்று எனக்குத் தோன்றியது.

சமுதாய வரலாறு என்பதை அரசியல் நீங்கலாக மக்களின் வரலாறு என்று குறிப்பிடலாம். ஆனால், மக்களின் வரலாற்றிலிருந்து அரசியலைப் பிரிப்பது கடினம்; அதுவும் ஆங்கிலேயரின் வரலாற்றிலிருந்து அவர்தம் அரசியலைப் பிரிப்பது மிகக் கடினம். எனினும், பல வரலாற்று நூல்களில் சமுதாயச் சூழ்நிலையைச் சிறிதேனும் எடுத்துக் காட்டாமல் அரசியலைப்பற்றியே எழுதியுள்ளார்கள். இவ்வாறு ஒரே கோணத்திலிருந்து நோக்குவதில் உள்ள குறையைப் போக்க, மக்களின் சமுதாயத்தைப்பற்றியே ஒரு நூலை இயற்றினால் அது பயனுள்ளதாக இருக்கும். என்னுடைய வாழ்நாளிலேயே மக்களின் பொருளாதார வரலாறு என்ற மூன்றாவது வகையான வரலாறு முக்கிய நிலையைப் பெற்றுவிட்டது. இது சமுதாய வரலாற்றை அறிவதற்கு மிகவும் உதவுகின்றது. எவ்வாறு அரசியல் நிகழ்ச்சிகளைச் சமுதாயச் சூழ்நிலை உருவாக்குகின்றதோ அவ்வாறே சமுதாயச் சூழ்நிலை, பொருளாதார நிலைமையின் அடிப்படையிலிருந்து உருவாகின்றது. சமுதாய வரலாற்றைக் கொண்டிராத பொருளாதார வரலாறு சுவையற்றதாக இருக்கும்; அதேபோல் சமுதாய வரலாற்றைக் கொண்டிராத அரசியல் வரலாறு எளிதில் விளங்கக் கூடியதாக இருக்காது.

சமுதாய வரலாறு, பொருளாதார வரலாற்றையும் அரசியல் வரலாற்றையும் இணைக்க உதவுவதோடல்லாமல் நல்ல பயனுடைய தாகவும், சமுதாய அக்கறை கொண்டதாகவும் விளங்குகிறது. ஓரிடத்து வாழும் பழங்கால மக்களின் அன்றாட வாழ்க்கையைச் சித்திரிப்பதே சமுதாய வரலாற்றின் நோக்கமாகும். ஒரு நாட்டு மக்களில் பல வகுப்பினரிடையே உள்ள சமுதாயத் தொடர்பையும், பொருளாதாரத் தொடர்பையும் குடும்பம், குடும்ப வாழ்க்கை, தொழில், ஓய்வு நேர நிலை, மனிதனுக்கு இயற்கையிடத்து உள்ள ஈடுபாடு ஆகியவற்றை இது விளக்குகின்றது. அத்துடன் மேற் கூறியவற்றின் அடிப்படையில் தோன்றி வளர்ந்த இலக்கியம், இசை, சமயம், கட்டடக் கலை, கல்வி, அறிவு முதலியவற்றில் இடை யருது மாற்றத்தையுடைய ஒவ்வொரு காலப் பண்பாட்டையும் இது சித்திரிக்கின்றது.

அடுத்தடுத்துத் தோன்றிய காலங்களில் வாழ்ந்த மக்களைப் பற்றிய உண்மைகளை எந்த அளவுக்கு நம்மால் அறியமுடியும்? வரலாற்று அறிஞர்களும், பழங்காலப் பொருள்களைக் கண்டு சேர்ப் போரும், பொறுமையாகத் தங்கள் அறிவுத் திறனைக் கொண்டு ஏராளமான செய்திகளைச் சேர்த்துள்ளனர். அத்துடன் ஏடுகள், கடிதங்கள், பத்திரிகைகள் முதலியனவற்றைக் குறிப்புகளுடன் வெளியிட்டு ஒருவர் வாழ்நாள் முழுதும் படிக்கக்கூடிய அளவுக்குத் திரட்டியிருக்கின்றனர். இருப்பினும் இத்துணை அறிவுக் களஞ்சியத் தைச் சமுதாய வரலாற்றுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் சிறியது என்றே சொல்லலாம். சமுதாய வரலாற்றை முற்றிலும் அறிய வேண்டுமானல் இங்கிலாந்தில் வாழ்ந்த பல்லாயிரக் கணக்கான ஆடவர், பெண்டிர், குழந்தைகள் முதலியோரின் வாழ்க்கை வரலாற்றை அறிந்தால்தான் முடியும். ஒரு சில உதாரணங்களி லிருந்து, சமுதாய வரலாற்று அறிஞர்கள், பொதுவாக இப்படித் தான் இருந்திருக்க முடியும் என்று விளக்குவதெல்லாம் முழுதும் உண்மையானதாக இருக்க முடியாது.

சமுதாய வரலாற்றின் விரிந்த நோக்கை நினைக்குங்கால் இது வரை சேகரிக்கப்பட்ட செய்திக் குவியல் சிறியதே. அவ்வாறிருக்கை யில் இச்செய்திக் குவியலிலிருந்து பொறுக்கி எடுத்து, 2,00,000 வார்த்தைகளில் இங்கிலாந்தின் ஆறு நூற்றாண்டுக் காலப் பலதரப்பட்ட வாழ்க்கை வரலாற்றை இந்நூலில் நான் எழுதி யிருப்பது எவ்வளவு சிறியது என்பது விளங்கும். இருப்பினும் ஒன்றுமே அறியாதிருப்பதைவிட கடுகளவாகிலும் தெரிந்து கொள்ளுவது மேம்பட்டது. இது ஓரளவுக்காகிலும் அறிவுப் பசியைத் தணிக்கலாம். இலக்கியத்தையும், பழங்கால ஏடுகளையும்

படித்தறியும் ஆவலை ஒரு சிலரிடத்தேனும் தூண்டிவிடுமேயானுல் இந்நூல் அதன் பயனை அடைந்துவிடும்.

வேறெரு நோக்கமுமின்றி அறிவு வளர்ச்சிக்காகவே ஆராய்வது உண்மையான நாகரிகத்தின் உயிர்நாடியாகும். மக்களின் நாகரிகத்தைச் சிறந்த முறையில் அறிவிப்பனவற்றுள் சமுதாய வரலாறும் ஒன்ருகும். அடிப்படையில், வரலாறு, கற்பனைக்கு ஒரு கருவியாகும் என்று நான் நினைக்கிறேன். நமது முன்னேர்கள் பண்டைக் காலத்தில் என்ன பணியாற்றினுர்கள் ; எவ்வாறு இன்ப வாழ்வு வாழ்ந்தார்கள் என்று நாம் கற்பனையில் படம் பிடித்துப் பார்க்க அவாவுகின்றேம். கார்லைல் என்பார் பழம்பொருள்களைச் சேகரிப்போரையும், வரலாற்றை ஆராய்வோரையும் 'டிரைஏஸ் டஸ்ட்' (Dryasdust—'டிரைஏஸ்டஸ்ட்' என்பவர் ஸ்காட் நாவலில் வரும் உள்ளத்தைக் கவராத சுவையற்ற ஒரு பாத்திரம்) எனப் பெயரிட்டார். ஆழ்ந்து நோக்கும்போது 'டிரைஏஸ்டஸ்ட்' ஒரு புலவனுவான். பல்வகைப் பொருள்கள் நிறைந்த தனது அறையில் தனக்குத் தோன்றும் கவிதைகளை அருகில் இருப்பவர்களுக்கு விளக்கிச் சொல்லுவது அவனுக்குச் சிரமமாக இருக்கலாம். ஆனுல், அவனது வாழ்க்கையில், பண்டைக் காலத்தின் உண்மையான வாழ்க்கை நிலையை அறியவேண்டும் என்ற அவா ஓர் உந்தும் சக்தியாக மிளிர்கின்றது. இறந்த சீமாட்டிகளைப்பற்றியும், விரும்பத்தக்க குதிரைவீரர்களைப்பற்றியும் அறியும்பொருட்டு அவன் அவர்களால் 'வீணுக்கப்பட்ட காலத்தின் கதையை'த் தெரிந்துகொள்ள விரும்புகிருன்.

ஸ்காட் என்பார், 'டிரைஏஸ்டஸ்ட்' போலப் பழம் பொருள்களைத் திரட்டுபவராகத் தன் வாழ்க்கையைத் துவக்கினுர் ; ஏன் என்ருல் அந்த வழியிலேதான் கவிதை, காதல் முதலியவற்றை அவர் கண்டார். சிறந்த வரலாற்று அறிஞர்கள் எல்லோரையும் போலத் தன்னையும் கார்லைல், ஒரு 'டிரைஏஸ்டஸ்ட்' என்றே கருதினுர். இலக்கியத்தில் 'டிரைஏஸ்டஸ்ட்' பாத்திரத்தை ஒரு சிறந்த பாத்திரமாகக் கருதியவர்களில் கார்லைலும் ஒருவர். 'டிரைஏஸ்டஸ்ட்' கண்டுபிடிக்கும் மனிதனின் பழங்காலத்தைப்பற்றிய சிறிய செய்தி ஷெல்லியின் கவிதையைவிடக் கவித்துவம் பெற்றது, ஸ்காட்டின் அதிசயக் கதைகளைவிடச் சிறந்தது என்று மிகைப்படுத்திக் கூறியுள்ளார் கார்லைல்.

பழங்காலம் என்ற ஒரு வார்த்தையில் உள்ளடங்கி இருப்பவற்றை நினைத்துப் பார். அதனுள் எவ்வளவு புனிதமான, இரங்கத்தக்க, எவ்விதத்திலும் கவித்துவம் நிறைந்த பொருள் அடங்கியுள்ளது ! பழங்காலத்தின் ஆழத்திற்குச் செல்லச் செல்ல அதன்

பொருள் துல்லியமாக விளங்குகின்றது. அத்தகைய பழங்காலத்தி னூடே நாமும் நோக்குவோம். உண்மையான கவிதைதான் வரலாறு என்று கூறலாம். உண்மை நிலையைச் சரியான முறையில் புரிந்துகொள்ளச் செய்தால் அது கதைகளைவிடச் சிறந்ததாக இருக்கும்.

வரலாற்றை விரிவாக ஆராய்வோமானால் பழங்காலம் தற் காலத்தைப் போலவே உண்மையானது என்ற உணர்ச்சி நம்முள் எழும். வரலாற்று அறிஞர்கள் இறந்தவர்களின் தூசு படிந்த குறிப்பேடுகளில் மூழ்கியிருக்கிறார்கள் என்று உலகம் நினைக் கின்றது.

> ' ஓர் ஆற்றின் அக்கரையிலே கருமையும் வெண்மையு மாய் நிறைந்த மூடுபனியை நோக்குங்கால் புலனறிவுக்கு எட்டாத உருவங்களைக் கொண்டதாகத் தோன்றுவது போலப் பழங்காலத்தை நோக்குங்கால், அதில் லேசான கருமை நிறம் வாய்ந்த மெய்யுறையை அணிந்த ஆவிகளைத்தவிர வேறு எதையும் பார்க்க முடியாது என்று உலகம் நினைக்கின்றது.'

ஆனால், நமக்கோ படிக்கத் தொடங்கினால் அவை உருக்கொண்டு வண்ணமுடன், அசைவுடன், உணர்வுடன், சிந்தனையுடன் தோன்றுவதை அறியலாம். பழங்காலத்தைப்பற்றிப் படிப்பதின் மூலம் நாம் சேய்மையிலும் அண்மையிலும் வாழ்ந்த நம் முன்னோர் களின் பழக்க வழக்கங்களை அறிகிறோம்; நெடுநாளைக்குமுன் மறைந்துவிட்ட அவர்கள் தாங்கள் வாழ்ந்த காலத்தில் ஒவ்வொரு குறிக்கோளுடன் வாழ்ந்ததைத் தெரிந்துகொள்ளுகிறோம்; இன் றும் அவர்கள் தங்கள் பிரபுவிற்கு வணக்கம் செலுத்தக் குதிரைச் சவாரி செய்துகொண்டு சென்றதையும், வாக்குரிமை செலுத்தச் சென்றதையும், அண்டையில் வாழ்ந்தோரின் பண்ணை வீட்டைப் பிடித்து அவரது மக்களைக் கைப்பற்ற முற்பட்டதையும், விரிந்து முறைப்பான ஆடையணிந்த சீமாட்டிகளுக்குத் தன்னைப்பற்றித் தெரியப்படுத்திவந்ததையும் நாம் நம் கண்முன் காணலாம்.

பழங்கால வரலாற்றில் பல்வேறு மக்களைக் காண்கிறோம். ஏரில் கட்டிய எருதுகளின் பின்னாலோ, அல்லது குதிரைகளின் பின் னாலோ அல்லது உழும் இயந்திரங்களின் பின்னாலோ வழிவழியாக உழவனைக் காண்கிறோம். அவனது மனைவி நாள் முழுதும் தன் குடிசையில் பணிகளில் ஈடுபட்டு, அந்தி மயங்கியதும் தன் கணவ னுக்கு அன்று நடந்தவற்றைக் கூற வழிபார்த்திருப்பதையும் நோக்குகின்றோம்.

ஒவ்வொருவரும் சாதாரண நடவடிக்கைகளான வெளியில் போவதும் வருவதுமான செயல்களில்கூட, எளிதில் புரிந்து கொள்ள முடியாததும், மாறிக்கொண்டே இருப்பதுமான பழக்க வழக்கங்களுக்கும், சட்டத்திற்கும், சமுதாயம், அரசியல் முதலிய வற்றிற்கும் கட்டுப்பட்டு வாழ்ந்ததைக் காணுகிறோம். மேலும், தனக்குத் தெரியாததும் முற்றிலும் புரியாததுமான உள்நாட்டு அல்லது வெளிநாட்டுச் சம்பவங்களாலும் அவர்கள் வாழ்க்கை கட்டுப்பட்டிருந்ததை அறிகிறோம். பழங்கால மனிதனைப்பற்றி நன்றாக அறிந்துகொள்ளக்கூடிய ஒரு சில காட்சிகளைக் கண்ணுறுவ தோடல்லாமல், ஒவ்வொரு கால மாறுதலும் அவனை எப்படிப் பாதித்தது என்பதை அறிவதற்காகக் கால மாறுதல்களையும் புதிய நோக்குடன் பார்க்க நாம் முயலவேண்டும். அத்துடன் பழங் காலத்தில் வாழ்ந்தோரின் வாழ்க்கையைக் கட்டுப்படுத்திய சூழ் நிலைகளைப்பற்றி அவர்கள் அறிந்திருந்ததைவிட நாம் அதிகமாகத் தெரிந்துகொள்ள முற்பட வேண்டும்.

நமது முன்னோர்கள் எப்படியிருந்தார்கள் என்று அறிந்து கொண்டு சிறிது சிறிதாகப் பழங்கால வண்ண ஓவியத்தைத் தீட்ட வேண்டும். இதைவிட வேறு எதுவும் முற்றிலும் நாகரிகமடைந் தவரைச் சற்றே நாகரிகமடைந்தவரிடமிருந்து பிரித்துக் காட்டாது. விண்மீன்களை அளக்க எண்ணுவதும், கலங்களைக் காற்றிலோ அல்லது கடலிலோ செலுத்த முயற்சிப்பதும் இந்நாளில் ஒரு பெரிய காரியமன்று. ஆயின், இதைவிட அதிசயிக்கத்தக்கதும் உயர்ந்த செயலுமாக விளங்குவது, நமக்கு முன் வாழ்ந்த ஆண் பெண் இவர்களின் உண்மை இயல்பை அறிய முற்படுவதும், வெகுகால மாக மறக்கப்பட்ட நிகழ்ச்சித் தொடரை அறிய முயற்சிப்பதுமே யாகும்.

வரலாற்று ஆராய்ச்சியினைச் சரியானதா அல்லது பிழை யானதா என்று நிச்சயிப்பது உண்மைநிலை. வரலாற்று ஆராய்ச்சி யைத் தூண்டும் திறனே கவிதையின்பாற்பட்டது. இக் கவிதையோ உண்மை நிலையைச் சித்திரிப்பது. இங்கேதான் வரலாற்றில் விஞ்ஞான நோக்கும், இலக்கிய நோக்கும் ஒன்றியிருப்பதைக் காணலாம். தற்கால ஆராய்ச்சியால் கிடைக்கும் சிறுபான்மை யான செய்திகளைக்கொண்டே நம் முன்னோர்களின் வாழ்க்கையைச் சித்திரிக்க வேண்டியுள்ளது. எண்ணாது துணிந்தும், குறைந்த முயற்சி கொண்டும் நாம் இந்நூலைத் தொடங்கியுள்ளதால் எந்த முறையில் இக்கதையைச் சிறப்பாகக் கூற முடியும் என்று நினைத் துப் பார்க்க வேண்டும். அரசியல் வரலாறு, நன்கு தெரிந்த அரசர்கள், பாராளுமன்றங்கள், போர்கள் முதலானவற்றால் பின்னப்பட்டு ஒன்றாகத் திகழ்கின்றதைப்போன்று, முன்னோர்களின்

வாழ்க்கை நிலையை ஒழுங்காகச் சித்திரிப்பது அரிதே. அரசியல் நடப்புகள் சமுதாய வளர்ச்சியைப் பாதிப்பதால் அடிக்கடி அரசியல் நடப்புகளையும் தெரிந்துகொள்ளும் அவசியம் ஏற்படும். 'பியூரி டானியர் புரட்சி', 'முடியாட்சி மீட்கப்பட்டது' இவை இரண்டும் சமுதாய வரலாற்றையும், அரசியல் வரலாற்றையும் சார்ந்தவை யாகும். சாதாரணமாக உலக வாழ்க்கையில், அரசியல் நடப்பு களின் காரணமாகச் சமுதாய மாற்றங்கள் தோன்றுவதில்லை. சமுதாய மாற்றங்கள் நிலத்தின் அடித்தளத்திலே செல்லும் நதி யைப்போல் அறிந்துகொள்ளாத வகையில் நிகழ்கின்றன. அம் மாற்றங்கள் சமுதாயக் கட்டுப்பாடுகளுக்கும், பொருளாதார மாற் றங்களினால் ஏற்படும் சூழ்நிலைகளுக்கும் உட்பட்டே ஏற்படு கின்றன. சமுதாய வளர்ச்சியின் முடிவு அரசியல் சம்பவங்கள்; அரசியல் நடப்புகள் சமுதாய மாறுதல்களுக்குக் காரணமல்ல. ஒரு புதிய அரசன், ஒரு முதன் மந்திரி, ஒரு பாராளுமன்றம் இவை அரசியலில் ஒரு புதிய காலத்தை எடுத்துக்காட்டலாம். ஆனால், இவை மக்களின் வாழ்க்கையில் எப்போதோ ஒருமுறைதான் புதிய மாறுதலைத் தோற்றுவிக்கின்றன.

அப்படியானால் எம்முறையில் இக்கதையைக் கூற முற்படுவது? சமுதாய வரலாற்றை எவ்வெக்காலப் பகுதிகளாகப் பிரித்துக் காட்டுவது? பின்னோக்கிப் பார்ப்போமானால் மனித வாழ்க்கை தொடர்ச்சியாக இருப்பதையும், அதில் மாறுதல்கள் சிறிய அள விலே தொடர்ந்து ஏற்பட்டுக்கொண்டு வருவதையும், தலைகீழாக மாற்றும் நிகழ்ச்சிகள் ஒன்றிரண்டே இருப்பதையும் காண்கிறோம். இத்தகைய நிகழ்ச்சிகளில் கொள்ளை நோயும் (Black Death) தொழிற் புரட்சியும் இரண்டாகும். ஆயின், தொழிற் புரட்சி பல தலைமுறைக்கு நீடித்ததால் அதைத் தலைகீழாக மாற்றும் ஒரு நிகழ்ச்சி என்று கூறுதல் பொருந்தாது. இது கொள்ளை நோயைப் போல் மனித வாழ்க்கையாகிய நதியின் குறுக்கே எதிர்பாராமல் தோன்றிய தடங்கல் அன்று; இது இடையறாது ஓடிக்கொண்டே இருக்கும் அந்நதிப் போக்கின் ஒரு பாகமாகும்.

அரசியல் வரலாற்றிலே ஒரு குறிப்பிட்ட காலத்தில் ஓர் அரசன் அரசாட்சி செய்வதையும், ஒரு பாராளுமன்றம் பணியாற்றுவதை யும் காண்கிறோம். ஆனால், சமுதாய வரலாற்றிலே ஒவ்வொரு காலத்திலும் பலவகையான சமுதாய, பொருளாதார நிறுவனங்கள் ஒரே நேரத்திலே, ஒரே நாட்டிலே பணியாற்றுவதைக் காண் கிறோம். இதே நிலையைத்தான் விவசாயத்தில் காண்கின்றோம். பதினெட்டாம் நூற்றாண்டிலே, ஆங்கிலோ-சாக்சன்கள் காலத்தில் காணப்பட்ட வேலியமைக்கப்படாத நிலப் பகுதிகளைப் பயிர் செய் யும் முறையையும் (open field strip cultivation), ஆங்கிலோ

சாக்சன்கள் காலத்திற்கு முன் கெல்டுகள் காலத்தில் காணப்பட்ட வேலிகள் அமைத்து நிலத்தைப் பயிர் செய்த முறையையும், தற்காலத்தில் ஆர்தர்எங் என்ற பெயருடையவர் அங்கீகரித்த வேலியமைத்து விஞ்ஞான முறையில் பயிர் செய்யும் விதத்தையும் ஒரு சேரக் காணலாம். இவ்வாறே தொழிற்றுறையிலும், வாணிகத் துறையிலும் நூற்ருண்டுகளாக வந்த குடும்ப முறை, தொழிற்சங்க முறை, முதலாளித்துவம் இவை யாவும் ஒரே சமயத்தில் இயங்குவதைக் காணலாம். சமயம், சிந்தனை, குடும்பப் பழக்கம் இவை போன்ற யாவற்றிலும் பழமையானது புதுமையின்மேல் கவிந்திருப்பதைக் காணலாமே தவிர, ஒருபோதும் திட்டவட்டமாக ஒன்றிலிருந்து மற்ருென்றைப் பிரித்துக் காட்ட முடியாது. ஏனெனில், எல்லா ஆங்கிலேயரும் ஒரு குறிப்பிட்ட காலத்தில் தம் வாழ்க்கையிலும், சிந்தனையிலும் புதிய பாதையை மேற்கொள்ளவில்லை.

இந்நிலையில், நாடகத்தில் எவ்வாறு காட்சிகள் ஒன்றன்பின் ஒன்ருக விட்டுவிட்டு வருகின்றனவோ அதேபோல் இக்கதையையும் எடுத்துக் காட்டினுல் சிறந்த முறையில் அமையும் என்று எனக்குத் தோன்றியது. ஒரு காட்சிக்கும் மற்ருெரு காட்சிக்கும் மிகுந்த ஒற்றுமை காணப்படும். உதாரணமாக சாசரின் காலத்திற்கும் காக்ஸ்டனின் காலத்திற்குமிடையிலும், டாக்டர் ஜான்சன் காலத்திற்கும் காபெட்டின் காலத்திற்குமிடையிலும் அத்தகைய ஒற்றுமையைக் காணலாம். ஆனுல், அதே நேரத்தில் மிகுந்த வேற்றுமையும் காணப்படுவது உண்டு.

ஒரு காலத்தின் உண்மை நிலையை அறியவேண்டுமானுல் பழையனவற்றையும், புதியனவற்றையும் மனக்கண்முன் சேர்த்தே பார்க்கவேண்டும். மக்கள் சில சமயங்களில் பழங்காலத்தின் வடிவை மனக்கண்கொண்டு நோக்குங்கால் புதியனவற்றை மாத்திரம் தம் மனத்தில் நிறுத்தி மேல் கவிந்திருக்கும் பழையனவற்றை மறந்துவிடுகிருர்கள். உதாரணமாக, வரலாற்றை ஆய்வோர் 1819ஆம் ஆண்டு நிகழ்ந்த வசைப் பெயர் எடுத்த 'பீட்டர்லூ' என்ற இடத்தில் நடந்த படுகொலையை அநேகமாகக் கருத்தில் கொள்ளுகின்றனர். இதனுல் லங்காஷீர் தொழிற்சாலையில் இருந்த அத் தொழிலாளியைப் போலவே, 1819ஆம் ஆண்டில் இங்கிலாந்தில் வாழ்ந்த எல்லாத் தொழிலாளர்களும் இருந்தார்கள் என்று எண்ணிவிடுகின்றனர். ஆனுல், அத் தொழிலாளி ஓர் உதாரணமல்லன்; அவன் லங்காஷீரில் மாத்திரம் இருந்த தொழிலாளரில் ஒருவன். அவன் வருங்காலத்தில் இயங்கப் போகும் ஒரு புதுவகைத் தொழிலாளி ஆவான். நான்காம் ஜார்ஜ், தனது தந்தையான மூன்ரும் ஜார்ஜ் சித்த சுவாதீனமற்ற நிலையில்

இருந்தபோது அவருக்குப் பதிலாக ஆட்சியாளராக இருந்தார். அவர் காலத்து வாழ்ந்த பழமையில் தோய்ந்த மக்கள் லங்காஷீர் தொழிலாளி தோற்றுவித்த மாற்றத்தை ஏற்கும் வகையில் பண் பட்டவராக இருக்கவில்லை. அவர்கள் அத் தொழிலாளியால் தொல்லையுற்றுர்கள் ; அவனைப் புரிந்துகொள்ள முடியாமல் திகைத்தார்கள். ஏனென்ருல், தற்போது சாதாரணத் தொழி லாளியாகக் காட்சியளிக்கும் அவன் அப்போது அவர்களுக்கு அவ்வாறு தோன்றவில்லை.

அதனுல் இந்நூலில் நான் ஆங்கிலேயரின் வாழ்க்கையைத் தொடர்ச்சியாக அடுத்தடுத்து வரும் காட்சிகளாக எடுத்துக் காட்டும் முறையைக் கையாண்டிருக்கிறேன். சாசர் காலத்து (1340-1400) ஆங்கிலேயரின் வாழ்க்கையை, அவ்வாறு வரும் காட்சிகளில் முதல் காட்சியாக வெளியிட்டிருக்கிறேன். இந்நூல் சாசரின் காலந்தொட்டுத் தொடங்குவது எதிர்பாராத காரணத் தாலும் எனது தனிப்பட்ட கருத்திலுைம் என்று முன்பே நான் எடுத்துச் சொல்லி இருக்கிறேன். இருப்பினும் சாசரின் காலம் தொடக்கத்திற்கு ஒரு சிறந்த காலமெனலாம். ஏனென்ருல், சாசரின் காலத்திலேதான் ஆங்கிலேயர் முதன்முதலாக ஒரே இனத்தவராகவும் ஒரே பண்பாடுடையவராகவும் விளங்கு கின்றனர்; இங்கிலாந்தில் வாழ்ந்த பல இனத்தவரும் அவரது மொழிகளும் ஒன்ருகக் கலந்ததும் இக்காலத்தேதான். இக்காலத் திற்குப்பின் சமுதாயத்தில் வாழ்ந்த மேல் வகுப்பினர் ஃபிரான்சி லிருந்து வந்தவர்களாக இருக்கவில்லை; அதேபோல் உழவர்கள் ஆங்கிலோ-சாக்சன்களாக இல்லாமல் அனைவரும் ஒன்றுபட்ட ஆங்கிலேயராகத் திகழ்ந்தனர். இங்கிலாந்தும் வெளிநாட்டு அனுபவங்களை ஏற்கும் நாடாகத் தொடர்ந்து இருக்கவில்லை. அதற்கு மாருக இங்கிலாந்து மற்றைய நாடுகளுக்குத் தன் அனுபவங்களை அளிக்கும் நாடாக இருக்கத் தலைப்பட்டது. சாசர், விக்லிப், வாட் டெய்லர், ஆங்கிலேய வில்வீரர் முதலியோர் வாழ்ந்த காலத்தில் இங்கிலாந்து, இலக்கியம், சமயம், சமுதாயம், போர் முறை முதலியவற்றில் தனக்கே உரிய பாணியைத் தோற்றுவிக்க முற்பட்டது. இக்காலத்திற்குப்பின் இங்கிலாந்து வெளிநாட்டுச் சக்திகளால் உருவாக்கப்படாமல் தன்னுடைய சக்தியைக் கொண்டே தன்னை உருவாக்க முற்பட்டது; சிறந்த வெளிநாட்டு குருக்களையும், ஆட்சியாளரையும், நார்மானியரின் நிலப்பண்ணை முறையையும் இன்னும் சட்டத்திலே தேர்ந்த ஆஞ்சீவின் அரசர் கள், ஃபிரான்சு நாட்டினரைப்போல் பயிற்சியளிக்கப்பட்ட ஆயுதம் தரித்த குதிரை வீரர்கள், லத்தீன்மொழி வழங்கிவந்த நாடுகளி லிருந்து வந்த மதத்துறவிகள் முதலியோரையும் சார்ந்து வாழாமல்

இங்கிலாந்து, இக்காலம் முதல் தன்னுடைய சக்தியைக் கொண்டே முன்னேற ஆரம்பித்தது.

நூற்றுண்டுப் போர் (1337-1453) மூண்டபோது கோடாம்கள் (ஆங்கிலேயருக்கு ஆர்க் நகரைச் சேர்ந்த ஜோன் என்ற வீரப் பெண்மணி இட்டபெயர்) ஃபிரான்சு நாட்டைக் கைப்பற்ற வேற்று நாட்டாராகவே சென்றனர். போர் மூள்வதற்கு முன்பே இங்கிலாந்து ஒரே நாடாக ஒன்றுபடுத்தப்பட்டதும், ஆங்கிலேயர் தாம் ஒரே நாட்டவர் என்ற எண்ணம் கொண்டிருந்ததும், ஃபிரான்சு ஒரே நாடாக ஒன்று சேர்க்கப்படாமல் இருந்ததும், ஆங்கிலேயர் இப்போரில் அடைந்த வெற்றிக்குக் காரணங்களாகும். ஃபிரான்சைக் கைப்பற்றும் முயற்சி முடிவில் தோல்வியுற்றபோது இங்கிலாந்து ஐரோப்பாக் கண்டத்திலிருந்து தனிப்பட்ட தீவாக விளங்கத் தொடங்கியது; இதன் பிறகு இங்கிலாந்து ஐரோப்பாவின் கிளை நாடாகவோ அல்லது தொடர்நாடாகவோ இருக்கவில்லை.

உண்மையில் இங்கிலாந்து, திடீரென்று மற்ற நாடுகளில் இருந்து வேறுபாடுடைய நாடாக மாறவில்லை. இம்மாறுதல் சாசரின் வாழ்க்கைக் காலத்தில் தொடங்கவுமில்லை; முடியவுமில்லை. ஆனால், அவரது காலத்திலேதான் ஒரே நாட்டவர் என்ற எண்ணம் ஆங்கிலேயரிடம் தீவிரமாகவும், மூன்று நூற்றுண்டுகளுக்குமுன் காணப்படாத அளவிலும் வெளிப்பட்டது. கிருத்தவப் பண்பாடும், ஐரோப்பாவிலும், இங்கிலாந்திலும் நிலவுரிமையின் அடிப்படையில் தோன்றிய நாகரிகமும், அந்த மூன்று நூற்றுண்டுக் காலத்தில் பொதுநோக்கு உடையனவாயும், நாட்டுப் பற்றற்றதாயும் இருந்தன. சாசரின் காலத்தில்தான் இங்கிலாந்து ஒரு தனிப்பட்ட நாடாக விளங்கியது.

# பொருளடக்கம்

# 1. சாசர் காலத்திய இங்கிலாந்து—I
## (1340—1400)

வயல்—கிராமம்—பண்ணை வீடு

முதன்முதலாக, சாசரின் வாழ்க்கைக் காலத்தில்தான் இங்கிலாந்தில் இடைக் காலமும், தற்காலமும் ஒன்றேடொன்று இணைவதைக் காண்கிறோம். இங்கிலாந்து ஒரு தனிப்பட்ட நாடாகத் திகழத் தொடங்குவதும் இக் காலத்தேதான். இக் காலம் தொடங்கி ஃபிரெஞ்சு மொழியும், லத்தீன் மொழியும் ஆதிக்கத்தில் இருந்த ஐரோப்பாக் கண்டத்தின் கடல் கடந்த தொடர் நாடாக, இங்கிலாந்து இருக்கவில்லை. எனவே, சாசரின் கவிதைகளிலிருந்து ஆங்கில மொழி உருவெடுத்துவிட்டது என்பதும், அதை இங்கிலாந்து மக்கள் அனைவரும் ஏற்றுக்கொண்டுவிட்டனர் என்பதும் விளங்குகின்றன. சாக்சன், ஃபிரெஞ்சு ஆகிய இவ் விரண்டு மொழிகளின் வார்த்தைகள் இணைந்து ஆங்கில மொழியை உருவாக்கின. இவ் வாங்கில மொழி யாவரும் புரிந்துகொள்ளக்கூடியதாக இருந்ததால், பள்ளிகளிலும் சட்ட மன்றங்களிலும் இக் காலம்முதல் வழங்கிவருவதைக் காண்கிறோம். ஆயின், முற்றிலும் மாறுபட்ட வெல்ஷ், கார்னிஷ் மொழிகளோடு, மாகாணங்களில் ஆங்கிலத்தின் இணை மொழிகள் பலவும் பேசப்பட்டுவந்தன. சில வகுப்பினர் ஆங்கிலத்துடன் மற்றொரு மொழியையும் கற்றிருந்தனர்; அறிவால் உயர்ந்த பாதிரியார்கள் லத்தீன் மொழியைக் கற்றிருந்தனர்; அரசவையை அலங்கரித்தோரும், உயர்குடிப் பிறந்தோரும் ஃபிரெஞ்சு மொழியை அறிந்திருந்தனர். ஆனால், இம் மொழிகள் குழந்தைப் பருவம்முதல் கற்றவை யல்ல; வளர்ந்த பிறகு பிற நாட்டு மொழி ஒன்றைக் கற்றிருக்கவேண்டும் என்ற எண்ணத்தால், ஸ்ராட்ஃபோர்ட் பள்ளியில் கற்றுக்கொடுத்ததுபோல் கற்ற மொழியாகும்.[1]

[1] அரசவையில் இருந்த சிலருக்கு ஃபிரெஞ்சு மொழி தெரியும். ஆனால், அவர்கள் லத்தீன் மொழியை அறிந்திருக்கவில்லை. மற்றும் சிலர் லத்தீனையும் ஃபிரெஞ்சு மொழியையும் ஓரளவு தெரிந்துவைத்திருந்தனர். மற்றும் சிலர்

பகலில் நீண்ட நேரத்தை அரசவையினருடன் கழித்த சாசர் இடைக்கால ஃபிரான்சின் பண்பாட்டை நன்கு அறிந்திருந்தார். அரசியல் காரணமாக அவர் ஃபிரான்சு, இத்தாலிய நாடுகளில் சுற்றியிருக்கிருர். ஃபிரான்சு, இத்தாலியநாட்டு யாப்பமைப்பை யொட்டி அவர் இயற்றிய ஆங்கிலக் கவிதையின் பாணி, பின்னர்ப் பல நூற்ருண்டுக் காலத்திற்கு நிலேத்து நின்றது. ஃபிரான்சு இத்தாலியநாட்டு யாப்பமைப்பை ஒட்டித் தம் கவிதைகளே இயற்றினுலும், அவர் ஆங்கிலத்தில் ஒரு புதிய சீர் அமைப்பை ஏற்படுத்திஞர். டான்டி, பெட்ரார்க், பொகேகோ, ப்ருவாசார் முதலியோர் இயற்றிய நூல்களிலும், 'ரோமன் டிலாரோஸ்' என்ற நூலிலும் காணமுடியாத அளவுக்கு ஆங்கிலேயரின் நகைச்சுவை உணர்ச்சியைக் 'கான்டர்பெரிக் கதை'களில் நன்கு தெரியச் செய் தார். அக் 'கான்டர்பெரிக் கதை'கள், கால் பாகம் வெறுப்புணர்ச்சி யையும், முக்கால் பாகம் இரக்க உணர்ச்சியையும் பிரதி பலித்தன.

புதிதாக உருவான நாட்டு மக்களின் மற்றக் குணுதிசயங்களே லாங்லண்டு தமது சமய உருவகமான 'பீர்ஸ் என்ற உழவன்' கவிதையில் வெளிப்படுத்திஞர். லாங்லண்டும் அறிவிற் சிறந்த ஒரு கவிஞராவார். தம் வாழ்நாளின் பெரும் பகுதியை லண்டன் மாநகரில் கழித்த அவர், மேற்குப் பகுதியில் உள்ள மால்வர்ன் நகரத்தில்தான் தோன்றினர். ஆங்கிலோ-சாக்சன்கள் கவிதை யினை ஒட்டி மோனே அமையப்பெற்ற, ஐந்து சீர்களே உடைய கவிதைகள் அவர் காலத்திலும் தொடர்ந்து இங்கிலாந்தின் மேற்குப் பாகத்தில் இயற்றப்பட்டுவந்ததால், அம் முறையிலேயே தம் கவிதைகளேயும் லாங்லண்டு இயற்றிஞர். இத்தகைய இங்கிலாந்தின் உள்நாட்டுப் பாணிக்குப் பதிலாகச் சாசரின் ஒலியியைபுடைய கவிதைகள் பொதுவாக இடம் பெறலாயின. இருப்பினும், 'பீர்ஸ் என்ற உழவன்' கவிதையின் மெய்க்கருத்து நிலேத்து நின்று, நம் முன்னேர்களின் சமய ஆர்வத்திலும், பிறர் தவறு இழைப்பதைக் கண்டு வெகுண்டு எழும் குணத்திலும், தாங்களே இழைத்த குற்றங்களுக்காக வருந்தும் செய்கைகளிலும் வெளிப்பட்டது. இங்கிலாந்தின் பியூரிடன் மதமானது கிருத்தவச் சமயச் சீர்திருத்த இயக்கத்தைவிட மிகப் பழமையானது. பீர்ஸ் என்ற உழவனும், பன்யன் என்ற கருமானும் ஆகிய இவ் விரு 'கற்பனேயாளரும்' ஒருவருக்கொருவர் கால அளவில் மூன்று

லத்தீன், ஃபிரெஞ்சு மொழிகளேப் புரிந்துகொள்ள முடியாதவராய் இருந்தனர். ஆனுல், அவர்கள் ஆங்கிலம் அறிந்திருந்தனர். படித்தவரும், படிக்காதவரும், இளேயவரும் முதியவரும் அனைவரும் ஆங்கிலத்தை அறிந்திருந்தனர்.'

இவ்வாறு சாசர் காலத்தில், வில்லியம் நசிங்டன் எழுதியுள்ளார்.

நூற்றுண்டுகள் பிரிந்திருந்தாலும் எண்ணத்திலும், உணர்ச்சியிலும் மிகவும் ஒத்திருந்தனர்.

லாங்லண்டும் கோவரும், மதக் கோட்பாடுகளில் முரண்பாடு கொள்ளாதவர்களாக இருப்பினும், இடைக்காலத்தில் நிலவிய சமுதாயம், சமயம் இவ் விரண்டினுள் இருந்த குறைகளை நினைந்து வருந்தினர். குறைகள் நீங்கிய வருங்காலத்தை எதிர்பார்க்காமல், இறந்தகால உயர் லட்சியங்களைக் கண்முன் நிறுத்திப் பார்த்தனர். ஆயின், நீண்ட காலத்திற்குப் பிறகு, பாதிரியார்களின் மத ஸ்தாபனத்தை எதிர்த்தவர்களும் (English Anti-clericalism), ஆங்கிலேய பிராடஸ்டன்டுகளும் நடைமுறைக்குக் கொண்டுவந்த மாறுதல்களை விக்லிப் தீவிரமாக எடுத்துக் கூறினர். இங்கிலாந்து முழுமைக்கும் பொதுவான மொழியிலே, யாவரும் புரிந்துகொள்ளும் வகையில் கிருத்தவ மதப் புத்தகமான பைபிளை வெளியிடுவது விக்லிப்பின் நோக்கங்களில் ஒன்ருகும். இதற்கிடையில் ஜான் பால் என்பவர் தற்காலத்தில் கேட்கக்கூடிய கேள்வியை இடைக்காலத்திலேயே எழுப்பினர். அவர்,

> 'ஆதாம் நிலத்தை உழவும், ஏவாள் நூல் நூற்கவும், மக்களிடையே வேற்றுமை எங்கே இருந்தது?' என்ருர்.

ஏனெனில், பொருளாதாரத் துறையில்கூட இடைக்கால நிலை மறைந்து தற்கால நிலை ஏற்பட்டுக்கொண்டிருந்தது. இங்கிலாந்து தன்னுட்டிற்கே உரிய வகையில் சமுதாயத்தில் வகுப்புகளை ஏற்படுத்திக்கொண்டிருந்தது. பண்ணைமுறை விவசாயமும் சீர்குலைந்துகொண்டுவந்தது. அடிமை நிலையில் இருந்துகொண்டு தன் பிரபுவிற்குப் பணி செய்வதற்குப் பதிலாக ஒரு குறிப்பிட்ட தொகையைத் தன் பிரபுவுக்குக் கொடுக்கும் வழக்கம் வேகமாக ஏற்பட்டுக்கொண்டிருந்தது. ஆங்கிலேயர் அனைவரும் சுதந்திரமுடையவராக வாழவேண்டும் என்ற கொள்கைக்காக, அடிமை நிலையிலிருந்த குடியானவர்கள் கலகம் செய்தனர். இச் செயல் தற்காலத்தில் சாதாரணமாகத் தோன்றுகின்றது. ஆனுல், அந் நாளில் அது புதுமையாகத் தோன்றியதோடல்லாமல் சமுதாயத்தின் அஸ்திவாரத்தையே உலுக்கியது. சுதந்திரத்தை அனுபவித்துவந்த வேலையாட்கள் அதிகப்படியான கூலிபெறவேண்டி, தற்கால ஆங்கிலேயரால் அங்கீகரிக்கப்பட்ட முறையில், அடிக்கடி வேலை நிறுத்தம் செய்தனர். இத்தகைய வேலை நிறுத்தங்களால் பாதிக்கப்பட்டவர்கள் பழைய நிலப் பண்ணைமுறை ஆட்சிப் பிரபுக்கள் அல்லர்; புதிய நடுத்தர வகுப்பினரான நிலத்தைக் குத்தகைக்கு எடுத்துக்கொண்ட உழவர்கள், ஆக்கத் தொழிலில் ஈடுபட்டவர்கள், வியாபாரிகள் ஆகிய இவர்களே வேலை நிறுத்தங்

களால் பாதிக்கப்பட்டவர்கள், மூன்றும் எட்வர்ட்டின் காலத்திலேயே, வருங்காலத்தில் இங்கிலாந்திற்குச் செல்வத்தைக் கொடுத்து இங்கிலாந்தின் சமுதாயத்தை உருமாற்றி அமைத்த ஆடை வியாபாரம், இடைக் காலம் முதல் வெளிநாடுகளுடன் நடந்துவந்த கச்சாக் கம்பளி வியாபாரத்தை அதிகமாகப் பாதிக்க முற்பட்டது. இடைக் காலந்தொட்டு வியாபாரத்தில் ஈடுபட்டிருந்த நகரங்களிடையே பொறாமை நிலவிவந்தது. எல்லா நகரங்களின் நலன்களுக்கு ஏற்றவாறு பொதுவான பாதுகாப்பு அளிக்கவும் கட்டுப்பாடுகள் விதிக்கவும் அரசாங்கம் முயன்று வந்தது.

இந் நோக்கத்தை நிறைவேற்ற, இங்கிலாந்தைச் சூழ்ந்த கடல்களில் ஆங்கிலேயரின் ஆதிக்கத்தை நிலைநிறுத்தவேண்டியிருந்தது. ஆயுதம் தாங்கிக் கப்பலில் நிற்கும் மூன்றும் எட்வர்ட்டின் உருவத்தைக் கொண்ட நாணயங்கள் இதையே அறிவிக்கின்றன. சாசரின் கதையில் வரும் வியாபாரி,

> ' ஹாலண்டிற்கும், சப்போக்கிற்கும் இடையில் இருந்த கடலை எப்படியும் மற்ற நாட்டவரின் ஆதிக்கத்தின்கீழ் வாராமல் பார்த்துக்கொள்ளவேண்டும் ' என்றான்.

நிலவுரிமை ஆட்சிக் காலத்தில் நிலவிவந்த வகுப்புப் பிரிவுகளையும், அவரவர்கள் தாங்கள் வாழ்ந்த பகுதியின்பால் கொண்டிருந்த பற்றையும், நாட்டுப்பற்று அழிக்கத் தொடங்கியது. நிலவுரிமை ஆட்சி, போர் முறை இவைகளினின்று முற்றிலும் மாறுபட்ட தற்காலக் குடியாட்சியில் காணப்படுவதைப் போன்றதொரு நாட்டுப்பற்று, நூற்றாண்டுப் போர் நடந்தபோது, அரசனுக்கும் பிரபுக்களுக்கும். ஃபிரெஞ்சு நாட்டைக் கொள்ளையிடுவதற்கு ஒரு புது வழியாக அமைந்தது. கிரெசி, அஜின்கோர்ட் என்ற இடங்களில் நடந்த போர்களில், வலிமைமிக்க உழவர்கள் வில்லேந்தியவர்களாய்ப் படையின் முன்னணியில், குதிரையிலிருந்து கீழிறங்கிப் போரிட்ட குதிரை வீரர்களுடனும் பிரபுக்களுடனும், தோளொடு தோள் நின்று, பழங்கால வீரப்பண்பு நலம் பொருந்திய ஃபிரெஞ்சு வீரர்களையும், அவர்தம் குதிரைகளையும் கொன்று குவித்தனர். அரசர்கள் நற்குடிமக்களை ஆட்சிக் காவலர்களாக நியமித்தது, தகப்பனுக்குப்பின் மகன் அவ் வுரிமையை அடைகின்ற நிலவுரிமை ஆட்சி வழக்கத்திற்கு மாறுபட்டதாயிருந்தது. ஆனால், இச் செய்கை அரசனை மையமாகக்கொண்ட அதிகாரிகளின் ஆட்சியைத் திரும்பவும் ஏற்படுத்த வழிசெய்தது. வட்டாரங்களில் வாழ்ந்த செல்வாக்குடையவர்களுடன் தொடர்புகொண்டு அரசன் தன் காரியங்களைச் சாதித்துக்கொண்டான். அரசனுக்கும்

வட்டாரத்திலிருந்தவருக்கும் இடையே நிலவிய உடன்பாடு பிற்காலத்தில் வேறெந்த நாட்டிலும் காணமுடியாத அளவுக்குச் சமுதாய வளர்ச்சிக்கு அடிகோலியது.

பொருளாதார, சமுதாய, சமய இயக்கங்களும், தேசம் முழுமைக்கும் உரிய மற்ற இயக்கங்களும் பார்லிமெண்டின் நடவடிக்கைகளில் பிரதிபலிக்கின்றன. இடைக்காலத்தில் தோன்றிய பார்லிமெண்டு இயல்பாகவே தற்கால நிறுவனமாக மாறிக் கொண்டிருந்தது. வலிமைமிக்க பிரபுக்கள், பாதிரியார்கள், நீதிபதிகள், அரசாங்க அலுவலர்கள் முதலியவர்களைக் கொண்டு, அரசனுக்கு அறிவுரை சொல்லவோ அல்லது அவனை இணங்குமாறு செய்யவோ இருந்த சபையாகப் பார்லிமெண்டு விளங்கவில்லை. பொதுமக்கள் ஓரளவுக்கு முக்கியத்துவம் அடைந்துகொண்டிருந்தனர். தலையாய அரசியல் விவகாரங்களில், அரசவையில் இருந்த கட்சிக்காரர்களின் கையில் கீழ்ச் சபை உறுப்பினர்கள் ஆட்டக் காய்களாய் இருந்திருக்கலாம். ஆயின், அவர்கள் தாமாகவே, கிராமத்திலும் நகரத்திலும் வாழ்ந்துவந்த இடைநிலை வகுப்பினரின் பொருளாதார நோக்கங்களைப்பற்றி எடுத்துக் கூறினர்; தரையிலும் கடலிலும் தவறான முறையில் போரை நடத்தியதற்காக நாட்டு மக்களிடம் எழும் கோபத்தை வெளியிட்டனர். நியாயம் வழங்குவதில் மிகுந்த கண்டிப்பும், முன்னிலும் மேம்பட்ட அமைப்பும் நாட்டிலே தேவை என்ற கோரிக்கையையும் டியூடர் அரசாட்சிக் காலம்வரை தெரிவித்துவந்தனர்.

தற்காலத்தவருக்குப் புரியும்வகையில் சாசரின் காலம் பல குரல்களை எழுப்புகின்றது. நாம் இவைகளை அறிந்துகொண்ட பிறகுதான், முன்பு நாம் புரிந்துகொண்டதைவிட நன்றாகப் புரிந்து கொண்டுவிட்டோம் என்ற எண்ணம் மேலிடும். சாசர் காலத்திலிருந்த நம் முன்னோர்கள் அவர்களது சிந்தனையிலும் செயலிலும் பெருமளவிற்கு அறிவுத் திறன், நன்னெறி, சமுதாயம் முதலியன கூடி உண்டாக்கிய ஊகத்தின் துணைகொண்டு வாழ்ந்தார்கள். இத்தகைய அவரது ஊகத்தின் உட்பொருளை இடைக்கால அறிஞர் ஒருவரால்தான் நன்றாக உணர முடியும்.

சாசரின் வாழ்க்கைக் காலத்தில் (1340 - 1400) நிகழ்ந்த மிக முக்கியமான சம்பவம் பண்ணை முறை ஆட்சி வீட்டின் முடிவாகும். குத்தகைக்கு விடுவதும், கூலி கொடுத்து வேலை வாங்குவதும் அதிகரித்துக்கொண்டே போயின. அடிமை நிலையிலிருந்த தொழிலாளியைக் கொண்டு பிரபுவின் நிலங்களைப் பயிர்செய்யும் வழக்கம் குறைந்துகொண்டேவந்தது. இதன் காரணமாக முற்றிலும் அடிமைகளல்லாதவர் வாழ்ந்த ஆங்கிலேயரின்

கிராமங்கள், சட்டப்படி சுதந்திரமுடைய மக்கள் வாழும் கிராமங் களாக மாறத் தொடங்கின. இக் கிராமங்களில் வழக்கமாக ஆற்ற வேண்டிய தொண்டிற்குப் பதிலாகக் கிராம மக்கள் குறிப்பிட்ட தொகையைக் கொடுத்தனர். இப் பெரும் மாறுதல், முன்னேற்றத் திற்கு வழியில்லாமலிருந்த நிலப்பண்ணை ஆட்சிமுறை நிலவிய சமுதாயத்தின் உருவையே மாற்றி அமைத்தது; இது மேலும் தொழி லாளர், தன்முயற்சியுடையோர் ஆகியோரும், மூலதனமும் ஓரிடத்தி லிருந்து மற்றோரிடத்திற்குப் பெயர்ந்துசெல்ல வழி வகுத்தது; காலப்போக்கில் நகரங்களிலும் கிராமங்களிலும் முன்னைவிட உயர்ந்த பலதரப்பட்ட வாழ்க்கை நிலையினையும் உண்டாக்கியது; இத்துடன் வியாபாரம், ஆக்கத்தொழில், உழவுத்தொழில் முதலியவற்றிற்கும் புதிய வழிகளை அமைத்துக்கொடுத்தது.

இம் மாறுதலின் உட்பொருளைப் புரிந்துகொள்ளுவதற்குக் கொஞ்சங் கொஞ்சமாக மாற்றப்பட்ட பழைய ஒழுங்கு முறை யினைச் சிறிதே விளக்கிக் கூறுவது அவசியமாகும்.

பயிரிடப்படும் நிலங்களை வேலி அமைக்காமல் பலரும் சேர்ந்து பயிரிடும் முறை இடைக்கால இங்கிலாந்தின் குறிப்பிடத்தக்க பண்பாகும்.[1] ஆனால், விவசாயத்தில் இந்த முறை மட்டுமே உபயோகிக்கப்பட்டது என்று கூறமுடியாது. வீட் தீவிற்கும், யார்க்ஷீர் மேட்டு நிலத்திற்கும் இடையே இருந்த மத்திய நிலப் பரப்பில் இம் முறை கடைப்பிடிக்கப்பட்டது. கிராமத்தில் வாழ்ந்த மக்கள் அனைவரும் வேலி அமைக்கப்படாத பரந்த நிலங்களில் அவரவர்களுக்கு ஒதுக்கப்பட்ட துண்டு நிலங்களைப் பயிர் செய்தல் இம் முறையாகும். ஒவ்வொரு குடியானவனும் பயிரிடத்தக்க நிலத்தில் ஓர் ஏக்கரோ அல்லது அரை ஏக்கரோ பரப்புள்ள துண்டு நிலத்தைப் பெற்றான். அவனுக்குக் கொடுக்கப்பட்ட நீண்ட, ஆனால் குறுகிய துண்டுநிலங்கள் ஒன்றை அடுத்து ஒன்றாக இருக்க வில்லை; பரந்த நிலவெளியிலே வெவ்வேறு இடத்திலே, அவனது அண்டை வீட்டாரின் நிலங்களுக்கு இடையில் இருந்தன. சாக்சன் கள் காலம் இடைக் காலம், டியூடர் வம்சத்தினரின் காலம், ஸ்டுவாட்டு வம்சத்தினரின் காலம் ஆகிய காலங்களில், இப்படிப் பயிரிடப்பட்ட துண்டுநிலங்களின் எல்லைக் கோடுகளை இன்றும் தெளிவாகக் காணலாம். முன்னாளில் விளைநிலங்களாய் இருந்து தற்போது மேய்ச்சல் நிலங்களாக இருக்கும் நிலங்களில் இருக்கும் வரப்புகளும், கலப்பையால் உண்டாக்கப்பட்ட வரிவரியான பள்ளங்களும் இங்கிலாந்தில் இன்றும் காணப்படும் இயற்கைக்

[1] சி. எஸ். ஆர்வின் (1938) எழுதிய 'ஓபன் பீல்ட்ஸ்' (Open Fields) என்ற புத்தகத்தில், வேலி அமைக்கப்படாமல் பயிர்செய்யும் முறையைப்பற்றிய சிறந்த விளக்கத்தைப் பார்க்க.

காட்சியாகும். நீண்டு உயர்ந்த வரப்புகளும், நிலங்களும், ஒன்றிலிருந்து மற்றொன்று, வடிகால்களாலோ, அல்லது தண்ணீர் பாய்ச்சுவதற்காகக் கலப்பையைக் கொண்டு செய்த வரிவரியான பள்ளங்களாலோ பிரிக்கப்பட்டன.[1]

அநேகமாக இன்று நமக்குத் தெளிவாகத் தென்படும் வளைந்த வரப்போ அல்லது நிலமோ நெடுநாளைக்குமுன் ஒரு குடியானவனுக்குச் சொந்தமானதும் பயிர் செய்யப்பட்டதுமான ஒரு நிலத்துண்டாக இருந்தது. இந் நிலத்துண்டல்லாமல், அக் குடியானவன், வேலியற்ற நிலப்பரப்பிலே, மற்றப் பகுதியில் இருந்த பல நிலத்துண்டுகளுக்கும் உரியவனாய் அவற்றையும் பயிர் செய்தான். இந் நிலத்துண்டுகள் புல் வளர்ந்த வரப்புகளால் ஒன்றிலிருந்து மற்றொன்று பிரிக்கப்படவில்லை. இரண்டு நிலத்துண்டுகளுக்கு இடையிலே இருந்த கலப்பையால் ஏற்படுத்திய திறந்த வடிகால்களே ஒன்றை ஒன்று பிரித்தன.

பல நிலத்துண்டுகளைச் சேர்த்து அதற்கு வேலி அமைப்பதில்லை. ஆனால், வேண்டும்போது திறந்த நிலப்பரப்பு முழுவதையும் நிலைபெற்ற வேலிகளுக்குப் பதிலாக, ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு மாற்றி அமைக்கக்கூடிய வேலிகளைக் கொண்டு பாதுகாப்பார்கள். ஒவ்வொரு கிராமத்திற்கும் இரண்டு அல்லது மூன்று பரந்த விளைநிலங்கள் சொந்தமாய் இருக்கும். அந்தப் பரந்த விளைநிலங்களைக் குடியானவர்கள் தங்களுக்குள் பங்கிட்டுக் கொள்வார்கள். இப் பரந்த விளைநிலங்களில் ஒன்று பயிர் செய்யப்படாமல் விட்டு வைக்கப்படும்; மற்றவை பயிரிடப்படும்.

மிருகங்களின் தீவனத்திற்காகப் புல்வெளிகளும் இம்முறையைப் போலவே பயிரிடப்பட்டன. புல்வெளிகளும், விளை நிலங்களும், புல்லும் தானியமும் பயிரிட்டபின் எல்லாருக்கும் பொதுவான மேய்ச்சல் நிலமாக விடப்படும். கிராம மக்கள் அனைவரும் ஒன்று கூடி விதிமுறைகளை ஏற்படுத்தி, ஒவ்வொரு குடும்பத்தினருக்கும் இந்த மேய்ச்சல் நிலத்தின் உரிமையை வரையறை செய்தனர்.

முதன்முதல் குடியேறிய ஆங்கிலோ-சாக்சன்களால் விவசாயத்தில் தோற்றுவிக்கப்பட்ட இம்முறை, தற்காலத்தில் வேலி

[1] டோரதி வோட்ஸ்வர்த் அம்மையார் வெளியிட்ட, 'ஜர்னல்' என்ற சஞ்சிகையின் முதல் வாக்கியங்கள், ஒரு காலத்தில் ஆங்கிலேயரின் பயிர்செய்யும் நிலங்களில் முன்னாள் பெய்த மழையின் காரணமாகக் காணப்பட்ட ஆழமற்ற வடிகால்களின் இயற்கையையும் தோற்றத்தையும் எடுத்துக்காட்டுகின்றன.

அல்ஃபாக்ஸ் டன், ஜனவரி 20, 1798. மலைப்பக்கங்களில் காணப்படும் பசுமையான குறுகிய வழிகள் உண்மையில் சிற்றாறுகள் பாயும் வழிகளாகும். முற்றாத கோதுமைப் பயிரை வரப்புகளுக்கு இடையே ஓடும் சிற்றாறுகளின் வெள்ளிய நீரின் ஒளிக்கோடுகள் அலங்கரிக்கின்றன.

போட்டுப் பிரிக்கும் முறை பழக்கத்திற்கு வரும்வரையில் நிலவி யிருந்தது. வியாபாரத்திற்கல்லாமல் தன்னுடைய குடும்பத்திற்குப் போதுமான அளவுக்குப் பயிர் செய்யவேண்டும் என்ற எண்ணம் ஒன்றே குடியானவனின் நோக்கமாக இருந்தவரையில், இம் முறை பொருளாதார நிலேக்கு உகந்ததாக இருந்தது. இம் முறை சுய உழைப்பிலும், பொதுக்கட்டுப்பாட்டிலும் உள்ள நன்மைகளேப் பெற்றிருந்தது. வேலி போடுவதால் ஏற்படும் செலவு மிச்சப் பட்டது. அதே சமயத்தில் ஒவ்வொரு குடியானவனுக்கும் நல்லதும் கெட்டதுமான நிலத்தில் நியாயமான பங்கு கிடைத்தது. கிராமத்திலிருந்த எல்லாரையும் ஒரு பெருங் குடும்பமாக இணேத்தது. எளியவனுக்கும், அவனுக்கு உரித்தான அளவு நிலம் கிடைத்ததோடு, ஒவ்வோர் ஆண்டும் நிலத்தை எப்படிப் பயன் படுத்தவேண்டும் என்று நிச்சயிப்பதில் அவனுக்கு ஒரு பங்கையும் அளித்தது.

தனக்குச் சொந்தமான நிலத்தைத் தானே பயிரிடும் உழவர் களின் குடியாட்சியின்மேல், பண்ணேமுறை ஆட்சியின் அதிகாரமும் உரிமைகளும் பெற்றுப் பண்ணேவீட்டில் வாழ்ந்த பிரபுவின் ஆதிக்கம் திணிக்கப்பட்டது. நிலத்தைத் தானே உழுது பயிர் செய்யும் உழவர்கள் தங்களுக்குள் ஒருவருக்கொருவர் அடங்கியிருக்கவில்லே; ஆனல், பண்ணே வீட்டில் வாழ்ந்த பிரபுவிற்கு உழவர்கள் அடிமை களேப்போல் இருக்க நேர்ந்தது; அவர்கள் தங்களுடைய நிலத்தை விட்டுவிட்டு வேறு எங்காகிலும் செல்ல உரிமையற்றிருந்தனர்; அவர்கள் நிலத்தோடு இணேந்தவர்களாயினர். தங்களுடைய தானியத்தைப் பிரபுவிற்குச் சொந்தமான மாவாலேயில்தான் அரைக்கவேண்டும். தங்கள் மக்களுக்குப் பிரபுவின் சம்மதமின்றித் திருமணம் நிகழ்த்த முடியாது. இவை எல்லாவற்றையும்விட வருடத்தில் சில நாட்கள், பிரபுவின் நிலத்திலே, அவரது பெய்லிப் என்ற அதிகாரிக்கு அடங்கி வேலே செய்யவேண்டியிருந்தது. சில கிராமங்களில் விரிந்த நிலத்திலே, பல நிலத்துண்டுகள் பிரபு விற்குச் சொந்தமாயிருந்தன. இதைத் தவிர, அநேகமாக ஒரே இடத்தில் வேண்டிய அளவு நிலம் வைத்திருந்தனர். பிரபுவின் நிலத்திலே குறிப்பிட்ட நாட்களுக்கு வேலே செய்யவேண்டியிருந்த அடிமை நிலேயையுடைய இம் முறை பரந்த விவசாயம் நிலவிவந்த பகுதிகளில் மாத்திரம் அல்லாமல் இங்கிலாந்து முழுவதிலும் ஏற்பட்டது. வேலியிடப்பட்டு வேறு விதமாகப் பயிர் செய்யப்பட்டு வந்த தென்கிழக்கு, மேற்கு, வடக்கு முதலிய திசைகளில் இருந்த நிலங்களிலும் இம் முறை ஏற்கப்பட்டது. நார்மானிய சட்ட நிபுணர்கள் இங்கிலாந்தின் எல்லாப் பகுதிகளிலும் நிலப்பண்ணே ஆட்சிச் சட்டங்களே மாறுபாடின்றி அமலுக்குக் கொண்டுவந்தனர். நார்மானியர் காலத்திலும், பிளான்டாஜனட் வமிசத்தினரின்

ஆட்சிக்கால முற்பகுதியிலும் ஒவ்வொரு கிராமமும் ஒரு வகையில் பண்ணையின் நடுவே வாழ்ந்த பிரபுவாலோ அல்லது அவரது அதிகாரம் பெற்றவராலோ உண்டாக்கப்பட்ட சமுதாயமாகவும், மற்றொரு வகையில் பிரபுவின் அடிமை நிலையிலிருந்த குடியான வர்கள் அடங்கிய சமுதாயமாகவும் விளங்கியது. சுதந்திரத்தோடு வாழ்ந்தவரின் எண்ணிக்கை ஆங்கிலோ-சாக்சன்கள் காலத்தி லிருந்ததைவிட, முக்கியமாக, டேன்லா பிரதேசத்தில் மிகக் குறை வாயிருந்தது.

இடைக்கால இங்கிலாந்தில், விவசாயத்தின் உண்மை நிலையை அறியவேண்டுமானால், ஆட்டுப் பண்ணையையும், ஆட்டிடை யனின் வாழ்க்கையையும் ஒரு நாளும் மறக்கக்கூடாது. நமது தீவு, ஐரோப்பாவிலேயே சிறந்த கம்பளியை உற்பத்தி செய்தது. ஆடம்பர வாழ்க்கைக்கு வேண்டிய கம்பளி ஆடையைத் தயாரிக்க வேற்று நாட்டில் கிடைத்தற்கரிய உயர்ந்த கம்பளியை இங்கிலாந்து தயாரித்து அளித்ததால், பிளான்டர்ஸில் வாழ்ந்த பிளமிஸ் மக்களும் இத்தாலியரும் இங்கிலாந்திலிருந்து கம்பளியை இறக்குமதி செய்தனர். இங்கிலாந்தின் அரசர், அவர் தம் குடிகளான செல்வர், ஏழைகள், பாதிரியார் மற்ற அனைவர்களின் செல்வத்திற் கும் காரணமாகக் கம்பளி இருந்தது. இன்றும் இங்கிலாந்தின் மேல் சபைத் தலைவர் அமர்ந்திருக்கும் கம்பளியால் ஆன ஆசனம் செல்வநிலைக்குக் கம்பளியே காரணம் என்பதைக் குறிப்பிடு கின்றது. மேய்ச்சல் நிலப்பகுதிகளில்மட்டும் அல்லாமல் பெரிய யார்க்ஷீர் பள்ளத்தாக்கிலும், காட்ஸ் ஓல்டு மலைப்பிரதேசங்களிலும், மேடு பள்ளங்களையுடைய சஸ்ஸெக்ஸ் பகுதியிலும், தீவுகளைப் போல் தோற்றமளித்த சதுப்பு நிலங்களிலும், சாதாரண விளை நிலங் களிலும் செம்மறியாடுகள் ஏராளமாகக் காணப்பட்டன. ஆட்டுப் பண்ணைகளை நடத்திவந்த பிரபுக்கள் 'பிஷப்' பதவிவகித்த பாதிரி யார்கள், 'ஆபட்டி'கள் என்ற மடத்தலைவர்கள் முதலியோர் இடை யர்களை வேலையில் அமர்த்தி ஆயிரக்கணக்கான செம்மறியாடுகளை வளர்த்தனர். இவர்களைத்தவிரப் பண்ணை வீட்டுக் குடியானவர் களும் செம்மறி ஆடுகளை வைத்திருந்தனர். ஒரு பிரபுவின் பண்ணைக் குடியானவர்கள் மொத்தமாக அவர் வைத்திருந்த செம்மறி ஆடுகளின் எண்ணிக்கையைவிட அதிகமான ஆடுகளை வைத்திருந்தனர். அவர்களும் கம்பளி வியாபாரத்தில் பங்கு கொண் டனர். மூன்றும் எட்வர்ட்டின் காலத்தில் குடியானவர்கள் வைத் திருந்த செம்மறியாடுகளின் எண்ணிக்கை பாதிரியார்களும், பிரபுக் களும் வைத்திருந்த செம்மறி ஆடுகளின் எண்ணிக்கையைவிட அதிகரித்துக்கொண்டே இருந்தது. (இலீன் பவர் எழுதிய 'இடைக் கால இங்கிலாந்தின் கம்பளி வியாபாரம்' என்ற நூலின் இரண்டாம்

அத்தியாயம், 1941: Eileen Power, "Mediaeval English Wool Trade" 1941, Chap. II.)

பழமையான பண்ணை முறை ஆட்சி, சாசரின் வாழ்க்கைக் காலத்திலேயே அதிவேகமாகக் குலைந்துகொண்டிருந்தது. இம் மாறுதல் அவர் பிறப்பதற்கு முன்னே தொடங்கி, அவர் இறந்து நீண்டகாலம் ஆனபின்னர் முடிவுற்றது. பன்னிரண்டாம் நூற்றுண்டிலேயே பிரபுக்கள் தங்கள் குடியானவர்கள் தங்களுக்காக ஒதுக்கப்பட்ட நிலத்தில் கட்டாயமாகச் செய்யவேண்டிய வேலை களுக்குப் பதிலாக ஒரு குறிப்பிட்ட தொகையை வாங்கிக் கொண் டனர். ஆயின், இதன் காரணமாக அடிமை நிலையில் இருந்த குடியானவர் சட்டப்படி சுதந்திரம் அடைந்துவிடவில்லை. பிரபு விற்கு வேறுவகையில் பணிசெய்யக் கட்டுப்பாடுடையவராக இருந்தனர். மேலும், பிரபு நினைத்தால் திரும்பவும் குறிப்பிட்ட தொகைக்குப் பதிலாகத் தன் நிலத்தில் வேலை செய்யுமாறு பணிக் கலாம். பிரபுவின் நிலத்தில் வேலைசெய்யும் கட்டாயத்திலிருந்து குறிப்பிட்ட தொகையைக் கொடுத்து ஒவ்வோர் ஆண்டாகக் குடியானவர் தப்பிவந்தனர். தன்னுடைய நிலத்துண்டுகளில் வேலை செய்துவிட்டு வழக்கப்படி, குறிப்பிட்ட நாட்களில் பிரபுவின் நிலத்திற்கு வந்து விருப்பமில்லாமல் கட்டாயத்திற்காக வேலை செய்த குடியானவர்களைக்காட்டிலும், வருடம் முழுவதும் இடை விடாமல் உழைக்கக்கூடிய கூலியாட்களைக்கொண்டு அதிகப் படியான விளைச்சலை அடையமுடியும் என்பதைப் பிரபுக்களின் அதிகாரியான பெய்லிப் என்பவர் அனுபவத்தால் அறிந்தார். சில குடியானவர்கள் தங்கள் நிலத்திலும் பிரபுக்களின் நிலத்திலும் பயிர் செய்து வாழ்வதைவிடப் பிரபுவின் வீட்டில் பணியாளாக வாழ்வதை விரும்பினர். இவ்வாறு பன்னிரண்டாம் நூற்றுண்டு முடிவதற்குள் வேலைக்குப் பதிலாகக் குறிப்பிட்ட தொகையைக் கொடுக்கும் வழக்கம் பலமடைந்தது. ஆனால், அதை அடுத்த பதின்மூன்ரும் நூற்றுண்டிலே வேலை செய்யவேண்டிய நிர்ப்பந்தம் அடிக்கடி தலையெடுத்தது. பெக்கெட் என்பவர் காலத்தில் வேலை நாட்களுக்குப் பதிலாகக் குறிப்பிட்ட தொகையைப் பிரபுக்கள் ஏற்றுக்கொண்டனர்; ஆயின், சைமன் டீ மான்ட் போர்ட்டின் காலத்தில் திரும்பவும் வேலை செய்யவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. அத்துடன் புதிய நிர்ப்பந்தங்களும் தோன்றின. பதின் மூன்ரும் நூற்றுண்டிலே பிரபுக்கள் தங்கள் உரிமைகளைத் தெளிவாக எடுத்துச் சொன்னதோடு, எந்த உரிமையையும் விட்டுக்கொடுக்க மனமில்லாதிருந்தனர். முக்கியமாகப் பாதிரியார்களின் பண்ணை களிலே குடியானவர்கள் வேலை செய்வதற்குப்பதில் பணம் கொடுக்கும் வழக்கம் ஏற்பட்டிருந்தும், பழைய நிலையையே பாதிரி யார்கள் விரும்பினர்.

பதின்மூன்ரும் நூற்ருண்டில் இவ்வாறு பிரபுக்கள் தங்கள் உரிமைகளை நிலைநிறுத்திக்கொள்ளப் பாடுபட்டனர். இதற்குக் காரணம் இந் நூற்ருண்டில் ஜனத்தொகை அதிகரித்ததால், தானியங்களைப் பயிர்செய்ய அதிகப்படியான விளைச்சல் நிலம் தேவைப்பட்டதேயாகும். குடியானவர்களின் குடும்பங்கள் பெருகிக் குடும்பங்களின் எண்ணிக்கை அதிகரித்ததால் ஒவ்வொரு குடும்பத்திற்கும் குறைந்த அளவு நிலம் கிடைத்தது. நிலத்தின் அளவை அதிகரிக்க முடியாததால் விளைபொருள்களின் தேவை அதிகரித்தது. விளைபொருள்களின் தேவை அதிகரிக்க அதிகரிக்கக் குடியானவர்கள் விளைச்சல் நிலத்திற்காகப் போட்டியிடலாயினர். இந்தப் போட்டியைப் பயன்படுத்திக்கொண்டு பிரபுக்களின் அதிகாரிகளான பெய்லிப்புகள் குடியானவர்களைக் கடுமையான நிபந்தனைகட்கு உட்படச் செய்தனர். பிரபு தனக்காக வைத்துக்கொண்டிருந்த நிலத்திலே குறிப்பிட்ட நாட்களில் குடியானவர்கள் சென்று வேலை செய்யவேண்டும் என்ற நிபந்தனை முன்னைவிடத் தீவிரப்படுத்தப்பட்டது.

இதனுல் பதினுன்காம் நூற்ருண்டு தொடங்கியபோது பிரபுக்களின் ஆதிக்கம் வலுப்பெற்றிருந்தது. ஆனுல், மறுபடியும் பழைய நிலை ஏற்படத் தொடங்கியது. இரண்டாம் எட்வர்ட்டின் காலத்தில் ஜனத்தொகையின் வேகம் குறைந்தது. இதனுல் திரும்பவும் பிரபுவின் நிலத்தில் வேலை செய்வதற்குப் பதிலாகக் குறிப்பிட்ட தொகையைக் கொடுக்கும் பழக்கம் தலையெடுத்தது. இங்கிலாந்து கொள்ளை நோயால் (1348 - 1349) பீடிக்கப்பட்டபோது இப் பழக்கம் விரைவாகச் செயல்பட்டது. இரண்டாண்டுக் காலத்திற்குள் ஜனத்தொகையில் மூன்றில் ஒரு பங்கோ அல்லது பாதியோ கொள்ளைநோயால் அழிந்தது. இங்கிலாந்தில் கிராம, சமுதாய, பொருளாதார நிலை இதனுல் எவ்வாறு பாதிக்கப்பட்டது என்பதை ஈண்டுக் காண்போம். இந் நோயிலிருந்து தப்பிப் பிழைத்த குடியானவர்கள் பிரபுக்களையும் அவர்களின் அதிகாரிகளான பெய்லிப்புகளையும் தங்கள் கோரிக்கைகளுக்கு இணங்கச் செய்யும் நிலையைப் பெற்றனர். சிறிது காலத்திற்குமுன் விளைச்சல் நிலத்திற்காகக் குடியானவர்கள் போட்டியிட்ட நிலை மாறி, நிலங்களை உழுது பயிர் செய்வதற்கு வேண்டிய ஆட்கள் கிடைப்பது அரிதாயிற்று. நிலங்களின் மதிப்புக் குறைந்தது. வேலை செய்பவருக்குக் கொடுக்கப்பட்ட கூலி அதிகரித்தது. பிரபுக்கள் தங்களுக்காக ஒதுக்கப்பட்டிருந்த நிலங்களைக் குடியானவர்களைக்கொண்டு பயிர் செய்ய முடியாத நிலையில் இருந்தனர். அத்துடன் அவர்கள் குடியானவர்களுக்குக் கொடுத்திருந்த நிலத்துண்டுகளும், அத்துண்டுநிலங்களைப் பயிர்செய்த குடும்பத்தினர் கொள்ளைநோயால் இறந்துவிட்டதால் அவர்கள் கைகளுக்கே திரும்பிவந்தன.

பிரபுவிற்கு ஏற்பட்ட இந்த இக்கட்டான நிலை குடியானவனுக்குத் தன் நிலையை உயர்த்திக்கொள்ள ஒரு சந்தர்ப்பம் அளித்தது. இறந்துவிட்டவர்களால் விட்டுச்செல்லப்பட்ட நிலத் துண்டுகளை இணைத்ததன் பயனாகப் பிழைத்திருந்த ஒவ்வொரு குடியானவனுக்கும் பல நிலத்துண்டுகள் கிடைத்தன. இவ்வாறு அதிக அளவுள்ள நிலத்தையுடைய குடியானவர்கள் சமுதாயத் திலே இடைநிலை வகுப்பினராக மாறித் தங்கள் நிலத்தைப் பயிர் செய்வதற்குக் கூலியாட்களை நியமித்தனர். இதன் விளைவாகக் குடியானவர்கள், தாங்களே சென்று குறிப்பிட்ட நாட்களில் பிரபுவின் நிலத்தில் வேலைசெய்யவேண்டும் என்ற பிரபுவின் அதி காரியான பெய்லிப்பின் நிபந்தனையை முன்னைவிட அதிகமாக வெறுத்தனர். கூலிக்கு வேலை செய்ய ஆட்கள் கிடைப்பது அரிதாயிருந்ததால், குடியானவர்களைப்போல் நிலம் வைத்திராத, சுதந்திரத்தோடு வாழ்ந்த கூலியாட்கள், பெய்லிப்புகளையும், அதிகப்படியான நிலத்தையுடைய குடியானவர்களிடமும் அதிகக் கூலியைக் கேட்கத் தலைப்பட்டனர். சில பிரபுக்கள் இன்னமும் குடியானவர்களைத் தங்கள் நிலத்தில் கட்டாயமாக வேலைசெய்யும் படி வற்புறுத்தித் தங்கள் நிலங்களைப் பயிரிட்டுவந்தனர். குடியான வர்களின் எண்ணிக்கை குறைந்துவிட்டதாலும், அவர்கள் கீழ்ப் படிய மறுத்ததாலும், பழைய நிலப்பண்ணை முறை தொடர்ந்து நீடிக்கமுடியாத நிலையை அடைந்தது. பெய்லிப் குடியானவனைக் கண்டிப்பாக வேலைசெய்ய வேண்டும் என்று கட்டாயப்படுத்திய போது, அவன் தான் இருக்குமிடத்தை விட்டுக் காட்டைக் கடந்து வேறு நகரத்திற்கோ அல்லது கிராமத்திற்கோ சென்றான். கொள்ளை நோய்க்குப்பிறகு, நகரங்களிலும், கிராமங்களிலும் போதுமான கூலியாட்கள் கிடைக்காததால் ஓடிவந்தவரை எங்கிருந்து ஓடி வந்தனர் என்று வினவாமலேயே, அதிகக் கூலிகொடுத்து வேலைக்கு அமர்த்திக்கொண்டனர். மனைவி மக்களுடன் ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குச் சிரமத்துடன் ஓடவேண்டிய நிர்ப்பந்தம் அற்ற குடியானவர்கள் சுலபமாகத் தங்களை விடுவித்துக்கொண்டு வேறு இடத்திற்குப் போக முடிந்தது. தாம் பயிர்செய்து வந்த நிலத்தைவிட்டு ஓடியவர்களில் பெரும்பாலானோர் மனைவி மக்களற்ற தனி மனிதராய் இருந்தனர். அப்படி அவர்கள் ஓடிய தால் அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட துண்டுநிலங்கள் பிரபுவின் கைகளுக்குத் திரும்பின. இத்தகைய நிலங்களைப் பயிர் செய்ய யாரும் முன்வரவில்லை. அப்படி முன்வந்தாலும் அவர்கள் பிரபுவின் நிலத்தில் வேலைசெய்யத் தயாராய் இல்லாமல், குறைந்த தொகை யைக் குத்தகை கொடுக்கவே முற்பட்டனர்.

சாசர் வளர்ந்து இளமைப் பருவத்தைத் தாண்டிய காலத்தில், பல பிரபுக்கள் பழைய முறையில் தங்கள் நிலங்களைப் பயிர்

செய்வதைக் கைவிட்டனர். அத்துடன் அவர்கள் கட்டாய வேலைக்குப் பதிலாகக் குறிப்பிட்ட தொகையைப் பெற்றுக்கொள்ளவும் சம்மதித்தனர். ஜனத்தொகைக் குறைவின் காரணமாகக் குடியானவர்களால் அதிகப்படியாகச் சம்பாதிக்க முடிந்தது. இந்த அதிகப்படியான வருமானத்தைக் கொண்டோ அல்லது கடன் வாங்கியோ குடியானவர்கள் அடிமை நிலையிலிருந்து தங்களை மீட்டுக்கொண்டனர்; அத்துடன் அவர்கள் பயிர் செய்துவந்த நிலங்களுக்குக் குத்தகைப் பணத்தையும் அவர்களால் கொடுக்க முடிந்தது. பல குடியானவர்கள் செம்மறியாட்டை வளர்த்து அதன் கம்பளியைக்கொண்டு பொருள் திரட்டித் தங்கள் சுதந்திரத்தை அடைந்தனர்.

கட்டாய வேலைக்குப் பதில் குடியானவர்கள் கொடுத்த பணத்தைக்கொண்டு, பிரபுக்கள் வேலைக்குக் கூலியாட்களை அமர்த்திக்கொள்ள முடிந்தது. ஆனால், கூலியாட்களுக்கு அதிகக் கூலி கொடுக்க வேண்டியிருந்த காலத்தில், அவர்களால் போதுமான கூலி கொடுக்க முடியவில்லை. அதனால் பல நிலக்கிழார்கள் தங்களுடைய நிலங்களைத் தாங்களே பயிர் செய்வதை நிறுத்திவிட்டனர். அதற்குப் பதிலாக அந் நிலங்களை, குடியானவரிடையே புதியதாகத் தோன்றிய 'இயோமென்' என்றழைக்கப்பட்ட வகுப்பினருக்குக் குத்தகைக்கு விட்டனர். இக் குடியானவர்கள் நிலத்தைக் குத்தகைக்கு எடுத்துக்கொள்வதுடன். பிரபுவின் கால்நடைகளையும் பெற்றுக்கொண்டனர். சில சமயங்களில் இவையனைத்திற்கும் பதிலாக ஒரு குறிப்பிட்ட தொகையைக் கொடுத்தனர். ஆனால், அநேகமாக, நிலத்தையும் கால்நடையையும் குத்தகைக்குப் பெற்றுக்கொண்டு, பிரபுவின் பண்ணை வீட்டில் உணவுக்குத் தேவைப்படும் தானியம், பால் முதலியவற்றைக் கொடுக்கச் சம்மதித்தனர். இந் நாள்வரை பிரபுவின் குடும்பம் பிரபுவிற்கென்று ஒதுக்கி வைக்கப்பட்டிருந்த நிலத்திலிருந்து கிடைத்த பொருள்களைக்கொண்டு வாழ்ந்துவந்தது. இந்த நிலம் குத்தகைக்கு விடப்பட்டுவிட்டதால், பிரபுவும் குடியானவர்களும் இருவருக்கும் நன்மை தரக்கூடிய வகையில் வாழவேண்டியிருந்தது. பழங்காலத்தில் நிலவிய அன்புடன் கூடிய உறவு இரு வகுப்பாரிடையே திரும்பவும் ஏற்பட்டது. மேய்ச்சல் நிலங்களைக்கொண்ட மாவட்டங்களில் குடியானவர்கள் கம்பளியை விற்றுச் செல்வத்தைச் சேகரிக்கத் தலைப்பட்டனர். இக் குடியானவர்கள் பிரபுவுக்கென்று இருந்த நிலம் முழுவதையும் குத்தகைக்கு எடுத்துக்கொண்டு அந்த நிலத்தைத் தங்களுக்குள் பகிர்ந்துகொண்டனர். பலவித வழிகளில் நிலத்தை அடைந்த குடியானவரிடையே புதிய வகுப்புகள் தோன்றின. அவர்களில் சிலர் பிரபுவிற்கென்றே ஒதுக்கியிருந்த நிலங்களைக் குத்தகை எடுத்துக்கொண்டு பயிர் செய்தனர். மற்றும் சிலர்

பயிர் செய்யப்படாமல் இருந்த புதிய நிலங்களை வேலியிட்டுப் பயிர் செய்யத் தொடங்கினர். ஏனையோர் பழைய பரந்தவெளி நிலத்திலே இருந்த துண்டுநிலங்களைப் பயிர் செய்தனர். சிலர் தானியம் விளைவித்தனர். மற்றும் சிலர் கால்நடைகளை அபிவிருத்தி செய்வதும் கம்பளி எடுப்பதுமான தொழில்களில் ஈடுபட்டனர். மற்று முள்ளோர் தானியம் பயிர் செய்வதிலும், கால்நடை வளர்ப்பதிலும் ஈடுபட்டனர். இக் குடியானவர்களின் எண்ணிக்கையும் செல்வமும் அதிகரித்தன. பல நூற்றுண்டுகளுக்குப் பிறகு உருவாகிய புதிய இங்கிலாந்தை உருவாக்கியவர்கள் இக் குடியானவர்கள் தான். இவர்களிடம் காணப்பட்ட சுதந்திர வாழ்க்கை, நற்பண்பு, வில் வித்தைத்தேர்ச்சி ஆகியவை, நூற்றுண்டுப் போரின் காலந்தொட்டு ஸ்டூவர்ட் வம்சத்தினரின் காலம்வரை தோன்றிய நாட்டுப் பாடல்களில் நிறைய இடம் பெற்றிருக்கின்றன.[1]

நிலப்பண்ணை ஆட்சிக் காலத்தில் குடியானவனுக்கும், பிரபுவிற்கும் இடையே இருந்த விரிந்த பிளவு தூர்க்கப்பட்டுவிட்டது. குடியானவனின் அடிமை நிலை மறைந்துகொண்டுவந்தது. அவன் நிலத்தை உடைய குடியானவனுகவோ அல்லது நிலமில்லாத வேலையாளாகவோ மாறிக்கொண்டிருந்தான். பிரபு, குடியானவன் ஆகிய இருதரப்பாரிடையே நிலவிவந்த பகைமை தீர்ந்தது. குடியானவரிடையே பிறருக்கு வேலை கொடுத்தவர் என்றும், பிறரிடம் வேலை செய்தவர் என்றும் இரு பிரிவுகள் தோன்றின. இப் பிரிவினரிடையே ஆரம்ப காலத்தில் தோன்றிய சச்சரவுகள் 'தொழிலாளர்களின் சட்டங்களில்' காணலாம்.

இச் சட்டங்கள் காமன்ஸ் சபையினரின் கோரிக்கையின்பேரில் பார்லிமெண்டால் செய்யப்பட்டன. இச் சட்டங்களின் நோக்கம் வேலையாட்களின் கூலி அதிகரிக்காமல் இருக்கச் செய்வதாகும். இச் சட்டங்கள் செய்வதற்குக் காரணமாயிருந்தவர், சட்டங்களில் 'ஹஸ்பென்ட்ஸ்' என்று குறிக்கப்பட்ட பயிர்த்தொழிலில் ஈடுபட்டிருந்தவர், நிலத்தைக் குத்தகைக்கு எடுத்தவர் ஆகிய தாழ்ந்த நிலையில் இருந்த பிரபுக்களும், குத்தகைக்கு எடுத்துக்கொண்ட குடியானவர்களும் ஆவர். வேலையாட்களுக்குக் கொடுக்கப்படும் கூலியைக் குறைந்த அளவிலேயே வைத்திருக்கவேண்டும் என்ற

[1] இயோமென் என்ற வார்த்தை நகரத்திற்கப்பால் இருந்த இடங்களில் வாழ்ந்த வகுப்பினரைக் குறித்தது; அநேகமாகக் குடியானவரைக் குறித்தது. ஆயின், சில சமயங்களில் (கான்டர்பெரிக் கதைகளில் வரும் கானன் என்பவரின் ஆட்களைப்போல்) வேலையாளையோ, ஆயுதம் தாங்கிய மெய்க்காப்பாளனையோ குறித்தது. முதன்முதலில் தோன்றிய நாட்டுப் பாடல்களில் வரும் ராபின் ஹுட் மாறுவேடம் தரித்த எர்ல் என்ற கோமானுக இல்லாமல் ஓர் இயோமென் ஆகத் தீட்டப்பட்டிருக்கிருர். இயோமென் வகுப்பினர் தங்களால் பயிர்செய்யப்பட்ட நிலத்திற்குச் சொந்தமானவர் என்ற கருத்து பிற்காலத்தில் தோன்றியது.

அரசியல் நோக்கை உண்டாக்கியவர்கள் பயிர்த் தொழிலில் ஈடுபட்டிருந்த, புதிதாகத் தோன்றிய இடைநிலை வகுப்பினர்களேயாவர். பழைய நிலப்பண்ணை ஆட்சிப் பிரபுக்கள் இதற்குக் காரணமாய் இருக்கவில்லை. ஆனால், பெருநிலக்கிழார்கள் தங்கள் நிலங்களைக் குத்தகைக்கு எடுத்துக்கொண்ட குடியானவரின் கோரிக்கையை ஆதரித்தனர். தங்களிடம் நிலத்தைக் குத்தகைக்கு எடுத்துக் கொண்ட குடியானவர்கள் அதிகப்படியான கூலி கொடுக்க வேண்டி இருந்தால் தங்களுக்குச் சேரவேண்டிய குத்தகைப் பணம் பாதிக்கப்படலாம் என்று நினைத்தே அவர்கள் அவ்வாறு செய்தனர்.

ஆகவே, குடியானவர்களுக்குள் இருந்த இரு பிரிவினரான நிலத்தையுடைய குடியானவன், அந் நிலத்திலே கூலிக்கு வேலை செய்த குடியானவன் ஆகியவரிடையேதான் சச்சரவு இருந்து வந்தது. இந்த இரு வகுப்பினரின் முன்னோர்கள் ஒன்றை அடுத்து ஒன்றாக இருந்த நிலத்துண்டுகளைப் பயிர் செய்திருப்பர்; அடிமை நிலையிலே இருந்த குடியானவர்களாகப் பிரபுவின் நிலத்திலே வேலை செய்திருப்பர். ஆனால், அவர்களின் பின்வந்த இவர்கள் ஒருவரை ஒருவர் எதிர்த்து நின்றனர். கூலி அதிகரிப்பதைத் தடுக்க இயற்றப்பட்ட சட்டங்கள் சமுதாயத்தில் மெதுவாக ஏற்பட்ட மாறுதல்களைக் குறிக்கின்றன. வட்டாரங்களில் பழக்க வழக்கத்தின் அடிப்படையில் தோன்றிய சமுதாயமாக இருந்த நிலை மாறி, நாடு முழுதும் ஒரே மாதிரியான நாணயச் செலாவணியை உடைய சமுதாயமாக மாறிற்று. இடைக்காலத்தில் ஒவ்வொரு நிலப்பண்ணையிலும் தனிப்பட்ட பழக்கவழக்கங்கள் இருந்தன. ஆனால், பல இடங்களில் இப் பழக்கவழக்கங்கள் மறைந்துபோயின. பார்லிமெண்டு தொழிலாளர்களின் சட்டங்களை இயற்றி நாடு முழுதும் ஒரே மாதிரியான நிலையை ஏற்படுத்தத் தொடங்கியது. இச் சட்டங்கள், தொழிலாளிகளின் கூலி அதிகமாகாமல் தடுத்தன; அத்துடன் கூடுமானவரையில் விலைகள் அதிகமாவதையும் தடுக்க நினைத்தன. பார்லிமெண்டால் நிர்ணயிக்கப்பட்ட கூலிகளுக்கு மேல் எந்தத் தொழிலாளியும் கேட்காமல் இருக்கவும், அப்படிக் கேட்போரைத் தண்டிக்கவும் பிரத்யேகமாக நீதிபதிகள் நியமிக்கப் பட்டனர்.

நிலமற்ற தொழிலாளருக்கும், பார்லிமெண்டின் சட்டப்படி நியமிக்கப்பட்ட நீதிபதிகளின் ஆதரவுபெற்ற குடியானவருக்கு மிடையே, கொள்ளை நோய் காலத்திலிருந்து 1381ஆம் ஆண்டு நிகழ்ந்த கலகத்திற்குப்பின்வரை பகைமை தொடர்ந்து நீடித்தது. வேலைநிறுத்தங்கள், கலகங்கள், வட்டாரத் தொழிற்சங்கங்கள் யாவும் நீதிமன்றங்களில் குற்றச்சாட்டு மூலமும், தண்டனை மூலமும் ஒடுக்கப்பட்டன. இருப்பினும் பொதுவாகக் கூலி வாங்கிப் பிழைப்

போரே வெற்றி கண்டனர். கொள்ளை நோய் என்று சொல்லப்பட்ட கொடிய நோயும், அதைத் தொடர்ந்து வட்டாரங்களில் திரும்பத் திரும்ப ஏற்பட்ட நோய்களும், கூலிக்கு வேலை செய்வோரின் எண்ணிக்கையைக் குறைத்ததுதான் இதற்குக் காரணம். விலைகள் உயர்ந்தன என்றாலும், தொழிலாளருக்குக் கொடுக்கப்பட்ட கூலி அவற்றைவிட அதிவேகமாக உயர்ந்தது. இக் காலத்தில் நிலமற்ற தொழிலாளர், 'பீர்ஸ் என்ற உழவன்' (Piers, the Plowman) என்ற நூலில் விரித்துக் கூறியுள்ளபடி அனுகூலமான நிலையில் இருந்தனர்.

'நிலமில்லாத தொழிலாளிகள், ஏதாவதொரு தொழில் செய்து வந்தனர். அவர்கள் முன்னாள் சமைத்த காய்கறிகளை உண்ண மாட்டார்கள். பீர் போன்ற பானங்களுக்காகவும் பன்றி இறைச்சிக் காகவும் ஒரு பென்ஸ்கூடச் செலவழிக்க மாட்டார்கள். ஏனென்றால், சூடாக இல்லாத பொருள்கள் தங்கள் வயிற்றைக் கெடுத்துவிடும் என்று பயந்தனர். சூடாகச் சமைத்த இறைச்சி அல்லது வறுத்த மீன் முதலியவற்றையே உண்டனர். அதிகக் கூலி கிடைத்தாலும் தொழிலாளியாகத் தாங்கள் பிறந்ததற்காக வருந்துவர். தொழி லாளர் குறைந்த கூலிக்கு வேலைசெய்ய வேண்டும் என்ற சட்டத்தை இயற்றியதற்காக அரசனையும் அவனது சபையையும் நிந்திப்பர்.'

நிலம் வைத்திராத தொழிலாளி, எப்போதாவது சூடான இறைச்சியைத் தன் உணவாக உண்டான். ஆறிப்போய் இருந்த பன்றியிறைச்சியைக் கண்டும், அதையே அநேகமாக உண்பதால் சலித்துப்போன முட்டைக்கோசைக் கண்டும் வெளிப்படையாக எரிந்துவிழுந்தான். இத்தகைய தொழிலாளியை விட்டுவிட்டுப் பரந்த வேலியிடப்படாத நிலத்தில் இருந்த துண்டுநிலங்களைப் பயிர் செய்து வந்த உழவனைச் சிறிது பார்ப்போம். இரண்டாவது ரிச்சர்ட் அரசவையில் செல்வராக விளங்கிய சாசர், தன் நடுவயதை எட்டிப் பிடித்துக்கொண்டிருக்கும்போது, சுதந்திரத் திற்காகப் போராடி வந்த குடியானவனின் போராட்டம் எந்த அளவில் இருந்தது என்பதைக் காண்போம்.

சில பண்ணைகளில் பிரபுவிற்கும் குடியானவனுக்கும் இடையே இருந்த உறவு சச்சரவு இல்லாமலே மாறிற்று. பிரபுவின் நிலத்திலே கட்டாயமாக வேலை செய்வதற்குப் பதிலாகக் குறிப்பிட்ட தொகையை ஏற்றுக்கொள்வது, பிரபுவிற்கும் குடியானவனுக்கும் நன்மை பயக்கும் என்று தெளிவாகத் தெரிந்ததால், அப் பண்ணை களில் சச்சரவு இல்லாமலேயே மாற்றம் ஏற்பட்டது. ஆனால், இப்படிக் கட்டாய உழைப்பிற்குப் பதிலாகப் பணம் கொடுக்கும்

பழக்கம் ஏற்பட்டிருந்த பண்ணைகளில்கூடக் குடியானவன் தன் அடிமை நிலையை உணர்த்தும்வகையில் தீர்வைகள் செலுத்த வேண்டி இருந்தது. அப்படிக் கொடுக்கவேண்டிய தீர்வைகளில் ஒன்று, 'மெர்செட்' (merchet) என்பதாகும். இது, குடியானவன் தன் மகளுக்குத் திருமணம் செய்வதற்காகக் கொடுக்கவேண்டிய தீர்வை. மற்றொன்று, 'ஹெரிஎட்' (heriot) என்பதாகும். இது குடியானவன் இறந்ததும் அவனது குடும்பத்தில் இருந்த சிறந்த கால்நடையைப் பிரபு எடுத்துக் கொள்வதாகும். குடியானவன் தன்னுடைய தானியங்களைப் பிரபுவின் மாவாலையில் அதிகப் பணம் கொடுத்து அரைத்துக்கொள்ளவேண்டும். இதைப்போல் அவனது அடிமை நிலையைக்காட்ட, மனவேதனையை உண்டுபண்ணும் பல தீர்வைகள் இருந்தன. இவ்வாறு பாதி சுதந்திரமே பெற்றிருந்த குடியானவர்கள் முழு சுதந்திரம் பெற்றால்தான் மன அமைதி அடையமுடியும். மாக்னகார்டா என்ற உரிமைப் பத்திரத்தில் கண்டுள்ள உரிமைகளுடன், சட்டப்படி சுதந்திரம் பெற்றவர்களாக இருக்கவேண்டும் என்று அவர்கள் நினைத்தனர். பல பண்ணைகளில் இன்னமும், குடியானவன் பிரபுவின் நிலத்தில் வேலை செய்யவேண்டிய நிபந்தனையைக் கட்டாயப்படுத்திச் செய்ய வைத்தனர். இச் செய்கை இரு தரப்பாரிடையேயும் நடந்துவந்த போராட்டத்தை மேலும் கடுமையாக்கிற்று.

இச் சுதந்திரத்திற்காக நடந்த போராட்டம் பண்ணைக்குப் பண்ணை மாறுபட்டிருந்தது. 1381ஆம் ஆண்டு ஏற்பட்ட கலகத்திற்கு, இப் பண்ணைகளில் இங்குமங்குமாக நடந்த கொடிய செயல்கள் வழிசெய்தன. 1377-ல் பார்லிமெண்டால் இயற்றப்பட்ட சட்டத்தின் தொடக்கப்பகுதி குறிப்பிடத்தக்கவகையில் உள்ளது. பண்ணையின் சொந்தக்காரரான பிரபுக்களும், பாதிரியார்களும் குடியானவர்களைப்பற்றிக் கீழ்வருமாறு முறையிட்டனர்:

'அடிமை நிலையில் இருந்த குடியானவர்கள் அடிமைத் தளைகள் அனைத்தையும் விலக்கவேண்டும் என்று கண்டிப்புடன் கேட்டனர். அத்துடன் பிரபுக்களின் அதிகாரிகளுக்குத் தொல்லை விளைவித்தனர். மேலும், அவர்கள் அவரவர் பிரபுக்களை எதிர்த்துப் போராடும்போது ஒருவர் மற்றவருக்கு உதவிபுரிய ஒத்துக் கொண்டனர். [ஸ்டாச்யூட் ஆஃப் தி ரெல்ம் II, என்ற பாராளுமன்றச் சட்டம், பக்கம், 2 (Stats of the Realm, II, p. 2.]

பல ஆண்டுகளுக்கு நாட்டுப்புறங்களில் இத்தகைய நிலைமை இருந்ததென்றால், 1381-ல் நடந்த வியக்கத்தக்க சம்பவத்தை நம்மால் நன்றாகப் புரிந்துகொள்ளமுடியும். லண்டனில் இருந்து 100 மைல்களுக்குள் இருந்த கிராமங்களிலும், மேற்கிலும் வடக்

கிலும், இதைவிட அதிக தூரத்திலிருந்த பிரதேசங்களிலும், தொழிலாளர்களின் சங்கங்களும், அடிமை நிலையிலிருந்த குடியானவர்களின் சங்கங்களும் செயலாற்றி வந்தன. இச் சங்கங்கள் பார்லிமெண்டால் இயற்றப்பட்ட, தொழிலாளர்களின் கூலியை நிர்ணயிக்கும் சட்டங்களையும், பண்ணைமுறை ஆட்சியின் பழக்கவழக்கங்களையும் மறுக்கவும், ஆட்சி செய்துவந்த வகுப்பினரைச் சாத்வீக முறையில் தொடர்ந்து எதிர்க்கவும் நாட்டுப்புறங்களிலிருந்த அனைவர்க்கும் கற்றுக்கொடுத்தன. கிராமங்களிலன்றி வியாபாரத் தலங்களானசில நகரங்களிலும் அதிருப்தி காணப்பட்டது. செயின்ட் ஆல்பன்ஸ், பியூரி செயின்ட் எட்மண்ட்ஸ் போன்ற பெரிய மடங்களுக்கு அருகிலிருந்த வியாபாரத் தலங்களில், அடிமை நிலையிலிருந்த குடியானவர்களும் நகரத்தாரும், அம் மடங்களில் வாழ்ந்த பாதிரியார்களுடன் தொடர்ந்து சச்சரவில் ஈடுபட்டிருந்தனர். ஒருவர்பின் ஒருவராக வந்த அரசர்கள், வேண்டியபோதெல்லாம் ஒரு குறிப்பிட்ட தொகையைப் பெற்றுக்கொண்டு, தங்களுக்கு உரிய நிலங்களில் தோன்றிய நகரங்களுக்கு நகராண்மை உரிமைகளை வழங்கியிருந்தனர். ஆனால், மடங்களில் இருந்த பாதிரியார்கள் அத்தகைய நகராண்மை உரிமைகளை நகரத்தாருக்கு வழங்க மறுத்தது சச்சரவுகளுக்குக் காரணமாயிற்று.

ஃபிரான்சில், 'ஜாக்ரி' என்று இழிவாக அழைக்கப்பட்ட குடியானவர்கள் பட்டினியால் ஏற்பட்ட மனக்கசப்பினால் கலகம் செய்யத்துணிந்தனர். ஆனால் இங்கிலாந்தில் கலகம் செய்தவர்கள் அப்படிப்பட்டவர் இல்லை. அவர்கள் செல்வத்திலும் சுதந்திர ஆர்வத்திலும் வேகமாக முன்னேறிக்கொண்டிருந்தனர். ஆனால், அந்த முன்னேற்றத்தின் வேகம் அவரது பேரார்வத்தைச் சீக்கிரம் தணிக்கக்கூடியதாக இருக்கவில்லை. குடிப்படையில் அவர்கள் பயிற்சி பெற்றிருந்ததால், அநேகர் சுயமரியாதையும் போர் வீரரிடை காணப்படும் ஒழுங்கு முறையும் உடையவராய் இருந்தனர். கலகக்காரர்களில் பலர் பெயர்பெற்ற நீண்ட வில்வீரர்களாய் இருந்தனர். இக் கலகக்காரர்களின் வல்லமைமிக்க கூட்டாளிகள் காடுகளில் மறைந்து வாழ்ந்தனர். உயர்ந்த வகுப்பினரால் தண்டிக்கப்பட்ட குடியானவர்களும் நாடு கடத்தப்பட்டவர்களும் ராபின் ஹுட்டின் கூட்டத்தினரும் பிறர் நிலத்தில் வேட்டையாடுவதைத் தொழிலாகக் கொண்டவரும் வாழ்க்கையில் வெறுப்புற்றவரும் குற்றவாளிகளும் ஃபிரான்சுடன் போர் முடிந்ததும் வேலையிலிருந்து நீக்கப்பட்ட வீரர்களும், கலகக்காரர்களுக்குத் துணைபுரிந்தனர். ஏழைகளுக்கு நியாயமும் சுதந்திரமும் வழங்கப்படவேண்டும் என்பதற்காகத் தோன்றிய 'கிருத்தவ சமவுரிமை' இயக்கத்தினால், இப் பலதரப்பட்ட கலகக்காரர்கள் மேலும் தீவிரமடைந்தனர். ஜான் பால் என்பவரும்

ஊர் ஊராகத் திரிந்துவந்த துறவிகளும், இத்தகைய பிரசாரம் செய்துவந்தனர். அநேகமாக அடிமைநிலையிலிருந்த குடியான வரின் வகுப்பையே சார்ந்த வட்டாரப் பாதிரியார்கள், குடியான வரின் சுதந்திரப் போராட்டத்திற்கு ஆதரவு காட்டினர். இவ் வியக் கம் மதக் கோட்பாடுகளுக்கு முரண்பட்டதாக இருக்கவில்லை. ஆனால், விக்லிப்பின் இயக்கத்தைச் சேர்ந்த 'லாலர்டுகள்' என்று அழைக்கப்பட்ட, மதக் கோட்பாடுகளுக்கு முரண்பட்ட பிரசார கர்கள் சிலரும் இவ் வியக்கத்தில் காணப்பட்டனர். ஏழைகளின் கோரிக்கையை எதிர்த்து, உயர்ந்த வகுப்பினரோடு சேர்ந்திருந்த பாதிரியார்களின் உரிமைகளுக்குக் கலகக்காரர்கள் எவ்விதமதிப்பும் கொடுக்கவில்லை. செல்வமிக்க மடங்களும், பிரிலேட் என்று அழைக்கப்பெற்ற உயர்ந்த பதவி வகித்த பாதிரியார்களும், மற்றும் பாதிரியார் அல்லாதாரும் 'பாரிஷ்' என்று அழைக்கப்பட்ட வட்டாரத்தில் இருந்தோரிடமிருந்து 'தைத்' என்று சொல்லப்பட்ட வரியை வசூலித்தனர். இவ் வரி ஒருவரின் வருமானத்தில் பத்தில் ஒரு பங்காகும். இத் தொகை பாரிஷிலிருந்து வசூலிக்கப்பட்டாலும், பாரிஷில் இருந்த 'பார்சன்' என்று அழைக்கப்பட்ட துறவிக்கு இதில் சிறிதேனும் கொடுக்கப்படவில்லை. இத் துறவி மற்ற ஏழை களைப்போலவே வறுமையில் வாடினர். இதன் காரணமாகத் துறவியும் பாரிஷில் வாழ்ந்த மக்களும் 'தைத்' வசூலித்தவரை வெறுத்தனர்.

கலகம் நடந்த முக்கிய பகுதியான தென்கிழக்கு இங்கிலாந்தில் மடங்கள் மக்களின் வெறுப்பைப் பெற்றிருந்தன. இதன் காரண மாகக் கலகக்காரர்களின் கொடிய செயல்களால் மடங்கள் மிகவும் பாதிக்கப்பட்டன. பியூரி செயின்ட் எட்மண்ட்ஸ் மடத்தின் தலைவருக்கு அடுத்த பதவியான 'பிரயர்' பதவி வகித்துவந்த துறவியை அவர்தம் குடியானவர்களே கொலை செய்தனர். கான்டர்பெரியில் இருந்த ஆர்ச்பிஷப் என்று அழைக்கப்பட்ட தலைமைக் குரு, நீதித்துறையின் தலைவர் என்ற முறையில் மக்களால் வெறுக்கப்பட்ட அரசாங்கத்தின் பிரதிநிதியாகக் கருதப்பட்டார். இதன் காரணமாக, டவர்ஹில் என்ற இடத்தில் வாட் டைலரின் ஆட்கள் அவரைச் சிரச்சேதம் செய்தனர். இதைப் பழிவாங்க நார்விச்சில் இருந்த பிஷப் பதவி வகித்த பாதிரியானவர் தாமே படைக்குத் தலைமை தாங்கிச் சென்று கிழக்கு ஆங்கிலியா பிரதேசத் தில் நடந்த கலகத்தை ஒடுக்கினர். கிருத்தவப் பாதிரியார் களிடையே எல்லாரும் சமவுரிமையுடையவராக வாழவேண்டும் என்று எண்ணியவரும், மாறுதல் எதையுமே விரும்பாதவர்களும் எப்போதும் காணப்பட்டனர். இவர்கள் இப்போது ஒருவரை ஒருவர் எதிர்த்து நின்றனர்.

இக் கலகத்திற்குக் காரணம் மக்களால் வெறுக்கப்பட்ட தலைவரி யாகும். அவ் வரியின் கொடுமையும், அந் நிர்வாகத்தில் இருந்த ஊழலும், எஸ்ஸெக்சிலும், கென்டிலும் கலகத்தைத் தோற்றுவித் தன. இங்குத் தோன்றிய கலகம், நாட்டின் மற்றப் பாகங்களில் தோன்றிய கலகத்திற்கு முதற் குறியாயிற்று. கவுன்டி என்றழைக்கப் பட்ட நாட்டின் இருபத்தெட்டு மாவட்டங்களிலும் கலகங்கள் தோன்றி நாடு முழுவதையும் பாதித்தன. மக்களின் தலைவர்கள் 'ஜான் பால் மணியை அடித்துவிட்டார்' என்ற குறிப்புச் செய்தியை ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு அனுப்பிக் கலகத்தைப் பரவச் செய்தனர். பாரிஷ் என்ற பிரிவில் இருந்த துறவியோ, பழைய வில் வீரரோ அல்லது கலகக்காரரிடம் பரிதாபம் கொண்ட ஜென்ட்ரி வகுப்பினரோ கலகத் தலைவராயினர். இவர்கள் தலைமையில் நன்கு ஆயுதம் தரித்திராத கிராமத்தவரும் நகரத்தவரும் கலகம் செய்தனர். பண்ணை வீடுகளையும் மடங்களையும் தாக்கித் தாங்கள் விரும்பிய உரிமைகளை அளிக்குமாறு கட்டாயப்படுத்தினர். வெறுக் கத்தக்க பத்திரங்களையும், பண்ணையாட்களின் பெயர்களடங்கிய சுருள்களையும் தீயிட்டுப் பொசுக்கினர். சிலர் கொலை செய்யப் பட்டனர். இதற்குப் பயந்த ஜென்ட்ரி வகுப்பினர் தங்கள் வீட்டை விட்டு ஓடிக் கலகக்காரர் இதுவரை தங்கிவந்த காடுகளில் சென்று மறைந்துகொண்டனர்.

இதன்பிறகுதான் கலகக்காரர்கள் லண்டன் மாநகரைப் பிடித்தனர். இது நமது நீண்ட சமுதாய வரலாற்றில் குறிப்பிடத் தக்க சம்பவமாகும். மக்களின் தலைவர்கள், கிராமப்படைகள் பல வற்றை லண்டனை நோக்கி விரையும்படி உத்தரவிட்டனர். ஏன் என்றால், லண்டனில் அவர்களின் கூட்டாளிகள் இருந்தனர். ஆல்டர்மென் என்று அழைக்கப்பட்ட லண்டன் நகரின் ஆட்சி உறுப்பினர் சிலரும், மக்கட் கூட்டமும் லண்டன் நகரின் கதவுகளை விரைந்து வந்த கிராமத்தாரைக் கொண்ட படைகளுக்குத் திறந்து விட்டன. ஆட்சி செலுத்திவந்த வகுப்பினர் பீதி அடைந்தனர். அசைக்கமுடியாத அரசரின் அரணான 'டவரில்' இருந்தவர்கள் கலகக்காரரிடம் சரண் அடைந்தனர். இது 1789ஆம் ஆண்டு ஃபிரான்சில் பாஸ்டீல் சரண் அடைந்ததைப்போல் இருந்தது. மக்களால் வெறுக்கப்பட்டவர்கள் கொலை செய்யப்பட்டனர். அப்படிக் கொலை செய்யப்பட்டவர்களில் மென்மையுள்ளம் படைத்த ஆர்ச்பிஷப் ஷட்பரியும் ஆவார். அவரது தலை லண்டன் பாலத்தின் மேல் வைக்கப்பட்டது. வழக்கறிஞர்கள் முக்கியமாக வெறுக்கப் பட்டனர். வெளிநாட்டுக் கைத்தொழிலாளிகள் அவர்களின் போட்டியாளர்களால் கொலை செய்யப்பட்டனர்.[1]

[1] கான்டர்பெரிக் கதைகளில், 1381 ஆம் ஆண்டு நிகழ்ந்த நிகழ்ச்சிகளைப் பற்றிய ஒரே குறிப்பை, 'கிருத்தவப் பெண் துறவியும் ஆண் துறவியும்' என்ற

அரசாங்கம் உடனே ஆவன செய்யாத காரணத்தால் நாட்டின் அமைதி நிலைகுலைந்தது. ஆனால், மனவுரத்தோடு, நியாயமற்ற வழிகளில் திரும்பவும் நாட்டின் அமைதி நிலைநிறுத்தப்பட்டது. கலகக்காரர்கள், இளைஞனை இரண்டாம் ரிச்சர்ட் தங்கள் பக்கம் இருப்பதாகச் சொல்லிக்கொண்டனர். ரிச்சர்ட் லண்டன் நகரில் கலகக்காரரின் படையை 'மைல் என்டு' என்ற இடத்தில் சந்தித்தான். குடியானவர்கள் தங்கள் பிரபுக்களுக்குச் செய்யவேண்டிய தொண்டுகளுக்குப் பதிலாக, ஓர் ஏக்கர் நிலத்திற்கு வாடகையாக நான்கு பென்ஸ் கொடுக்க, ரிச்சர்ட் அவர்களுக்கு உரிமைப் பத்திரங்கள் வழங்கினார். அத்துடன் எல்லாக் கலகக்காரர்களுக்கும் பொதுவாக மன்னிப்பைத் தெரிவித்தார். முப்பது குமாஸ்தாக்கள் ஒவ்வொரு கிராமம், பண்ணை முதலியவைகளில் இருந்த குடியான வர்களின் அடிமை நிலையை அழிக்கும் உரிமைப் பத்திரங்களையும், மன்னிப்பு அறிக்கைகளையும் தயாரிக்கத் தொடங்கினர். இப் பெரிய சலுகை கலகக்காரரில் பெரும்பகுதியினருக்குத் திருப்தி அளித்தது. இதனால் பிடிவாதமாக மேலும் எதிர்த்தவரைக் கடுமையாக நடத்த முடிந்தது. 'ஸ்மித் ஃபீல்டு' என்றஇடத்தில், 'வாட் டெயிலர்' தாம் தலைமை தாங்கி நடத்திவந்த கூட்டத்தின் முன்னிலையிலே வெட்டி வீழ்த்தப்பட்டார். இத் துணிகரமான செயலை மேயர் 'வால் வொர்த்' செய்துகாட்டினார். இதைக் கண்ணுற்ற மேல்வகுப்பினர் உடனே ஆயுதம் தாங்கிய பணியாட்களைக் கொண்டு லண்டனிலும் மாவட்டங்களிலும் கொடுமையுடன் கலகங்களை அடக்கினர். வழங்கப்பட்ட உரிமைப் பத்திரங்கள் கட்டாயத்தின்பேரில் வாங்கப் பட்டவையாதலால் பார்லிமெண்டு அவற்றை ரத்துசெய்தது.

இக் கலகம் ஒரு பெரிய சம்பவமாயிற்று. அதன் வரலாறு அக் காலத்திய ஆங்கிலேயரைப்பற்றி அறிந்துகொள்ள மிகவும் உதவுகின்றது. குடியானவரின் அடிமை நிலையை அழிக்கும் இயக்கத் திற்கு அது ஊக்கமளித்ததா அல்லது தாமதப்படுத்தியதா என்று வரலாற்று அறிஞர்களால் உறுதியாகக் கூறமுடியாது. 1381ஆம் ஆண்டிற்குப் பிறகும் அவ் வியக்கம் அதே நிலையில் தொடர்ந்து நடந்தது. அக் கிளர்ச்சிக்கு ஊக்கமளித்த உணர்ச்சி, இங்கிலாந்தில் குடியானவரின் அடிமைவாழ்வு தொலைவதற்கு ஒரு முக்கிய காரண மாகும். ஐரோப்பாக் கண்டத்தில் இத்தகைய உணர்ச்சி இல்லா திருந்ததால், அங்கே குடியானவரின் அடிமை வாழ்வு தொடர்ந்து இருந்துவந்தது.

---

கதையில் பண்ணையாட்கள் நரியைத் துரத்தும் இடத்தில் காணலாம். (Nun's Priest's Tale). ஜேக்ஸ்ட்ராவும், அவர்தம் ஆட்களும் ஃபிளான்டர்ஸைச் சேர்ந்தவர்களைக் கொலை செய்தபோது, பண்ணையாட்கள் நரியைத் துரத்திச் சென்றபோது போட்ட கூச்சலைப்போல், கூச்சலிட்டுக்கொண்டு அவர்களைத்தாக்கிக் கொன்றனர்.

தனி மனிதருக்கு வாழும் உரிமை வேண்டும் என்ற எண்ணம் மற்ற நாடுகளைவிட, நமது நாட்டில் முன்கூட்டியே எல்லாராலும் ஒப்புக்கொள்ளப்பட்டதாயிற்று. சுதந்திரம் என்ற வார்த்தையிடம் ஆங்கிலேயர் கொண்டுள்ள ஈடுபாட்டிற்கு இஃது ஒரு காரணமாக இருக்கலாம். அடிமைநிலையிலிருந்த குடியானவர்கள் தங்கள் சுதந்திரத்தைப் பெற்றனர்; ஆயின், இதற்காக அவர்கள் தங்கள் நிலத்திலிருந்து பிரியவேண்டியிருந்தது. நாட்டின் செல்வம் தழைத்தோங்க ஓங்க, பல வகுப்பினரிடையே, அவர்களது வருமானத்தில் இருந்த வேற்றுமை அதிகரித்துக் கொண்டேபோயிற்று. பிரபுவிற்குச் சொந்தமான பண்ணை, அடிமை நிலையிலிருந்த குடியானவரின் சமுதாயமாக இருந்துவந்தது.[1] அவர்கள் எல்லாரும் ஏழைகளாக இருப்பினும், அவர்களுடன் இணைந்திருந்த நிலத்திலே சில வுரிமையைப் பெற்றிருத்தனர். நிலமும், குடியானவர்களும் பிரிக்கமுடியாதவாறு பிணைக்கப்பட்டிருந்தனர். தற்கால கிராமமோ, பழங்குடி நிலக்கிழாரின்கீழ்ச் செல்வநிலையிலுள்ள குடியானவர், கைத்தொழிலாளிகள், நகரங்களை நோக்கி வெளியேறும் நோக்கமுடைய நிலமில்லாத ஏழ்மை நிலையிலிருந்த தொழிலாளிகள் முதலியவர்களைக் கொண்டதாக இருக்கின்றது. சமுதாயத்தில் இத்தகைய மாறுதல் ஏற்பட நீண்டகாலம் ஆயிற்று. அது 12ஆம் நூற்றுண்டில் தொடங்கிப் பத்தொன்பதாம் நூற்றுண்டில் முடிவுற்றது.

'கிளமென்ட் பாஸ்டன்' என்ற நிலத்தைச் சொந்தமாகக் கொண்ட சிறு குடியானவர், சாசர் காலத்துப் புதிய இங்கிலாந்தில் வாழ்ந்தோர்க்கு எடுத்துக்காட்டாவர். அடுத்த நூற்றுண்டில் அவர்தம் சந்ததியார் கிழக்கு ஆங்கிலியா பிரதேசத்தில், பெருநிலக்கிழார்களாகவும், அரசியல்வாதிகளாகவும் திகழ்ந்தனர். அவர்களைப்பற்றிக் கீழே குறிப்பிட்டவாறு சொல்லப்பட்டிருக்கிறது :

"பாஸ்டனில் இருந்த தன் நிலத்தில் இருந்து கிடைத்த வருமானத்தை வைத்துக்கொண்டு வாழ்ந்து வந்தார். ஒன்று அல்லது இரண்டு கலப்பைகளைச் சொந்தமாகக்கொண்டு, பனிக்காலத்திலும் கோடைக்காலத்திலும் நிலங்களை உழுது பயிர் செய்தார். சேணமிடப்படாத குதிரை ஏறிச்சென்று தானியங்களை ஆலைகளில் அரைத்துக்கொண்டு திரும்பினுர். தம்முடைய வண்டியில் பலவித விளைபொருள்களை ஏற்றிச்சென்று 'வின்டர்டன்னில்' விற்றுவந்தார். பாஸ்டனில் 100 அல்லது 120 ஏக்கர் நிலம் வைத்திருந்தார். (இஃது ஓர் அடிமை நிலையில் இருந்த குடியானவன் வைத்திருந்த நிலத்தைப்போல் நான்கு மடங்காகும்.) அதில் பெரும்பான்மையான நிலம் 'ஜெமின் ஹாம் ஹால்' பிரபுவிடமிருந்து குத்தகைக்குப்பெற்ற நிலமாகும். இந் நிலத்தில் ஆற்றங்கரையோரம் ஓடும் நீரைப் பயன்படுத்தி ஓட்டப்பட்ட ஆலை

இருந்தது. வேறெந்த வருமானமும் நிலமும் அவருக்கு இருக்க வில்லை. தாம் சுதந்திர மனிதனாக இருந்தும், அடிமை ஒருத்தியை மணந்தார். வேண்டிய அளவிற்குப் பொருளைச் சேமித்துத் தம் மகனைப் பள்ளியில் கற்க அனுப்பினார். பிறகு சட்டப்படிப்புப் படிக்கச் செய்தார். இவ்வாறு பிரசித்திபெற்ற நார்போக் குடும்பத்தின் செல்வநிலைக்கு வழிசெய்தார். இரண்டு தலைமுறைக் காலத்திற்குள் இவர்கள் பல இடங்களிலும் பல பண்ணைகளுக்குச் சொந்தமாயினர். இக் குடும்பந்தான் பிற்காலத்திற்கு, 'பாஸ்டன் கடிதங்களை' விட்டுச் சென்றது.''

1381-ல் நடந்த கலகத்தின் வரலாறு, அக் கால இங்கிலாந்தில் காவல் துறையினர் போதுமான அளவுக்குப் பாதுகாப்பு அளிக்க வில்லை என்பதையும், சட்ட மன்றங்கள் குற்றவாளிகளைத் தண்டிக்கமுடியாத நிலையிலிருந்தன என்பதையும் விளக்குகின்றது. கொலை, கற்பழித்தல், புடைத்தல், கொடூரமான வழியில் திருடல் ஆகியவை அன்றாடச் செயல்களாக இருந்தன. பிரபு, ஆலை முதலாளி, குடியானவர் ஆகியோர் தங்களது குடும்பம், சொத்து, உயிர் முதலிவற்றைத் தாங்களே பாதுகாத்துக்கொள்ளவேண்டிய நிலையில் இருந்தனர். நாட்டில் குற்றம் நிகழாது இருக்கச் செய்த முறை, முதலாம் எட்வர்டின் காலத்திலும் இரண்டாம் ஹென்றியின் காலத்திலும் வலிமையுடையதாக இருந்திருக்கலாம்; ஆனால், எப் போதும் வலிமையுடையதாக இருக்கவில்லை. நூற்றாண்டுப் போரின் போது கொள்ளைகொண்ட பொருளாலும், போரில் சிறைப் பட்டவர்களை விடுதலை செய்யும்பொருட்டு வாங்கிய பணத்தைக் கொண்டும் மக்கள் செல்வராயினர். இது அரசவையின் இன்ப வாழ்க்கையையும், கோட்டைகளின் இன்பவாழ்க்கையையும் பன் மடங்கு பெருக்கிற்று. ஆயின், நாட்டிற்கு இது கேட்டையே விளை வித்தது. போர்புரிவதில் ஈடுபட்ட பிரபுக்களையும் அவரது ஆயுதம் தாங்கிய பணியாட்களையும் அரசரது கட்டுப்பாட்டிலிருந்து விடுவித்து, அவர்களை நாட்டில் குழப்பத்தையும், கொடுஞ்செயல் களையும் விளைவிக்கச் செய்தது.

அரசன் பலம் பொருந்திய பிரபுக்களுக்கு எதிராகச் செயல் புரிய வலியற்றிருந்தான். அரசனது படை அவனது மெய்க்காப் பாளரைக் கொண்டிருக்கவில்லை; மாறாகப் பிரபுக்களால் தலைமை தாங்கி நடத்தப்பட்ட போர்வீரர்களைக் கொண்டிருந்தது. அவனது படையிலே 'எர்ல்' என்று அழைக்கப்பட்ட மாவட்ட அதிகாரி களும், பிரபுக்களும், அவர்களால் சேர்க்கப்பட்டுச் சம்பளம் கொடுத்து வைத்திருந்த சிறு குழுக்களாக விளங்கிய வில்வீரர் களும் ஆயுதம் தாங்கியவருமே இருந்தனர். அத்துடன் கொஞ்ச காலத்திற்கோ அல்லது நீண்ட காலத்திற்கோ 'அரசாங்கத்திற்குத்

தங்கள் சேவையைப் பணத்திற்காக விற்ற நீட் என்ற பதவி வகித்த வரும், போர்புரிவதையே தொழிலாகக்கொண்ட வீரரையும் படை கொண்டிருந்தது. இத்தகைய படை ஃபிரான்சுடன் போர்புரிவதற் குத் தகுந்ததாக இருக்கலாம்; குடியானவரின் கலகம் போன்ற சம்பவங்களின்போது அரசருக்குப் பலத்த துணை புரியலாம். ஆனால், அப் படையைக்கொண்டே, அப் படையைச் சார்ந்த மக்களை அடக்க முடியாததாக இருந்தது. தன் எஜமானரின் அடையாளக் குறியைத் தன் சட்டையில் தரித்து, அவர் கொடுத்த சம்பளம் தன் சட்டைப்பையில் குலுங்கப் பணிபுரிந்த போர்வீரரைக்கொண்டு அவர்தம் எஜமானரையே கைது செய்யும்படி பணிக்கவும் முடியாத தாக இருந்தது. 1378-ல் காமன்ஸ் சபையினர் நாட்டில் அமை தியை நிலைநிறுத்த ஒரு பிரத்தியேகக் குழு ஒன்றை அமைக்க வேண்டும் என்று வற்புறுத்தினர். ஆனால், அப்படி அமைக்கப்பட்ட குழு, வலிமைமிக்க பிரபுக்களையும் அவர்தம் பணியாட்களையும் கொண்டிருந்தது. சட்டத்தை மீறுவோரை அடக்குவதற்காக அனுப்பப்பட்ட அக் குழு, செயலில் சட்டத்தை மீறியவர்களைவிட அதிகமான அளவுக்குக் கொடுமைகளை இழைத்தது. அடுத்த ஆண்டு காமன்ஸ் சபையில் அக் குழுவைக் கலைத்துவிடக் கோரினர். ஏனென்றால், அரசரின் குடிகள் அக் குழுவில் இருந்த பிரபுக்களுக்கும் அவர்தம் பணியாட்களுக்கும், அடிமைகளாக மாற்றப்பட்டுவந்தனர்.

'பீர்ஸ் என்ற குடியானவன்' (Piers, the Plowman) கதையில் இதைப்போன்ற சம்பவம் ஒன்று வருகின்றது. 'பீஸ்' என்பவர் பார்லிமெண்டில் அரசரின் அதிகாரியான 'ராங்' என்பவரின்மேல் ஒரு புகார் செய்தார். 'ராங்' ஒரு பண்ணையில் புகுந்து பெண் களையும், குதிரைகளையும் கடத்திக்கொண்டும், களஞ்சியத்தில் இருந்த கோதுமையை எடுத்துக்கொண்டும், இவைகளுக்குப் பதிலாக அரசரின் பொக்கிஷத்திலே இருந்து பணம் பெற்றுக் கொள்ள ஒரு சீட்டுக் கொடுத்தும் சென்றதாகப் புகார் செய்யப் பட்டது. 'ராங்' என்பவர் அவர்தம் பணியாட்களைக் கொண்டு தன்னுடைய பணியாட்களைக் கொன்றதாகவும் இச் செய்கைக் காகச் சட்டப்படி ராங்கைத் தண்டிக்க முடியாத நிலையில் தாம் இருப்பதாகவும், 'பீஸ்' பார்லிமெண்டில் புகார் செய்கிறார். நாட்டின் பல பகுதிகளில் காணப்பட்ட அரசரின் அதிகாரிகள் இப் படிப்பட்டவர்களாகத்தான் இருந்தனர்; உண்மையில் அவர்கள் பேராசை பிடித்த பிரபுக்களேயாவர். அரசரின் பெயரைச் சொல்லித் தங்களுக்குச் செல்வத்தைத் தேடிக்கொண்டனர். இத் தகைய குறைபாட்டிற்குக் காரணம், அரசாங்கத்திற்குப் போதிய செல்வம் இல்லாததுதான். அரசன், படையை மாற்றியமைக்க முடியாத நிலையில் இருந்தான். அதாவது, பிரபுக்களின் பணியாட்

களுக்குப்பதிலாகத் தானே சம்பளம் கொடுத்து வீரரை அமர்த்திக் கொள்ளமுடியாத நிலையில் இருந்தான். மேலும், ஃபிரான்சுடன் போர்புரியப் பிரபுக்களின் விருப்பத்துக்கிணங்கி அவர்களது உதவியைப் பெறவேண்டி இருந்தது.

காவல் துறையினர் போதுமான அளவுக்கு இல்லாமல் இருந்ததால் குடியானவர்கள் தங்கள் பொருள்களை இழக்க நேரிட்டது. அக் குடியானவர்களும் எந்த அளவுப் பொருள்களை இழந்தார்களோ அவ்வளவு பொருளையும் வேறு வழியில் திரும்பப் பெற முடிந்தது. சுதந்திரத்திற்காகப் போராடிக்கொண்டிருந்த அடிமை நிலையிலிருந்த குடியானவனும், தொழிலாளிகளின் சட்டத்தை இடைவிடாது எதிர்த்து வந்த சுதந்திரத் தொழிலாளியும் உண்மையிலேயே, தங்களைவிட உயர்ந்தவர்களுக்கு அடங்கி இருக்கவில்லை. காவல் துறையினர், நன்கு பணிபுரிந்த 19ஆம் நூற்றுண்டில் வாழ்ந்த பயிர்த் தொழிலாளிகள் தங்களைவிட உயர்ந்தவருக்கு அடங்கி வாழ்ந்ததைப்போல் இல்லாமல், சுதந்திரமுடையவராக அவர்கள் இருந்தனர். 19ஆம் நூற்றுண்டில் ஏழைகள் தங்களைக் காத்துக்கொள்ள, வில்லோ அல்லது குண்டாந்தடியோ வைத்திருக்கவில்லை. தங்களுக்கு வேண்டியவரைத் தேர்ந்தெடுக்க ஓட்டுரிமையும் பெற்றிருக்கவில்லை. ஒவ்வொருவரும் தம்மைக் கையாலோ அல்லது தடியாலோ அல்லது வில் கொண்டோ அன்றி வாள்கொண்டோ காத்துக்கொள்ள வேண்டியிருந்த 14ஆம் நூற்றுண்டில், ஒன்று சேர்ந்திருந்த கிராமத்தவரைப் பணியச் செய்வது எளிதான காரியமாக இருக்கவில்லை.

நூற்றுண்டுப் போரின்போது இங்கிலாந்து மேற்கொண்ட படைதிரட்டும்முறை அரசனின் அதிகாரத்தை அதிகரித்ததைவிட, அவனது பிரஜைகளில் பல வகுப்பினரின் பலத்தையே அதிகரித்தது. இங்கிலாந்தின் அரசர் ஃபிரான்சுடன் போர்புரிவதற்காகப் பிரபுக்களுடனும் ஜென்ட்ரி வகுப்பினருடனும் ஒப்பந்தங்கள்மூலம் அவர்தம் பணியாட்களின் சேவையைப் பெற்றுர். இவ்வாறு ஃபிரான்சுடன், போர்நடக்கும்போது நாட்டைக் காப்பதற்காகச் சாதாரண மக்களிடையே கட்டாய ராணுவசேவை ஏற்படுத்தப்பட்டது. கட்டாயமாகத் திரட்டப்பட்ட குடிகளின் படை நன்கு பயிற்சி அளிக்கப்பட்டும் ஆயுதம் தாங்கியும் இருந்தது. இதன் காரணமாக, அரசனும் அவன் பிரபுக்களும், ஃபிரான்சில் போர் புரிந்துகொண்டிருக்கும்போது, ஸ்காட்லாந்தியர், இங்கிலாந்தைத் தாக்கிய அறிவில்லாத செய்கைகளுக்காக அடிக்கடி வருந்த நேரிட்டது. ஷேக்ஸ்பியர், நிலத்தைச் சொந்தமாக உடைய இங்கிலாந்தின் குடியானவர் காட்டிய வில்வித்தையைச் சித்திரிக்கும்போது அது அவரது முற்காலத்தைப்பற்றிய கற்பனை என எண்ணுவதற்

கில்லை; ஃபிரெஞ்சுக்காரர்களுக்கும் ஸ்காட்லாந்தியருக்கும் இங்கிலாந்து வில்வீரரிடம் இருந்த உண்மையான அச்சத்தையே அவர் வெளியிடுகின்றார். இங்கிலாந்தில் அக் காலத்தில் தாழ்ந்தவரும் உயர்ந்தவரும் சட்டத்தைக்கண்டு நடுங்கவில்லை. பெய்லிப் என்ற அதிகாரிகளும் நீதிபதிகளும் அடிமை நிலையிலிருந்த குடியானவர் கொடுக்கவேண்டியதை, வாங்கவோ அல்லது சட்டப்படி நிச்சயித்துள்ள கூலியைத்தான் பெறவேண்டுமென்று கட்டாயப்படுத்தவோ முற்படுவதற்கு முன்னால், அதன் விளைவுகளைத் தீர நினைந்து பார்த்த பிறகே செயலில் இறங்குவர்.[1]

இங்கிலாந்தில் இருந்த கவுன்டிகள் என்ற பிரிவுகளுக்கு எல்லாம் அநேகமாக அரசரின் கட்டளைகள் அனுப்பப்பட்டன. ஆனால், அடிக்கடி மக்கள் அவைகளிலிருந்து தப்பித்துக் கொள்ளவோ அல்லது எதிர்க்கவோ செய்தனர். பெரிய பிரபுக்களிடம் பணியாளராக இல்லாத கொலையாளிகளும் திருடர்களும் அநேகமாகத் தண்டனையிலிருந்து தப்ப, காட்டிற்கு ஓடினர். அல்லது ஒருவரும் தம்மைக் கைது செய்யமுடியாத பாதுகாப்பான இடத்திற்குச் சென்று, தனக்கும் தனது ஊருக்கும் சம்பந்தம் இல்லை என்று ஆணையிட்டுத் தப்பினர். சில சமயம் அவர்கள் நீதிமன்றத்திற்குக் கைதுசெய்யப்பட்டு அழைத்துச் செல்லப்படுவர். அங்கிருந்தும், தான் பாதிரியார்களில் ஒருவன் என்று சொல்லியோ அல்லது வழக்கறிஞர்களின் தந்திரங்களாலோ தப்பிச்சென்றனர். இருப்பினும், பல திருடர்களும் ஒரு சில கொலையாளிகளும் அரசரால் நியமிக்கப்பட்ட நீதிபதிகளின் ஆணையால் ஒவ்வோர் ஆண்டும் தூக்கிலிடப்பட்டனர். இங்கிலாந்தின் பெரும்பாலான பகுதிகளில் சட்டங்கள் அமுலில் இருந்தன. ஆயின், எளிதில் கையாள முடியாத வழியிலோ அல்லது ஒழுங்கற்ற முறையிலோ இருந்தன. எப்போதாவது ஒரு முறைதான் சட்டங்கள் தங்கள் வேலையைச் செய்தன.

[1] இங்கிலாந்தின் வில்வீரர்கள் ஐரோப்பிய வில்வீரர்களைவிடத் திறமை வாய்ந்தவராய் இருந்தமைக்குக் காரணம் இருந்தது. அவர்கள் இடக் கையால் வில்லைப் பிடித்துக்கொண்டு, வலக் கையால் அம்பைத் தொடுக்கவில்லை. வலக் கரத்தைக்கொண்டு நாணைப்பற்றி உடலின் வலிமைமுழுவதையும் வில்லின்மேல் நுனியில் அழுத்தினர். இதனால்தான் வில்லை வளைத்தல் என்ற தொடர் ஆங்கிலத்தில் பழக்கத்திற்கு வந்தது. இதேபோல், 'ஃபிரான்சு நாட்டவர் அம்பைத் தொடுப்பர்' என்ற வழக்கும் ஏற்பட்டது. (டபிள்யூ. கில்பின் ரிசர்ச் ஆன் பாரஸ்ட் சீனரி, 1791 என்பதைக் காண்க; W. Gilpin in Remarks on Forese Scenery. 1791.) இதைத்தான் ஹக் லாட்டிமரும் தாம் வில்வித்தை கற்றுக்கொண்டபோது பல நாட்டவரும் அம்பைக் கரங்களின் வலியால் தொடுக்கக்கூடாது, உடல் வலிமை முழுமையும்கொண்டு தொடுக்கவேண்டும் என்று சொல்லப்பட்டதைக் குறிப்பிடுகின்றார். இப்படி உடல்வலி முழுமையும்கொண்டு அம்பைத் தொடுப்பது சுலபமாகக் கற்றுக்கொள்ளக்கூடிய கலையன்று என்று அவர் மேலும் குறிக்கின்றார்

ஸ்காட்லாந்தை அடுத்த கவுன்டி என்ற பிரிவுகளில் அரசரின் ஆணைக்கு மதிப்புக் கொடுக்கப்படவில்லை என்றே சொல்லலாம், அங்குப் போர் நடக்காத காலம் அபூர்வமாக இருந்தது. கால்நடைகளைத் திருடுவது தொடர்ந்து நடந்துவந்தது. சாலைகளற்ற அம் மலைநாட்டிலே குதிரை ஏறிப் போர்புரியும் குடியானவ வீரர்கள் இருந்தனர். அவர்கள் தங்களுக்குள்ளே போர் புரிந்து கொண்டும் ஸ்காட்லாந்தியரை எதிர்த்துப் போர் புரிந்தும் வந்தனர். எவரும் தங்களைக் காத்துக்கொள்ளவோ அல்லது பழிவாங்கவோ அரசரின் அதிகாரிகளை எதிர்பார்ப்பதில்லை. எல்லையில் இருந்த 'பாலட்ஸ்' பிரதேசத்தில் ஆண்கள் அனைவரும் போர் வீரர்களாகவும் பெண்கள் வீராங்கனைகளாகவும் இருந்தனர்.

சாசருக்கு, இப் பிரதேசம் யாருக்கும் தெரியாத தூரத்தில் இருந்த, காட்டு மிராண்டிகள் வாழ்ந்த பிரதேசமாகவே தோன்றியது. அவர் வடக்கே வெகுதூரத்தில், ஃபிரெஞ்சு நாட்டைவிட அதிக தொலைவில் இருந்தது என்று நினைத்தார். அதனால் அப் பிரதேசம் எங்கே இருக்கிறது என்று என்னால் சொல்ல முடியாது என்றார். அங்கேதான் பெர்சி குடும்பத்தினரும் எல்லையில் வாழ்ந்த மற்றக் குடிகளின் தலைவர்களும் ஸ்காட்லாந்து அரசரின் படைகளை எதிர்ப்பதற்காக, ஆன்விக், வாக்வொர்த், டன்ஸ்டன்பர்க், சிப்சேஸ், பெல்சே என்ற இடங்களிலும், மற்றும் பல இடங்களிலும், பலம் பொருந்திய கோட்டைகளைக் கட்டினர். செல்வர் அல்லாத ஜென்ட்ரிகள் பெரிய தலைவர்களின் கோட்டைகளைப்போல் தோற்றத்தில் இருந்த சிறிய சதுரமான அரண்களைக் கட்டினர். அமைதி நிலவும் பிரதேசங்களில் காணப்பட்ட பண்ணை வீடுகள் இங்குக் காணப்படவில்லை. குடியானவர்கள் மரத்தைக் கொண்டு கட்டப்பட்ட சிறு குடிசைபோன்ற வீடுகளில் வாழ்ந்தனர். இவைகளை எதிரிகள் தீவைத்துச் சாம்பலாக்கினர். அப்படி நிகழும்போது, குடியிருப்பவர் தங்களுடைய கால் நடைகளுடன் காட்டினுள் சென்றோ அல்லது பகைவர் அணுக முடியாத பாதுகாப்பான உயர்ந்த குடிசைகளிலோ தங்கினர்.

இங்கிலாந்தின் மற்றப் பாகங்களில் அமைதியை நிலை நாட்டியூடர் வம்சத்தினரின் காலத்திற்குப் பிறகும். இந் நிலை இங்கு நிலவியது. ஸ்டூவர்ட் வமிசத்தினரான ஜேம்ஸ் 1603-ல் ஸ்காட்லாந்திற்கும், இங்கிலாந்திற்கும் ஒரே அரசரான பிறகுதான் எல்லைப் போர் முடிவுற்றது. எல்லைப்போர் நின்ற பிறகுதான், பெரிய அரண்களின் அண்மையிலும், சிறு அரண்களின் அண்மையிலும் பண்ணை வீடுகள் தோன்றின.

நெடுநாளாகப் போரிட்டு வந்ததன் விளைவாக ஜனத்தொகை, அதிகமற்ற இந்தக் காட்டுப் பிரதேசத்தில் உயர்ந்தோரும்

தாழ்ந்தோரும் ஒருவரை ஒருவர் நன்கு அறிந்து கொண்டனர். பயிரிடப்படாத பரந்த நிலப்பரப்பில் வாழ்ந்த இடையனும், ஹைன்டு என்றழைக்கப்பட்ட, வடக்குப் பாகத்தில் வாழ்ந்த பயிர்த் தொழிலாளியும், ஸ்குவீர் என்றழைக்கப்பட்ட பழங்குடி நிலக்கிழாருக்கும், குடியானவருக்கும் அடங்கியிருக்கவில்லை. அப் பிரதேசத்தில் ஓர் அளவு சுதந்திரத்தை மக்கள் பெற்றிருந்தனர்.

இங்கிலாந்தின் வடக்கிலிருந்தவர்கள் ஆயுதம் தாங்கி எப் போதும் போருக்குத் தயாராயிருந்தனர். 'மார்ச்சர்' என்று அழைக்கப்பட்ட, எல்லைப் பகுதியில் வாழ்ந்த பிரபுக்கள் வேல்ஸ் நாட்டவரை எதிர்த்து நிற்பதற்காகத் தங்கள் அரண்களை நம்பி யிருந்தனர். அதே சமயம், இங்கிலாந்தில் நாகரிகம் இதைவிடப் பரவியிருந்த பகுதிகளில், படைகளை எதிர்த்து நிற்பதற்காகப் பிரபுக்களும் மற்றவரும் அரண்வீடுகளமைப்பதைக் கைவிட்டனர். மூன்றும் எட்வர்டின் மகனை கருப்பு இளவரசன் ஃபிரான்சைத் தாக்கி, அழித்துக் கொண்டிருந்தபோது, இங்கிலாந்தின் நாட்டுப்புறங்களில் போர் சாதாரணமாக நிகழாதிருந்தது. ஆனல், வட்டாரங்களில் கொடுஞ் செய்கைகளுக்கு அஞ்சவேண்டி இருந் தது. அண்டை வீட்டாரின் பணியாட்களோ, கிராமத்திலிருந்த அடக்கமுடியாத குடியானவர்களோ அல்லது பசுங் காடுகளி லிருந்துவந்த நாடு கடத்தப்பட்டவரோ கொடுஞ் செயல்களைப் புரிந்தனர்.

இதற்காக வீடுகட்டும் முறையில் சில மாற்றங்களைச் செய்து தங்களைக் காத்துக்கொள்ளத் தலைப்பட்டனர். தெற்கிலும், மத்திய பாகத்திலும் இருந்த கவுன்டி என்ற பிரிவுகளில் தோன்றிய பண்ணை வீடுகள் அபூர்வமாக இரண்டு அடுக்கு மாடிகளுக்கு மேல் இருந்தன. அத்துடன் முற்றிலும் ஞாயில்களையுடைய மதில் களால் பாதுகாக்கப்படவில்லை. அகழியை நோக்கியிருந்த பக்கங் களில் அம்பு எய்வதற்குத் தகுந்த குறுகலான சாளரங்கள் இருந் தன. அகழியைத் தாண்டிப் பண்ணை வீட்டிற்குச் செல்வதற்குத் தூக்குப் பாலங்களை உபயோகித்தனர். வேலியால் சூழப்பெற்றி ருந்த முற்றத்தை நோக்கி, உள்ளே இருந்த பத்திரமான இடங் களில் பெரிய சாளரங்களும், சாதாரண வீட்டின் அமைப்புக்களும் இருந்தன. முற்றத்தை அடுத்துப் பல அறைகள் இருந்தன. எளிய வாழ்க்கைக்குகந்த வகையில் முற்காலத்திலிருந்த கூடம், வரு வோரை வரவேற்கும் அறை, சமையல் அறை ஆகியவை இவை, ஆடம்பர வாழ்க்கைக்குத் தகுந்தாற்போல் பெரியவைகளாக அமைக்கப்பட்டன. கூரைகளில் அமைக்கப்பட்டிருந்த துவாரங்கள், கணப்படுப்பிலிருந்து எழுந்த புகையை வெளியேற்றப் போது மானதாக இருக்கவில்லை. சிறந்த கணப்படுப்புகள் வாழும் அறை

களிலேயே பொருத்தப்பட்டிருந்தன. உயர்ந்த புகை போக்கிகள் சுவரோடு கட்டப்பட்டிருந்தன. ஆனல், குடிசைகளிலும் பண்ணை யில் இருந்த வீடுகளிலும் புகை போக்கிகள் இருக்கவில்லை. பண்ணை வீட்டை அடுத்து இருந்த தோட்டம், மங்கையர் பொழுது போக்கிற்காக அமைக்கப்பட்டிருந்தது. இங்கேதான் பெண்கள் ஆண்களைச் சந்தித்துத் தங்கள் விருப்பத்தைத் தெரிவித்துக் கொண்டனர்.

மலைப் பிரதேசங்களில் அகழிகளை அமைப்பது வழக்கமாக இருக்கவில்லை. அதற்குப் பதிலாக உயர்ந்த இடத்தைப் பாது காப்பான இடமாகக் கொண்டனர். டெர்பிஷீரில் இருந்த ஹட்டன் ஹால் இதற்கு ஒரு சிறந்த உதாரணமாகும். அது, பின் வந்த சந்ததிகளின் வசதிக்கேற்ப, மேலும் மேலும் கட்டப்பட்ட பல கட்டடங்களைக் கொண்டதாய் இரண்டு முற்றங்களோடு, பாதி யளவு மதிலால் சூழப்பட்டதாக இருந்தது.

மேற்குப் பகுதியில் சில சமயங்களில், கல்லிற்குப் பதிலாக மரத்தையும் கலவையும்கொண்டு அழகிய வீடுகள் கட்டப்பட்டன. பாதுகாப்பின் தேவையை அதிகமாக மனத்திற்கொள்ளாமல் இவ் வீடுகள் அமைக்கப்பட்டன. ரோமானியர் இங்கிலாந்தை விட்டுச் சென்ற காலந்தொட்டு 15ஆம் நூற்றுண்டுவரை செங்கற்கள் கிடைப்பது அரிதாயிருந்தது. 15ஆம் நூற்றுண்டில்தான் கற்களும் காட்டிலுள்ள மரங்களும் குறைந்துகொண்டே வந்த கிழக்கு ஆங்கிலியாவிலும், இதர பிரதேசங்களிலும் செங்கற்களைப் பயன் படுத்துவது அதிகரித்தது.

சாசரின் காலத்திலேயே வாழ்க்கை பாதுகாப்புடையதாயிற்று. போரால் பாதிக்கப்பட்ட காலத்தில் இருந்ததைவிட அமைதியாக வாழ முடிந்தது. போரால் பாதிக்கப்பட்ட காலத்தில் மிகுந்த செல்வ நிலையில் இருந்த குடும்பங்கள்கூட இருண்ட, சதுரமான, நார்மானி யர் காலத்துக் கோட்டைகளின் உட்புறப் பகுதிகளில் வாழ்ந்து வந்தனர். 13ஆம் நூற்றுண்டில் 'கென்னில் ஒர்த் கீப்' என்ற கோட்டை அரசரின் படையை ஆறு மாத காலம் எதிர்த்து நின்றது. ஆனல், நூற்றுண்டுப்போரில் உபயோகிக்கப்பட்ட பீரங்கிகள் வெகு சீக்கிரத்தில் அதைத் தகர்த்திருக்கும். தவிர, அக் கோட்டை ஒரு பெரிய மனிதர் தமது அவையை வைத்துக்கொள்ளக் கூடிய தகுதி யுடையதாக இருக்கவில்லை. கான்ட்டைச் சார்ந்த ஜான் என்பவர், கென்னில் ஒர்த் கீப்பின் அடிவாரத்தில் ஒரு விருந்துண்ணும் கூடம் அடங்கிய மாளிகையைக் கட்டுவித்தார். அவ் விருந்துண்ணும் கூடத்திற்கு நுண்ணிய வேலைப்பாடமைந்த விரிந்த சாளரங்கள் வழியாக வேண்டிய வெளிச்சம் வர வழி செய்யப்பட்டது. அவர்

ஒவ்வொரு மூலையிலும், பீரங்கிகளைப் பொருத்திவைக்கக்கூடிய அரண்களை அமைத்துத் தமது புதிய இருப்பிடத்தைப் பாதுகாத்துக் கொண்டார்.

நார்மானியப் போர்வீரர்களின் சதுரவடிவான 'கீப்' என்ற கோட்டைகள் வாழ்வதற்குத் தகுந்தவையல்ல என்று ஒதுக்கப் பட்டன. அதே நேரத்தில் பிளான்டாஜனெட் காலத்திய அழகிய அரண்கள் சில பெரிதாக்கப்பட்டு, அக் கால வாழ்க்கைக்கு ஏற்றன வாகச் செய்யப்பட்டுவந்தன. அவற்றில் பல, அரசரின் மாளிகை களாகவோ, மற்றவரின் மாளிகைகளாகவோ இருந்தன. மில்டனின் 'கோமஸ்' என்ற நாடகம் 'லட்லோ' அரணில் நடத்தப்பட்ட காலம்வரை இவ் வரண்கள் உபயோகத்திலிருந்தன. அதுவரை உயர்ந்தோரின் இருப்பிடமாயிருந்த அரண்கள் பலவற்றைக் கடைசியில் கிராம்வெல்லின் வீரர்கள் அழித்தனர்.

ஏழைகளின் பண்ணை வீடுகளும் குடிசைகளும், மரக்கட்டை களைக் கொண்டும் பலகைகளைக் கொண்டும் கட்டப்பட்டன. செங் குத்தாகவும், குறுக்காகவும் நடப்பட்ட மரக்கட்டைகளைக் கொண் டும், ஒழுங்கற்ற கற்களையும். களிமண்ணையும் கொண்டும் கட்டப் பட்டன. அவை கலவையைக்கொண்டு மெழுகப்படாத தரையை யும், வேயப்பட்ட கூரையையும்பெற்றிருந்தன. இந்த ஏழைகளின் இருப்பிடங்கள் மறைந்து போயினமையால் நாம் அவைகளைப் பற்றிச் சிறிதே அறிந்திருக்கிறோம். சமுதாயத்திலே மாற்றமும் சச்சரவும் நிறைந்திருந்த காலத்தில் அவ் விருப்பிடங்களில் வாழ்ந் தோரைப்பற்றிச் சிலவற்றை முன்பே எடுத்துக் கூறினோம். குடியா னவன் எந்த அளவுக்கு ஏழ்மை நிலையில் இருந்தான். அல்லது எந்த அளவுக்கு நல்வாழ்வு வாழ்ந்தான் என்பதைத் திட்டமாகக் கூறுவது கடினமான காரியமேயாகும். குடியானவரின் வாழ்க்கை நிலை, இடத்திற்கு இடம் ஆண்டுக்கு ஆண்டு வேறுபட்டிருந்தது. பலர் செம்மறியாடுகளை வளர்த்து அவற்றின் கம்பளியைக்கொண்டு குறிப்பிடத்தக்க செல்வத்தைத் திரட்டினர். இங்கிலாந்தின் கம்பளி வியாபாரத்திற்கு வேண்டிய கம்பளியில் பெரும்பகுதியைக் குடியான வர்களே அளித்தனர். தாங்கள் உண்ணும் உணவாகிய ரொட்டிக் கும் குடித்துவந்த ஏல் என்ற பானத்திற்கும் அவர்கள் பொதுவாக நிலத்திலிருந்து கிடைக்கும் நிலையற்ற வருவாயையே எதிர்நோக்கி நின்றனர்; விளைச்சல் சரிவர இல்லாத காலங்களில் வட்டாரங்களில் உணவுப்பற்றுக்குறையும் பஞ்சமும் ஏற்படும். அவர்களது உணவில் இறைச்சி, பாலடைக்கட்டி, காய்கறிகள் முதலியன முக்கியத்துவம் வாய்ந்து இருந்தன. அநேக குடியானவர்கள் கோழிகளை வளர்த்து அவற்றின் முட்டையை உண்டனர். குடியானவர்களில் சிலர் தங்கள் குடிசையை அடுத்த சிறிய நிலத்திற்குச் சொந்தமான

வராய் இருந்தனர். இந் நிலத்தில் பட்டாணியையும், பீன்ஸையும் அல்லது பழங்கால ஊர்ட் என்ற காய்களையும் பயிர் செய்தனர். சிலர் அந் நிலத்தில் பசுவையோ அன்றிப் பன்றியையோ வளர்த்து வந்தனர். அடிமை நிலையிலிருந்த குடியானவரும், சுதந்திரமாக வாழ்ந்த குடியானவரும் தங்களுடைய கால்நடைகளைப் பயிர் அறுவடை செய்யப்பட்ட நிலங்களிலும் மேய்ச்சல் நிலங்களிலும் மேயவிட்டனர். உருவில் தற்காலக் கால்நடைகளைவிடப் பாதி அளவே இருந்த அவர்களின் கால்நடைகள் உணவுப்பற்றுக் குறையால் மெலிந்தும், அதேசமயம் பல ஆண்டுகளாகக் கலப்பையில் பிணிக்கப்பட்டதால் உரம்பெற்றும் இருந்தன. இவற்றில் சில ஒவ்வொரு மார்டின்மஸ்ஸின்போதும், குளிர்காலத்து உணவிற்காகக் கொல்லப்பட்டு உப்பிலிடப்பட்டன; அல்லது கிருத்துமஸ் பண்டிகையின் விருந்திற்காகக் கொல்லப்பட்டன.

குடிசைகளில் வாழ்வோர் பன்றி யிறைச்சியை அநேகமாக உண்டனர். ஆனால், பன்றிகளின் எண்ணிக்கை கிராமத்திலிருந்த தரிசு நிலத்தின் அளவைப் பொறுத்திருந்தது. சில பண்ணைகளைச் சார்ந்த புதர்கள் நிறைந்த நிலங்களும் காடுகளும் அளவில் சுருங்கி வந்தன. இதற்குக் காரணம் அவைகளை அழித்து அந் நிலங்களை வேலியிட்டுப் பயிர்செய்யக்கூடிய நிலங்களாக மாற்றிக்கொண்டு வந்ததேயாகும். மேற்கிலும் வடக்கிலும் இருந்த பிரதேசங்களில் பல குடும்பங்கள் வாழ்வதற்கே தரிசு நிலங்கள் தேவைப்பட்டன. ஒதுக்குப்புறமாக இருந்த நிலங்களில் அங்கங்கே குடிசைகளை நிறுவிக் கால்நடைகளை வளர்த்தனர். இவை நிலச்சொந்தக்காரரின் அனுமதி பெற்றோ அல்லது அனுமதி இல்லாமலோ போடப்பட்டவை. ஒவ்வொரு கிராமவாசியும், தன் குடிசையைக் கட்டுவதற்கும், தணல் அடுப்பு எரிப்பதற்கும், உணவைச் சமைப்பதற்கும், வண்டிகள் செய்வதற்கும், கலப்பை மற்ற பயிர்த்தொழில் கருவிகள், வீட்டிற்கு வேண்டிய மரச்சாமான்கள் முதலியன செய்வதற்கும் தரிசு நிலத்திலிருந்த மரங்களிலிருந்து தனக்கு வேண்டிய அளவு எடுத்துக்கொண்டனர். மக்களின் இத்தகைய உரிமைகள் ஒரு பண்ணையிலிருந்து மற்றொரு பண்ணைக்கு மாறுபட்டன. எனினும், வீடுகட்டுவதற்கும் தச்சுவேலை செய்வதற்கும் வேண்டிய மரங்களையும், அடுப்புக்கு விறகாக உதவும் மரக்கிளைகளையும், தரிசு நிலத்திலிருந்து எடுத்துக்கொள்ளும் உரிமையை அநேகமாக எல்லாருமே பெற்றிருந்தனர். தரிசு நிலங்கள் பன்றிகள் மேய்வதற்கும், கால்நடைகள் மேய்வதற்கும், தகுந்ததாயிருந்தன. கம்பளி வியாபாரத்தின் காரணமாகச் செம்மறியாடுகள் குடியானவரின் வரவுப் பட்டியலில் உயர்ந்த பொருளாக விளங்கின. தரிசு நிலங்கள் பயிர் செய்யும் நிலங்களாக மாற்றப்பட்டு வரவே, குடியானவர்கள்

அவற்றினால் அடைந்த சுகமும் இலாபமும் குறைந்தன. இத் தகைய நஷ்டம் ஏற்படினும் அதில் இலாபமும் இருந்தது.

மாட்டிறைச்சி, ஆட்டிறைச்சி, பறவைகளின் இறைச்சி, பன்றியின் இறைச்சி இவைகளைத் தவிர வேறு இறைச்சிவகைகளும் உணவாக இருந்தன. தரிசுநிலத்திலும் காட்டிலும் வேட்டை யாடப்படும் மிருகங்கள் மிகுந்திருந்தன. அரசனுக்குச் சொந்தமான காடுகள் அளவில் சிறுத்துக்கொண்டே இருந்தன. ஆனால், பிரபுக்கள், ஜென்ட்ரி வகுப்பினர் ஆகியோர் சொந்தமாக வேட் டைக்கென்றே ஒதுக்கிவைத்திருந்த பகுதிகளும், வேலியிடப்பட் டிருந்த நிலங்களும் அதிகரித்தன. இவ் வேட்டை நிலங்களில், மான்களும், மற்றச் சிறிய மிருகங்களும் கடுமையான விதிகளின் மூலம் காப்பாற்றப்பட்டு வந்தன. இக் காடுகளைக் காப்பதற்காக நியமிக்கப்பட்டவர், விதிகளை மீறி நடந்தோரை அரசரின் நீதி மன்றங்களைக்கொண்டு தண்டிக்காமல் தாங்களே தண்டித்தனர். பிறர் வேட்டை நிலத்தில் நுழைந்து வேட்டை ஆடுதல், நாடு கடத்தப்பட்டவரின் பிழைப்பாகவும் ஜென்ட்ரி வகுப்பினர், பாதிரி யார்கள் முதலியோரின் பேரார்வமாகவும் காட்டில் வாழ்ந்த வண்ணக் கோழி, முயல் முதலியவற்றை உணவுக்காக விரும்பிய குடியானவர், தொழிலாளிகள் முதலியோரின் செய்கையாகவும் இருந்தது.[1]

1389-ல் பார்லிமெண்டில், கைத்தொழிலாளிகளும், சாதா ரணத் தொழிலாளிகளும் சேவகர்களும் குதிரைச் சேவகர்களும் வேகமாக ஓடும் நாய்களை வைத்திருந்ததாகவும், தாங்கள் விசேஷ நாட்களில் கிருத்தவ ஆலயங்களில் பிரார்த்தனைகளைக் கேட்டுக் கொண்டிருக்கும்போது, பிரபுக்களுக்கும் மற்றவர்களுக்கும் சொந்தமான வேட்டைக் காடுகளில் நாய்களுடன் புகுந்துவேட்டை யாடி வேட்டைமிருகங்களை அழித்தனர் என்றும் பொதுமக்கள் முறையிட்டதை அறிகிறோம். என்னே, மனித இதயத்தின் தீமை! அப்போது, நிலத்திலிருந்து வருடத்திற்கு 40 ஷில்லிங் வருமானம் இல்லாதவரும், வருடத்திற்கு 10 பவுண்டு வருமானம் இல்லாத கிருத்தவப் பாதிரியார்களும்,வேட்டைக்கு வேண்டிய கவலைகளையும் நாய்களையும் வைத்திருக்கக் கூடாது என்ற சட்டம் நிறைவேற்றப் பட்டது. எந்த அளவிற்கு இச் சட்டத்திற்கு மக்கள் கீழ்ப்படிந்தனர் என்பது சந்தேகத்திற்கிடமானதே. (ஸ்டாச்யூட் ஆஃப் தி ரெல்ம்,

[1] பிறர் வேட்டை நிலங்களில் புகுந்து வேட்டையாடுபவன், வேட்டை நிலங்களைப் பாதுகாப்பதில் திறமைவாய்ந்தவனாக மாறுவதைச் சாசர் காலத்தில் அறிகிறோம். 'மருத்துவரின் கதை'யில் கீழ்வருமாறு கூறப்பட்டுள்ளது. 'பிறர் நிலத்தில் புகுந்து வேட்டையாடுவதையே தொழிலாகக் கொண்டவன், அதை விட்டு விடுவானேயானால், அவன் வேட்டை நிலங்களைக் காப்பதற்குத் தகுந்தவனாவான்.'

இரண்டு, பக்கம் 65 ; Stats of the Realm II,p. 65.) இவ் வேட்டை நிலங்களைத்தவிர, பரந்த தரிசு நிலத்திலும், சதுப்பு நிலத்திலும், காட்டிலும் வேறொருவரின் அனுமதியின்றியே வேட்டையாட வசதியிருந்தது.

இடைக்கால இங்கிலாந்தின் பல பாகங்களில் 'கோனி' என்று அழைக்கப்பட்ட முயல்களைச் சொந்த வேட்டை நிலங்களல்லாத மற்ற நிலங்களில் வலைகளைக்கொண்டோ அல்லது குழிதோண்டியோ பிடிப்பது மக்களிடம் மிகச் சாதாரண வழக்கமாக இருந்தது. ஐரோப்பாக் கண்டத்தில் இன்றும் உண்ணப்படுகின்ற த்ரஷ், வானம்பாடி போன்ற சிறு பறவைகளைப் பிடித்துண்ணும் வழக்கம் அக் காலத்தில் நமது தீவிலும் இருந்தது. அவற்றைப் பொறிகளைக் கொண்டும் வலைகளைக் கொண்டும் பிடிப்பது குடியானவரிடையே யும், வேட்டையை விரும்பும் ஜென்ட்ரீ வகுப்பினரிடையேயும் வழக்கமாய் இருந்தது. குடியானவனின் நிலத்தில் விளைந்திருந்த தானியத்தைத் தின்று, பிரபுக்களின் உணவிற்காகக் கொழுத்து வந்த பண்ணை வீட்டில் புறாக் கூண்டிலிருந்த ஆயிரக்கணக்கான பறவைகளில் ஒன்றை யாருக்கும் தெரியாமல் பிடித்துக் கொன்று தின்பதில் குடியானவனுக்கு இருந்த ஆனந்தத்திற்கு அளவே கிடையாது.[1]

பறவைகளைத்தவிர, நீர் ஓடைகளிலும், குட்டைகளிலும் வாழ்ந்த டிரவுட் என்ற மீன்களும், பண்ணையையும், மடங்களையும் அடுத்த குட்டைகளில் வாழ்ந்த பெரிய பைக் மீன்களும் உணவாகப் பயன்பட்டன. சாசர், ஃபிராங்லின் என்ற சிறு நிலக்கிழாரைப் பற்றிப் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்:

'அவரது இல்லத்தில் இறைச்சியும் மதுபானங்களும் மனிதன் விரும்பத்தக்க சுவையான உணவும் நிறைந்திருந்தன. பருவ காலத்தின் மாறுதலுக்குத் தக்கவாறு, உண்ணும் உணவு மாற்றப் பட்டுவந்தது. கொழுத்த கவுதாரிகளை அவர் கூட்டில் அடைத்து வைத்திருந்தார். சற்றுத் தள்ளி அவருடைய நிலத்திலிருந்த குட்டைகளில் பிரீம், பைக் இன மீன்கள் நிறைந்திருந்தன.'

ஜென்ட்ரி வகுப்பினர், தங்கள் வாழ்நாளின் பெரும்பாகத்தைக் குதிரையின்மேல் ஏறிக்கொண்டு. வேட்டைநாய்கள் பின்தொடர, மான்களை வேட்டையாடுவதில் கழித்தனர். இத்துடன் வேட்டைப் பறவைகளைக்கொண்டு பேசன்ட் என்ற கோழிவகைகள், கவுதாரி,

[1] பதினைந்தாம் நூற்றாண்டில், கேம்பிரிட்ஜில் இருந்த 'அரசர் கல்லூரி'யின் மாணவர்கள் தங்களது 'கிராண்ட்செஸ்டர்' பண்ணை வீட்டில் இருந்த புறாக் கூட்டில் வாழ்ந்த இரண்டு அல்லது மூன்றாயிரம் புறாக்களை உணவாக உட்கொள்ளவும் விற்கவும் செய்தனர்.

கொக்குவகையைச் சேர்ந்த ஹெரான் முதலியவைகளை வேட்டையாடினர். இரவில் வலைவிரித்துக் காத்திருந்து நரிகளையும் பாட்ஜர் என்ற கரடிகளையும் பிடித்தனர். இவ்வாறு வேட்டையாடுவதும், பல அடுக்கு மேடைகளில் அமர்ந்திருந்த சீமாட்டிகள் முன்னே குதிரைமேலிருந்து வேல்கொண்டு மற்றவரைக் குத்தி வீழ்த்துவதும் அவர்களது பொழுதுபோக்காகும். வெளிநாட்டுப் போரில் ஈடுபடல் நீதிமன்றங்களில் வழக்குத் தொடர்தல், நாட்டு அரசியலில் பங்கு கொள்ளல், வட்டார ஆட்சியில் பங்கு கொள்ளல் ஆகியவை அவர்களின் முக்கிய வேலைகளாக இருந்தன.[1]

பயிர்செய்யும் முறையில் திருத்தங்கள் செய்து பயிர்த்தொழிலை மேம்பாடு அடையச் செய்வதில், அவர்களுக்குப் பின் வந்தோரிடம் இருந்த ஆர்வம் அவர்களிடம் காணப்படவில்லை. இங்கிலாந்தின் பண்ணையைப்பற்றி எழுதியுள்ள வரலாற்றறிஞர்கள், பண்ணை முறை ஆட்சிக்காலப் பிரபுக்கள் எங்கோ ஓரிடத்தில் போர் ஓய்ந்த காலத்தில், பயிர்த்தொழிலில் நாட்டங் காட்டியதாக அறிவிக்கின்றனர். (எர்ன்லி, பக்கம் 31; Ernle, p. 31.) பண்ணை முறை ஆட்சி சீர்குலைந்ததும், வியாபாரத்திற்காகப் பயிர் செய்யும் முயற்சி தலையெடுத்தது. இது விவசாய மேம்பாட்டிற்கு வழி செய்ததோடல்லாமல், நிலச்சுவான்தார்களைப் பயிர் செய்யும் முறைகளில் அதிக ஊக்கம் செலுத்தச் செய்தது. பதினைன்காம் நூற்றாண்டில் நார்போக் பிரதேசத்தில் கரிநிலமாகக் கிடந்த தன் நிலத்தை மேம்பாடுடையதாகச் செய்த பெர்கெல்லிப் பிரபு, பிரபுக்களிலேயே தனித்து நின்றார்.

தற்கால நகரத்தில் வாழும் சிலர் தம்மைத் தாமே புகழ்ந்து கொள்ளும் தவற்றினால், தங்கள் மூதாதையர், தாங்கள் வாழ்ந்த இடத்தின் காட்சிகளைக் கண்டும், ஒலிகளைக் கேட்டும் பழக்கப்பட்டதால், அங்கு நிலவிய அழகை அறியும் பண்பில்லாதவராக இருந்தனர் என்று எண்ணுகின்றனர். தற்காலத்தில் செல்வம் ஒன்றிலேயே நோக்கமுடைய பண்பற்றவர்களைப்போலவே அக் காலத்திலும் பலர் இயற்கையின் அழகை இரசிக்கும் சக்தியற்ற

[1] ஷீர் என்ற பகுதிகளில் வாழ்ந்த நைட் பட்டம் பெற்றவர் (காமன்ஸ் சபையிலுள்ள கவுன்டி என்ற வட்டார உறுப்பினர்கள்) வட்டார ஆட்சியில் ஈடுபட்டிருந்தனர். மூன்றாம் எட்வர்ட்டின் காலத்தில் கூட்டப்பட்ட ஐம்பதுக்கும் மேலான பார்லிமெண்டுகளில் உறுப்பினர்களாக இருந்த 1636 நைட்டுகளில், 125 பேர், அடிமை நிலையிலிருந்த குடியானவன் வாரிசு இல்லாமல் இறந்தால் நிலம் திரும்பவும் பிரபுவுக்குச் சேருவதைக் கண்காணித்தனர். 371 பேர், பத்தில் ஒரு பங்கையும் பதினைந்தில் ஒரு பங்கையும் வரியாக மக்கள் கொடுக்கவேண்டியதை வசூலிப்பவராகவும், 381 பேர் ஷெரீப் என்ற பதவியை வகித்தவராகவும் 641 பேர் அமைதிக் காவலர்களாகவும் இருந்தனர். இவ்வாறு குமாரி உட்லே எடுத்துக்காட்டியுள்ளார். சாசரின் பாத்திரமான ஃபிராங்லின் இதற்கு ஓர் உதாரணம் (ரிவ்யூ ஆஃப் இங்கிலிஷ் ஸ்டடீஸ் என்ற பத்திரிகையின் 1928ஆம் ஆண்டு, ஏப்ரல் மாத வெளியீடு; Review of English Studies, April, 1928.)

வராய் இருந்தனர். ஆனால், சாசர், லாங்லண்ட் ஆகியோரின் காலக் கவிதைகள், இயற்கையின் அழகை இரசிக்க முடியாதவர்களாக அவர்கள் இல்லை என்பதை எடுத்துக்காட்டுகின்றன.

பதினான்காம் நூற்றாண்டின் நடுவில் தோன்றிய அடுக்கு மொழிக் கவிதை ஒன்றில், பிறர் நிலத்திலே வேட்டை ஆடுவதைத் தொழிலாகக் கொண்ட ஒருவன், மானின் வரவுக்காகக் காத்திருக்கையில், காட்டில் பொழுது புலரும் காட்சியைச் சித்திரிக்கும் விதத்தை இங்கே காண்போம்.

'பலவற்றை இரசிக்கக்கூடிய மே மாதத்திலும் மெல்லக் காற்று வீசும் கோடைகாலத்திலும், காட்டிற்குள் ஒரு பெண் மானையோ அல்லது ஆண் மானையோ வேட்டையாடுவதில் என் அதிருஷ்டத்தைப் பார்க்கச் சென்றேன். பிரபு நாள் முழுவதும் சுற்றி வேட்டையாடிக்கொண்டிருந்தபோது, நான் ஓர் ஓடையின் மருங்கில் பச்சைப் புற்களிடையே பிரிம்ரோஸ், பெரிவின் கில்ஸ், பென்னிராயல் முதலிய மலர்கள் பூத்திருந்த இடத்திலேயே தங்கியிருந்தேன். பனித்துளியானது, டெய்சி மலர்களையும், மொட்டுகளையும் கிளைகளையும் அழகு செய்தது. என்னைச் சுற்றிலும் மூடு பனியானது கரைந்துவிழத் தொடங்கியது. குயில்களும் புறாக்களும் உரத்த குரலில் பாடிக்கொண்டு இருந்தன. வானம்பாடி கரையருகே இருந்து தன் பாட்டைப் பாடிக் கொண்டிருந்தது. அக்காட்டில் இருந்த ஒவ்வொரு பறவையும், மற்றொன்றைவிட இன்பத்தில் மூழ்கியிருந்ததுபோல் தோன்றியது. இவைகளின் ஆனந்தத்திற்குக் காரணம் இருள் மறைந்து ஒளி வந்ததேயாகும். ஆண் மான்களும், பெண் மான்களும் மலையை நோக்கிச் செல்கின்றன. நரியும் மரநாயும் தம் வளைகளைத் தேடிச் செல்கின்றன. முயல்களோ, புதர்களின் அருகில் இருந்து விரைவாகத் தம்முடைய வாழும் இடத்திற்கே சென்று, அங்கே சற்றுத் தங்கியிருக்க முற்படுகின்றன.

ஆண் மான் கவனமாக இங்கேயும் அங்கேயும் பார்த்துவிட்டுத் தலையைக் குனிந்து, தன் உணவை உண்ணத் தொடங்கியது. உடனே, வில்லையெடுத்து, அம்பால் அம் மானை வீழ்த்தினேன். நான் அம் மானின் இடத் தோள்பட்டைக்குச் சற்றுத் தள்ளி அம்பை எய்தியிருந்தேன். அதன் காரணமாக அது செத்து வீழ்ந்திருந்தது.'[1]

ஆடையிலும் மற்றும் பலவற்றிலும், இடைக்காலப் பாணியிலிருந்து தற்காலப் பாணிக்கு, மக்கள் சாசரின் காலத்திலேயே

[1]. தி பார்லிமெண்ட் ஆஃப் தி திரீ ஏஜஸ் - தொகுத்தவர் கொல்லான்ஸ்; 1915, (The Parliment of the Three Ages. Ed. Gollancz, 1915).

மாறத் தொடங்கிவிட்டனர். சாசரும் இத்தாலியக் கவிஞராகிய 'தான்தா'வைப்போலவே, மதிக்கப்பட்ட நீண்ட மேல் சட்டையும், அதற்குமேல் ஹுட் என்று அழைக்கப்படும் கழுத்தின் மேல் அணியப்பட்ட கவிகையையும் அணிந்திருந்தார் என்று தெரிகின்றது. இத்தகைய உடை இடைக்காலத்திற்கே உரித்தான உடையாகும். நம்மிடையில் 'ஃபிரான்சிஸ்கான்' துறவிகள் இவ்வுடையை இன்றும் அணிந்துவருகின்றனர். ஆனால், சாசரின் காலத்திலிருந்த புதிய பாணியை விரும்பியவர், முக்கியமாக இளைஞர்கள், மதிக்கப்பட்ட நீண்ட சட்டை அணிவதை விடுத்து, அதற்குப் பதிலாகக் குட்டையான மேல்சட்டைகளையும், கால்களின் அமைப்பு நன்கு புலப்படும் வண்ணம்,உடலோடு ஒட்டிக்கொள்ளும் காற்சட்டைகளையும் அணிந்தனர். இப் புதிய உடை அநேகமாகத் தற்கால மேற்சட்டை, காற்சட்டைகளைப்போல் இருந்தது. ஆனால், தற்கால உடையிலே இருக்கும் கவர்ச்சியின்மையும் சலிப்பூட்டக்கூடிய தன்மையும் அக் காலத்தில் காணப்படவில்லை. இரண்டாம் ரிச்சர்ட்டின் அவையில் மேற்சட்டைகளும் உடம்போடு ஒட்டிக்கொள்ளும் காற்சட்டைகளும் பலவித நிறமுடையனவாக இருந்தன. காற்சட்டையில் ஒருகால் சிவப்பும், இன்னொரு கால் நீலமுமாக இருக்கும். ஆண்கள் தங்கள் மனைவியரைப் போலவே, விலையுயர்ந்த ஆடைகளையும், பளிச்சிடும் அணிகலன்களையும் அணிந்திருந்தனர். அரசவையில் காணப்பட்ட ஆடம்பர வாழ்க்கையைக் கண்டு செல்வமிகுந்த இளைஞர்கள் ஆடையில் புதிய பாணிகளைப் புகுத்திவந்தனர். கையினை மறைக்கும் சட்டைப்பகுதி நீளமாயிருந்தது. பாதத்தை முற்றிலும் மறைக்கும் செருப்புகளின் முன்பக்கம் கூர்மையாக இருந்தது. அப் பாகத்தைச் சங்கிலியால் இடுப்புடன் பிணைத்தனர். இதன் காரணமாக அவர்கள் பிரார்த்தனை செய்வதற்கு மண்டியிட்டு உட்கார முடியாதவர்களாய் இருந்தனர்.

நீண்ட சட்டையை அணிவதைப் பண்பட்டவர்கள் டியூடர் வம்சத்தினரின் காலம்வரை தொடர்ந்து அணிந்திருந்தனர். ஆனால், இந் நீண்ட சட்டையே ஆடம்பரத்திற்கு ஏற்றதாகச் செய்யப்பட்டது. பெரிய பதவியில் இருந்த ஆண்கள், தங்கள் நீண்ட சட்டை பின்னே தரையில் புரளுமாறு அணிந்தனர். இது பெண்கள் தங்கள் ஆடையைப் பின்னே புரளவிட்டதுபோல் இருந்தது. புதிய பாணியை விரும்பிய ஆண்களும் பெண்களும், தங்கள் தலையில் கொம்புகளைப் போலவும், கோபுரத்தைப் போலவும் வினோதமான தலைப்பாகைகளைப் பெரிய அளவில் அணிந்தனர்.

இத்தகைய நகைப்புக்கிடமான ஆடம்பர வாழ்க்கையுடன், வாழ்க்கையில் புதிய பழக்கங்களும் நலங்களும் ஏற்பட்டன.

இவை இக் காலத்திலும் காணப்படுகின்றன. நம் நாட்டில் முதன் முதலாகச் செல்வர்கள் பெரிய கூடங்களில், தங்கள் பணியாட்களுடன் உண்பதை விடுத்துத் தனி இடத்திலே ஆடம்பரமான உணவை உண்டனர். நூற்றுண்டுப்போரின் ஆரம்ப காலத்திலும், போர் இங்கிலாந்திற்குச் சாதகமாயிருந்த காலங்களிலும். ஃபிரான்சு கொடுத்த கப்பமும், ஃபிரான்சு நாட்டில் கொள்ளையிட்ட பொருளும் இங்கிலாந்தில் குவிந்தன. கமிலசும் கேடோவும் ரோமானியரிடை வற்புறுத்திவந்த எளிய வாழ்க்கையை, மத்திய தரைக்கடல் பிரதேசத்திலிருந்து கொண்ட கப்பமும், கொள்ளைப் பொருளும் எவ்வாறு கவிழ்த்தனவோ, அவ்வாறே இங்கிலாந்தில் நூற்றுண்டுப்போரால் கொண்ட செல்வம், இங்கிலாந்தின் திருந்தாத பொருளாதார நிலையை முற்றிலும் மாற்றியமைத்தது. போரில் பிடிக்கப்பட்ட ஃபிரான்சு நாட்டுப் பிரபுக்கள், இங்கிலாந்தில் அவர்களைக் கைப்பற்றியவரின் நாட்டுப்புற வீடுகளில் மதிப்பிற்குரிய விருந்தாளிகளாகத் தங்கியிருந்தனர். தங்கள் குடியானவர்கள் மீட்புப் பணம் கொடுத்துத் தங்களை மீட்கும்வரை அப் பிரபுக்கள் அவ்வாறு இருந்தனர். சிலர் இந் நிலையிலேயே பல ஆண்டுகள் வாழவேண்டியிருந்தது. அவர்கள் ஆண்களுடன் வேட்டையாடுவதும், சீமாட்டிகளிடம் காதலில் ஈடுபடுவதும், ஆடையிலும், உணவிலும் புதுமையை அறியாதோர்க்குப் புதுமையைப் புகுத்திக் காட்டுவதுமாக இருந்தனர்.

இவ்வாறு ஃபிரான்சு நாட்டவர் சொல்லிக்கொடுக்க நாட்டில் இன்பவாழ்வு பெருகியது. இத்துடன் வியாபாரம் வளர்ந்தது; நாகரிகமும் பரவியது. ஆனால், இவை ஒழுக்கமற்ற வழிகளில் ஏற்பட்டன. நகரங்களில் வாழ்ந்த வியாபாரிகள், பிரபுக்களின் வீடுகளுக்குப் புதிதுபுதிதான ஆடைகள், மரச் சாமான்கள், உணவு வகைகள் ஆகியவற்றை விற்பதில் அதிக ஆர்வம் காட்டினர். பிரபுக்கள் தங்கள் ஆடம்பர வாழ்க்கையாலும், வீண் செலவுகளாலும், வியாபாரிகள் செல்வர்களாவதற்கு வழி செய்தனர். இவ்வாறு முன்னுக்கு வந்துகொண்டிருந்த வியாபாரிகள் பிற்காலத்தில் பிரபுக்களின் நிலையை அடைந்தனர். நகரங்களில் செய்யப்பட்டவைகளும், வெளிநாட்டிலிருந்து கொண்டுவரப்பட்ட பொருள்களும், ஐரோப்பியர் கிழக்கு நாடுகளுடன் நடத்திய வியாபாரமும், பண்ணை வீடுகளிலும் பிரபுக்களின் அரண்களிலும் தேவைப்பட்ட இன்ப வாழ்க்கைக்குகந்த பொருள்களை அளிக்கவே பயன்பட்டன. தற்காலத்தில் இவை பொதுமக்களின் வாழ்க்கைக்காகவே பயன்படுகின்றன. இங்கிலாந்தின் நகரங்களும் ஆங்கிலேயரின் வியாபாரமும், சிறு பண்ணை வீடுகளிலும் குடிசையிலும் வாழ்வோருக்கு வேண்டிய

பொருள்களைச் செய்து அளிப்பதில் ஈடுபட்டிருந்தால் இத்தகைய முன்னேற்றமடைந்திருக்க முடியாது. ஏனென்ருல், அவர்கள் தங்களுக்கு வேண்டிய உணவுப் பொருள்களைத் தாங்களே விளை வித்துக்கொண்டனர். அத்துடன் அநேகமாக எல்லா ஆடை வகைகளையும் மரச்சாமான்களையும், பயிர்த்தொழிலுக்கு வேண்டிய கருவிகளையும் குடியானவனது குடும்பத்தாரும் கைத்தொழிலாளி களும் செய்துகொண்டனர்.

# 2. சாசர் காலத்திய இங்கிலாந்து—II
(தொடர்ச்சி)

### நகரமும் கிருத்தவ ஆலயமும்

இங்கிலாந்தில் பதினுன்காம் நூற்ருண்டில்கூட நகர மாந்தர் நாட்டுப்புற மக்களைப்போலவும், பயிர்த் தொழிலில் ஈடுபட்டோ ராகவும் வாழ்ந்துவந்தனர். அதே நேரத்தில், நகரங்கள் கைத் தொழிலும் வாணிபமும் நடைபெற்றுவந்த இடங்களாகவும் இருந்து வந்தன. நகரங்களைச் சுற்றிக் கல்லாலான சுவர்களோ அல்லது மண்சுவர்களோ இருந்தன. இந்தச் சுவர்கள் நகரங்களைப் பகைவரிடமிருந்து காப்பதற்காகக் கட்டப்பட்டன. இத்தகைய சுவர்கள் கிராமங்களைச் சுற்றி இல்லாதிருந்தன. நகரத்திற்கு வெளியே, நகரத்திற்குச் சொந்தமான நிலம் வேலியிடப்படாமல் இருந்தது. நகரத்தில் வாழ்ந்த ஒவ்வொரு குடியானவனும் அந்த வேலியிடப்படாத நிலத்தில் தனக்குச் சொந்தமான துண்டு நிலத்தைப் பயிர் செய்தான். கால்நடைகளை நகரத்திற்குச் சொந்தமான பொது மேய்ச்சல் நிலத்தில் மேயவிட்டனர். ஆக்ஸ் போர்டிலும் கேம்பிரிட்ஜிலும் இருந்ததுபோல் இம் மேய்ச்சல் நிலங்கள் ஆற்றின் அருகில் இருந்தன. கி. பி. 1388ஆம் ஆண்டில் கைத்தொழில் பயின்று வந்தவரும், மற்ருெருவரின்கீழ் கைத்தொழிலில் ஈடுபட்டிருந்தவரும், அறுவடைக் காலத்திலே அவரது வேலையை விட்டுவிட்டு, அறுவடை செய்வதில் பங்கு கொள்ளவேண்டும் என்று பார்லிமெண்ட் சட்டம் செய்தது. நகரத் தலைவர்களும், அரசரின் அதிகாரிகளான பெய்லிப் என்பவர்களும், காவல் துறையினரும் அப்படி அவர்கள் செய்கிருர்களா என்று கண்காணிக்கவேண்டும் என்றும் சட்டம் இயம்பியது. (ஸ்டேச் யூட்ஸ் ஆஃப் ரெல்ம்: இரண்டு; பக்கம் 56; stats of Realm II, p. 56.) நாட்டின் இரண்டாவது முக்கிய நகரமாக இருந்த நார்விக் நகரத்தில்கூட, இக் காலத்திற்குப் பின்னும் ஒவ்வோர் ஆண்டும் அறுவடை செய்யப்பட்டனவற்றை நகரத்திற்குள் கொண்டு வரும் பணியை நெசவுத் தொழிலாளர்கள் கட்டாயமாக ஏற்றுக்

கொள்ளவேண்டியிருந்தது. லண்டன் மாநகரத்தில் வாழ்ந்தோர் கூட இத்தகைய கட்டுப்பாட்டிற்கு அப்பாற்பட்டிருக்கவில்லை. தொழிற் புரட்சிக் காலந்தொட்டு நாட்டுப்புறத்தவரை நகரத்தவரிடமிருந்து முழுவதும் பிரித்த வேற்றுமைகள், அக் காலத்தில் இல்லாதிருந்தன. தற்காலத்தில் பெரும்பாலான ஆங்கிலேயர் நாட்டுப்புறத்தில் நடப்பனவற்றை அறியாதிருக்கின்றனர். ஆனால், அக் காலத்திலோ நாட்டுப்புறத்தில் நடப்பதை அறியாத ஆங்கிலேயன் இருந்திருக்கமுடியாது.

கிராமங்களைவிட நகரங்கள் சுகாதாரத்தில் குறைந்திருந்தன. அதனால் நகரங்களில் கொள்ளைநோய்கள் அடிக்கடி தோன்றின. இருப்பினும் சில நூற்றாண்டுகளுக்குப் பிறகு இருந்ததைப்போல், சுகாதாரம் குறைந்த சேரிகள் அதிக அளவில் அப்போது இருக்கவில்லை. வீடுகளைச் சுற்றிப் பூந்தோட்டம், பழத்தோட்டம், மேய்ச்சல் நிலம், கால்நடைகளுக்கு வேண்டிய கொட்டில் முதலியன இருந்தன. நகரத்தில் வாழ்ந்தோரின் எண்ணிக்கை மிகக்குறைவாயிருந்தது. சாதாரண நகரங்கள் இரண்டு அல்லது மூன்று ஆயிரம் மக்களை உடைத்தாயிருந்தன.

நகரமாந்தர் நாட்டுப்புறங்களிலும் நகரங்களிலும் உள்ள நன்மைகளை ஒருங்கே பெற்றிருந்தனர். எங்கும் நிலவுகின்ற இயற்கையின் எழில், அவர்களையும் அறியாமல் அவர்களது மொழியையும் எண்ணங்களையும் பாதித்தது. சாசர் ஒரு லண்டன் நகரவாசிதான். அவர் ஓர் அழகிய, துடிப்பான மங்கையை வர்ணிக்கும்போது நான்கு உவமைகளை உபயோகிக்கிறார். ஒன்றை நாணயம் அச்சிடும் கூடத்திலிருந்தும் மற்ற மூன்றையும் நாட்டுப்புறத்தில் பழக்கமானவையும், இழிவானவையுமான காட்சிகள், ஒலிகள், மணம் முதலியவற்றிலிருந்தும் எடுத்திருக்கிறார்.

'அவளது மேனி புதியதாக அச்சிடப்பட்ட நாணயத்தைவிட அதிகமாக ஒளி வீசியது. அவளது பாட்டானது வைக்கோல் போரின்மேல் அமர்ந்து, துரிதமாகவும் உரத்த குரலிலும் ஒலி எழுப்பிய தூக்கணாங் குருவியின் இனிய குரலை ஒத்திருந்தது. அவள் குதித்து விளையாடியது, ஓர் ஆட்டுக்குட்டியோ அல்லது கன்றுக்குட்டியோ தன் தாயின்பின்னே துள்ளித் துள்ளிச் செல்வதுபோல் இருந்தது. அவள் இதழ்கள் தேனைப்போன்றும் அல்லது தேனும் நீரும் கலந்து செய்யப்பட்ட மதுவைப்போன்றும் இனித்தன. அவ் விதழ்கள் வைக்கோலின் நடுவே விளங்கும் ஆப்பிள் பழங்கள்போல் காட்சியளித்தன.'

எவ்வளவு எளிமையும், உணர்ச்சியும், அழகும் இதில் இருக்கின்றன. இந்தக் கவிதைத்திறன் இன்று அழிந்துவிட்டது.

காரணம் இதை ஆக்கிவைத்த அன்றுட வாழ்க்கை இன்று இல்லை; அல்லது அன்றுட வாழ்க்கையில் உணர்ச்சியின்றித் தானே இயங்கும் நிலை ஏற்பட்டுவிட்டது. சாசரால் தீட்டப்பட்ட மங்கையைப்போலவே அவரது கால மங்கையர் இருந்திருக்க வேண்டும் (ஆலை உரிமையாளரின் கதை : The Miller's Tale).

சிறிய நகரங்கள் பாதியளவு நாட்டுப்புற நிலையில் இருந்தாலும், தமக்கே உரித்தான உரிமைகளை உடைய நகர மாந்தரைப் பெற்று விளங்கின. அரசனிடமிருந்தோ, அல்லது பிரபுவினிடமிருந்தோ அல்லது மடாதிபதியிடமிருந்தோ, அல்லது பிஷப் பதவியை வகித்த பாதிரியாரிடமிருந்தோ, தாங்கள் குறிப்பிட்ட தொகையைக் கொடுத்துப் பெற்ற நகராட்சி உரிமையையும், வட்டார வியாபாரத்தின் ஏகபோக உரிமையையும் பாதுகாப்பதிலும், வளர்ப்பதிலும் தங்கள் கவனத்தைச் செலுத்தினர். அபாயம் நிறைந்த பயணங்களில் தங்கள் வியாபாரிகளைக் காப்பதற்காகவும், மற்ற நகரங்களில் உள்ளோர் தங்களுக்குக் கொடுக்கவேண்டிய கடனைப் பெறுவதற்காகவும், நகரங்கள் ஒன்றோடொன்று தூதுவர் மூலம் வசதிகள் செய்துகொண்டன. நார்விக்கும் சௌதாம்ப்டனும் ஒன்றோடொன்று தூதுவர்மூலம் பேச்சு வார்த்தை நடத்திக் கொண்டன. ஃபிரான்சும் இங்கிலாந்தும் பேச்சு வார்த்தை கொண்டதைப்போல் இருந்தது. நகரங்களிடையே வியாபார உடன்படிக்கைகள் வழக்கமாக இருந்தன. லண்டன் நகராட்சி தேம்ஸ் நதியின் இரு மருங்கிலும் நெடுந்தூரம் நிலவியது.

ஜெர்மனியில் அக் காலத்தில் இருந்த சுதந்திர நகரங்கள் பொறாமைப்படும் அளவிற்கு, லண்டன் நகராட்சி மிகப் பலவான உரிமைகளைப் பெற்றிருந்தது. அரசனின் அதிகாரிகளோ அல்லது காண்ட்டைச் சார்ந்த ஜானின் ஆட்களோ, லண்டன் நகரவாசியின் உரிமையைக் கெடுக்கவோ அல்லது லண்டன் நகரத் தலைவரின் ஆட்சியை எதிர்க்கவோ முயன்றால், அவர்கள் துன்பத்தையே தேடிக்கொள்வர்.

லண்டன் மாநகரத்தின் நகராட்சி வலிமை பெற்றிருந்தாலும், மற்ற நகரங்கள் பல சுய ஆட்சி உரிமைகளைப் பெற்றிருந்தாலும், அவை யாவும் நாட்டுப்பற்றுள்ளவைகளாகவே விளங்கின. நாடு முழுவதையும் பாதிக்கக்கூடிய பொருளாதார விஷயங்களில் பார்லிமெண்டானது, இந் நகரங்களின் ஆலோசனையைக் கேட்டே சட்டங்கள் செய்தது. பதினைன்காம் நூற்றாண்டிலே வியாபாரத்தில் நகரங்கள் தனித்தனியே அக்கறை கொண்டிருந்தாலும், வியாபாரம் நாடு முழுவதையும் சார்ந்ததாக மாறிக்கொண்டிருந்தது. இங்கிலாந்தை உருவாக்கிய நகரங்களின் வரலாறு இங்கிலாந்தின்

வரலாற்றுடன் ஒன்றிவிட்டது. ஆனால், அக் காலத்தில் ஜெர்மனி ஒரு தனி நாடாக விளங்காததால் அந் நாட்டில் இருந்த நூரம்பர்க், ஒன்றோடொன்று தொடர்பு கொண்ட ஹன்சே நகரங்கள் ஆகியவற்றின் வரலாறுகள் ஐரோப்பிய வரலாற்றிலே தனித்தனி வரலாறுகளாக இடம் பெறுகின்றன.

ஆயினும், இங்கிலாந்தில் நூற்றுண்டுப்போர் நடந்தபோது தாங்கள் ஒரே நாட்டவர் என்ற உணர்ச்சியும், நாட்டுப்பற்றும் மக்களிடையே எல்லாவற்றிற்கும் மேலாகக் காணப்படவில்லை. அதற்கு மாறாக ஒவ்வொருவரும் தம் நகரப்பற்றுடையவராயிருந்தனர். ஃபிரான்சு அல்லது ஸ்காட்லாந்து மக்களிடமிருந்தோ அல்லது நாடு கடத்தப்பட்டவர்களிடமிருந்தோ அல்லது நகர சுய ஆட்சியை வெறுத்த பிரபுக்களைச் சார்ந்தவரிடமிருந்தோ, தங்கள் நகரத்தையும் நகரத்திற்குச் சொந்தமான நிலங்களையும் காப்பதற்காக நகரப்படையில் சேர்ந்து சேவை புரிவதைத் தமது முதல் கடமையாக நகரவாசிகள் எண்ணினர். கட்டாய ராணுவ சேவை இடைக்கால ஆங்கிலேயருக்குப் பழக்கப்பட்டதாயிருந்தது. தங்களைச் சூழ்ந்திருந்த அபாயங்களில் இருந்து தங்களைக் காத்துக்கொள்வதற்கு அவர்கள் எப்படி மற்றவரை நம்பி இருக்க முடியும். போர் புரிவதற்கும், நகரத்தில் அமைதியைக் காப்பதற்கும், நகரத்தின் அகழியையோ அல்லது கழிநீர்க் கால்வாயையோ வெட்டுவதற்கும், பாலங்களைப் பழுது பார்ப்பதற்கும், நகரத்திற்குச் சொந்தமான நிலங்களில் அறுவடை செய்வதற்கும், வீதிகளைச் சுத்தம் செய்யவும், பழுது பார்க்கவும், நகராட்சியினரால் நகர மாந்தர், சேவைசெய்ய அழைக்கப்படலாம். பிரபுவின் நிலத்தில் அடிமையைப்போல் ஊதியமில்லாமல் வேலைசெய்வதாக நகர மாந்தர் இப் பொதுக் காரியங்களைக் கருதவில்லை. அக் காலத்தில் நகரத்தைப் பாதுகாக்க ராணுவ சேவை செய்வதும், மற்றக் காரியங்களைச் செய்வதும் தங்கள் சுதந்திரத்தைப் பாதிப்பதாக அவர்கள் நினைக்கவில்லை. ஏனெனில், அவற்றைச் செய்வதில்தான் தாங்கள் நகரத்து உரிமையும், தங்கள் உரிமைகளும் நிலைக்க முடியும் என்று அறிந்திருந்தனர். தனக்குத்தானே உதவி செய்து கொள்வதையும், சுய ஆட்சியையும், நகர வாழ்க்கையிலிருந்து பல நூற்றுண்டுக் காலமாக ஆங்கிலேயர் கற்றிருந்தனர். அதிலும் ஷீர் என்ற வட்டாரத்தின் நீதிமன்றத்திலும், கிராமத்திலிருந்த பண்ணை நீதிமன்றத்திலும் தங்கள் அனுபவத்தால் இப் படிப்பினையைக் கற்றிருந்தனர். உரிமைகளும் சேவைகளும் ஒன்றோடொன்று இணைந்திருந்தன.

இங்கிலாந்தின் ஒவ்வொரு நகரத்திலும் அரசியல் சச்சரவு கடுமையாக நடந்துகொண்டிருந்தது. இச் சச்சரவு நாட்டிலே

அரசியல் கட்சிகளிடையே நடத்தும் சச்சரவு அன்று. ஒரு நகரத்திலே உள்ள கைத்தொழிலாளர்களுக்கும் நகராட்சியினருக்கும் நடந்த சச்சரவாகும். இத்தகைய சச்சரவு நகரமாந்தரின் வாழ்க்கையைப் பாதித்தது. இடைவிடாமல் நகராட்சியினருக்கும் கைத்தொழிலாளர்களுக்கும் இடையே அரசியலில் பங்கு கொள்வதைப்பற்றிச் சச்சரவு நிகழ்ந்துகொண்டே இருந்தது. அதேபோல் பெரிய வியாபாரிகளுக்கும், சிறிய அளவில் ஆக்கத் தொழிலில் ஈடுபட்டிருந்தோருக்குமிடையிலும், முதலாளிகளுக்கும் அவரிடம் வேலைசெய்த தொழிலாளிகளுக்குமிடையிலும், வெளியே இருந்து வந்து வியாபாரத்தில் பங்குபெற நினைத்தோருக்கும், நகரமாந்தர் அனைவருக்குமிடையிலும் சச்சரவுகள் நிகழ்ந்தவாறே இருந்தன. அதேபோல் அரசரின் அதிகாரியான ஷெரீப்புடனும், பிரபு அல்லது பிஷப் பதவியிலிருந்த பாதிரியார்களின் அதிகாரியான பெய்லிப்புகளுடனும், எல்லாருடைய எதிரிகள் என்று கருதப்பட்ட மடத் துறவிகளுடனும் நகரமாந்தர் தொடர்ந்து சச்சரவில் ஈடுபட்டிருந்தனர். பல வகைகளில் இச்சச்சரவுகள் நகரங்களில் நடைபெற்றன. இவைகளின் விளைவுகளும் பலதரப்பட்டனவாக இருந்தன. பண்ணை ஆட்சியிலிருந்து விடுபட்டு உரிமைகள் பெற்ற நகரமாவதற்கு முயன்று கொண்டிருந்த கிராமங்களும், ஒரு சிறு நாடுபோல் விளங்கிய லண்டன் மாநகரை ஒத்த பெரிய நகரங்களும் ஏதாவது ஒரு சச்சரவில் ஈடுபட்டிருந்தன. இத்தகைய சச்சரவுகளில் ஒவ்வொரு கட்சியினரும் சட்ட நடவடிக்கையாலோ, அல்லது கலகம் செய்தோ, அல்லது பொருளாதார நிலையைக் கட்டுப்படுத்தியோ வெற்றி அடைய முயன்றனர்.

லண்டன் மாநகரத்தில் விறகிற்கும் அடுப்புக் கரிக்கும் பதிலாக, நிலக்கரியே அதிகமாக உபயோகிக்கப்பட்டு வந்தது. நிலக்கரி டின்னிசைடு என்ற இடத்திலிருந்து கடல் வழியாகக் கொண்டு வரப்பட்டதால், நிலக்கரியைக் கடல்கரி என்று அழைத்தனர். லண்டனுக்குப் போய்வந்துகொண்டிருந்த பிரபுக்களும் பாதிரியார்களும் கடல் கரியை எரிப்பதால் உண்டாகும் நாற்றம் தொற்று நோயை உண்டுபண்ணும் என்று குறை கூறினர்.[1] தீப்பிடித்து விடும் என்ற பயத்தால் ஓலை முதலியவற்றைக்கொண்டு கூரைகளை வேய்வதற்குப் பதிலாகச் செந்நிற ஓடுகளை லண்டனில் உபயோகித்தனர். இருப்பினும் வீடுகளின் சுவர்கள் தொடர்ந்து

[1] நிலக்கரியை வீட்டில் அடுப்பெரிக்க உபயோகிப்பதால் கேடு விளையும் என்ற தவறான எண்ணம் நிலவியிருந்தது. விறகுப் பஞ்சம் ஏற்பட்டு அதனால் நிலக்கரியை அதிகமாக உபயோகிக்கவேண்டிய கட்டாயம் ஏற்படும்வரை இந்த எண்ணம் நிலைத்திருந்தது. நாட்டில் பொதுவாக டியூடர் வம்சத்தினரின் காலம்வரை, நிலக்கரி கொல்லர்களாலும் சுண்ணாம்பு சுடுவோராலும் முக்கியமாக உபயோகிக்கப்பட்டு வந்தது.

களிமண்ணைக் கொண்டும் மரத்தைக் கொண்டும் கட்டப்பட்டன. ஆனால், பெரிய பிரபுக்களாலும் செல்வராலும் கற்களைக் கொண்டு பல மாளிகைகள் கட்டப்பட்டுவந்தன. உதாரணமாக, லண்டனையும் வெஸ்ட்மின்ஸ்டரையும் இணைத்த சாலையில் காண்ட்டைச் சார்ந்த ஜானின் சவாய் அரண்மனை கற்களைக்கொண்டு கட்டப் பட்டிருந்தது. தலைநகரின் கட்டடக் கலையின் சிறப்பு அங்கிருந்த நூறு கிருத்தவ ஆலயங்களில்தான் இருந்தது. சாலைகள் நன்றாகச் செப்பனிடப்பட்டிருக்கவில்லை. சாலைகளின் இரு மருங்கிலும் நடைபாதைகள் இருக்கவில்லை. கழிநீர் ஓடிச்சென்று விழும் பெரிய சாக்கடையைக் கடப்பதற்கு, இரண்டு பக்கங்களிலும் சரிவான மேடுகளே இருந்தன. இதனால் உடல் வலியற்றவர் சறுக்கி சகதியில் விழுந்தனர். நகரசபையினர் தகுந்த நடவடிக்கை எடுக்காததால், வீடுகளில் வசிப்போரும் வியாபாரிகளும், குப்பை கூளம், அழுகிய பொருள்கள் முதலியவற்றைக் கதவுகள், சாளரங்கள் வழியாகத் தெருக்களில் எறிந்தனர். மக்கள் தங்கள் நலத்தைப்பற்றியோ அல்லது சுகாதாரத்தைப்பற்றியோ கருத்தில் கொள்ளவில்லை.

லண்டனில் இருந்து இரண்டு மைல் தூரத்தில் வெஸ்ட் மின்ஸ்டர் இருந்தது. வெஸ்ட்மின்ஸ்டர் நகரம் வெஸ்ட் மின்ஸ்டர் மடத்தைச்சுற்றி அமைந்திருந்தது. அம் மடத்தின் கூடமானது, ரூபஸ் என்பவரால் கட்டப்பெற்று இரண்டாம் ரிச்சர்ட்டால் ஓக் மரத்தினால் கூரை வேயப்பட்டு அழகு செய்யப் பட்டு இருந்தது. அரசர் ஆட்சி செய்யும் இடமாகவும், பார்லி மென்ட் கூடிச் சட்டம் செய்யும் இடமாகவும் வெஸ்ட்மின்ஸ்டர் இருந்தது. இருப்பினும், வெஸ்ட்மின்ஸ்டர் நகராட்சியின் உரிமைகளைப் பெற்றிருக்கவில்லை. லண்டன் மாநகரின் வாயில் அருகில் அமைந்திருந்த ஒரு கிராமமாகத்தான் விளங்கியது. ஃபிரான்சின் தலைநகரான பாரிஸில் அரசருக்கிருந்த லூவூர் மாளிகையைப்போல் இங்கிலாந்தின் அரசர் இருப்பதற்கு லண்டனில் இடமில்லாதிருந்தது. அரசர் லண்டனுக்கு வந்தால், இந் நகரத்திற்கு ஒரு புறத்திலிருந்த வெஸ்ட்மின்ஸ்டரிலாவது நகருக்கு மற்றொரு புறத்திலிருந்த லண்டன் அரணிலாவது தங்கினார். லண்டன் நகரினுள் அரசர் தங்குவதற்குச் சிறிதேனும் இடமில்லை. இரண்டாம் ரிச்சர்டு பிற்காலத்தில் ஆண்ட முதலாம் சார்லஸைப் போலவே, நாட்டுப் படையையோ அல்லது அதிகாரிகளையோ அல்லது மக்கள் திரளையோ தன்னிஷ்டம் போல் நடக்கச் செய்ய முடியவில்லை. பிளான்டாஜனெட் வம்சத்து அரசர்களுக்கும் தலைநகரில் வாழ்ந்தோருக்கும் இடையே இருந்த உறவு, இடைக்கால இங்கிலாந்தில் அரசரும், மக்களும் ஒருவரை ஒருவர் கட்டுப்படுத்திய நிலையையும், இருவரும் சேர்ந்து இயங்கிய

நிலையையும் எடுத்துக்காட்டுகின்றது. இந் நிலைதான் ஆங்கிலேயரின் தனி உரிமை வளர வழிகோலியது.

லண்டனில் இருந்த மிகப் பெரிய செல்வர்கள் பெரிய நிலப்பரப்பைச் சொந்தமாகக்கொண்ட பிரபுக்களுக்குச் சமமாக இருந்தனர். இதற்குக் காரணம் அவர்கள் ஊர்ப்படையைத் தங்கள்கீழ் வைத்திருந்ததும், அகதி அளவிற்கு இங்கிலாந்தின் வர்த்தகத்தைத் தங்கள் கையில் வைத்திருந்ததுமேயாகும். இத்துடன் அவர்கள் அரசாங்கத்திற்குக் கடன் கொடுத்ததும் ஒரு காரணமாகும். கி. பி. 1290-ல் முதலாம் எட்வர்ட் யூதர்களை இங்கிலாந்திலிருந்து வெளியேற்றினர். இதன் காரணமாக அவர்களிடமிருந்து அரசாங்கம் கடன் வாங்கும் பழக்கம் நின்றது. இப்படி யூதர்கள் இங்கிலாந்திலிருந்து அப்போதே துரத்தப்பட்டுவிட்டதால், இன்று ஐரோப்பாவின் பல நாடுகளில் இருப்பதுபோல இங்கிலாந்தில் யூதர் எதிர்ப்பு இயக்கம் அவ்வளவு வலிமையுடையதாக இருக்கவில்லை. முதலாம் எட்வர்டின் இச் செயலால், யூதரின் உதவியின்றிப் பொருள் திரட்டவும், அறிவை வளர்த்துக் கொள்ளவும் வேண்டிய நிர்ப்பந்தம் நம் முன்னோர்களுக்கு ஏற்பட்டது. அதனால் கிராம்வெல்லின் காலத்தில் யூதர்கள் இங்கிலாந்து திரும்பச் சலுகை காட்டப்பட்டபோது, ஆங்கிலேயர் அறிவிலும் செல்வத்திலும் அவருடன் போட்டியிடும் நிலையில் இருந்தனர்.[1] யூதர்கள் இல்லாமையால் மூன்றும் எட்வர்ட் இத்தாலியில் இருந்த ஃபிளாரன்ஸ் நகரத்திலிருந்து வந்து குடியேறிய வட்டிக் கடைக்காரரிடம் தன்னுடைய போர்ச் செலவுகளுக்குக் கடன் வாங்கினர். இந்த வட்டிக் கடைக்காரர்கள் அரசருக்கு மட்டுமன்றி, அவருடைய பிரபுக்களுக்கும் கடன்கொடுத்தனர். பொக்காட்சோ எழுதிய டெகமெரூன் இரவுக் கதைகளில் இரண்டாம் நாள் கதை,மூன்று ஃபிளாரன்ஸ் நகர வாசிகள் எப்படி லண்டனுக்குச் சென்று, சிறிய வீடு ஒன்றில் சிக்கனமாக இருந்து கொண்டு, வட்டிக்குப் பணம் கொடுத்தனர் என்பதை விளக்கு

[1] யூதர்கள் நாட்டைவிட்டு வெளியேற்றப்படும் முன்பே செல்வத்தில் குறைந்தும் கடன் கொடுப்பதில் சக்தி குன்றியும் இருந்தனர். இப்படி இருந்திரா விட்டால் அவர்கள் துரத்தப்பட்டிருக்கமாட்டார்கள். ஆங்கிலேயரும், மற்ற நாட்டுக் கிருத்தவர்களும்,யூதர்களுக்குப் பதிலாக அரசருக்கும், அவர் குடிகளுக்கும் கடன்கொடுக்கத் தலைப்பட்டனர். இடைக் காலம் முழுவதும் கைத்தொழிலும், விவசாயமும், மாறிக்கொண்டும், பெருகிக்கொண்டும் இருந்தன. இதன் காரணமாக, அரசர், பண்ணைவீடுகளில் வசித்த பிரபுக்கள், சுதந்திரமாகத் தம் நிலத்தைப் பயிரிட்டுவந்த குடியானவர்கள், அடிமை நிலையில் இருந்த குடியானவர்கள், வியாபாரிகள் முதலானோர் முதலீட்டைக் கடனாக வாங்கவேண்டி இருந்தது. சட்டங்கள், வட்டிக்குக் கடன கொடுப்பதைச் சட்ட விரோதமானது என்று அறிவித்தும் கடன் கொடுப்பது குறையவில்லை. கடன் கொடுப்போர் அதிக வட்டி கொடுப்போருக்கே கடன் கொடுத்தனர். அவர்கள் அநேகமாக 50 சதவிகித வட்டியைக் கேட்டு வாங்கினர். (லிப்சன் எழுதிய நூலின் முதல் பாகம், பக்கங்கள் 616-620; Lipson, I, pp 616-620.)

கின்றது. வேண்டிய அளவு செல்வம் திரட்டியபின் அவர்கள் தங்கள் ஊருக்குத் திரும்பிச் சென்றனர். தங்களுக்குப் பதிலாக அலெசேன்ட்ரோ என்ற பெயருள்ள உடன்பிறந்தார் மகனை இங்கிலாந்திற்கு அனுப்பித் தங்கள் வட்டிக் கடையைத் தொடர்ந்து நடத்தச் செய்தனர். அலெசேன்ட்ரோ அரண்களையும் சொத்துகளையும் அடைமானமாக வைத்துக்கொண்டு, பிரபுக்களுக்குக் கடன் கொடுத்தார். இப்படிக் கடன் கொடுத்தது அவருக்கு நல்ல இலாபத்தை அளித்தது.

மூன்றும் எட்வர்ட் 'லண்டன் நகரத்தில் வாழும் பெரிய மனிதர்' என்று கருதப்பட்ட தம் குடிகளிடமிருந்தே கடன் வாங்கத் தலைப்பட்டார். இதைப்போலவே மற்ற நகரங்களில் வாழ்ந்த வியாபாரிகளிடமிருந்தும் அரசர் கடன் வாங்கினர். அப்படி அவருக்குக் கடன் கொடுத்தவரில் ஹல் நகரத்தில் வாழ்ந்த ஸர் வில்லியம் டி லா போல் என்பவர் ஒருவராவார். இவர் முதன் முதலில் பிரபுவின் அந்தஸ்திற்கு உயர்த்தப்பட்ட வியாபாரி ஆவார். வருங்காலத்தில் சிறப்புடன் வாழ்ந்த ஒரு குடும்பத்திற்கு இவர் அடிகோலினர். இத்தகைய வியாபாரிகளுக்கும் அரசருக்கும் இடையே இருந்த உறவு, அரசருக்கும் யூதர்களுக்கும் இடையே இருந்த உறவைப்போல் அல்லாமல் முற்றிலும் மாறுபட்டிருந்தது. மக்களின் செல்வத்தை உறிஞ்சிவந்த யூதர்களைப் பிழிந்து அரசர் பொருள் திரட்டினர். யூதர்களை மக்களின் வெறுப்பிலிருந்து மீட்டவரும் அவர்களால் கொல்லப்படாமல் காப்பாற்றி வந்தவரும் அரசர் ஆவர், ஆனல், நூற்றுண்டுப் போரின்போது அரசாங்கத்திற்குக் கடன்கொடுத்த ஆங்கிலேய வியாபாரிகள் யூதர்களைப் போல் அல்லாமல், கடன் கொடுக்கவும் மறுக்கவும் செய்தனர். அரசரின் பணத்தேவையை அறிந்து தங்களுக்கோ, தங்கள் குடும்பங்களுக்கோ, தங்கள் நகரங்களுக்கோ, கைத்தொழிலுக்கோ, வியாபாரத்துக்கோ வேண்டிய சலுகைகளை, பதிலாக எதிர் பார்த்துத்தான் கடன் கொடுக்க முன் வந்தனர்.

இச் சூழ்நிலையில்தான் மூன்றும் எட்வர்டின் நிதித்திட்டமும், உள்நாட்டு வெளிநாட்டு அரசியல் நடவடிக்கைகளும் உருவெடுத்தன. நூற்றுண்டுப் போர் ஒரு வம்சத்தின் நாடு கவரும் எண்ணத்திற்காகவும் கொள்ளைப் பொருளைத் திரட்டுவதற்காகவும்மட்டுமே மேற்கொண்ட போர் அன்று; ஃபிரான்சிலும், ஃபிளான்டர்ஸிலும், ஆங்கிலேயர் கம்பளியிலும், ஆடையிலும் தொடர்ந்து வியாபாரம் செய்வதற்காகவும் இடப்பட்ட போராகும். வான் ஆர்டிவெல்டு உடனும், ஃபிளான்டர்ஸ் நகரவாசிகளுடனும் ஃபிரான்சுக்கு எதிராக இங்கிலாந்து நட்புக்கொண்டது, வியாபாரத்திற்காகவும் ஃபிரான்சைத் தோற்கடிப்பதற்காகவுமேயாகும்.

இங்கிலாந்தின் போக்கு தொடர்ந்து மாறுபட்டுக்கொண்டே இருந்தது. அரசரின் தேவைகளும், குடிகளின் மாறுபட்ட நோக்கங்களும், வெளிநாட்டில் இருந்த அரசரின் நண்பர்களின் நோக்கங்களும், இத்தகைய மாறுதல்களுக்குக் காரணங்களாகும். வியாபாரத்திற்குக் கட்டுப்பாடுகள் விதித்து அதைக் காக்க வேண்டும் என்ற அரசியல் நோக்கமும், வியாபாரத்திற்குக் கட்டுப்பாடுகள் தேவையல்ல என்ற அரசியல் நோக்கமும், இங்கிலாந்தில் மாறிமாறிச் செயல்படுத்தப்பட்டு அவைகளின் நன்மை தீமையை அறிய முயற்சி செய்யப்பட்டுவந்தது. இவ் விரண்டில் எந்த முறை சிறந்தது என்று ஒரு முடிவிற்கு வராததே, இத்தகைய தேர்வு கண்டதற்குக் காரணமாகும். ஏற்றுமதியை அதிகரித்து, இறக்குமதியைக் குறைக்கும் அரசியல் நோக்கு நிலவிய காலத்து, நாட்டின் வியாபாரத்திற்குத் தொடர்ந்து பாதுகாப்பளிக்கும் அரசியல்போக்கை இங்கிலாந்து அச் சமயம் கொண்டிருக்கவில்லை. ஆனால், அதைக் கொண்டுவரும் முயற்சியில் இறங்கி இருந்தது. இரண்டாம் ரிச்சர்டின் காலத்திலேயே, அன்னிய நாட்டுக் கப்பல்கள் இங்கிலாந்தின் துறைமுகங்களில் வந்து வியாபாரம் செய்யக்கூடாது என்று சட்டம் செய்யப்பட்டிருந்தது. ஆனால், இச் சட்டத்தை அமலாக்க முடியாமலிருந்தது. ஸ்டூவர்ட் வம்சத்தினரின் காலம்வரை தொடர்ந்து பெருகிக்கொண்டே வந்த வியாபாரத்தைச் சமாளிக்கும் அளவிற்கு ஆங்கிலேயரின் வியாபாரக் கப்பல்கள் பெருமளவில் இல்லாதிருந்தது இதற்குக் காரணமாகும். ஆங்கிலேயர்கள் அன்னிய நாட்டுக் கப்பல்களைக் கொண்டு தங்கள் வெளிநாட்டு வியாபாரத்தில் பெருமளவை நடத்திவந்தனர்.

ஆனால், ஆங்கிலேயக் கப்பற்படை பலமுள்ளதாகிக்கொண்டு வந்தது. மூன்றும் எட்வர்ட் ஆங்கிலேயக் கால்வாயில் அன்னிய நாட்டுக் கடற்கொள்ளைக்காரர்களை ஒழிப்பதற்காகப் பல ஆண்டுகள் கப்பற்படையை உபயோகித்து வெற்றிபெற்றுர். ஃபிரான்சுக்காரரை ஸ்லாய்ஸ் என்ற இடத்தில், கி.பி. 1340-ல் முறியடித்தது அரசரின் கப்பற்படை அன்று; பல நகரங்களின் வியாபாரக் கப்பல்களைக்கொண்ட அரசரின் தளபதியின் கீழ் இருந்த கப்பற்படையே யாகும். பீரங்கிகள் கடற்போரில் இடம்பெறவில்லை. சலாமிஸ் அருகே நடந்த கடற்போரில் நிகழ்ந்ததுபோலவே கூரிய நுனியை உடைய கப்பல்களைக்கொண்டு எதிரிக் கப்பல்களை அழித்து, வாள், வேல், வில் முதலிய ஆயுதங்களைக் கொண்டு நிலத்தில் போரிடுவது போல், கடலிலும் போர் செய்தனர்.

இங்கிலாந்தின் ஏற்றுமதிப் பொருள்கள் எல்லாம் ஸ்டேபில் என்று அழைக்கப்பட்ட அங்காடிக்குக் கொண்டுவரப்பட்டன.

அங்கே ஏற்றுமதிவரி வசூலிக்கப்பட்டபின் விற்கப்பட்டன. ஏற்றுமதி, இறக்குமதி வரிகள் வசூலிப்பதற்கு ஸ்டேபில் தேவைப் பட்டது. அரசரின் வருமானம் இவ் வரிகளைப் பொறுத்திருந்தது. ஆங்கிலேய வியாபாரிகளை அன்னியநாட்டு வியாபாரிகளின் மோசடியில் இருந்தும் வன்முறைச் செயல்களிலிருந்தும் காப்ப தற்கும் ஸ்டேபில் தேவைப்பட்டது. இந்த அங்காடியை நடத்தி வந்த வணிகர் சங்கம் ஏற்றுமதி செய்யப்படும் பொருள்களில் ஒரு பகுதியை, தான் தனித்து நின்று வியாபாரம் செய்யும் உரிமையைப் பெற்றிருந்தது. இவ்வாறு அதற்குக் கொடுக்கப் பட்டிருந்த உரிமையைப் பல கம்பளி தயாரிப்பவரும் வியாபாரி களும் வெறுத்தனர். விவசாயம், கைத்தொழில், வியாபாரம் முதலியவற்றில் ஈடுபட்டிருந்தவர்கள் இந்த அங்காடியைப்பற்றி முற்றிலும் முரண்பட்ட கருத்துகளைக் கொண்டிருந்தனர். முக்கியமாக, அது எந்த இடத்தில் அமைக்கப்படவேண்டும் என்பதில் கருத்து முரண்பாடு இருந்தது. ஒரு காலத்தில் சில ஆங்கிலேய நகரங்களில் அவ் வங்காடி அமைக்கப்பட்டிருந்தது. பிறகு ஐரோப்பாவில் ஃப்ளான்டர்ஸில் நிறுவப்பட்டிருந்தது. ஆங்கிலேயர் கலே துறைமுகத்தைப் ஃபிரான்சிடமிருந்து பிடித்தபின், அது ஃபிரான்சினுள் நுழைவதற்குவேண்டிய துறை முகமாயிற்று. அங்கேயும் இவ் வங்காடியைச் சிலகாலம் அமைத் திருந்தனர். ஆங்கிலேயரின் கம்பளியானது கலே துறைமுகத்தை அடைந்தவுடன், அன்னிய நாட்டு வியாபாரிகள், அதன் விலையில் ஒரு பகுதியைப் பணமாகவும், மிகுதியை உறுதிமொழிச் சீட்டு களாகவும் கொடுத்தனர். உடனே, பணம் தேவைப்பட்டவர் அச் சீட்டுகளை மற்றவருக்குக் கொடுத்துவிட்டுச் சிறிது குறை வான தொகையைப் பெற்றுக்கொண்டனர். இப்படி உறுதி மொழிச் சீட்டுகளை ஒருவர் மற்றவருக்குக் கொடுத்துப் பணம் பெறும் பழக்கம், குறைந்தது ஐந்து நூற்றாண்டுக் காலமாக இருந்து வந்தது. (லிப்சன் எழுதிய நூலில் முதல் பாகம். பக்கம், 549; 1937ஆம் ஆண்டு வெளியீடு; Lipson I, p. 549, ed, 1937).

கலே அங்காடி மூலம் ஏற்றுமதி செய்யப்பட்ட பொருள்களில் மிகுதியானது கச்சாக் கம்பளியாகும். ஆனால், கம்பளி ஆடைகள் ஏற்றுமதி செய்வதும் தொடர்ந்து பெருகிக்கொண்டே வந்தது. டியூடர் வம்சத்தினரின் காலத்தில் கம்பளி ஆடை ஏற்றுமதி கச்சாக் கம்பளி ஏற்றுமதியை முற்றிலும் அழித்தது. ஆனால் சாசரின் காலத்திலும் அதற்குப் பிறகு நெடுநாள்வரையும் பெரும்பாலும் அரசனுக்குக் கடன் கொடுத்தவர் ஸ்டேபில் அங்காடி வணிகர் சங்கத்தினராவர். இவர்கள் அயல்நாட்டுத் தறிகளுக்குத் தேவைப் பட்ட கம்பளியை ஏற்றுமதி செய்தனர். இந்த அங்காடியில்

ஏற்றுமதி செய்யப்படும் கம்பளியின்மேல் விதிக்கப்பட்ட வரி அரசரின் வருமானத்தில் பெரும்பகுதியாயிருந்தது.[1]

இந்த லண்டன் கலே வியாபாரிகள், கம்பளி தயாரிக்கப்படும் காட்ஸ்ஒல்ட் போன்ற மாவட்டங்களுடன் பரந்த வியாபாரத் தொடர்பு கொண்டிருந்தனர். அரசர் அவர்களிடமிருந்து கடன் பெறுவதற்கும் நிதி திரட்டுவதற்கும் அவர்களது கோரிக்கை சில வற்றிற்கு இணங்கவேண்டியிருந்தது. இந்த வியாபாரிகள் பார்லி மெண்டில் இருந்த மூன்று பிரிவினர் அல்லது நான்காவது பிரிவினர்போல இருந்தனர். காட்ஸ்ஒல்ட் போன்ற கம்பளி தயாரிக்கப்படும் மாவட்டங்களில் இக் கம்பளி வியாபாரிகளும், அவருடன் போட்டியிட்ட ஆடை வியாபாரிகளும் திரண்ட சொத்து களை உடையவராயிருந்தனர். இவர்களே மேற்கு இங்கிலாந்தின் கௌன்டி என்ற பிரிவில் வாழ்ந்த பெரிய குடும்பங்களின் தோற்றத்திற்குக் காரணமாயினர். கி.பி. 1401-ல் சிப்பிங் ஹாம்ப்டன் என்ற இடத்தில் லண்டனில் வாழ்ந்துவந்த சிறந்த கம்பளி வியாபாரியான வில்லியம் கிரெவெல் என்பவரின் சடலம் புதைக்கப்பட்டது. அவரது கல்லறையானது இங்கிலாந்தில் இன்றும் நிலைத்து நிற்கும் கிராமம் ஒன்றின் மிக அழகிய சாலையை அலங்கரித்துக்கொண்டுள்ளது. சிப்பிங் ஹாம்ப்டன், கிளஸ்டர் ஷீரில் இருந்த சாதாரண கிராமமாக இருக்கவில்லை. அதற்கு மாருகக் கம்பளி வியாபாரத்திற்காகக் கம்பளி சேர்க்கப்படும் இடமாக அக் காலத்தில் திகழ்ந்தது.

பேராசிரியர் போஸ்டன், சாசரின் காலத்தில்தான் ஆங்கிலேய முதலாளித்துவம் உண்டாயிற்று என்று குறிப்பிடுகிருர். நூற்ருண் டுப் போரின் ஆரம்ப காலங்களில் அரசரின் பணத்தேவை, வரி விதிப்பதில் புதிய முயற்சிகள், கம்பளி வியாபாரத்தில் கொள்ளை ஆதாயத்தைக் கருதிக் கம்பளியை வாங்கிச் சேர்த்தமை, இத்தாலி யில் இருந்து கிடைத்த பண உதவி நின்றமை, புதிதாகத்

[1] ஸ்டேபில் அங்காடியில் கம்பளியும் ஆடைகளும் கொண்டுவரப்பட்டு, வரி தண்டல் செய்யப்பட்டபின் விற்கப்பட்டன. ஆனல், இந்த வணிகர் சங்கம் ஆடைகளை விற்காமல், கம்பளி விற்பதையே மேற்கொண்டிருந்தது. இச் சங்கம் சீர்குலைந்ததற்குக் காரணம் மற்றத் துணிகரமான வியாபாரிகள், ஆடைகள் விற்பதை அதிகரித்துக்கொண்டே போனதுதான். பதினன்காம் நூற்ருண்டின் முற்பகுதியில் ஒரு வருடத்திற்கு 30,000 கம்பளி மூட்டைகளும், 5,000 ஆடை களுமே ஏற்றுமதி செய்யப்பட்டன. ஆனல், பதினரும் நூற்ருண்டின் இடைப் பகுதியில் ஒரு வருடத்திற்கு 4,000 கம்பளி மூட்டைகளும், 10,000 ஆடைகளும் ஏற்றுமதி செய்யப்பட்டன.

இ. இ. ரிச் எழுதியுள்ள, தி ஆர்டினஸ் புக் ஆஃப் தி மர்சென்ட்ஸ் ஆஃப் தி ஸ்டேபில், (E.E. Rich, The ordinance Book of the Merchants of the staple, 1937.) என்ற நூலில் பார்க்க ஸ்டேபில் அங்காடியின் ஆரம்பகால வரலாற்றை ஐலீன் பவர் எழுதியுள்ள மெடீவல் இங்கிலிஷ் உல் டிரேட், (Eileen Power, Mediaeval English Wool Trade, 1941) என்ற நூலில் காண்க.

தோன்றிய ஆடை நெய்யும் தொழிலின் வளர்ச்சி இவை அனைத்தும் சேர்ந்து கீழ்க் கண்டோர்களை உருவாக்கின. போருக்காகக் கடன் கொடுத்தவர், மிகுந்த ஆதாயத்தை எதிர்பார்த்துப் பொருளை வாங்கிக் குவித்த வியாபாரிகள், படைகளுக்கு ஆயுதம், உணவு முதலியன சேகரித்தளிப்பவர், கம்பளி வியாபாரத்தில் தனி உரிமை கொண்டவர் முதலியோரே இவ்வாறு தோன்றியவர்கள் ஆவர். (இகெனுமிக் ஹிஸ்டரி ரிவ்யூ, மே, 1939, பக்கம் 165 : Economic History Review, May, 1939).

முதல் வைத்திருந்தோர் முக்கியமாகக் கம்பளி வியாபாரத்தில் ஈடுபட்டோ அல்லது கம்பளி வியாபாரிகளுக்குக் கடன் உதவியோ வந்தனர். இதே நேரத்தில் முதல் வைத்திருந்தோர் தங்கள் முதலைக் கைத்தொழில் வளர்ச்சிக்குப் பயன்படுத்தத் தொடங்கினர். குறிப்பாக ஆடை நெசவுத் தொழிலில் தங்கள் முதலை உபயோகித்தனர்.

கச்சாக் கம்பளி ஏற்றுமதி செய்யப்பட்ட பொருள்களில் முக்கியமானதாக இருந்தது. இங்கிலாந்திலேயே செய்யப்பட்ட ஆடைகள் மக்களின் தேவையைப் பூர்த்திசெய்தன. பழங்கால பிரிட்டன்கள், ரோமானியர்கள், சாக்ஸன்கள் முதலியவர் காலம்தொட்டு, வீட்டின் தலைவி, புதல்விகள், பணிப் பெண்கள் முதலானோர், ஓய்வு நேரங்களில் நூல் நூற்பதில் ஈடுபட்டிருந்தனர். இதைப் போலவே ஆரம்பக் காலம்தொட்டு, நூற்பதைவிடக் கடினமான நெய்தல் தொழிலில், இதற்கென்றே பயின்ற ஆடவர் தங்கள் குடிசையில் நாள்முழுவதும் ஈடுபட்டிருந்தனர். வட்டாரங்களில் வாழ்ந்த குடியானவர்களுக்கு வேண்டிய கெட்டியான ஆடைகளை இவர்கள் நெய்தனர். லண்டன், லின்கன், ஆக்ஸ்ஃபோர்டு, நாட்டிங்ஹாம் முதலிய நகரங்களில், பன்னிரண்டு, பதின்மூன்ரும் நூற்ருண்டுகளில் ஆடை நெய்வோரின் சங்கங்கள் குடிசைகளில் நெய்யப்பட்ட ஆடைகளைவிட, உயர்ந்த ஆடைகளைத் தயாரித்தன. மூன்ரும் ஹென்றியின் காலத்தில் ஸ்டாம்போர்டில் தயாரிக்கப்பட்ட ஆடைகள் இத்தாலியில் இருந்த வெனிஸ் நகரத்தில் வாழ்ந்தோருக்கு நன்கு தெரிந்திருந்தது. கிழக்கு, மேற்கு யார்க் ஷீர்கள் கம்பளி ஆடை நெய்வதில் பிரசித்தி பெற்றிருந்தன.

பதின்மூன்ரும் நூற்ருண்டிலும் பதினுன்காம் நூற்ருண்டின் ஆரம்ப காலத்திலும், வியாபாரத்திற்கென்றே தரமான ஆடை நெய்யும் தொழில் இங்கிலாந்தின் நகரங்களில் சீர்குலையத் தொடங்கியது. இதற்குக் காரணம் நகரங்களில் நெசவுத் தொழிலாளரின் எண்ணிக்கை அதிகமாகக் குறைந்ததுதான். உண்மையைக் கூறப்போனல், ஆடை நெய்தல் நகரங்களிலிருந்து நாட்டுப்புறங்

களுக்கு மாறிக்கொண்டுவந்தது. ஆடைகளைச் சுத்தம்செய்யும் ஆலைகளை ஓட்டுவதற்கு நீர் ஓடைகள் உள்ள இடம் தேவைப் பட்டது. இதனால் ஆடை நெய்தல் மேற்கே இருந்த நாட்டுப் புறங்களில் முக்கியமாக இயங்கத் தொடங்கியது. இதற்குமுன் ஆடைகளைக் கையாலோ, காலாலோ அல்லது தடியைக்கொண்டு அடித்தோ சுத்தம் செய்துவந்தனர். ஆனால், ஆடைகளைச் சுத்தம்செய்யும் ஆலைகள் ஓடும் நீரைக்கொண்டு இயக்கப் பட்டன. ஆடை நெய்தலில் பதினான்காம் நூற்றாண்டின் ஆரம் பத்தில், காட்ஸ்ஒல்டு, பின்னன் பள்ளத்தாக்கு, லேக் வட்டாரம் முதலியன இங்கிலாந்தின் கிழக்குப் பகுதியோடு கடும் போட்டி யிட்டன. கைத்தொழிலில் நாட்டுப்புறங்கள் நகரங்களுடன் போட்டியிடத் தொடங்கிவிட்டன. சுத்தம்செய்யும் ஆலைகள் ஓடும் நீரைக்கொண்டு இயக்கத் தலைப்பட்டது, ஆடை நெய்யும் தொழிலில் முதலில் ஏற்பட்ட கண்டுபிடிப்பாகும். இக் கண்டு பிடிப்பால் சமுதாயத்தில் முக்கியமான விளைவுகள் ஏற்பட்டன. (இகெனமிக் ஹிஸ்டரி ரிவ்யூ, 1941: அதில் மிஸ் காரஸ் வில்சனுடைய 'பதின்மூன்றும் நூற்றாண்டின் தொழிற் புரட்சி' என்ற கட்டுரை: Ec. Hist. Rev., 1941, Miss Carus Wilson's Article, 'An Industrial Revolution of the 13th Century)'.

இரண்டாம் எட்வர்ட், மூன்றும் எட்வர்ட் ஆகியோரின் அரசாட்சியில் இங்கிலாந்தின் சிறந்த கைத்தொழிலான ஆடை நெய்யும் தொழில் அரசாங்கத்தினல் மேலும் ஊக்குவிக்கப்பட்டது. ஆடைகளை வெளிநாட்டிலிருந்து இறக்குமதி செய்வதை அரசாங் கம் தடைசெய்தது. திறமைவாய்ந்த கைத்தொழிலாளர்கள் அன்னிய நாட்டிலிருந்து வரவழைக்கப்பட்டனர். உள்நாட் டவரின் பொறுமையால் விளையும் தீமைகளில் இருந்து அரசாங்கம் அவர்களைக் காப்பாற்றியது. லண்டனிலும் கிழக்கு ஆங்கிலியா விலும் அவர்கள் வந்து சேர்ந்தனர். இதே நேரத்தில் அரசாங்கம் ஆடை நெய்பவர்களுக்குப் பிரத்யேக உரிமைகளை அளித்தது. சாசரின் காலத்தில் சுத்தமான மெல்லிய ஆடைகளின் உற்பத்தி மூன்று மடங்காக்கப்பட்டது. மெல்லிய ஆடைகள் ஏற்றுமதி ஒன்பது மடங்கு அதிகரிக்கப்பட்டது. ஆடுகள் வளர்ப்பதற்கும், உயர்ந்த கம்பளியைத் தயாரிப்பதற்கும் இங்கிலாந்து மிகவும் ஏற்ற நிலையில் இருந்தது. இந் நிலை இங்கிலாந்து நெடுநாளாக ஐரோப் பாவின் கச்சாக் கம்பளி வியாபாரத்தில் ஆதிக்கம் செலுத்திவந்தது போல், உலகம் முழுவதிலும் ஆடை வியாபாரத்திலும் ஆதிக்கம் செலுத்த ஒரு வாய்ப்பளித்தது.

ஆடை வியாபாரம், தொடர்ந்து பல தலைமுறைக் காலங்களுக்கு நடந்தது. ஆடை வியாபாரம் பலவித விளைவுகளை ஏற்படுத்தியது.

நாட்டுப்புறத்திலும், நகரங்களிலும் புதிய வகுப்பினரைத் தோற்று வித்தது; பண்ணை வீடுகளில் இன்ப வாழ்க்கைக்கு வழி செய்தது; குடிசையில் வாழ்ந்தோரின் வறுமையைக் குறைத்தது; விவசாயத்தில் புதிய முறையையும், நல்ல பலனையும் அளித்தது; வியாபாரக் கப்பல்களுக்கு வேண்டிய பொருள்களை அளித்தது; இங்கிலாந்தின் கடல் வாணிபத்தை முதலில் ஐரோப்பா முழுவதிலும் பிறகு உலகம் முழுவதிலும் பரப்பியது; அரசியல் மேதைகளின் நோக்கை உருவாக்கியது; அரசியல் கட்சிகளுக்குச் செயல் திட்டங்களை அளித்தது. மற்றும் இதர நாடுகளுடன் கூட்டுறவையும் ஒப்பந்தங்களையும் போர்களையும் உண்டுபண்ணிற்று. ஆடை நெய்யும் தொழில் நெடுநாள்வரை இங்கிலாந்தின் முக்கியமான தொழிலாக விளங்கியது. நிலக்கரியும் இரும்பும் சேர்ந்து ஏற்படுத்திய தொழிற் புரட்சிக் காலம்வரை இந் நிலை நீடித்தது. பல நூற்றுண்டுக் காலம், விவசாயத்திற்கு அடுத்தபடியாக, நகரத்திலும் கிராமத்திலும் மக்களின் கவனத்தைக் கவர்ந்தது, ஆடை நெய்யும் தொழிலே யாகும். ஆடை நெய்யும் தொழிலைப்பற்றிய சொற்றொடர்களும், உருவகங்களும், இலக்கியத்திலும், பேசும் மொழியிலும் புழக்கத்திற்கு வந்தன. உதாரணமாகப் பேச்சில் தொடர்ந்துவரும் ஒரு பொருளைக் குறிப்பதற்கும் (thread of discourse), கதை ஒன்றைத் திரித்துக் கூறுவதற்கும் (to spin a yarn), புதிரின் முடிச்சை அவிழ்ப்பதற்கும் (unravel a mystery), வாழ்க்கைச் சட்டம் என்று குறிப்பிடுவதற்கும் (web of life), கிழிசல் தெரியாமல் தைப்பதற்கும் (fine drawn), தன் வீட்டிலேயே செய்யப்படுவனவற்றைக் குறிப்பதற்கும் (home spun), ஒருவரை நையாண்டி செய்வதற்கும் (tease) வேண்டிய சொற்றொடர்கள் நெய்தல் தொழிலைப்பற்றிய சொற்களில் இருந்து எடுத்துக்கொள்ளப்பட்டன. மணமாகாத பெண்டிரைக் குறிக்கும் சொல் (spinsters) பெண்டிர் நூல்நூற்கும் பழக்கத்திலிருந்தே வந்தது.

பதினைன்காம் நூற்றுண்டிலே ஆடை வியாபாரத்தின் துரிதமான பெருக்கம் புதிய பொருளாதார அமைப்பின் தேவையை உண்டாக்கியது. கச்சாக் கம்பளியைச் சிக்கெடுப்பவர், நூல் நூற்பவர், நெய்பவர், நெய்த ஆடையைச் சுத்தம் செய்பவர், சாயம் தோய்ப்பவர், மற்றும் ஆடையைக் கடையில் விற்பதற்குத் தக்கமுறையில் செய்பவர் ஆகியோர் தேவைப்பட்டனர். பல நூற்றுண்டுகளாக நெசவுத் தொழிலை மேம்பாட்டடையச் செய்து வந்த தொழிற்சங்கங்கள் உள்நாட்டு வியாபாரத்திற்கும், வெளி நாட்டு வியாபாரத்திற்கும் ஆடைத் தொழிலை அதிகமாக அபிவிருத்தி செய்வதற்கும் ஏற்றனவாக இருக்கவில்லை. இதற்குத் தொழிற்றுறை உரிமையாளர் தேவைப்பட்டனர். அவர்கள் வட்டாரத் தேவைக்குமட்டுமல்லாமல் பொதுவாக எல்லா இடத்

தீர்க்கும் தேவைப்படக்கூடியனவற்றை எண்ணிச் செய்யும் ஆற்றல் உடையவராய் இருக்கவேண்டும்; அத்துடன் அவர்கள் தங்கள் முதலைக்கொண்டு கச்சாப் பொருள்கள், முற்றிலும் தயாரிக்கப்படாத பொருள்கள், மக்களின் உபயோகத்திற்குத் தயாராக உள்ள பொருள்கள் அனைத்தையும் வாங்கவேண்டி இருந்தது. இன்னும் தயாரிக்கப்படவேண்டிய பொருள்களை ஒரு கைத்தொழிலாளியிடமிருந்து மற்றொரு தொழிலாளிக்கும் ஓர் ஊரில் இருந்து மற்றோர் ஊருக்கும் அனுப்பும் வேலையும், தரமான பொருள்களைத் துறைமுகத்திற்கும் சிறந்த வியாபாரஸ்தலங்களுக்கும் அனுப்பும் வேலையும் அவர்களைச் சார்ந்ததேயாகும். இவை அனைத்திற்கும் முதல் தேவைப்பட்டது.

ஒரு கைத்தொழிலை நடத்துவதற்கு முதல் அவசியம் என்பது நெசவுத்தொழிலில் நன்ருக விளங்கியது. சாசரின் காலத்திலேயே பலதரப்பட்ட கைத்தொழிலாளிகளைப் பல இடங்களில் வைத்துக்கொண்டு, நெசவுத் தொழிலில் ஈடுபட்டிருந்த முதலாளிகளைக் காணலாம். இந்த முதலாளிகள் இடைக்காலத்திலிருந்தவர்களைப் போல் அல்லாமல், சமுதாயத்துடன் ஒட்டிவாழும் குணமுடையவராக இருந்தனர். அத்துடன், தம்மிடம் கலையைக் கற்றுக்கொள்வோரையும், ஊதியத்திற்கு வேலை செய்த கலைஞர்களையும் வைத்துக்கொண்டு அவர்களோடு உழைத்த தலைமைக் கைத்தொழிலாளரினின்றும் இவர்கள் மாறுபட்டனர்.[1] தொழிலாளரைத் தம்மிடம் வேலைக்கு வைத்துக்கொண்டு கைத்தொழிலில் ஈடுபட்டிருந்த முதலாளிகளுக்கு, நீண்டநாள் கழித்து ஏற்பட்ட தொழிற்புரட்சியின்போது நல்ல வாய்ப்பு இருந்தது. நானூறு ஆண்டுகளுக்குப் பிறகு, தொழில் அனைத்தையும் தங்களின் வசம் கொண்டு வந்த முதலாளிகளை ஆடைசெய்யும் தொழில் தோற்றுவித்தது. கடல் வாணிபம், நிலக்கரி வியாபாரம், கட்டட வேலை முதலியனவும் ஓரளவுக்கு இந்தக் காலத்திலேயே முதலாளித்துவ முறையில் செய்யப்பட்டுவந்தன.

இருப்பினும், இன்னும் பல நூற்ருண்டுக் காலத்திற்கு அனேக தொழில்கள், தலைமைத் தொழிலாளியால் கலையைக் கற்க வந்தவரையும், ஊதியத்திற்கு வேலை செய்தவரையும் வைத்துக்கொண்டு வீட்டிலேயே நடத்தப்பட்டுவந்தன. தொழிற்சங்கங்கள் இத்தொழில்களில் ஈடுபட்டோரைக் கண்காணித்துவந்தன. கைத்

[1] பதினெட்டாம் நூற்ருண்டில் பெரிய இயந்திரங்கள் உபயோகத்திற்கு வருமளவும், தொழிற்சாலைகள் ஏற்படவில்லை. ஒரு முதலாளி பலரகப்பட்ட தொழிலில் ஈடுபட்டிருந்தவரை அவரவர் வீட்டிலேயே தன்னுடைய கருவிகளைக் கொண்டு, தனக்காகப் பொருள்களைத் தயாரிக்கச் செய்தார். இதைத்தான் குடும்பக் கைத்தொழில்முறை என்கிருேம். முதலாளிகள் பொருள்களைச் சேகரித்து வைப்பதற்குப் பண்டகசாலைகளைக் கட்டவேண்டியிருந்தது.

தொழிலில் ஈடுபட்டிருந்தோரிடையேயும் சச்சரவுகள் இருந்தன. குடியானவருக்கும் அவரிடம் வேலைசெய்துவந்த தொழிலாளருக்கும் இடையே இருந்துவந்த சச்சரவுகளைப்போல், தலைமைத் தொழிலாளிக்கும் அவரிடம் ஊதியத்திற்கு வேலை செய்தோருக்கும் இடையேயும் சச்சரவுகள் இருந்தன. வயலில் வேலைசெய்த தொழிலாளரைப்போல், கைத்தொழிலில் ஈடுபட்டிருந்த தொழிலாளரும் தங்கள் வாழ்க்கைத் தரத்தை உயர்த்திக்கொள்ளக் கிளர்ச்சிசெய்யும் மனப்பான்மையினராக இருந்தனர். கொள்ளை நோய் ஏற்பட்டபோது தொழிலாளர் கிடைப்பது அரிதாயிற்று. இந் நிலையைப் பயன்படுத்திக்கொண்டு தொழிலாளர் அதிக ஊதியத்தைக் கேட்டனர். தொழிலாளரின் சட்டம் இதைத் தடுப்பதற்காக இயற்றப்பட்டது.

தலைமைத் தொழிலாளிக்கும், அவனிடம் வேலைசெய்த தொழிலாளருக்கும் இடையே நடந்த போராட்டம் அதிக ஊதியத்திற்காக மட்டும் அல்ல, நகரங்களில் அமைதியற்ற நிலை இருந்துவந்ததற்குப் பல காரணங்கள் இருந்தன. வாணிபம் பெருகவே இலாபம் அதிகரித்தது. இதன் காரணமாகத் தலைமைத் தொழிலாளிக்கும் அவனிடம் ஊதியத்திற்கு வேலைசெய்த தொழிலாளருக்கும் இடையே பொருளாதார நிலையில் அதிக வித்தியாசம் ஏற்பட்டது. வியாபாரம் சிறிய அளவில் நடந்துவந்தபோது இத்தகையநிலை இல்லாதிருந்தது. இருதரப்பாரிடையே வித்தியாசம் அதிகரிக்கவே தொழிற்சங்கத்தின் அங்கத்தினரிடையே இருந்துவந்த பிணிப்பு தளர்ந்தது.

தொழிற்சங்கங்கள் தோன்றிய காலத்தில் தலைமைத் தொழிலாளி, அவனிடம் வேலைசெய்துவந்த தொழிலாளிகள், தொழில் கற்றுக்கொண்டோர் ஆகிய அனைவரும் ஒரே வகுப்பினராய் இருந்தனர். அனைவரும் ஒன்றாக வாழ்ந்த சிறு குடிமக்களாக இருந்துவந்தனர். சகோதரர்களைப்போல் ஒன்று சேர்ந்து உணவைப் பகிர்ந்து உண்டுவந்தனர். தற்கால நிலையைக் கொண்டு நோக்குங்கால் இவ் வகுப்பினர் ஏழைகளாக இருந்தனர் என்று கூறலாம். ஏழைகளாக இருப்பினும் தங்கள் தொழிலில் தேர்ந்தவராய் ஒருவித பெருமிதத்துடன் வாழ்ந்துவந்தனர். தொழிற்சங்கம் அவரது நலனைக் காத்துவந்தது. நகரசபையின் கட்டுப்பாட்டிற்கு உட்பட்டுத் தொழிற்சங்கங்கள் தத்தம் தொழிலைச்சார்ந்த அலுவல்களைக் கவனித்துவந்தன. செய்யப்படும் பொருள்களின் விலையை நிர்ணயித்தன; தலைமைத் தொழிலாளி அவரிடம் வேலைசெய்துவந்த தொழிலாளருக்குக் கொடுக்கவேண்டிய ஊதியத்தையும் நிர்ணயித்தன. வேலை நேரம், ஓய்வு முதலியவற்றைப்பற்றித் தலைமைத் தொழிலாளருக்கும்

அவரிடம் வேலைசெய்துவந்த தொழிலாளருக்கும் திருப்தி அளிக்கும் முறையில் தீர்த்துவைத்தன. தொழிலைக் கற்றுக்கொண்டோர் குறிப்பிட்ட காலம் முடிந்தவுடன், தாமே தலைமைத் தொழிலாளராகவோ அல்லது ஊதியத்திற்கு மற்றவரிடம் வேலைசெய்யும் தொழிலாளராகவோ மாறினர். ஊதியத்திற்கு வேலைசெய்து வந்தவர் கொஞ்சகாலத்திற்குப் பிறகோ அல்லது நெடுநாள் பொறுத்தோ தலைமைத் தொழிலாளியாயினர். தலைமைத் தொழிலாளி தன்னிடம் வேலைசெய்துவந்த தொழிலாளருடன் சேர்ந்தே வேலைசெய்துவந்தார். சில சமயம் வேலை பயின்று வந்தவரையும், ஊதியத்திற்கு வேலை செய்துவந்தவரையும் அடித்துவிடுவதும் உண்டு. ஆனால், அனைவரும் ஒரே பொருளாதார நிலையில் இருந்ததோடு அல்லாமல் ஒரேவித வாழ்க்கையையும் நடத்திவந்தனர். நகரங்களில் தொழிற்சங்கங்களில் அங்கத்தினர்களாய் இராதவரும், தொழிலை முறையாகப் பயிலாதவரும் ஆகிய தொழிலாளர்கள் அனேகர் இருந்தனர். அவர்கள் நலனைக் கவனிக்க எவ்வித நிறுவனமும் இல்லாததால் அவர்கள் குறைந்த ஊதியத்தைப் பெற்றுவந்தனர். தொழிற்சங்க உறுப்பினரிடையே ஒற்றுமையும் நிம்மதியும் நிலவிவந்தது.

சாசரின் காலத்தில் இந்த நிலை மாறிக்கொண்டுவந்தது. தொழிலும் வாணிபமும் பெருகவே தொழில்கள் பலதரப்பட்டவையாயின. அத்துடன் தொழிலாளர்கள் பெற்ற ஊதியத்திலும் வேற்றுமை அதிகரித்தது. தலைமைத் தொழிலாளி தன்னிடம் வேலைசெய்தவர்களுடன் சேர்ந்து உழைப்பது குறைந்துகொண்டே வந்தது. முதலாளிகளைப்போல் பொருள்கள் செய்வதை ஒழுங்கு செய்து, அப் பொருள்களை விற்பனை செய்வதில் கவனம் செலுத்தினர் தலைமைத் தொழிலாளியின் மகளை மணந்து கொண்ட ஒரே காரணத்தால், தொழில் பயின்றுவந்த தொழிலாளி தாமே ஒரு தலைமைத் தொழிலாளியாக மாறினர். ஆனால், தொழிலைக்கற்றிருந்த தொழிலாளி, ஊதியத்திற்குப் பணிபுரியும் தொழிலாளியாகவே இருக்கநேர்ந்தது. ஊதியத்திற்கு வேலை செய்துவந்தோரில் சிலர் தலைமைத் தொழிலாளியாக மாறமுடிந்தது. ஒரு தொழிலில் ஈடுபட்டிருந்தோரின் எண்ணிக்கை அதிகரித்திருப்பினும், தலைமைத் தொழிலாளிகளின் எண்ணிக்கை முன்னிருந்ததைவிடக் குறைவாகவே இருந்துவந்தது. தொழிற் சங்கத்தின் உறுப்பினர்கள் ஒரே நோக்கமுடையவராய் இருந்து வந்தனர். அத்துடன் சமுதாயத்தில் ஒருவருக்கொருவர் சம நிலையில் இருந்துவந்தனர். ஆண்டுகள் செல்லச்செல்ல இந் நிலை மாறிக்கொண்டே வந்தது. வேலையில் அமர்த்திக்கொள்வோருக்கும் வேலை செய்வோருக்கும் இடையே பொருளாதார நிலையில் இருந்துவந்த வேற்றுமை குறிப்பிடத்தக்க வகையில் மாறிக்

கொண்டுவந்தது. இதைப்போலவே ஓர் ஏழைத் தலைமைத் தொழிலாளிக்கும், செல்வம்படைத்த வியாபாரிக்குமிடையே இருந்துவந்த வேற்றுமையும் அதிகரித்துக்கொண்டேவந்தது. ஏழைத் தலைமைத் தொழிலாளி, ஊதியத்திற்கு வேலை செய்தோரைக் கொண்டு செய்வித்த பொருள்களை, செல்வம் படைத்த வியாபாரி வாங்கிப் பின்னர் விற்றார்.

பதினான்காம் நூற்றாண்டிலே நகரங்களில் இருந்த தொழிற் சங்கங்களின் உறுப்பினர்கள் எப்போதாவது அதிக ஊதியத்திற்காக வேலைநிறுத்தம் செய்தனர். அத்துடன் இந் நூற்றாண்டிலே சிலவிடங்களில் ஊதியத்திற்குத் தொழில்செய்வோரின் சங்கங்கள் தோன்றலாயின. இச் சங்கங்கள், தற்காலத்தே இருந்துவரும் தொழிலாளர்கள் சங்கங்களைப்போல், தொழிலாளரின் நலனைக் காக்கவும், அவரது நலனுக்காகப் போராடவும் தலைப்பட்டன. சில நகரங்களில், சில தொழில்களைச் சார்ந்த தொழிலாளர் சங்கங்களில் சிறிய அளவில் பொருள்களைச் செய்து விற்ற தலைமைத் தொழிலாளிகளும் காணப்பட்டனர். அவர்களும் தொழிலாளருடன் சேர்ந்து செல்வம் படைத்த தலைமைத் தொழிலாளிகளை எதிர்த்தனர். ஏனென்றால் செல்வம் படைத்த தலைமைத் தொழிலாளிகள் முன்போல் தொழிலாளருடன் சேர்ந்து தொழில்புரிவதை விடுத்து, பொருள்களை விற்பனை செய்வதிலேயே தங்கள் கவனத்தைச் செலுத்தினர். சில தொழிலைச் சார்ந்த வியாபாரிகளுக்கும், கடின வேலை செய்த தொழிலாளர்களுக்கும் இடையே ஒருவித தொடர்பும் இருக்கவில்லை. வியாபாரிகள் தொழிற்சங்கங்களையும் லண்டனில் இருந்த 'லிவரி' வணிகர் சங்கத்தையும் தங்களுக்குக் கட்டுப்பட்டு நடக்கச் செய்வதன்மூலம் தொழில்களைக் கட்டுப்படுத்த முயன்றனர். ஊதியத்திற்குத் தொழில் புரிந்துவந்த தொழிலாளர்களும், சிறிய அளவில் பொருள்களைச் செய்வித்த தலைமைத் தொழிலாளரும் தங்களுக்குப் பொருளாதார நிலையில் இருந்த சுதந்திரத்தைச் சிறிது சிறிதாக இழந்து, அதன் விளைவாகத் தங்கள் வாழ்க்கைத் தரத்தில் தாழ்ந்துகொண்டிருந்தனர். நகராட்சி, பெரிய வியாபாரிகளின் கையில் இருந்தது. தற்காலத்தில் தொழிலாளர்கள் ஒன்றுசேர்ந்து தங்கள் வாழ்க்கைத் தரத்தை உயர்த்திக்கொள்ள முயல்வது புதியதன்று. அக் காலத்திலேயே தொழிலாளர்கள் இப்படிச் செய்யத் தலைப்பட்டனர்.[1]

[1] இடைக்காலத்தின் பிற்பகுதியில் சிறப்புமிக்க கிருத்தவ ஆலயங்களையும் பண்ணை வீடுகளையும், கட்டிய தொழிலாளர்களின் குழுக்கள் தொழிற்சங்கங்களைப் போன்றவை அல்ல. தொழிலாளரை ஊதியம் கொடுத்துத் தங்களிடம் வேலைக் கமர்த்திக்கொண்டனர். தலைமைத் தொழிலாளிகள். இத் தொழிலாளரைக் கொண்டு தாங்கள் ஏற்கும் வேலைகளை முடித்துக்கொண்டனர். தொழிற்சங்கத்தைப்போல் கற்கட்டடங்கள் கட்டிவந்த கொல்லர்கள் ஒன்று சேர்ந்து தங்கள் நலனைக் காத்துக் கொண்டனர். இவர்கள் 'ஃப்ரீ மேசன்ஸ்' (Free Masons)

பதினுன்காம் நூற்ருண்டில் பொருளாதார நிலையிலும் சமுதாயத்திலும் மாற்றங்கள் தொடங்கி அந் நூற்ருண்டிற்குப் பிறகும் நீடித்தன. இம் மாற்றங்கள் அனைத்தும் ஒன்றில் இருந்து மற்ருென்று வேறுபட்டன. அதனுல் ஓர் உதாரணத்தைச் சொல்லி யாவற்றிலும் அத்தகைய மாற்றங்கள் ஏற்பட்டன என்று கூற இயலாது. ஒவ்வொரு தொழிற்சங்கத்தின் வரலாறும், நகரத்தின் வரலாறும் ஏனைய தொழிற் சங்கங்கள், நகரங்கள் ஆகியவற்றின் வரலாற்றில் இருந்து மாறுபட்டன. எனினும், நூற்ருண்டுப் போர் (Hundred years war), ரோஜாப்பூ அடையாளப் போர் (Wars of the Roses) ஆகிய போர்கள் நடைபெற்ற காலங்களில், கைத்தொழி லிலும் வாணிபத்திலும் பொதுவான வளர்ச்சி காணப்பட்டது என்று கூறலாம்.

இவ்வாருகச் சாசரின் காலத்தில், சமுதாயத்தின் அமைப்பிலே பெரிய மாற்றங்கள் ஏற்பட்டுக்கொண்டிருந்தன. குடியானவர் களின் அடிமைநிலை மறைந்துகொண்டிருந்தது. சமுதாயத்தில் தோன்றிய ஒரு புதிய வகுப்பினர் பயிர்த் தொழிலிலும், வாணிபத் திலும் ஈடுபடலாயினர். கிராமங்களிலும் நகரங்களிலும் இடைக் காலத்தில் இருந்துவந்த நிறுவனங்கள் தற்காலத்திலே காணப் படும் நிறுவனங்களாக மாறிக்கொண்டு வந்தன. அக் காலத்தில் வாழ்க்கை, சமயத்துடனும் பாதிரியார்களுடனும் அதிகத் தொடர் புடையதாக இருந்தது. பாதிரியார்கள் எத்தகைய மாறுதல்களை யும் விரும்பவில்லை. இதன் காரணமாகச் சமயத்தில் எத்தகைய மாறுதலும் தோன்றவில்லை. ஆனுல், சமயத்தையும் திருத்தி அமைக்கவேண்டும் என்ற எண்ணம் வேகமாகப் பரவிவந்தது.

முன்னமேயே சமயத்தைத் திருத்தி அமைத்திருக்கவேண்டும். பாதிரியார்களிடையே இருந்த ஊழல் பலரது குற்றச்சாட்டிற்கு ஆளாகியது. சமயக் கோட்பாட்டிற்கு முரணுன கருத்துக் கொண்

---

தற்காலத்தில் அழைக்கப்படும் இரகசியமாகக் கூடும் சங்கத்தினரிடமிருந்து முற் றிலும் மாறுபட்டவராவர். இன்று தொழிலாளர் சங்கங்கள் செய்வதைப்போல், கற்கொல்லர்கள் ஒன்று சேர்ந்து செயல் புரிந்ததை விக்லிஃப் கீழ்வருமாறு விளக்குகின்ருர்:

நுட்பமான வேலைசெய்த கற்கொல்லர்களும் மற்றவரும் ஒன்றுகூடிப் பேசி நிச்சயித்துக்கொண்ட நாட்கூலிக்குக் குறைவாகத் தங்களில் ஒருவரும் வாங்குவ தில்லை என்று உறுதிபூண்டனர். தன் தொழிலில் ஈடுபட்டிருந்த மற்றவருக்கும் வேலை கிடைக்குமாறு செய்வதற்காக ஒருவரும் தொடர்ந்து உண்மையாக உழைப்பதில்லை என்றும் தங்களுக்குள் முடிவு செய்து கொண்டனர். தங்களை வருத்திக் கொள்ளாமலேயே ஒரு நாள் கட்டடவேலைசெய்து தம் எஜமானருக்கு 20 பவுன்கள் இலாபம் ஏற்படும்படி செய்யமுடியும் என்ருலும், நாள் முழுவதையும் கல்லுடைப்பதிலேயே கழிப்பது என்று தங்களுக்குள் முடிவு செய்துகொள்வர். விக்லிஃப் எழுதிய 'செலக்ட் இங்கிலீஷ் ஒர்க்ஸ் என்ற நூலிலும்', ஸ்டேச்யூட்ஸ் ஆஃப் ரெல்ம் என்ற சட்டத்திலும் இதைப்பற்றிக் காணலாம். Wycliffe, Select Eng. works, III, p. 333, and Stats of Realm, III, p. 227.)

டிருந்த லாலர்டுகளும் (Lollards), சமயத்தில் மிக்க பற்றுள்ளவர் களும், விக்லிஃப், லாங்லண்டு, கோவர், சாசர் முதலானவர்களும், பாதிரியார்களிடையே காணப்பட்ட ஊழல்களைக் கண்டித்தனர். பாதிரியார்களிடையே நெடுங்காலமாக ஊழல்கள் இருந்துவந்தன. எனினும், பல நூற்றுண்டுக் காலமாகப் பாதிரியார்கள் தங்களுக்கு எதிர்ப்பு இல்லாமலேயே இருந்துவிட்டனர். சாசரின் காலத்திலே அரசன் நீதி செலுத்துவதிலும், பிரபுக்கள், அவரது ஆயுதம் தாங்கிய வீரர்கள் ஆகியோரின் நடத்தையிலும் காணப்பட்ட ஊழல்களை விட, அதிகமாகப் பாதிரியார்களின் நடத்தையிலே ஊழல்கள் இருக்கவில்லை. தற்கால நிலையை மனத்தில்கொண்டு இடைக் காலத்தை நோக்கின், பலவற்றில் ஊழல்கள் இருந்தன என்று நினைக்கத் தோன்றும். பொதுமக்கள் காலத்திற்கேற்றவாறு மாறிக் கொண்டிருந்தபோது, பாதிரியார்கள் தாங்கள் இருந்த நிலையிலேயே இருந்துவந்தனர். பாதிரியார்கள் பழங்கால உரிமைகளை விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையற்றவராக இருந்ததுடன், மேலும் மேலும் பெருகிக்கொண்டே வந்த செல்வத்தையும் தங்களிடமே வைத்திருந்தனர். தங்கள் நடத்தை ஒழுக்கத்திற்கு முரணானது என்று கூச்சலிட்டோரையும், தங்கள் செல்வத்தைக் கண்டு பொறுமைப்பட்டோரையும் சட்டைசெய்யாமல் இருந்துவந்தனர். பொதுமக்கள் பாதிரியார்களின் நடத்தையில் குற்றங் காண்பதில் தேர்ச்சி பெற்றிருந்ததோடு, பாதிரியார்களைவிட அதிகம் கற்றவரா யிருந்தனர். பாதிரியார்களே அறிவிற் சிறந்தவர் என்ற எண்ணம் நிலவிவந்த, ஆன்ஸ்லெம், பெக்கெட் ஆகியோரின் காலத்தில், பொதுமக்கள் பாதிரியார்களிடை குற்றங் கண்டதைவிடப் பதினான் காம் நூற்றுண்டில் அதிகமாகக் குற்றங் கண்டனர். ஆனால், பாதிரி யார்கள் பொதுமக்களின் வெறுப்பைப்போக்க ஏதும் செய்யவில்லை. இருப்பினும், பதினைந்தாம் நூற்றுண்டில் பொதுமக்களும் குற்றங் காண்பதைக் குறைத்துக்கொண்டனர். ஆனால், இந் நிலை நீடிக்க வில்லை. பிளான்டாஜனெட் வம்சத்தினரின் காலத்தில் பாதிரியார் களிடையே காணப்பட்ட ஊழலைத் தவிர்க்க ஏதும் செய்யப்படாத தால், டியூடர் வம்சத்தினரின் காலத்தில் ஒரு புரட்சியே ஏற்பட்டது.

அனேக பாதிரியார்கள் தங்களிடையே காணப்பட்ட ஊழல் களைக் கண்டித்தனர். ஆக்ஸ்ஃபோர்டில் வாழ்ந்து வந்த அறிஞர் களும், வட்டாரங்களில் இருந்து வந்த பல பாதிரியார்களும் சீர் திருத்த வாதிகளாகவும் இருந்தனர். பாதிரியார்கள் ஒருவர் மற்ற வரை இழிவாகப் பேசினர். ஊர் ஊராகத் திரிந்துவந்த துறவிகள் பிஷப் பதவியில் இருந்த பாதிரியார்களையும், துறவியின் துறவு வாழ்க்கையை மேற்கொள்ளாத பாதிரியார்களையும் பழித்துக் கூறி னர். பாதிரியார்கள் துறவிகளைப் பழித்துக் கூறினர். சாசரின் கதை களில் ஒரு துறவியும், அவரைச் சமய நீதிமன்றத்திற்கு அழைத்துச்

செல்ல வந்த அதிகாரியும் ஒருவர் மற்றவரின் சூழ்ச்சியை வெளியிட்டு, அவ் விடத்தில் கூடியிருந்தவரை மகிழ்ச்சி ஆரவாரத் தில் திளைக்க வைத்ததைக் காணலாம். பொதுமக்களும் பல பாதிரி யார்களும், பாதிரியார்களிடையே பொதுவாகக் காணப்பட்ட ஊழல்களைக் கண்டித்தனர்.

இருப்பினும், சமயத்தைப்பொறுத்தவரையில் எவ்விதச் சீர் திருத்தமும் செய்யப்படவில்லை. பொருளாதார மாறுதலும், பொது மக்களின் கண்டனமும், பண்ணை வீட்டின் முறையையும், தொழிற் சங்கத்தையும் மாற்றி அமைப்பினும் சமயத்தைப் பொறுத்தவரை யில் அத்தகைய மாற்றத்தை ஏற்படுத்த முடியவில்லை. சட்டம் செய்தோ அல்லது கிருத்தவத் திருச்சபையின் அமைப்பை மாற்றி அமைத்தோ, சமயத்தில் சீர்திருத்தம் கொணரவேண்டியிருந் தது. இச் சீர்திருத்தத்தைச் செய்ய ஆற்றல் பெற்றவர், கிருத்தவ மதத்தின் தலைவரான போப்பும் (Pope), பிஷப் பதவியில் இருந்த பாதிரியார்களும் ஆவர். இதற்குமுன் சமயத்தில் பல சீர்திருத் தங்களைத் தோற்றுவித்த போப் பதவியில் இருந்தோர், இங்கிலாந் தின் பாதிரியார்களின் நிலையை உயர்த்த ஏதும் செய்ய முன்வர வில்லை. இதற்குப் பதிலாகத் தம் அவைக்கு வரும்படியை அதிகரிப் பதற்காகப் போப் பதவில் இருந்தோர் தகாத வழிகளைப் பயன்படுத் தினர். கிருத்தவச் சபையின் பதவிகளை விற்பது, பதவி ஏற்ற இடத்திலேயே இராதிருத்தல், ஒருவரே இரண்டு பதவிகளை வகித் தல், 'இன்டல்ஜன்ஸ்' (indulgence) என்ற மன்னிப்புப் பத்திரங் களை விற்றல் முதலியவைகளுக்குப் போப் பதவியில் இருந்தோர் இடமளித்தனர். குற்றங் காண்பதே இயற்கையாகிவிட்ட காலத் தில், மேற்கூறிய தகாத செயல்கள் பொதுமக்களை மேலும் ஆத்திரம் அடையச் செய்தன.

இவ் வாத்திரத்தை இங்கிலாந்தில் பிஷப் பதவியில் இருந்த பாதிரியார்கள், போப்பின் உதவியில்லாமலேயே எப்படியாவது தணித்திருக்கலாம். ஒரு சிலரைத் தவிர, சாசரின் காலத்திருந்த பிஷப்புகள், திறமையுள்ளவராகவும், உழைப்பாளிகளாகவும், கண்ணியமானவராகவும் இருந்தனர். அப்படி இருந்தும் பாதிரி யார்களிடையே காணப்பட்ட ஊழல்களைத் தவிர்க்க அவர்கள் முயற்சியேதும் செய்யாதது வியக்கத்தக்கதாய் இருக்கின்றது. அப்படி அவர்கள் முயற்சி செய்யாததற்கு முக்கிய காரணம் பாதிரி யார்கள் அரசியல் காரியங்களில் ஈடுபட்டிருந்ததாகும். பிஷப்புகள் தங்கள் ஊதியத்தைக் கிருத்தவ ஆலயங்களின் வரும்படியில் இருந்து பெற்றும் தங்கள் வாழ்வை அரசியல் சேவைக்குப் பயன் படுத்தினர். போப்புகளும், அரசர்களும் கிருத்தவ சபையின் உயர்ந்த பதவிகளைத் தங்களுக்குள் உடன்பாடு செய்துகொண்டு,

தங்களுக்கு வேண்டியவர்களைப் பதவியிலிருத்தினர். இங்கிலாந்தில் சொத்துகள் ஏராளமாக இருந்த கிருத்தவ ஆலயங்களில் பாதிரியார்களாகப் பணிபுரிய, போப் பதவியில் இருந்தோர் தங்களுக்குப் பிடித்த அன்னிய நாட்டுப் பாதிரியார்களை அனுப்பிவைத்தனர். இப்படிச் செய்வதற்கு அரசர்கள் உடன்படுவதற்காகப் போப் பதவியில் இருந்தோர், அரசர்களுக்குப் பிஷப்புகளை நியமிக்கும் அதிகாரத்தை விட்டுவிட்டனர். இதனால் அரசர்கள் தங்கள் மந்திரிகளுக்கும், அதிகாரிகளுக்கும், வரிகளை விதித்துத் திரட்டிய செல்வத்திலிருந்து அவரது ஊதியத்தைக் கொடுக்காமல் கிருத்தவ ஆலயங்களின் வரும்படியில் இருந்து கொடுக்க வழி பிறந்தது. கி.பி. 1376ஆம் ஆண்டிற்கும், கி.பி. 1386ஆம் ஆண்டிற்கும் இடையில் இங்கிலாந்திலும், வேல்சிலும் இருந்த 25 பிஷப்புகளில், 13 பேர் அரசியலில் உயர்ந்த பதவியிலிருந்தனர். மற்றும் பலர் அரசியலில் முக்கிய பாகம் ஏற்றிருந்தனர். சில சமயங்களில் அரசியலில் பங்குகொண்ட பிஷப்புகள் வெளிநாடுகளுக்குத் தூதுவராக அனுப்பப்பட்டனர். சிலர் இளவரசர்களுக்கு அரசியலில் சேவைசெய்து உயர்ந்த பதவியை அடைந்தனர். பாத், வெல்ஸ் என்ற இருவிடங்களின் பிஷப்பானவர் காஸ்கனியில் கருப்பு இளவரசருக்கு (Black Prince Edward) அமைச்சராக இருந்தார். சாலிஸ்பரி ஆலயத்தின் பிஷப் லங்காஸ்டரை நிர்வகித்துவந்த ஜானிடம் அமைச்சராக இருந்துவந்தார். நாட்டின் முக்கிய பிஷப்பாக இருந்த சட்பரி என்பார், வைகாம் என்ற ஊரைச் சார்ந்த வில்லியம் என்பார் ஆகியோரைப்போல், பொதுவாக நாட்டின் முதலமைச்சராக பிஷப் பதவியில் இருந்தோர் பணியாற்றினர்.

நார்மானிய அரசர்களின் காலத்தில் அரசரின் மந்திரி சபைக்கும், பிஷப்புகளுக்கும் இடையே நெருங்கிய தொடர்பு இருந்தது. இதன் காரணமாக முரட்டுத்தனம் வாய்ந்த மக்கள் வாழ்ந்த நாட்டில், அரசர்களுக்குத் திறமையும் அறிவும் வாய்ந்த அதிகாரிகள் கிடைத்தனர். பாதிரியார்கள் என்ற வகையில் தங்களுக்கு இருந்த கவுரவமும், அரசரின் அதிகாரிகள் என்ற முறையில் தங்களிடம் இருந்த அதிகாரமும், அறியாமையும் முரட்டுத்தனமும் நிறைந்த பிரபுக்களை அடக்க வழிசெய்தன. ஆனால், காலம் போகப்போகப் பாதிரியார்களை அரசியலில் பங்கு கொள்ளச் செய்யவேண்டிய அவசியம் குறைந்துகொண்டே வந்தது. சாசரைப்போன்றவர்கள் அரசரின் அதிகாரிகளாகச் சேவை புரிவதற்குத் தகுதியுடையவராய் இருந்தனர். அரசாங்கக் காரியங்களைப் பாதிரியார்களே கவனித்துவந்ததும், பிஷப்புகளே அரசாங்கத்தில் உயர்ந்த பதவிகள் வகித்துவந்ததும் பொது மக்களின் பொறுமையைத் தூண்டியது. நிவெட் (Knyvet) போன்ற வழக்கறிஞர்களும், ரிச்சர்ட் ஸ்கிராப் (Richard

Scrope) போன்ற பிரபுக்களும் அரசாங்கத்தில் உயர்ந்த பதவிகளை வகிக்க, அறிவு, ஆற்றல், பயிற்சி முதலியன உடையவராயிருந்தனர். இவர்களைப் போன்றவர், பாதிரியார்களுக்கும். பிரபுக்களுக்கும் பதிலாக டியூடர் வம்சத்தினரின் காலத்தில் அரசாங்கத்தில் அதிகாரிகளாகப் பணிபுரியலாயினர். பிளான்டாஜெனெட் வம்சத்தினரின் பிற்கால ஆட்சியில் இத்தகைய மாறுதல் ஏற்படுவதற்கான முதல் அறிகுறிகள் காணப்பட்டன. கி.பி. 1371-ல் காமன்ஸ் சபையினர், பாதிரியார்களை அதிகாரிகளாக நியமிக்கக் கூடாது என்று மனுச் செய்தனர். இதன் காரணமாகச் சில ஆண்டுக்காலம் பொதுமக்கள் முக்கிய அமைச்சராகவும், நிதிக் காப்பாளராகவும் செயலாற்றினர்.

பிஷப்புகள் அரசாங்க வேலையில் ஈடுபட்டிருந்ததால், தங்கள் கீழ் இருந்த பாதிரியார்கள் சரிவர வேலை செய்கின்றனரா என்று கவனிக்க முடியாதவராய் இருந்தனர். இதன் காரணமாக ரெக்டார் பதவி காலியாய் இருந்தால் அப் பதவிக்கு வேருெருவரை நியமிக்காமல் காலியாகவே விடப்பட்டது. இதேபோல் ஒழுக்க மற்றவர் அப் பதவியில் இருந்தால் அவர் பதவியில் இருந்து நீக்கப் படவில்லை. சில சமயங்களில் குறைந்த ஊதியத்திற்குத் தகுதியற்றவர் அப் பதவிக்கு நியமிக்கப்பட்டனர். இப்படித் திருச்சபையில் இழிந்த நிலை இருப்பினும் அதை பிஷப்புகள் கவனியாதிருந்தனர். போப் பதவியில் இருந்தோர் பிஷப்புகளை, இன்டல்ஜென்ஸ் (indulgence) என்ற மன்னிப்புப் பத்திரங்களையும் வலிந்து விற்பனை செய்யவேண்டும் என்று கட்டளையிட்டால், தாங்கள் செய்யவேண்டிய வேலைகளில் அவையும் உண்டு என்று கருதி பிஷப்புகள் செயலாற்றினர். பார்டனர் (Pardoner) என்று அழைக்கப்பட்டோரிடமிருந்து மன்னிப்புப் பத்திரங்களை விலைக்கு வாங்கிக் கொள்ளுமாறு, பொதுமக்களுக்கு அறிக்கைகள் பார்டனர்கள்மூலம், பிஷப்புகள் விடுத்தனர்.

பாதிரியார்கள் நடத்திவந்த நீதிமன்றங்கள் சரிவர நடக்கின்றனவா என்று கவனிப்பதை பிஷப்புகள் புறக்கணித்தனர். இதன் விளைவுகள் வருந்தத்தக்கனவாய் இருந்தன. மண வாழ்க்கை, உயில் சம்பந்தப்பட்ட வழக்குகளில் பாதிரியார்கள் நடத்திவந்த நீதிமன்றங்கள் தீர்ப்புக் கூறின. இந்த நீதிமன்றங்களில் நீதிபதியாகச் செயலாற்றிய பாதிரியார்கள், அரசரின் நீதிமன்றங்களில் செயலாற்றிய நீதிபதிகள், வழக்கறிஞர்கள் முதலானோரைப்போலவே திறமையற்றவராகவும் ஊழல் நிறைந்தவராகவும் இருந்தனர். அரசரின் நீதிமன்றங்கள் குற்றங்கள் என்று கருதாத குற்றங்களைச் செய்தவரை விசாரித்துத் தண்டிப்பது

பிஷப்பின் நீதிமன்றம் ஆற்றிவந்த சமயத் தொண்டாகும். பிஷப்பானவர் இப்படி விசாரித்துத் தண்டிக்கும் வேலையைத் தன்கீழ் இருந்த ஆர்ச்டீகனைக்கொண்டு செய்யவைத்தார். சாசரின் 'துறவியின் கதை' இச் செயல், பழிப்பிற்கு இடமான செயல்களுக்கு இடமளித்தது என்பதை எடுத்துக்காட்டுகின்றது. ஒழுக்கமற்ற சிற்றின்பத்தில் திளைத்தோரைத் தண்டித்தல் பிஷப்பின் நீதிமன்றத்தின் முக்கிய வேலையாகும். ஒருவன் தான் செய்த குற்றத்திற்காக மனம் வருந்தி, தன்னை வருத்திக்கொள்வதற்குப் பதில் ஒரு குறிப்பிட்ட தொகையைக் கிறித்தவ ஆலயத்திற்கோ, அல்லது மடத்திற்கோ செலுத்துவது பழக்கத்தில் வந்துவிட்டிருந்தது. இந்தப் பழக்கத்தையொட்டி பிஷப்பின் நீதிமன்ற அதிகாரிகள் இழிசெயல் புரிந்தோரை மிரட்டிப் பணம் வாங்கினர். இப்படிச் செய்தவரில் சம்மனர் என்ற பெயர் பெற்ற அதிகாரி தன்னுடைய தகாத செயல்களுக்குப் பெயரெடுத்திருந்தான். சாசரின் 'துறவியின் கதை' இதை வெளிப்படுத்துகின்றது :

'நீ பெய்லிப் என்றழைக்கப்பட்ட அதிகாரியா? என்று வினவினன். இந்த வினவிற்கு, தன்னைச் சம்மனர் என்று சொல்லிக்கொள்வதற்கு வெட்கி, 'ஆம்' என்று பதிலளித்தான். ஏனென்றால், சம்மனராக இருந்தோர் இழிவாகக் கருதப்பட்டனர்.

பிஷப்புகள் தங்கள் பணியைச் சரிவரச் செய்யவில்லையாயினும் பாதிரியார்களின் உரிமைகளைக் காப்பதிலும், கிருத்தவ ஆலயங்களின் மானிய உரிமைகளை விட்டுக் கொடுக்காமல் இருப்பதிலும் மிகுந்த அக்கறை காட்டினர். கி.பி. 1380-ல் விக்லிஃப் என்பார் பாதிரியாரால் கொடுக்கப்பட்ட திராக்ஷை ரசமும், ரொட்டித் துண்டும் கிருத்துவின் உடற்கூறாகவும் இரத்தமாகவும் மாறின என்ற சமயக் கோட்பாட்டை எதிர்த்தார். இப்படிச் சமயக் கோட்பாட்டை எதிர்த்தவரை ஒடுக்குவதிலும் பிஷப்புகள் மிகுந்த அக்கறை காட்டினர்.

பாரிஷ் என்று அழைக்கப்பட்ட பல வட்டாரங்களில் பார்சன் என்று அழைக்கப்பட்ட ஏழைப் பாதிரியார்கள் உண்மையாக உழைத்தனர். சாசர் தீட்டியுள்ள 'ஏழை பார்சன்' இதற்கு ஓர் எடுத்துக்காட்டாகும். பாதிரியாரிடம்தான் சாசருக்கு அன்பும் மரியாதையும் இருந்ததாகத் தெரிகிறது. பொதுமக்களால் கொடுக்கப்பட்ட நன்கொடைகள் தூய துறவியின் வாழ்க்கையை மேற்கொண்ட பாதிரியார்களுக்குக் கொடுக்கப்படாமல் சாதாரண பாதிரியார்களுக்கே கொடுக்கப்பட்டுவந்தன. அனேக கிருத்தவ ஆலயங்கள் மடங்களுக்குச் சொந்தமாய் இருந்தன. சில

ஆலயங்கள் இரு பதவியை வகித்திருந்த ஒருவரின் கீழ் இருந்தன. பல கிருத்தவ ஆலயங்களில் இதன் காரணமாகக் கற்றறியாத வரால் பிரார்த்தனைகள் நடத்தப்பட்டன. அத்தகைய பாதிரியார் களை, இரு பதவி வகித்துவந்தவர், தாமே பிரார்த்தனை நடத்த முடியாத ஆலயங்களில் குறைந்த ஊதியத்தைக் கொடுத்துப் பிற பாதிரியாரை வேலைக்கு அமர்த்தியிருந்தனர். இப்படி வேலைக்கு அமர்த்தப்பட்ட பாதிரியார்கள் தாங்கள் பிரார்த் தனைகளில் உபயோகித்த லத்தீன் வார்த்தைகளின் பொருளை அறியாதவராய் இருந்தனர். கற்றறிந்த பாதிரியார்கள் தாங்கள் வகித்திருந்த வேலையை விட்டுவிட்டு, லண்டன், ஆக்ஸ்ஃபோர்டு முதலிய பெரிய நகரங்களுக்கும் பெரிய மனிதர்களின் இல்லங்களுக் கும் சென்று வேலைக்கமர்ந்தனர். குறைவேதும் இல்லாத இன்ப வாழ்க்கை வாழ்வதற்காகவே இப்படி அவர்கள் செய்தனர். வட் டாரங்களில் வேலைக்கிருந்த பாதிரியார்கள் ரெக்டார் பதவியில் இருந்தவராகவோ அல்லது விகார் பதவியிலிருந்தவராகவோ அல்லாமல் மிகக் குறைவான ஊதியத்திற்கு வேலைசெய்து வந்த சாதாரணப் பாதிரியார்களாக இருந்தனர்.

இதிலிருந்து, இங்கிலாந்தின் கிராமங்களில் வேலை செய்துவந்த பாதிரியார்கள் கல்வி கற்பிப்பதிலும், மதப் பிரசாரம் செய்வதிலும் சிறிதே ஈடுபட்டிருந்தனர் என்பது விளங்கும். பிரார்த்தனைகளை மாத்திரம் அவர்கள் நடத்திவந்தனர். ஊர் ஊராகச் சுற்றிவந்த துறவிகளும், பார்டனர் (Pardoner) என்று அழைக்கப்பட்ட மன்னிப்புப் பத்திரங்கள் வழங்கியவரும், கிருத்தவர் அனைவரும் சம உரிமையுடன் வாழவேண்டும் என்ற கருத்தைக் கொண்ட ஜான் பால் என்பாரைப் பின்பற்றிப் போராட்டம் நடத்தியவரும், பாதிரியார்கள் செய்யாமல் விடுத்த பணிகளைச் செய்தனர். இவர் களால் கிராமங்களுக்கு நன்மையோ அல்லது தீமையோ நேர்ந் தாலும், சமய வாழ்வும் கலை வாழ்வும் அவர்களால் போற்றப் பட்டன. குக்கிராமங்களிலும், நகரங்களிலிருந்து நெடுந்தொலைவில் இருந்த பண்ணைகளிலும், தங்கள் ஊரை விட்டுப் பெயராதவருக்கும் எழுதப்படிக்கத் தெரியாதவருக்கும், புதிய கருத்துகளையும், நாட்டில் நடப்பனவற்றைப்பற்றியும், இவர்கள் எடுத்துக் கூறினர். இவர்கள் ஓர் இடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு நடந்தோ, குதிரைச் சவாரி செய்தோ சென்றுகொண்டேயிருந்தனர். இவர் களைப்போலவே, இசை, கூத்து முதலியன நிகழ்த்தியவரும், கழைக் கூத்தாடிகளும், பிச்சைக்காரர்களும், அறிஞர்களைப்போல் நடித்த வரும், உலகவாழ்வில் பற்றுவைத்த யாத்திரிகர்களும், பற்றற்றவரும் நாட்டில் சுற்றிவந்தனர். இவர்கள் நோயைப் பரவச்செய்யும் கிருமிகளைப்போல், தங்கள் இடத்தைவிட்டுப் பெயராத மக்க ளுக்குப் புதுக்கருத்துகளையும், பரந்த உலகினைப்பற்றிய

அறிவையும் பரவச் செய்தனர் என்று ஐஸ்ஸெரெண்டு என்பார் குறிப்பிட்டுள்ளார்.[1] ஊர் ஊராகச் சுற்றிவந்தவர்கள் இடைக் காலம் மாறித் தற்கால உலகம் தோன்றுவதற்கு வழி செய்தனர்.

பாரிஷ் என்ற பிரிவுகளில் வேலையில் இருந்த பாதிரியார்கள் தாங்கள் பணியாற்றிவந்த கிருத்துவ ஆலயங்களில் தம்மிஷ்டம் போல் நடந்து கொண்டனர். கிராமங்களில் வாழ்ந்துவந்த பெரும் பான்மையான மக்கள் ஞாயிற்றுக்கிழமைகளில் இப் பாதிரியார்கள் நடத்திவந்த பிரார்த்தனைக் கூட்டங்களுக்கு வந்தனர். இடைக் காலத்தில் பாரிஷ் என்ற பிரிவுகளில் இருந்த கிருத்தவ ஆலயங்கள் சமய வாழ்வின் மையமாக விளங்கின.

ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும், பாரிஷில் இருந்த குடியான வர்கள், கிருத்துவ ஆலயங்களில் நின்றுகொண்டோ அல்லது மண்டியிட்டுக்கொண்டோ பிரார்த்தனையில் கலந்துகொண்ட போது, பாதிரியார்கள் உபயோகித்த லத்தீன் மொழியைப் புரிந்து கொள்ளமுடியாத நிலையில் இருந்தனர். இருப்பினும் மதிப்பிற்குரிய சின்னங்களைக் கண்ணுற்றபோதும், லத்தீன் மொழியில் பிரார்த் தனையைக் கேட்டபோதும், அவர்கள் உள்ளத்தே தூய எண்ணங்கள் மேலோங்கி நின்றன. ஆலயத்தின் உட்புறச் சுவர் களில் கிருத்துவின் வாழ்க்கை நிகழ்ச்சிகளும் கிருத்துவத் துறவியரின் உருவப்படங்களும் தீட்டப்பெற்றிருந்தன. ஒருவர் இறந்தபின் அவருடைய ஆத்மா இறைவனின் முன், தன் வாழ்க்கைக் காலத்தில் தான் செய்த காரியங்களுக்குத் தண்டனையோ அல்லது அருளோ பெற நிற்பதை எடுத்துக்காட்டும் ஓவியம் பல வண்ணங்களில், ஆலயத்தினுள் சிலுவைக்குமேல் இருந்த இடத்தில் வரையப்பட்டிருக்கும். ஒரு பக்கம் தூயவரை உள்ளே அனுமதிக்கச் சொர்க்கத்தின் கதவுகள் திறப்பதுபோன்ற சித்திரமும், மற்றொரு பக்கம் கொழுந்துவிட்டு எரியும் நகரத்தில் பாவிகளைச் சித்ரவதை செய்யும் காட்சியைச் சித்திரிக்கும் ஓவியமும் தீட்டப்பட்டிருந்தன. மக்கள் தாம் நரகத்திற்குப்போக நேரிடுமோ என்று அஞ்சினர். இவ் வச்சத்தைப் பயன்படுத்திக்கொண்டு மதப்பிரசாரம் செய்துவந்தோரும், கொடிய செயல்புரிந்தோர் அதையெடுத்துக்கூறி மன்னிப்புக்கோரினால் மன்னிப்பளிக்கும் கன்ஃபெசர் (confesser) என்பாரும், ஆலயங்களுக்குப் பொருள் திரட்டவும் கொடிய செயல் புரிந்தோரை அதற்காக மனம் வருந்தவும் செய்தனர். சமயக் கோட்பாட்டில் பூரண ஈடுபாடுடை யவர், சமய கோட்பாட்டிற்கு முரண்பட்டோர் நரகத்தின் தீயில்

[1] 'இங்கிலீஷ் வேபேரிங் லைஃப் இன் தி மிடில் ஏஜெஸ்' (English Wayfaring life in the Middle Ages, XIVth century) என்ற ஜே. ஜே. ஐஸ்ஸெரெண்டு என்ற நூலில் பார்க்கவும்.

வெந்து சாம்பலாவர் என்று அச்சுறுத்தினர். அதேபோல் சமயக் கோட்பாட்டிற்கு முரண்பட்டோர், பிஷப்புகள் நகரத்தில் வெந்து சாம்பலாவர் என்று எதிர்வாதம் செய்தனர். அதே சமயம் இரு கட்சியினரும் போலித்துறவிகள் நகரத்தில் நிறைந்திருப்பர் ஆதலால் மற்றவருக்கு அங்கு இடம் இருக்கமுடியாது என்று கூறிக்கொண்டனர்.

கிராமங்களில் வாழ்ந்த குடியானவர்கள், ஏசுக்கிருத்துவின் பொன்மொழிகள் சிலவற்றையும், அவர் தம் வாழ்க்கை நிகழ்ச்சிகள் சிலவற்றையும், கிருத்தவத் துறவிகள் சிலரின் வாழ்க்கையைப் பற்றியும், பைபிள் கதைகள் சிலவற்றையும் அறிந்திருந்தனர். உதாரணமாக, 'ஆதாம் ஏவாள் ஆகிய இருவரின் கதை', 'நோவாவும் வெள்ளமும்', 'சாலமனின் மனைவியரும் அவரது சாதுர்யமும்', 'ஜெசபெல்லின் கதி', 'ஜெப்தாவும் அவர் தம் மகளும்' ஆகிய கதைகளை அவர்கள் அறிந்திருந்தனர். இக் கதைகளைப் பக்திப் பாடல்களில் இருந்தும், துறவியர்கள் திரித்துச் சொன்ன கதைகளில் இருந்தும் கற்றனர். பொதுமக்கள் ஆங்கிலத்தில் பைபிளைக் கண்டதில்லை. அப்படியே அவர்கள் அதைக் கண்டிருந்தாலும் அதைப்படித்து அறிந்துகொள்ளும் சக்தியற்றவராயிருந்தனர். வீட்டிலேயே பிரார்த்தனை செய்தல், பைபிளைப் படிப்பது ஆகிய செயல்கள் அவர்களுக்குப் பழக்கமாய் இருக்கவில்லை. இருப்பினும், சமயமும் பிரார்த்தனை நடத்த உபயோகிக்கப்பட்ட லத்தீன் மொழியும் அவர்கள் உள்ளத்தைக் கவர்ந்தன. கிருத்து, சிலுவையில் அறையப்பட்ட சம்பவம் அவர்கள் மனக் கண்முன்னே நின்று அவர்களது உள்ளத்தைத் தொட்டது.

தான் புரிந்த கொடிய செயல்களுக்காகத் தன் வட்டாரப் பாதிரியாரிடம் அல்லது திரிந்துவந்த துறவியிடம் மன்னிப்புக் கோருவது ஒவ்வொருவருடைய கடமையாயிருந்தது. துறவிகள் தங்களிடம் மன்னிப்புக் கோரியவர்களுக்குப் பணம், நல்ல உணவு அல்லது வேறு பொருள்களைப் பெற்றுக்கொண்டு மன்னிப்பளித்தனர்.

ஊர் ஊராகத் திரிந்துவந்த துறவிகளைப்பற்றி மேலும் அறியலாம். இத் துறவிகள், ராப்ராய் என்பவரைப்போல், மற்றவருக்கு வாழ்த்துக்கூறும் அளவிற்குத் தூயவராய் இல்லாமலும், அவர்கள் கூட்டத்தையே கலைக்கும் அளவிற்குக் கொடியவராய் இல்லாமலும் இருந்தனர். கருப்பு உடை தரித்த, செயின்ட் டாமினிக் ஏற்படுத்திய துறவியர் கூட்டத்தைச் சேர்ந்தவரும், பழுப்புநிற உடை தரித்த, செயின்ட் ஃபிரான்சிஸ் ஏற்படுத்திய துறவியர் கூட்டத்தைச் சேர்ந்தவரும், பதின்மூன்றும் நூற்றாண்டில் இங்கிலாந்து முழுவதும் சுற்றிவந்தனர். அவர்கள் ஏசுவின் போதனைகளைத்

தவறில்லாமல் எடுத்து விளக்கிவந்தனர். பதினுன்காம் நூற்ருண்டிலும் மதப்பிரசாரப் பணியில் பெரும்பங்கை ஏற்று நடத்தி வந்தனர். அத் துறவிகள் மதப்பிரசாரம் செய்வதில் தேர்ந்தவர்கள் என்ற பெயரெடுத்தனர். அப்படிப்பட்ட பிரசாரத்திற்கு அப்போது தேவையும் இருந்தது. அறிவு வளர்ச்சியடைந்துகொண்டிருந்த அக் காலத்திலே மக்கள் இத்தகைய மதப் பிரசாரத்தை விரும்பினர். இதற்குக் காரணம், வட்டாரங்களில் வேலைபார்த்து வந்த பாதிரியார்கள் மதக் கோட்பாடுகளை விளக்கிச்சொல்லும் அளவிற்குக் கற்றவராய் இல்லாதிருந்தனர்.

சாசரின் காலத்தில் நாட்டில் சுற்றிவந்த துறவிகள் மற்றவர்களுக்கு வழிகாட்டிகளாக இருந்துவந்தனர். இத் துறவிகளைப் பார்த்து, விக்லிஃப் என்பாரைப் பின்பற்றியவர்கள், இத் துறவிகளுக்குப் போட்டியாகப் பிரசாரம் செய்வதைக் குறிக்கோளாகக் கொண்டனர். பிற்காலத்தில் பிராடஸ்டென்ட் சமயத்தினர் கோயிலில் வழிபாடு நடத்துவதைவிடப் பிரசாரம் செய்வது சிறந்தது என்று கருதினர். இக் கருத்து சுற்றிவந்த துறவியர் செய்துவந்த பணியைச் சிறந்ததென எடுத்துக்காட்டுகின்றது.

துறவியின் வாழ்க்கையை மேற்கொள்ளாத பாதிரியார்கள், சுற்றிவந்த துறவியர், தாழ்ந்த மனப்பான்மையுடைய மக்களின் கவனத்தை ஈர்ப்பதற்காக, இழிவான கதைகளைத் தங்கள் பிரசாரங்களில் உபயோகித்தனர் என்று குற்றம் சாட்டினர். துறவியர் தங்கள் பிரசாரத்திஞல், பிஷப்புகள், ஏனைய பாதிரியார்கள் ஆகியோரிடை இருந்துவந்த ஊழல்களை எடுத்துக்காட்டியதே அக் குற்றச்சாட்டிற்குக் காரணமாகும். விக்லிஃப் என்பார் கிருத்தவ ஆலயங்களுக்கு வந்த வரும்படியைக்கொண்டு இன்ப வாழ்வு வாழ்ந்துவந்த பாதிரியார்களை எதிர்த்து ஓர் இயக்கத்தை நடத்திய போது, சுற்றிவந்த துறவியர் அவ் வியக்கத்திற்கு ஆதரவு காட்டினர். ஆனுல், விக்லிஃப் 'டிரான்ஸ்ஸப்ஸ்டான்சியேஷன்' (Transubstantiation) என்ற மதக் கோட்பாட்டை மறுத்தபோது, சுற்றும் துறவியர் அவரது கடும் எதிரிகளாக மாறினர். இத் துறவியர்கள் சொத்து ஏதும் அற்றவர் என்றும் மக்களால் கொடுக்கப்பட்ட உணவு, உடை முதலியவற்றைக்கொண்டு எளிய வாழ்க்கை நடத்தியவர் என்றும் கருதப்பட்டுவந்தனர். ஆனுல், நடைமுறையில் அவர்கள் தாங்கள் வாழ்ந்த கான்வென்ட் என்ற விடுதிகளில் மிகுந்த செல்வத்தைச் சேர்த்துவைத்திருந்தனர். இதனுல் இத் துறவிகள் செய்துவந்த மதப்பிரசாரத்தை விக்லிஃப் மேற்கொண்டார்; ஆனுல், அவர்கள் வாழ்ந்து வந்த விதத்தைக் கண்டித்தார்.

இடைக்காலத்தில் இங்கிலாந்தில் பாதிரியார்கள் நடத்திவந்த வாழ்க்கையும் சுற்றும் துறவிகளின் பிரசாரமும் அனேக விளைவு களைத் தோற்றுவிப்பதற்குக் காரணமாய் இருந்தன. பிற்காலத்தில் பியூரிடானிய மதத்தினர் மேற்கொண்ட கடும் துறவியின் வாழ்க்கை, கொடிய செயல்களை அழிக்க மேற்கொண்ட தீவிர நடவடிக்கைகள், சபாத் என்று அழைக்கப்பட்ட ஓய்வு நாளை ஓய்வுநாளாக அனுசரிக்காதது, நரகத்தை நினைந்து அஞ்சியது, செல்வராயிருந்த பிஷப்புகள், பாதிரியார்கள் முதலானோரைக் கண்டித்தது, தங்கள் கொள்கையில் இருந்து மாறுபட்டோரை ஒழுங்கற்றமுறையில் கண்டித்தது, உள்ளத்தை உருக்கும் பிரசாரம் செய்தது, சோம்பலான வாழ்க்கையைப்பற்றி வெறுப்புக் கொண்டமை ஆகியவைகளும், மக்களில் ஏழைகளாகவும், எளியோராகவும் இருந்தோர் பியூரிடானிய மதத்தில் கொண்ட பற்றும் அவ் விளைவுகளாகும். லாங்லண்டு என்ற பெயருடைய பாதிரியார் பன்யன் என்பாருக்கு வாழ்க்கை வழிகாட்டியானார். லாடிமரும், வெஸ்லியும், விக்லிஃப்பின் தூய துறவியின் வாழ்க்கையைக் கடைப்பிடித்தனர். பதினைன்காம் நூற்றாண்டின் பக்திப் பாடல்களையும் சமய நூல்களையும் நன்கு ஆராய்ந்த அறிஞர்கள், இக் காலக் கிருத்தவ சமயங்களைச் சார்ந்தோர் சிலர் தங்களது சமயமே இடைக்காலத்திலிருந்தது என்று கூறுவதையும், மற்றவர் தங்கள் சமயத்திற்கும் இடைக்கால சமயத்திற்கும் தொடர்பு ஏதும் இருக்கவில்லை என்பதையும் மறுக்கின்றனர். ஏனென்றால், இடைக்காலச் சமயத்திலிருந்தே தற்காலக் கிருத்தவ சமயங்கள் தோன்றின.[1]

> 'புதியனவாகத் தோன்றும் அனைத்தும் இடைக்காலத்திலே இருந்து வளர்ந்தவையே' என்று சாசர் குறித்துள்ளார்.

பிற்காலத்தில், இங்கிலாந்தில் தோன்றிய பிராடெஸ்டன்ட் சமயத்தில் இடைக்காலத்தில் இல்லாதவை காணப்பட்டன. குடும்பத்தினர் தங்கள் வீட்டிலேயே வழிபடுவதும், சமயத்திற்காகக் குடும்ப வாழ்க்கையையும் தான்செய்யும் தொழிலையும் பயன்படுத்துவதும் பிற்காலத்தில் தோன்றியவையாகும். இவை இடைக்காலச் சமயத்தில் இடம் பெற்றிருக்கவில்லை. கிருத்தவ மதம் தோன்றிய போது, துறவியின் வாழ்க்கையை அனுசரிக்கவேண்டும், உலகியல் பற்றற்றவராய் இருத்தல் வேண்டும் என்று வற்புறுத்தப்பட்டது. இதன் அடிப்படையில்தான் இடைக்காலச் சமயம் தோன்றியது.

[1] பி. மானிங் எழுதியுள்ள பீபிள்ஸ் ஃபெயித் இன் தி டைம் ஆஃப் விக்லிஃப்' என்ற நூலில் 186-188 பக்கங்களில் பார்க்க. (The People's Failh in the time of Wyclif, B. Manning, pp. 186-188 and passim.) பிரீச்சிங் இன் மிடீவல் இங்லண்டு; ஜி. ஆர். ஊஸ்ட் எழுதியது; 91—95 பக்கங்களில் பார்க்க. (Preaching in Mediaeval England, G. R. Owst, pp. XII, 91-95 and passim.)

அப்படி இருந்தும் இடைக்காலத்தில் அக் கொள்கைகள் அனுசரிக்கப்படவில்லை.

சுற்றிவந்த துறவியர் மற்றவர் வேலையில் தலையிட்டனர் என்று அவரை வெறுத்தவர்கள் குற்றம் சாட்டினர். மடங்களில் இருந்து தான் சிறந்த தலைவர்கள் தோன்றினர். ஆனால், சாசரின் காலத்தில் சமய ஆர்வமும் கல்வி அறிவும் மடங்களில் தாழ்ந்த நிலையில் இருந்தன. இதனால் மடத்தின் தலைவர்களான ஆபட்டுகளை அரசர் அழைத்து அரசாங்கப் பொறுப்பை ஏற்று நடத்துமாறு கேட்டுக்கொள்ளவில்லை. இனியும் கான்டர்பரி மடம் பாரிஸ் சர்வகலாசாலையுடன், அறிவுத் திறனிலும் தத்துவப் படிப்பிலும் போட்டி இடவில்லை. கான்டர்பரிக்குப் பதில் ஆக்ஸ்ஃபோர்டு கல்வியிலும் தத்துவத்திலும் சிறந்த இடமாக விளங்கத் தொடங்கியது. அங்கே கல்வியை வளர்ப்பதிலும், தத்துவத்தைப் போதிப்பதிலும் சுற்றும் துறவியரும், துறவியின் வாழ்க்கையை மேற்கொண்ட பாதிரியார்களும் ஈடுபட்டிருந்தனர். பிரபுக்களின் போர் நடந்தபோது பாதிரியார்கள் நாட்டுப்பற்றுடையவராகவும் அரசியலில் பெரும்பங்கை ஏற்றவராகவும் இருந்ததுபோல் அக் காலத்தில் இருக்கவில்லை. எனினும், மடங்களில் தொடர்ந்து நாட்டில் நடந்த நிகழ்ச்சிகளைப் பதிவு செய்துவந்தனர். வரலாறு தொகுப்பதில் ப்ருவசார் என்பார் முன்னேற்றத்தை ஏற்படுத்திக்கொண்டிருக்கும்போது, இங்கிலாந்தில் இருந்த மடங்கள் பழையபடியே வரலாற்றுச் செய்திகளைத் தொகுத்துவந்தன. பதின்மூன்றும் நூற்றாண்டிலே செயின்ட் ஆல்பன்ஸ் மடத்தில் வாழ்ந்துவந்த மாத்யூபாரிஸ் சிறந்த வரலாற்று அறிஞராக விளங்கினார். ஆனால், சாசர் காலத்தில், வால்ஷிங்காம் என்பார் உட்பட வாழ்ந்துவந்த நிகழ்ச்சித் தொகுப்பாளர்கள் நாட்டில் நடந்த நிகழ்ச்சிகளில் எவை முக்கியமானவை என்பதையும், நாட்டில் நடைபெற்று வந்தவைகளின் முக்கியத்துவத்தையும், அறியும் ஆற்றல் அற்றவராய் இருந்தனர். மடங்களில் இருந்தோர் மடத்துச் சம்பந்தப்பட்டவைகளில் அன்றி, மற்றவைகளில் அக்கறை கொண்டவராக இருக்கவில்லை. மடத்தில் வாழ்ந்த துறவியர் அனேகமாகத் தங்கள் வாழ்க்கையை மடத்திலேயே கழித்தனர். குத்தகைப் பணத்தை வசூலிக்கவும் லண்டன் மாநகரத்திற்குச் செல்லவும் மடத்தலைவருடன் சென்றுவரவும் அன்றி, மற்ற நேரங்களில் மடத்திலேயே காலத்தைக் கழித்தனர். இத்தகைய வேலைகளும் இல்லாத, மடத்தில் இருந்த துறவியர் தங்கள் குறிக்கோள்களிலும், அனுபவத்திலும் இருந்த அளவிலேயே இருந்தனர். இதனால்தான் நகரமக்களும், குடியானவரும் மடங்களின் கட்டுப்பாட்டில் இருந்து விடுதலைபெறப் போராடியபோது, மடத்திலிருந்தோர் காலத்தின் போக்கில் ஏற்பட்டிருந்த மாறுதல்களை உணராமல்,

அப் போராட்டத்தை முழு வலியுடன் எதிர்த்தனர். மடங்கள் அனுபவித்துவந்த சலுகைகளை மக்கள் காலத்திற்கு முரணானவை என்று கருதினர். மடத்திற்கு வெளியில் இருந்த மக்கள் பல துறைகளில் முன்னேறிவந்தபோது, மடங்களில் வாழ்ந்தோர் தாம் இருந்த நிலையிலேயே நின்றனர். யார்க்ஷீரிலும், வடபாகத்திலும் இருந்த மடங்கள்மட்டுமே மக்களின் மதிப்பைப் பெற்றிருந்தன. இம் மடங்கள், மடங்கள் அழிக்கப்பட்ட காலம்வரை தொடர்ந்து மதிப்புடன் இருந்துவந்தன.

சாசரின் காலத்தில் இங்கிலாந்திலே மடங்களில் வாழ்ந்துவந்த துறவியர்கள் சுகவாழ்வு வாழ்ந்துவந்தனர். பொதுமக்களைப் போலவே, தாங்களும் உடையணிந்து வெளியில் உலவினர். வேட்டையாடச் சென்றபோதும், மடத்தின் சொத்துகளைக் கவனிக்கச் சென்றபோதும் அவ்விதமே உடையணிந்து சென்றனர். எண்ணிக்கையில் துறவியர் குறைந்தவராகவே இருந்தனர். எட்டாம் ஹென்றியின் காலத்தில் மடங்கள் அழிக்கப்பட்டபோது, 5,000 துறவிகளே இருந்தனர் என்று கணக்கிடப்பட்டுள்ளது. சாசரின் காலத்தில் இதற்குச் சற்று அதிகமாக இருந்திருக்கலாம். பியூரி செயின்ட் எட்மண்ட்ஸ், அபிங்டன் ஆகிய இடங்களில் இருந்த மடங்கள் பல ஏக்கர் நிலத்தில் நிறுவப்பட்டிருந்தன. மடங்களில் வாழ்ந்துவந்த துறவியர் முன்போல் மடத்தைச் சூழ்ந்திருந்த நிலங்களில் வேலை செய்யவில்லை. எண்ணிறந்த வேலையாட்களைக் கொண்டு மடத்தின் வேலைகளைக் கவனிக்கச் செய்தனர். இறந்தவர், இருந்தவர், ஆதரித்தவர், மடத்தைத் தோற்றுவித்தவர் ஆகியோருக்காகத் துறவியர் பிரார்த்தனைகள் நடத்திவந்தனர். ஏழைகளுக்கு இறைச்சியும், பணமும் தினந்தோறும் கொடுத்து உதவினர். செல்வராய் இருந்த வழிப்போக்கர்களுக்கும் உணவும் தங்க இடமும் கொடுத்து ஆதரித்தனர். மடத்தின் தலைவர்களான ஆபட், பிரயர் என்பார் அப்படிப்பட்ட வழிப்போக்கருடன் சேர்ந்து உணவு உண்டனர். ஆனால், அதைப்போலவே ஏழை வழிப்போக்கருடன் சேர்ந்து அவர்கள் உணவு உட்கொள்ளாமல் விடுத்தனர். வழிப்போக்கர்கள் தங்குவதற்கென்று ஒதுக்கப்பட்ட இடத்தில் ஏழைகள் தங்களுக்கு மடத்தில் கொடுக்கப்பட்ட உணவை உட்கொண்டனர். மடங்களைத் தோற்றுவித்தவரின் உறவினர்கள், செல்வாக்குமிக்க பிரபுக்கள், மடங்களின் அதிகாரிகள் ஆகியோர் மடங்களின் செல்வத்தில் பெரும்பகுதியைத் தங்களுடைய வாழ்விற்காகச் செலவிட்டுக் கொண்டனர். அதேசமயம் துறவியர், முக்கியமாக ஆபட்டுகள் மிகுந்த செல்வத்தைத் தங்களுக்காகப் பயன்படுத்திக்கொண்டனர். ('இங்கிலாந்தின் மடங்களும் அவைகளின் செல்வநிலையும்' எழுதியவர் : ஸ்நேப் ; கேம்பிரிட்ஜ் அச்சகம், 1926. 'இங்கிலாந்தின் மடங்கள்

அவைகள் அழிக்கப்படுமுன் இருந்தநிலை'; எழுதியவர் : சவைன், ஆக்ஸ்ஃபோர்ட் ஆராய்ச்சிகள்; தொகுத்தவர்: விஞேகிரடாஃப், 1909).[1]

சாசரின் காலத்தில் மடங்கள் அளவிலா நிலங்களுக்குச் சொந்தமாயிருந்தன. அத்துடன் 'தைத்து' என்று அழைக்கப்பட்ட வரியை வசூலிப்பதின்மூலமும் பெரும்செல்வத்தை உடையனவாயிருந்தன. பாதிரியார்களின் ஆதரவையும் மடங்கள் பெற்றிருந்தன. நாட்டில் ஏழ்மைநிலை நிலவிவந்தபோது துறவியர் மற்றவர் உழைத்துச் சேகரிக்கும் செல்வத்தைக்கொண்டு வாழ்ந்து வந்தனர் என்ற கருத்து நிலவிவந்தது. காமன்ஸ் சபையினர், இங்கிலாந்தின் செல்வத்தில் மூன்றில் ஒரு பங்கு பாதிரியார்கள் வசம் இருந்தது என்று அறிவித்தனர். இச் செல்வத்தில் பெரும் பகுதி, துறவியின் வாழ்க்கையை மேற்கொண்ட பாதிரியார்களிடம் இருந்தது என்றும் அறிவித்தனர். அப்படியிருந்தும் பாதிரியார்கள் அடிக்கடி பணமுடையினுல் அவதியுற்றனர். மடங்களையும் மடங்களில் இருந்த கிருத்தவ ஆலயங்களையும், அழகு செய்வதிலும் விஸ்தரிப்பதிலும் அவர்கள் செல்வத்தைப் பயன்படுத்தியதே, அவரது பணமுடைக்கு ஒரு காரணமாகவிருந்தது. மற்றொரு காரணம் செல்வத்தை வகையாகச் செலவழிக்காததும் ஆகும். கார்லைல் தீட்டியுள்ள சாப்சனைப்போல், மடங்களைத் திறம்பட நடத்தும் ஆற்றல்வாய்ந்த மடத்தலைவர்களைக் காண்பதரிதாய் இருந்தது. ஆனுல், கான்டர்பரிபோன்ற இடங்களில் இருந்த மடத்தலைவர்கள் தங்கள் மடத்தின் சொத்துகளையும், செல்வத்தையும் நல்ல முறையில் திறம்படப் பயன்படுத்திவந்தனர். கொள்ளைநோய் பிரபுக்களைப் பாதித்ததுபோல்,மடத்தலைவர்களையும் பாதித்தது. யூதர்களுக்குப் பதிலாகத் தோன்றிய இத்தாலிய, ஆங்கிலேய வட்டிக்கடைக்காரர்கள், யூதர்களைப்போலவே மிகுந்த வட்டியை வசூலித்தனர். மடங்களின் தலைவர்கள் இவ் வட்டிக் கடைக்காரரின் வலையில் எளிதில் வீழ்ந்தனர். கரோடி (corrody) என்று சொல்லப்பட்ட முறைப்படி மடங்கள் வட்டிக்குக் கடன் வாங்கின. இதன்படி, வாங்கிய கடனுக்குப்பதிலாக வட்டிக் கடைக்காரனுக்கு ஆண்டுதோறும், அவன் வாழ்நாள் முழுவதும் ஒரு குறிப்பிட்ட தொகையைக் கொடுக்கச் சம்மதித்தனர். துரதிருஷ்டவசமாக வட்டிக்கடைக்காரர்கள் நீண்ட ஆயுளைப் பெற்றிருந்ததால், மடங்கள் வாங்கிய கடனுக்கு மேலும் திருப்பித்தர நேர்ந்தது.

[1] Snape, English Morastic Finances, Cambridge press, 1926; Savine, English Monasteries on the eve of the Dissolution, Oxford Studies, ed. Vinogradoff, 1909.

சாசரின் காலத்திற்குமுன் மடங்களுக்குச் சொந்தமான நிலங்களை, மடங்களின் அதிகாரிகள் நன்கு கண்காணித்து வந்தனர். மடங்கள் தங்கள் நிலங்களைக் கண்காணித்துவந்த முறையும், விவசாயம் மேம்பாடடையச் செய்ததும் மற்றவர்களுக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக இருந்துவந்தது. விவசாயத்தில் இத்தகைய மேம்பாடு, ஆடுகள் மேய்க்கப்பட்டுவந்த யார்க்ஷீர் பள்ளத்தாக்கிலும், விளைநிலமும் மேய்ச்சல் நிலமும் கலந்திருந்த இங்கிலாந்தின் தென்பகுதியிலும் காணப்பட்டது. பதினான்காம், பதினைந்தாம் நூற்றாண்டுகளில், மடங்களின் நிலங்கள் பொது மக்களுக்கு நீண்டநாள் குத்தகைக்கு விடப்பட்டன. இப்படிக் குத்தகைக்கு எடுத்துக்கொண்டவர் அந் நிலங்களைத் தாங்களே பயிர்செய்தனர் அல்லது மற்றவருக்கு நிலத்தைப் பிரித்துக் கொடுத்துக் குத்தகைப் பணம் பெற்றனர். இப்படியாக மடங்களின் நிலங்கள், மடங்கள் அழிக்கப்படுவதற்கு வெகுகாலத்திற்கு முன்னமேயே பொதுமக்களின் கைகளுக்கு மாறின.

சில சமயங்களில் மடங்களில் இழிந்த செயல்கள் தென்பட்டன. மதக்கோட்பாட்டைத் தீவிரமாக அனுசரித்துவந்த கோவர் என்பார், விக்லிஃபைப் போலவே மடங்களில் வாழ்ந்துவந்த துறவியர், துறவிகளின் வாழ்க்கையை வாழவில்லை என்று எண்ணினர். ஆனால், அக் காலத்தில் மற்ற வகுப்பினரின் வாழ்க்கை நிலையை நினைத்துப்பார்த்தால், துறவிகள் இழிவான செயல்களில் ஈடுபட்டிருந்தனர் என்று கூறுவதற்கில்லை. முற்காலத்தில் துறவியின் வாழ்வு வாழவேண்டும் என்ற ஆர்வம் உண்மையிலேயே மறைந்துவிட்டிருந்தது. துறவியர், துறவியின் வாழ்க்கையைத் தீவிரமாகக் கடைப்பிடிக்கவில்லை. அக் கால நிலையைக்கொண்டு பார்த்தால் மடத்திலே வாழ்ந்துவந்த சாதாரணத் துறவி இன்பவாழ்வு வாழ்ந்து வந்தார் எனக் கூறலாம். நல்ல உடையும் உணவும் அவர்களுக்குக் கிடைத்தன. முற்காலத்தில் துறவியர் இறைச்சியை உண்பதில் இருந்த கட்டுப்பாடு தளர்த்தப்பட்டுவிட்டிருந்தது. பொது மக்களைப்போலவே துறவியரும் வேட்டையாடுவதில் விருப்புடையவராய் இருந்தனர். மக்கள், துறவியர் வாழ்ந்துவந்த வாழ்க்கையைக் குறைகூறவில்லை. அதற்குப்பதில் துறவியரால் பொதுமக்களுக்கு என்ன நன்மை என்ற வினாவை எழுப்பினர். லாங்லண்டு, துறவியர் மடத்திற்கு வெளியே எப்படி நடந்து கொண்டனர் என்று பின்வருமாறு விளக்குகின்றார்:

'துறவியர், தெருக்களில் சுற்றிவந்தனர்; பண்ணை வீட்டு மன்றங்களுக்குத் தலைமை தாங்கினர்; பிறர் நிலத்தை விலைக்கு வாங்கினர்; பெண்கள் சவாரி செய்வதற்காகச் சேணம் அணியப்பட்டு வைத்திருந்த குதிரைமேல் துறவியர் ஒரு பண்ணை வீட்டில்

இருந்து மற்றொரு பண்ணை வீட்டிற்குச் சென்றனர்; பிரபுக்கள் வேட்டை நாய்கள் பின்தொடர, குதிரை ஏறி வேட்டைக்குச் சென்றதுபோல், இவர்களும் நாய்கள் பின்தொடர வேட்டைக்குச் சென்றனர்.'[1]

சாசர் நெடுநாளைக்குப்பின் என்ன நடக்கக்கூடும் என்பதை எண்ணிப்பார்க்கின்றார்.

'அபிங்டன் மடத்தின் தலைவரும் அவரது அதிகாரமும் ஒரு நாள், அரசன் ஒருவனின் செயலால் அழிய நேரிடும்' என்று எண்ணுகிறார்.

போப்பும், பிஷப்புகளும் துறவியர் வாழ்க்கையைச் சீர்திருத்தம் ஏதும் செய்யாததால், இப்பணியை அரசன் மேற்கொள்ளவேண்டும் என்று மக்கள் எதிர்பார்த்தனர். பாராளுமன்றத்தில், துறவியருக்கும் பாதிரியார்களுக்கும் சொந்தமான நிலங்களில், பெரும் பகுதியை அவரிடமிருந்து பிடுங்கவேண்டும் என்று மக்கள் வற்புறுத்தினர். மக்கள் மடங்களுக்கும் ஆலயங்களுக்கும், பல ஆண்டுக் காலமாகக் கொடுத்துவந்த நிலங்களில் சிறிதேனும் அவர்களுக்கு எந்தக் காரணத்தை முன்னிட்டும் திருப்பித்தரப்படவில்லை. மக்கள் பாதிரியார், துறவியர் ஆகியோரிடமிருந்த பெரும்பகுதி நிலத்தைக் கொள்ளவேண்டும் என்று நினைத்தாலும், அவ் வேலையை அரசன் தன் அதிகாரத்தை உபயோகித்துச் செய்து முடிக்கமுடியும் என்ற எண்ணம் அதுவரை தோன்றவில்லை. அரசன் பாராளுமன்றத்தின் சம்மதத்தைப்பெற்று எதையும் செய்து முடிக்கமுடியும் என்ற எண்ணமும் அதுவரை தோன்றவில்லை. சமுதாயத்தில் அரசாங்கமும், மத ஸ்தாபனமும், ஒன்றின் அதிகாரத்தை மற்றொன்று கட்டுப்படுத்திவந்தது என்று மக்கள் நினைத்து வந்தனர்.

மத ஸ்தாபனம் செய்துவந்த தொண்டுகளில் ஒருவகைத் தொண்டு சாசரின் காலத்தில் வளர்ச்சியடைந்தே இருந்தது. சமயக் கட்டடக்கலை தொடர்ந்து சிறப்பாக நடந்துகொண்டிருந்தது. பண்டைக்காலத்தவரும், தற்காலத்தவரும் அழகிலும் அமைப்பிலும்

[1] லாங்லண்டு, அக் காலத் துறவியரின் வாழ்க்கையில் குறைகண்டது, விக்லிஃப்பும், தற்காலத்தவரும் குறைகண்ட விதத்தில் இருந்து மாறுபட்டது. துறவியர் உலகில் இருந்து விலகி, தன்னை வருத்திக்கொண்டு, தியானத்தில் ஈடுபடும் நிலையில் இருந்து வழுக்கிவிட்டனர் என்பதே அவர் குறையாகும். இடைக்காலத்தில், மேரியைப்போல் மோன நிலையில் இருப்பது, மார்த்தாவைப் போல் பணிபுரிவதைவிடச் சிறந்தது என எண்ணினர். துறவியர் இவ் விருவரில், எவரைப்போலும் இல்லாதிருந்தனர். ஆர். டபிள்யூ சேம்பர்ஸ், எழுதிய 'மனிதனின் அடக்கமுடியாத மனம்' (R. W. Chambers' Man's unconquerable Mind, 1939.) என்ற நூலில் உள்ள கட்டுரைகளை, பீர்ஸ் என்ற குடியானவனின் கதையை (Piers the plowman) நன்கு உணர்வதற்காகப் படிக்கவும்.

விஞ்சமுடியாத அளவிற்கு இடைக்காலத்திலே மத ஸ்தாபனம் அழகிய கட்டடங்களைக் கட்டிக் குவித்தது. சமயக் கட்டடக்கலை நாட்டில் கொள்ளைநோய் பரவியிருந்தபோதுமட்டுமே தடைப் பட்டது. கொள்ளைநோய் தீர்ந்ததும் கிருத்தவ ஆலயங்களும், மடங்களும் தொடர்ந்து கட்டப்பட்டுவந்தன. சமயக் கட்டடக் கலை ஆரம்பத்தில் வேலைப்பாடு மிகுந்ததாகவும், பிறகு வளைவு களைக்கொண்ட அலங்காரக் கட்டடக் கலையாகவும், இறுதியில் செங்குத்தான அமைப்புடைய கட்டடக் கலையாகவும் திகழ்ந்தது. இறுதியில் பெரிய சாளரங்கள் அமைப்பதும், விளிம்புகளில் பூவேலை யால் அலங்கரிப்பதும் அதிகரித்தன. ஆர்ச் டீகன் பதவியில் இருந்த பாதிரியார்கள், வட்டாரங்களில் இருந்த கிருத்தவ ஆலயங் களைப் பார்வையிட்டபோது, நார்மானியர் காலத்தில் கட்டப்பட்ட ஆலயங்களை மிகச்சிறியவை என்றும் இருளடைந்தவை என்றும் கருதினர். புதிதாகக் கட்டப்பட்டிருந்த ஆலயங்களில், ஒளியானது பலவண்ணக் கண்ணாடிகளின் வழியாக உட்புறத்தை ஒளியால் நிரப்பிற்று. இத்தகைய ஆலயங்கள் கட்டுவதையும் வண்ணக் கண்ணாடிகளின் வழியாக உட்புறத்தை ஒளிவீசச் செய்வதையும் தற்காலத்தவர் விட்டுவிட்டனர். இடைக்காலத்தில் மத ஸ்தாபனம் செல்வத்தில் கொழித்தது. செயின்ட் ஃபிரான்சிசும், விக்லிஃப்பும் விரும்பியதுபோல், பிரசாரம் செய்வதையே முக்கிய நோக்கமாகக் கொண்டு, ஏழ்மை நிலையிலேயே மத ஸ்தாபனம் இருந்திருந்தால், பல நூற்றுண்டுகளுக்குப் பிறகும், கண்கொண்டு நோக்கின் புனித உணர்ச்சியுடன் வழிபடச்செய்யும் அழகிய, சிறந்த ஆலயங்களைக் கட்டி இருக்கமுடியாது.

சொத்துகள் ஏதும் இல்லாத டீகன் போன்ற எண்ணிறந்த பாதிரியார்கள் ஒருவிதக் கட்டுப்பாடின்றியும், மற்றப் பாதிரியார் களுடன் ஒருவிதத் தொடர்பின்றியும் வாழ்ந்துவந்தனர். மற்றும் எல்லாவிதமான தொழில்களிலும் ஈடுபட்டிருந்தனர். தாங்கள் யாரிடம் வேலைபார்த்துவந்தனரோ அவர்களுக்குமட்டுமே கட்டுப்பட்டு நடந்துவந்தனர். தற்காலத்தில் பொதுமக்கள் செய்யும் பணிகளையும் அத்தகைய பாதிரியார்கள் செய்துவந்தனர். வியாபாரிகள், நிலக்கிழார்கள், அதிகாரிகள் ஆகியோரிடமும் குமாஸ்தாக்களாக வேலைபார்த்துவந்தனர். அரண்களிலும், பண்ணை வீடுகளிலும், பாதிரியார்கள் வேலையைச் செய்தனர். சிலர் இறந்தோரின் ஆத்மா நல்ல கதி அடைய பிரார்த்தனை செய்வ தற்காக நியமிக்கப்பட்டிருந்தனர். அனேகர் ஒரு வேலையில் இருந்து, மற்றொரு வேலைக்கு மாறிக்கொண்டே இருந்தனர். மேலும், சோம்பேறித்தனமும் தீய பழக்கங்களும் உடையவராய் மாறிக்கொண்டே வந்தனர். இதனுல் எந்த நல்ல காரியம் செய்வ தற்கும் தகுதியற்றவராயினர்.

வர்த்தக நிறுவனங்களிலும், அரசாங்க அலுவலகங்களிலும் வேலைசெய்துவந்த பாதிரியார்கள் சமுதாயத்திற்குப் பலவிதப் பணிகளைச் செய்துவந்தனர். இப் பணிகளைப்புரிவதில் பாதிரி யார்கள் மற்றவர்களைவிடத் திறமையில் குறைந்தவராகவோ அல்லது திறமை மிக்கவராகவோ இருக்கவில்லை. பாதிரியார்களாக இருந்தும் பாதிரியார்களுக்கான கட்டுப்பாடுகளுடன் இவர்கள் இல்லாததால், பாதிரியார்கள் என்று அழைக்கப்படும் நிலையில் இல்லாதிருந்தனர். மத ஸ்தாபனத்தில் தாழ்ந்த பதவியில் இருந்த வரைத் தவிர, மற்றவர்கள் மணவாழ்க்கையைத் துறந்தவராக இருக்கவேண்டியிருந்தது.[1] ஆனால், பலர் மணந்துகொண்டு மனைவியுடன் குடும்பவாழ்வு வாழ்ந்துவந்தனர். இக் கால இலக்கி யத்தில் இருந்து, பாதிரியார்கள் கள்ளக் காதலில் ஈடுபட்டிருந்தனர் என்று தெரியவருகிறது. சிலர் திருடு, கொலை முதலிய குற்றங் களைப் புரிந்தனர். இப்படிக் குற்றம் செய்தவரை, பாதிரியார்களுக் கென்றே தனியாக நிறுவப்பட்டிருந்த நீதிமன்றங்களில் விசாரித் தனர். இந் நீதிமன்றங்களில் பாதிரியார்களே நீதிபதிகளாக இருந் தனர். இந் நீதிமன்றங்கள், அரசரின் நீதிமன்றங்களைப்போல் கடும் தண்டனைகளை விதிக்கவில்லை. குற்றவாளிகள் தாங்கள் குற்றத்திற் காகப் பிராயச்சித்தம்செய்ய உத்தரவிடப்பட்டனர். இப்படிச் செய்தது மத ஸ்தாபனத்திற்கும் பாதிரியார்களுக்கும் இழிவைத் தேடித்தந்தது.

எழுதப் படிக்கக் கற்கவும், லத்தீன் மொழியைப் பயிலவும் பாதிரியார்களுக்கு வசதிகள் இருந்தன. இங்கிலாந்தின் பல பாகங்களில் சிறிய உயர்நிலைப் பள்ளிகளில் லத்தீன் மொழியும் அதன் இலக்கணமும் சொல்லித்தரப்பட்டன. இப் பள்ளிகள் கிருத்தவ ஆலயங்கள், மடங்கள் மருத்துவ நிலையங்கள், சங்கக் கூடங்கள் ஆகியவற்றில் அமைக்கப்பட்டிருந்தன. துறவியரின் வாழ்க்கையை மேற்கொள்ளாத பாதிரியார்கள் இப் பள்ளிகளில் பிற்காலத்தில் பாதிரியார்களாவதற்காகக் கல்விகற்றனர். ஏழைகள் இந்த விதத்தில்தான் முன்னேற வாய்ப்பு இருந்தது. பதினெட்டாம் நூற்றாண்டில் தர்மப் பள்ளிக்கூடங்கள் தோன்றிய காலம்வரை

[1] பாரிஷ் என்ற பிரிவுகளில் இருந்த பார்சன்கள் (parsons) மற்றப் பாதிரி யார்கள் ஆகியோரில் பலர் மணந்துகொண்டிருந்தனர். இப்படி மணம் புரிந்து கொள்வது ஒழுக்கத்திற்கு முரணானதாகும். மணம் புரிந்து கொண்டிருப்பதை அதிகாரிகள் கண்டுபிடித்துவிட்டால், திருமணத்தை ரத்து செய்தல் வேண்டும். சில பாதிரியார்கள் கள்ளக் காதல் கொண்டிருந்தனர். நார்மானியரின் படை யெடுப்பிற்குப் பிறகுதான் பாதிரியார்கள் மணவாழ்க்கையில் ஈடுபட்டவராய் இருத்தல்கூடாது என்பது கட்டாயப்படுத்தப்பட்டது. இந்தக் கட்டாயத்தைப் பல ஆங்கிலேயப் பாதிரியார்கள் வெறுத்தனர். இந்தக் கட்டுப்பாட்டை எதிர்த்து மதச்சீர்திருத்தக் காலம்வரை பல ஆங்கிலேயப் பாதிரியார்கள் போராடினர். முதலில் மதச் சீர்திருத்தம் ஏற்பட்டபோது அவர்களுக்கு வெற்றி கிடைத்தது.

பொதுவாக மக்களுக்குக் கல்வி கற்பிக்க முயற்சியேதும் செய்யப் படவில்லை.

கி.பி. 1382-ல் வைகாம் என்ற இடத்தைச் சார்ந்த வில்லியம் என்பார், துறவியரின் வாழ்க்கையை மேற்கொள்ளாத பாதிரியார்கள் நன்கு கற்றவராய் இருத்தல்வேண்டும் என்ற காரணத்திற்காக, வின்செஸ்டர் என்ற இடத்தில், அதிசயிக்கத்தக்க அளவில், லத்தீன் மொழியும் இலக்கணமும் கற்பிக்க ஒரு பள்ளியை நிறுவினார். வின்செஸ்டர் பள்ளியை மனத்தில்கொண்டு பிற்காலத்தில், இடான் போன்ற இடங்களில் பள்ளிகள் பெரிய அளவில் நிறுவப்பட்டன. இப் பள்ளிகளில் பயின்ற மாணுக்கரில் ஒரு பகுதி பிரபுக்களின் குடும்பங்களையோ அல்லது உயர்ந்த குடும்பங்களையோ சார்ந்தவராய் இருத்தல்வேண்டும் என்று கருதப்பட்டது. இடைக்காலப் பள்ளிகளைப்பற்றி ஆராய்ந்த அறிஞர் ஒருவர், இக் கருத்து பிற்காலத்தில் பொதுப்பள்ளிகள் தோன்றுவதற்குக் காரணமாயிருந்தது என்று குறித்துள்ளார். ('வின்செஸ்டர் கல்லூரி', ஏ. எஃப். லீச், பக்கம் 96 ; 'Winchester College,' A. F. Leach, p. 96).

இங்கிலாந்தின் பழமையான ஆக்ஸ்ஃபோர்டு, கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலைகள் அப்போது இருந்தன. இச் சர்வகலாசாலைகளிடையே போட்டியேதும் இல்லாதிருந்தது. இதற்குக் காரணம், கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலை பதினைந்து, பதினாறும் நூற்றாண்டுகளில்தான் நாடு முழுவதும் பிரசித்தமடைந்தது.

சாசரின் காலத்தில் ஆக்ஸ்ஃபோர்டு சர்வகலாசாலை ஒன்று மட்டுமே அறிவை வளர்த்துவந்த நிறுவனமாக இருந்துவந்தது. பிஷப்புகளும் அரசனும் சேர்ந்து, கி.பி. 1382-ல் சர்வகலாசாலையின் சுதந்திர வாழ்க்கையில் குறுக்கிடும்வரை, விக்லிஃப்பும், அவரைப் பின்பற்றியவரும்தான், சர்வகலாசாலையில் செல்வாக்குடையராய் இருந்தனர். கி.பி. 1382-ல் விக்லிஃப்பும் அவரைச் சார்ந்தவரும் சர்வகலாசாலையை விட்டு விலகநேர்ந்தது. ஆக்ஸ்ஃபோர்டு சர்வகலாசாலையில் இருந்துவந்த அறிஞர்களிடையே ஒற்றுமை இருந்திருந்தால், அரசரும் பிஷப்புகளும் குறுக்கிட்டு விக்லிஃப்பையும் அவரைச் சார்ந்தவரையும் சர்வகலாசாலையை விட்டு விலகச்செய்திருக்க முடியாது. சர்வகலாசாலையில் எப்போதும் இரண்டு பிரிவுகள் இருந்துவந்தன; துறவியரின் வாழ்க்கையை மேற்கொள்ளாத பாதிரியார்களும் இப் பிரிவினர் ஆவர். இவர்களில் பின்னவர் விக்லிஃப்பின் கட்சியை ஆதரித்தனர். முன்னவர் அவரை எதிர்த்தனர்.

சர்வகலாசாலையைச் சார்ந்த மடங்கள் பலவற்றில், விக்லிஃப்பை எதிர்த்தோராகிய துறவியரின் வாழ்க்கையை மேற்கொண்ட பாதிரியார்களும், திரிந்துவந்த துறவியரின் கூட்டங்களைச் சார்ந்தவரும் வாழ்ந்துவந்தனர். சாசர் வாழ்ந்த காலத்திற்கு முன் நூற்றுண்டில் திரிந்துவந்த துறவியர் அறிவைவளர்க்கும் பணியில் முன் நின்றனர். உதாரணமாகக் கிராஸ்டெஸ்ட், ரோகர் பேகன், டன்ஸ் ஸ்கோடஸ் முதலானவர் இப் பணியில் ஈடுபட்டிருந்தனர். இவர்களைப்போன்ற துறவியர் சாசரின் காலத்திலும், ஆக்ஸ்ஃபோர்டு சர்வகலாசாலையில் மிக்க செல்வாக்குடையராய் இருந்தனர்.

விக்லிஃப்பைப்போன்ற, துறவியரின் வாழ்க்கையை மேற்கொள்ளாத பாதிரியார்கள். தங்களைச் சர்வகலாசாலையின் முக்கிய உறுப்பினர் என்று கருதிக்கொண்டனர். இவர்கள் கல்வி கற்பிப்பதையே தங்கள் முக்கியவேலை என்று கருதினர். பாதிரியார்களாக வாழ்வது அவரது இரண்டாவது கடமையாகும் என்று கருதினர். இவர்கள், நகரமாந்தர் நகர உரிமைகளைக் காப்பதில் காட்டிய ஆர்வத்தை, சர்வகலாசாலையின் உரிமைகளைக் காப்பதில் காட்டினர். போப், பிஷப், அரசர், முதலானோரும் நகரங்களும் சர்வகலாசாலையின் அலுவல்களில் தலையிடாமல் காப்பதில் அதிக அக்கறை செலுத்தினர். பட்டப்படிப்பிற்குப் படித்துவந்த மாணவர்கள் சர்வகலாசாலையினுள் பிஷப், அரசன் முதலானோர் கட்டளைகளையும் நகரசபையின் கட்டளையையும் நிறைவேற்றவந்த அதிகாரிகளைப் பயமுறுத்தி வெளியேறவைத்தனர்.

பெரிய வீதிகளில் நகரமாந்தருக்கும், கலாசாலைகளில் பட்டம் பெற்றவருக்கும் நிகழ்ந்த சச்சரவுகளில் குத்துவாள்களையும் உடைவாள்களையும் வில்லையும் அம்பையும் சர்வ சாதாரணமாகப் பயன்படுத்தினர். கி.பி. 1355-ல் நகரமாந்தர் சர்வகலாசாலையில் இருந்த பாதிரியார்களையும் மாணவர்களையும் கொன்று குவித்தனர். தப்பியவர் ஆக்ஸ்ஃபோர்டைவிட்டே ஓடிவிட்டனர். அரசன் தலையிட்டு தவறிழைத்தவரைத் தண்டித்து அத்தகைய நிகழ்ச்சி மேலும் நடவாதிருக்கத்தக்க நடவடிக்கை எடுக்கும்வரை, ஆக்ஸ்ஃபோர்டு சர்வகலாசாலை மூடப்பட்டிருந்தது. கி.பி. 1381-ல் நடந்த கலகத்தின்போது, நகரத்து மக்கள் கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலையின் உரிமைப் பத்திரத்தையும் ஏடுகளையும் அழித்தனர்.

கல்லூரிப் படிப்பு வளர்ச்சியடையுமுன், மாணவர் கலகம் செய்பவராகவும், சட்டத்தைமீறி நடப்பவராகவும், கட்டுக்கடங்காத நடத்தையுடையவராகவும் இருந்துவந்தனர். அவர்கள் பரம ஏழைகளாகவும் இருந்தனர். இதன் காரணமாகப் படிப்பதற்கு வேண்டிய புத்தகங்களை வாங்கமுடியாத நிலையில் இருந்தனர்.

அதேபோல், தாமாகவே பணம்கொடுத்து ஓர் ஆசிரியரைக் கொண்டு பள்ளியில் புரியாததைக் கற்றுக்கொள்ளக்கூடிய நிலையிலும் அவர்கள் இருக்கவில்லை. அதனால் மாணவர்கள் கற்றது சிறிதளவே. இதன் விளைவாக, அனேகர் பட்டம் பெருமலே சர்வ கலாசாலையைவிட்டு வெளியேறினர். இருப்பினும், கற்கவேண்டும் என்ற ஆர்வமுடைய மாணவர்களும் இருந்தனர். அவர்கள் பாடங்களில் சர்ச்சைசெய்வதில் மிக்க ஆர்வம் காட்டினர். சிலர் பதினன்கு வயதே நிரம்பியவராய் இருந்தனர். ஆனல், அனேகர் தற்காலத்தில் பட்டப்படிப்பிற்குப் படிக்கும் மாணவரின் வயதுள்ள வராய் இருந்தனர். அனேகர் பாதிரியார் வகுப்பைச் சேர்ந்தவராக இருக்கவில்லை. எனினும், அனேகமாகப் படித்தவர் அனைவரும் பிற்காலத்தில் பாதிரியார்கள் ஆவதற்காகவே கல்வி கற்றுவந்தனர். ஆக்ஸ்ஃபோர்டிலும் கேம்பிரிட்ஜிலும் மாணவராய் இருந்த காலத் தில் கற்றுக்கொண்ட முரட்டுத்தனமும் இழிந்த செயல்களும், பிற்காலத்தில் அவர்கள் பாதிரியார்களாக வாழ்ந்தபோதும் அவர் களிடம் காணப்பட்டன. சர்வகலாசாலையில் மாணவர் உடல் வளர்ச்சிக்குத் தேவைப்பட்ட பயிற்சிகளில் ஈடுபடுவதை, சர்வ கலாசாலையின் அதிகாரிகள் தடுத்துவந்தனர். ஆனல், அதே நேரத்தில் மாணவர்கள், கள்ளுக்கடைகளுக்கும் விலைமாதரின் இல்லங்களுக்கும் செல்வதைத்தடுக்கத் தீவிர நடவடிக்கை எடுக்க வில்லை. இப்படிச் செய்ததால் சில மாணவர்கள் நாட்டுப்புறங்களில் கொள்ளைக் கூட்டத்தினருடன் சேர்ந்து திரிந்துவந்தனர்.

இருப்பினும், இங்கிலாந்தில் இத்தகைய தீய செயல்களுக்கு ஒரு முடிவைக் கண்டனர். கல்லூரிப் படிப்புமுறை பாரிஸ் நகரத் தில் தோன்றினலும், நாளடைவில் இங்கிலாந்தின் இரு சர்வகலா சாலைகளில்மட்டுமே அம் முறை காணப்பட்டது. பதின்மூன்ரும் நூற்ருண்டில் பல கல்லூரிகள் ஆக்ஸ்ஃபோர்டில் தோன்றின. கேம் பிரிட்ஜில் 'பீடர் ஹவுஸ்' என்ற பகுதியிலும் கல்லூரிகள் தோன்றின. ஆயினும், கல்லூரி வாழ்க்கையின் கட்டுப்பாட்டிற்கு உட்பட்டிருந்தோர் மிகச் சிலரே. விக்லிஃப் என்பார் சர்வகலா சாலையில் பணியாற்றிவந்த காலத்தின் முற்பகுதியில் ஆக்ஸ்ஃபோர் டில் இருந்த 3,000 மாணவரில், மடங்களைச்சார்ந்த துறவியர் களைத்தவிர, மற்றவரில் நூற்றுக்குமேல் கல்லூரி வாழ்க்கையின் கட்டுப்பாட்டிற்கு உட்பட்டிருந்தனரா என்று நிச்சயமாகச் சொல்ல முடியாது. ஆனல், விக்லிஃப் இறப்பதற்கு முன்பே, 'புதிய கல்லூரி' (New College) என்று அழைக்கப்பட்ட கல்லூரியை வைகாமைச்சார்ந்த வில்லியம் என்பார் நிறுவினர். அக் கல்லூரி நீண்ட சதுர வடிவமான அமைப்பையுடையதாக இருந்தது. அதில் நூறு பாதிரியார்கள் கற்றுவந்தனர். வில்லியத்தின் கல்லூரி முறையை ஒட்டிப் பல கல்லூரிகள் இரண்டு நூற்ருண்டுக் காலத்தில்

ஏற்படுத்தப்பட்டன, அக் காலத்தில் ஆங்கிலேயரின் கல்லூரிப் படிப்புமுறை வளர்ச்சியடைந்தது.

சமயத்தில் தோன்றிய முரண்பாடு, பலரைக் கல்லூரிகள் நிறுவுவதற்குவேண்டிய பொருள் அளிக்கச்செய்தது. இதனுல் கல்லூரிகளின் தேவை பூர்த்தியாயிற்று. வருங்காலத்தில் தங்கள் மக்கள் பாதிரியார்களாகத் திகழவேண்டும் என்ற எண்ணம் கொண்ட மதத்தில் அதிக ஈடுபாடுடையோர், விக்லிஃப்பின் கருத்துகள் பரவாத கல்லூரிகளிலும், விக்லிஃப்பின் கருத்துகளை ஏற்றுக்கொள்ளாத ஆசிரியரிடமும், தங்கள் மக்களைக் கல்வி கற்கச் செய்ய விரும்பினர். விக்லிஃப்பின் கருத்துகளைப்பற்றி மாணவர்கள் தாங்கள் தங்கிஇருந்த விடுதிகளிலும் சாவடிகளிலும் சர்ச்சை செய்துவந்தனர். ஆகையால் பெற்றேர்கள் தங்கள் மக்களை விக்லிஃப்பின் கருத்துகளைக் கற்காமல் இருப்பதற்காகவும், தீயவழி களினின்றும் காப்பதற்காகவும், கல்லூரிகளில் சேர்ப்பதை விரும் பினர். இதன் காரணமாக இங்கிலாந்தில் கல்லூரிப் படிப்புமுறை வேறெங்கும் காணமுடியாத அளவிற்கு வேரூன்றித் தழைத்தது. கல்லூரிகளின் வருமானம், மடங்களின் வருமானத்தைப்போல் அல்லாமல், நன்கு பாதுகாக்கப்பட்டு, நன்கு பயன்படுத்தப்பட்டும் வந்தது.

ஒரு நூற்றுண்டுக் காலத்திற்கு இங்கிலாந்தில் சர்வகலாசாலை களில், மத சம்பந்தமான சர்ச்சைகள் நிகழக்கூடாது என்ற கண்டிப்பினுல் அறிவு வளர்ச்சி தடைப்பட்டுவந்தது. கல்லூரிப் படிப்புமுறையின் அதிவேகமான வளர்ச்சி, நடத்தையிலும், கட்டுப்பாட்டிலும், கல்வி கற்பதிலும் பண்பட்ட நிலையை ஏற்படுத் திக் கொடுத்தது. இத்தகைய மாற்றத்தைத் தோற்றுவித்த ஆக்ஸ்ஃபோர்டு, கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலைகளுக்குப் பிற்காலத் தில் வாழ்ந்த ஆங்கிலேயர் மிக்க கடமைப்பட்டவராவர்.

கல்வியில் ஒரு முக்கியதுறை ஆக்ஸ்ஃபோர்டிற்கும் கேம்பிரிட் ஜிற்கும் வெளியே வளர்ச்சியடைந்துவந்தது. லண்டனுக்கும் வெஸ்ட்மின்ஸ்டருக்கும் இடையே இருந்த பகுதியில் பாதிரியார் களாய் இல்லாத வழக்கறிஞர்கள், அரசனின் நீதிமன்றங்களில் கையாளப்பட்டுவந்த சட்டங்களைத் திரட்டி, தாங்கள் தோற்றுவித் துள்ள, ‘ இன்ஸ் ஆஃப் கோர்ட் ’ (Inns of Court) என்ற நிறுவனங் களில், சட்டப்படிப்புப் படிப்பதற்கு வழிசெய்தனர். இந் நிறுவனங் களை மெய்ட்லண்டு தம்முடைய நூலில் கீழ்க்கண்டவாறு குறிக் கின்ருர் : ‘ வழக்கறிஞர்கள் பலர் ஒன்றுகூடிப் பொழுதுபோக்கும் இடத்தைப்போலவும், கல்லூரிகளைப் போலவும், தொழிலாளர் சங்கங்களைப்போலவும் அந்த நிறுவனங்கள் இருந்தன. முற்

காலத்தில் பெரிய பிரபுக்களின் இல்லங்களாய் இருந்த வீடுகளை வழக்கறிஞர்கள் வாங்கி, அவற்றில் தங்கள் நிறுவனங்களை நடத்தி வந்தனர். உதாரணமாக லிங்கனில், எர்ல் பதவிவகித்த பிரபுவின் இல்லத்தில் ஒரு நிறுவனம் இருந்துவந்தது. 'நைட்ஸ் டெம்பலர்ஸ்' என்று அழைக்கப்பட்டுவந்த துறவியரின் இருப்பிடமும் வழக்கறிஞர்கள் கைக்கு மாறியது. இந் நிறுவனங்களில் சார் ஜெண்ட் என்று அழைக்கப்பட்ட வழக்கறிஞர்களும், அவரிடம் கற்றுவந்தவர்களும், நீதிமன்றங்களில் வழக்குகளை நடத்தத் தனி உரிமை பெற்றிருந்தனர். இவ் வழக்கறிஞர்கள் பொதுமக்களில் முதன்முதல் கல்விகற்றவராகத் திகழ்கின்றனர். இதனால் நாட்டின் முன்னேற்றத்திற்குத் தேவைப்பட்டவராய் இருந்தனர்.

# 3. காக்ஸ்டன் காலத்திய இங்கிலாந்து

ஆறும் ஹென்றி, 1422; நான்காம் எட்வர்ட், 1461; ஐந்தாம் எட்வர்ட், 1483; மூன்றும் ரிச்சர்ட், 1483 ; ஏழாம் ஹென்றி, 1485.

கண்டுபிடிப்புகள் ஏற்பட்ட காலத்திற்குமுன் (era of inventions) சமுதாயத்தில் மாற்றங்கள் எவ்வளவு மெதுவாகத்தோன்றின என்று இன்று நம்மால் கற்பனைசெய்து பார்ப்பது கடினமான காரியமாகும். இங்கிலாந்தில் பதினான்காம் நூற்றாண்டில் சமுதாயத்திலும் மக்கள் மனநிலையிலும் இருந்த குழப்பம், திடுக்கிடும் விதத்தில் பெரிய மாறுதல்களைத் தோற்றுவித்திருக்கும் என்று எதிர்பார்க்க இடமுண்டு. ஆனால், பதினைந்தாம் நூற்றாண்டில் அத்தகைய மாறுதல்கள் ஏதும் நிகழவில்லை. மக்கள், எண்ணத்திலும், செயலிலும் பழைமையை விரும்புபவராகவே இருந்தனர்.

காக்ஸ்டனின் வாழ்க்கைக் காலத்தில் (1422-1491) சாசரின் ஆத்மா இங்கிலாந்தில் வட்டமிட்டிருக்குமேயானால், இங்கிலாந்தில் தன்னை ஆச்சரியத்தில் ஆழ்த்தக்கூடிய மாற்றங்கள் ஏதும் ஏற்பட்டிருக்கவில்லை என்பதை உணர்ந்திருக்கும். மத ஸ்தாபனத்தைப் பற்றிப் பதினான்காம் நூற்றாண்டில் குறைகூறப்பட்டு வந்ததையும் பதினான்காம் நூற்றாண்டில் தொடர்ந்து மத ஸ்தாபனம் எத்தகைய மாறுதல்களும் இல்லாமல் இருந்ததையும் கண்ணுற்றிருக்கும் அவரது ஆத்மா, தமக்கு முன்னுளில் பழக்கமான சாலைகள்வழியே சென்றிருக்குமேயானால், வழிப்போக்கர்கள் அப்போதும் கள்வர்களால் அலைக்கப்பட்டதையும் பார்த்திருக்கமுடியும். மேலும், அவரது ஆத்மா சீருகச் செப்பனிடப்படாத பாலங்களைக் கடந்து சென்றிருக்குமேயானால், வேலியிடப்படாத நிலங்களில் குடியானவர்கள் தொடர்ந்து தங்களுக்கு ஒதுக்கப்பட்ட நிலத்துண்டுகளில் எருதுகளைக்கொண்டு, நிலத்தை உழுவதையும் கண்டிருக்கும்; ஆனால், பண்ணைவீட்டு மன்றத்திற்கும் போயிருக்குமேயானால் அங்கிருந்த குடியானவர்களில் ஒரு சிலரே தொடர்ந்து அடிமை நிலையில் இருந்தனர் என்பதை உணர்ந்திருக்கும். சாலையினூடே

தனக்குப் பழக்கமானவர்களையும் அவரது ஆத்மா சந்தித்திருக்கும் தாம் ஒரு காலத்தில் குதிரைஏறி கான்டர்பரிக்குச் சென்றபோது கண்ட, அதே மகிழ்ச்சிபொங்கும் திரளான யாத்திரிகர் கூட்டத்தையும், துறவியரையும், சம்மனர் என்ற அதிகாரியும், பாவ மன்னிப்புப் பத்திரம் கொடுத்துவந்தவரும் எப்போதும்போல் பொது மக்களை ஏமாற்றிவந்ததையும், வியாபாரிகள் பலவித பொருள்களைத் தாங்கி நின்ற குதிரைகளைக் காத்துக்கொண்டு நிற்பதையும், பிரபுக்களும் பாதிரியார்களும் வேட்டைப் பறவைகளுடனும் வேட்டை நாய்களுடனும் வேட்டையாடச் சென்றுகொண்டிருப்பதையும், பிரபுக்களின் பணியாட்கள் வில்லையும் வாளையும் கொண்டு எவ்விதக் குறிக்கோளும் இன்றிப் போய்க்கொண்டிருப்பதையும், அவரது ஆத்மா கண்டிருக்கும். வழிப்போக்கர்கள், சிவப்பு, வெள்ளை ரோஜாக்களைப்பற்றியும், இங்கிலாந்தில் பல இடங்களில் நடந்த போர்களைப்பற்றியும் பேசிக்கொண்ட பேச்சுகளிலிருந்து, அவரது ஆத்மா தான் வாழ்ந்த காலத்தில் இருந்ததைவிட, நாட்டில் குழப்பம் அதிகமாக இருக்கவேண்டும் என்று உணர்ந்திருக்கும். நல்ல மனிதர்கள் பிரபுக்களின் ஆட்களால் பயமுறுத்தப்பட்டதையும், நீதிமன்றங்களும் பிரிவி கவுன்சில் (Privy Council) என்றழைக்கப்பட்ட தலைமை நீதிமன்றமும், பிரபுக்களும் பயந்து அவர்களுக்குச் சாதகமாகத் தொடர்ந்து தீர்ப்பு அளித்துவந்ததையும் அவரது ஆத்மா உணர்ந்திருக்கும். மேலும், வழிப்போக்கரின் பேச்சுகளில் இருந்து அஜின்கோர்ட் (Agincourt) என்ற இடத்தில் நடந்த போர், கிரெசி (Crecy) என்ற இடத்தில் நடந்த போரைப் போலவே, ஓர் ஆங்கிலேயன் மூன்று அயல்நாட்டவரை அடித்து நொறுக்கமுடியும் என்ற எண்ணத்தை, ஆங்கிலேயரின் உள்ளத்திலே எழச் செய்துள்ளது என்பதையும் அறிந்துகொண்டிருக்கும் அவரது ஆத்மா. அத்துடன் ஃபிரான்சை ஆளுவதும் கொள்ளையடிப்பதும் இங்கிலாந்தின் முக்கிய வேலையும் பொழுதுபோக்கும் ஆகிவிட்டன என்பதையும் அவ்வாத்மா உணர்ந்திருக்கும். இப்படி ஆங்கிலேயரின் கவனம் ஃபிரான்சில் இருந்ததால், சமுதாயத்தில் இருந்துவந்த ஊழல்கள் எப்போதும்போல் அழிக்கமுடியாதவைகளாக இருந்தன என்பதையும் அவரது ஆத்மா புரிந்துகொண்டிருக்கும், 'கிரெசி' போரில் கண்ட வெற்றி ஆங்கிலேயருக்கு எவ்வாறு நிரந்தரமான நன்மையைப் பயக்கவில்லையோ அவ்வாறே அஜின்கோர்ட் போரில் கண்ட வெற்றியும் ஆங்கிலேயருக்கு நிரந்தரமான நன்மையைப் பயக்கவில்லை என்பதையும் அவ்வாத்மா தெரிந்துகொண்டிருக்கும். ஆங்கிலக் கால்வாயைக் கடந்து ஃபிரான்சில் இருந்து இங்கிலாந்திற்குத் திரும்பி ஓடிய வீரர்கள், பிரபுக்களின் பணியாட்களைப்போல் நாட்டின் அமைதியைக் குலைத்துக்கொண்டிருந்ததையும் அவரது ஆத்மா கண்டிருக்கும்.

சாசரின் ஆத்மா, பல நகரங்கள் வளர்ச்சியடையாமல், தான் வாழ்ந்த நாளில் இருந்தபடியே இருப்பதையும், சில நகரங்கள் குன்றிப்போய் இருப்பதையும் கண்ணுற்றிருக்கும். ஆனால், லண்டனும், பிரிஸ்டலும் செல்வத்தில் கொழித்ததோடல்லாமல் விரிவடைந்து அவைகளைச் சார்ந்த நகர்ப்புறங்களைத் தோன்றச் செய்திருந்தன. நகரங்களிலும் நாட்டுப்புறங்களிலும் அழகிய, புதியதாகக் கட்டப்பெற்றிருந்த கிருத்தவ ஆலயங்களும், தொழிற் சங்கக் கூடங்களும், பிரார்த்தனைக்கூடங்களும் எழும்பியிருந்தன. அத்துடன் முன்னரே இருந்த ஆலயங்கள் பெரியவையாக்கப்பட்டு அழகுடன் விளங்கின. இக் கட்டடங்கள் அனைத்தும், நுட்பமான வேலைப்பாடு அமைந்தும், அலங்காரமாகவும் சாசரின் ஆத்மா விற்குப் புதிய தோற்றம் அளிக்கும்வகையில் கட்டப்பெற்றிருந்தன. இங்கிலாந்தின் கிழக்கே இருந்த கவுன்டிகள் என்ற வட்டாரங்களில் இன்றும் காணப்படும் செங்கற் கட்டடங்களும் எழும்பியிருந்தன. பண்ணை வீடுகள், வாயில் மனைகள், கேம்பிரிட்ஜில் இருந்த இராணியின் கல்லூரி, டாடர்ஷால் என்பாரைப்போன்ற பிரபுக் களின் மாளிகைகள், எடான் என்ற இடத்தில் இருந்த அரசரின் கல்லூரி ஆகியவைகள் வானைநோக்கி எழும் செங்கற் கட்டடங் களைக் கொண்டிருந்தன.[1]

துறைமுகங்களைக்கொண்ட நகரங்களில், சாசர் வெகு காலத் திற்குமுன் தன் நூலில் சித்திரித்த மாலுமி ஒருவனைப்போல், தாடியுடன் காட்சியளித்த கப்பலோட்டிகள் ஆங்கிலக் கால்வாய், பிஸ்கே விரிகுடா ஆகியவைகளில் தாங்கள் துணிகரமாக நடத்தி வந்த வியாபாரத்தைப்பற்றியும், புயல்களைப்பற்றியும் பயங்கரக் கதைகளைக் கூறினர். அத்துடன் ஆங்கிலேயக் கடற்கொள்ளைக் காரர்கள், ஸ்பெயின் நாட்டுக் கப்பல்களையும், ஜினோவா நகரத்துக் கப்பல்களையும், ஃபிளான்டர்ஸ், பிரிட்டனி ஆகிய ஃபிரான்சு மாகாணங்களில் வாழ்ந்த மக்களின் கலங்களையும் சூறையாடு வதில் பெற்ற செல்வத்தைப்பற்றியும், அயல்நாட்டுக் கொள்ளைக் காரருடன் அவர்கள் நிகழ்த்திய போர்களைப்பற்றியும் விளக்கிக் கூறினர். இத்தகைய பழங்கதைகளினூடே சில அயல்நாட்டு மாலுமிகள், ஆஃபிரிக்காக் கண்டத்தைச் சுற்றிக்கொண்டோ

[1] உரோமானியர் காலத்தில் சிறிய ஓடுகளைப்போன்ற செங்கற்கள் உப யோகிக்கப்பட்டன. அதன்பிறகு பதினான்காம் நூற்றாண்டுவரை செங்கற்கள் செய்யவும், உபயோகிக்கபடவுமில்லை. அந் நூற்றாண்டில் செற்கற்கள் ஃபிளான் டர்சில் இருந்து தருவிக்கப்பட்டன. (செங்கற்களைக் குறிக்கும் ஆங்கில வார்த்தை ஃபிரான்சு அல்லது வல்லூன் மொழியில் இருந்து ஏற்பட்டதாகும்.) பதினைந்தாம் நூற்றாண்டில் இங்கிலாந்தின் கிழக்கே இருந்த கவுன்டி என்ற பிரிவுகளில் செங்கற்கள் அதிகமாக உபயோகத்திற்கு வந்தன. இப் பிரிவுகளில் உறுதியான களிமண்ணைத் தவிரக் கற்கள் கிடைக்கவில்லை. வீடு கட்டுவதற்கு வேண்டிய மரமும் குறைந்துகொண்டேவந்தது. அதனால் கிடைத்த களி மண்ணைக்கொண்டு செங்கற்கள் செய்யப்பட்டன.

அல்லது அட்லாண்டிக் மகாசமுத்திரத்தைக் கடந்தோ, கிழக்கிந்தியத் தீவுகளுக்குச் செல்ல முயல்கின்றனர் என்ற வதந்தியையும் கூறினர், அக் கப்பலோட்டிகள். அவர்கள் இவ் வதந்தியைப் பிரிஸ்டலில் வாழும் மக்கள் நம்புவதாகவும் தெரிவித்தனர்.

சாசரின் ஆத்மா, அரச அவையிலும், பண்ணை வீடுகளிலும், பிரபுக்களின் அரண்களிலும் தாம் விரும்பிய பண்பாடு மங்கிக் கொண்டு வந்ததை உணரும். தாம் இயற்றிய பாடல்களை மக்கள் தொடர்ந்து பாடிக்கொண்டிருப்பதை அவரது ஆத்மா கேட்கும். ஆனால், கவிஞர்கள் இலக்கியத்தில் புதிய பாணியைப் புகுத்தாமல், பழைய பாடல்களை அனேகமாக மனத்தில்கொண்டு, பாடல்களை இயற்றிவந்தனர் என்பதையும் அவ் வாத்மா தெரிந்துகொள்ளும். இளைஞரின் கற்பனை, இடைக்காலக் காதல் கதைகள் புனைவதில் இருந்த வழக்கைத் தொடர்ந்து ஏற்றுக்கொண்டிருந்தது. இங்கிலாந்திற்கும் ஃபிரான்சுக்கும் இடையே முடிவில்லாமல் நடந்து கொண்டிருந்த போரைப்போல், கிரேக்கருக்கும், டிராய் நகரத்தவருக்கும் இடையே நடந்த போரைப்பற்றி இளைஞர்கள் தொடர்ந்து படித்து இன்புற்றனர். ஆனால், ஆர்தர் என்ற அரசரைப்பற்றிய கதைகள் ஃபிரான்சு மொழியில் இருந்து, மாலோரி என்பாரால் என்றும் அழியாத ஆங்கில உரைநடை நூலாக எழுதப்பட்டுவந்தது.

காக்ஸ்டன், ஃபிளான்டர்சில் இருந்து கொண்டுவந்த தனது அச்சடிக்கும் இயந்திரத்தைக்கொண்டு, சாசரின் கான்டர்பரிக் கதைகளைத் துரிதமாக அச்சடித்து வெளியிடுவதை. சாசரின் ஆத்மா கண்டிருந்தால் மிக்க வியப்படைந்திருக்கும். காக்ஸ்டனின் அச்சு இயந்திரம் வருங்காலத்தில், மடங்களும் கோட்டைகளும் அழியவும், மதத்திலும் அரசியலிலும் மாற்றம் ஏற்படவும் காரணமாக இருக்கும் என்று சாசரின் ஆத்மா நினைத்திருக்கமுடியாது.

இரண்டாம் முறையாக, ஆங்கிலப் படைகள் ஃபிரான்சில் இருந்து துரத்தப்பட்ட பிறகு, இங்கிலாந்தில் ரோஜாப்பூ அடையாளப் போர் தொடங்கியது (1455-1485). இப் போர் எந்த அளவிற்கு ஆங்கிலேயரின் வாழ்க்கையைப் பாதித்தது என்று ஆராய வேண்டும். செயின்ட் ஆல்பன்ஸ் (St. Albans), டவுடன் (Towton), பார்னெட் (Barnet), பாஸ்வொர்த் ஃபீல்டு (Bosworth Field),[1] என்ற இடங்களில் 2,000 முதல், 10,000 வரை எண்ணிக்கை

[1] கிரெசி, அஜின்கோர்ட் முதலிய இடங்களில் நடந்த போர்களில் காலாட் படையினர் அம்பை எய்து போர்புரிந்தனர். நைட் என்று அழைக்கப்பட்ட குதிரைவீரர்கள், குதிரையில் இருந்து இறங்கிக் காலாட்படையினரின் பக்கத்திலிருந்து போர்புரிந்தனர். பீரங்கிகள் எப்போதாவது பயன்படுத்தப்பட்டன.

யுள்ள இரு படைகளின் இடையே நிகழ்ந்த போர்களைப்பற்றி மட்டுமே குறிப்பிடுவோமேயானால், ரோஜாப்பூ அடையாளப் போரின் முழு விளைவுகள் புலனாகா. யார்க்ஷீர் அல்லது மிட்லாண்ட்ஸ் போன்ற தொலைவில் இருந்த இடங்களில் நடந்த போர்களின் வெற்றிதோல்வி இரண்டும், லண்டனிலும் நாடு முழுவதிலும் ஏற்றுக்கொள்ளப்பட்டன. இப் போர்களின் வெற்றி தோல்வி, அப்போதைக்கு லங்காஸ்டர், யார்க் ஆகிய இரு வம்சங்களில் எந்த வம்சம் நாட்டை ஆளவேண்டும் என்பதை நிச்சயித்தன. பிற்காலத்தில் முதலாம் சார்லசுக்கும், நீடித்த பார்லிமென்டுக்கும் (Long Parliament) இடையே நிகழ்ந்த உள்நாட்டுப் போரின்போது, கொள்ளையடித்தும் வரி வசூலித்தும் இருதரப்பினரும் பெரும்படைகளைக்கொண்டு, பிரபுக்களின் கோட்டைகளையும், நகரங்களையும் அழித்தனர். ரோஜாப்பூ அடையாளப் போரில் ஈடுபட்டிருந்த பிரபுக்கள் மக்கள் அனைவரின் ஆதரவைப் பெற்றிருக்கவில்லை. அவர்கள் எந்த ஒரு தத்துவத்திற்காகவும் போரிடவில்லை. அரசாட்சியை அடையவே போரிட்டனர். அதனால் போரில் வெற்றிபெற்றவர், வரிகளை விதித்து மக்களின் ஆதரவை இழக்க நினைக்கவில்லை. மக்களின் ஆதரவைப் பெறுவதற்காக, வாணிபத்தைத் தடை செய்யவில்லை; பயிர்களைப் பாழ்செய்யவில்லை. சொற்ப காலத்திற்குமுன் ஃபிரான்சுடன் நடத்திய போரில் ஃபிரான்சில் இழைத்த கொடுமைகளை இங்கிலாந்திலும் செய்யவில்லை. அதனால் ரோஜாப்பூ அடையாளப் போரை ஒரு போராகவே கருத இடமில்லை.

எனினும், ரோஜாப்பூ அடையாளப் போரின் காலத்தில் நிலவிய குழப்பம் சமுதாயத்தைப் பாதித்தது. அரசாங்கத்தில் இருந்த குறைகளும், பிரபுக்களின் கொடிய செயல்களும் நாட்டிற்குக் கேடு விளைவித்தன. அடுத்த நூற்றாண்டில் டியூடர் வம்சத்தினரின் ஆட்சியை மக்கள் விரும்பினரென்றால் அதற்குக் காரணம் டியூடர் வம்சத்தினர் பிரபுக்களையும், அவர்களுக்கு அடுத்தபடியாகச் சமுதாயத்தில் இருந்த ஜென்ட்ரி வகுப்பினரையும் அடக்கி ஆண்டதாகும்.

ரோஜாப்பூ அடையாளப் போர் எந்தவிதத்தில் சமுதாயத்திற்குக் கேடு விளைவித்தது என்ற வினா எழலாம். இப் போரினால் நாட்டுப்புறங்களில் வாழ்ந்த மக்கள் அதிகமாகப் பாதிக்கப்பட்டனர். நகரங்களில் வாழ்ந்துவந்தோர் அவ்வளவாகப் பாதிக்கப்படவில்லை. ஆனால், இங்கிலாந்தில் வாழ்ந்துவந்த மக்களில் பத்தில் ஒன்பது பாகம் நாட்டுப்புறங்களிலேயே வாழ்ந்து வந்தனர் என்பதை மனத்தில் கொள்ளவேண்டும். நாட்டுப்

புறங்களில் நிலக்கிழார்களிடையே நில உரிமையைப்பற்றிய சச்சரவுகளை இப் போர் தோற்றுவித்தது.

மக்களுடைய செயல்கள் அவர்கள் வாழும் சமுதாயத்தைப் பொறுத்திருக்கிறது. பதினெட்டாம் நூற்றுண்டில் ஸ்கொயர் (squire) என அழைக்கப்பட்டோர், சதுப்பு நிலங்களை வடித்து நிலத்தின் பரப்பை அதிகரிக்காமலும், தங்கள் நிலங்களுக்கு வேலி யமைத்து ஒதுக்காமலும், பண்ணை வீடுகளைப் பழுதுபார்த்து உபயோகத்திற்கு ஏற்றதாகச் செய்யாமலும், மரங்களை வளர்க்கா மலும், தம் வீட்டுக் கூடத்தை அகலமானதாக ஆக்காமலும் இருந்துவந்தனர். பதினைந்தாம் நூற்றுண்டில் நாட்டுப்புறங்களில் வாழ்ந்த நிலக்கிழார்கள் அண்டையில் வாழ்ந்துவந்த மதிப்பிற் குரிய நிலக்கிழார்கள் செய்துவந்ததைக் கவனித்துத் தாங்களும் அப்படியே நடக்க முற்பட்டனர். அண்டையில் வாழ்ந்த பெரிய மனிதர்கள், அவரது நேரத்தையும், ஊக்கத்தையும், தங்கள் பண்ணை வீடுகளில் அவை கூட்டுவதிலும், குடியானவரிடமிருந்து குத்தகைப் பணம் வசூலிப்பதிலும், திருமணங்கள்மூலமாகவும், ஆயுதம் தாங்கிய பணியாட்களைக்கொண்டு அக்கிரமமாகவும், மற்றவரின் நிலங்களை அபகரிப்பதிலும், தங்கள் சொத்துகளை அதிகரிப்பதிலும் செலவிட்டனர். இந்தகையோரின் கொடுஞ் செயல்களுக்கு உள்ளானேர் சட்ட நடவடிக்கையாலாவது, தாங் களும் கொடுஞ்செயல்கள் புரிந்தாவது இழந்த நிலத்தைத் திரும்ப அடைய முயன்றனர். பாஸ்டன் குடும்பத்தினருக்குச் சொந்த மான நார்ஃபோக் போன்ற கவுன்டி என்ற பிரிவுகள் ஐரோப்பாவில் இருந்த நாடுகளைப்போல், ஒன்றுக்கொன்று திருமணங்கள்மூலம் தொடர்பு கொள்வது, ஒன்றின் பலத்தை மற்ருென்று வளரவிடாமல் தடுக்கமுயல்வது, கொடிய செயல்களில் ஈடுபடுவது, ஒன்றை ஒன்று ஏமாற்றத் திட்டமிடுவது ஆகிய செயல்களில் ஈடுபட் டிருந்தன. நில உரிமையைப்பற்றி ஏற்பட்ட சச்சரவின் காரண மாக நார்ஃபோக்கின், டியூக் பட்டம் பெற்ற பிரபு, கேஸ்டர் கோட் டையை கி.பி. 1469-ல் 3,000 வீரரைக்கொண்டு முற்றுகை யிட்டது, சமுதாயத்திற்கும் ரோஜாப்பூ அடையாளப் போருக்கும் இருந்த தொடர்பை விளக்கும்.

பிறருடைய சொத்தை அபகரிப்பதற்காகப் பிறர் பண்ணை வீடுகளை பீரங்கிகொண்டு தாக்குவதும், அவர்களைக் கொலை செய்வதும் சாதாரணமாக நடந்துவந்தன. கொலையைப் பட்டப் பகலில் பிறர் கண்முன்னேயே செய்தனர். சொத்திற்கு உரிய வரும், நீதிமன்றங்களில் குற்றவாளியின் குற்றங்களை எடுத்துக் கூறும் ஜூரிகளும் தங்கள் உயிருக்குப் பயந்து ஓடவேண்டும் என்ற எண்ணத்துடனே அத்தகைய கொலைகள் செய்யப்பட்டன. நீதி

மன்றங்களில் ஒருவர் தம்முடைய வழக்கை நிரூபித்துத் தமக்குச் சாதகமாகத் தீர்ப்பை அடையமுடியாமல் இருந்துவந்தது. குற்றவாளிகள் தாங்கள் பலமிக்க பிரபுக்கள், நைட் பட்டம் பெற்றவர் ஆகியோரின் ஆட்கள் என்று தங்கள் அடையாளச் சின்னங்கள் மூலம் வெளிக்காட்டி, தண்டனையில் இருந்து தப்பித்துக் கொண்டனர்.

இந் நிலையில், கௌன்டி என்ற பிரிவுகளில் முன்னுக்கு வரவேண்டும் என்ற எண்ணங்கொண்டவரும், பிறர் நிலத்தை அபகரிக்க நினைத்தோரும், தங்களுக்கு இருந்த நிலத்தைக் காப்பாற்றிக்கொள்ள நினைத்தோரும், அனைவரும் வலிமைமிக்க பிரபு ஒருவரின் பாதுகாப்பைப் பெற்றிருக்க வேண்டியிருந்தது. நீதிபதிகளையும் ஜூரிகளையும் பயமுறுத்தித் தங்களுக்குச் சாதகமான தீர்ப்பைப் பெறவும், பிரிவி கௌன்சில் என்று அழைக்கப்பட்ட தலைமை நீதிமன்றத்தில் தங்களுக்காகப் பேசவும், பிரிவி கௌன்சிலின் உதவிகொண்டு வட்டார நீதிமன்றங்கள் அளித்த பாதகமான தீர்ப்பை நிறைவேற்றப்படாமல் தடை செய்யவும், தங்களுக்குச் சாதகமான தீர்ப்பை அளிக்கச்செய்யவும், ஒரு வலிமைமிக்க பிரபுவின் உதவியே தேவைப்பட்டது. நீதிமன்றங்களில் அத்தகைய வலிமைமிக்கோரின் உதவியின்றிச் சாதகமான தீர்ப்பைப் பெறமுடியாமல் இருந்து வந்தது.[1]

அடுத்த நூற்றுண்டில் டியூடர் வம்சத்து அரசர்கள் பிரிவி கௌன்சிலையும், மற்ற நீதிமன்றங்களையும் பிரபுக்களின் கட்டுப்பாட்டில் இருந்து விடுவித்தனர். பிரபுக்களின் ஆயுதம் தாங்கிய பணியாட்களின் குழுக்களைக் கலைத்தனர். இதன் காரணமாக நாட்டில் அமைதி நிலவத் தொடங்கியது. ஆனுல், டியூடர் வம்சத்தினராலும் மனித இயற்கையை மாற்றமுடியவில்லை. பதினைந்தாம் நூற்றுண்டிலும், ஷேக்ஸ்பியர், தாம் வாழ்ந்த எலிசபெத் அரசியின் செல்வம் கொழித்த காலத்திலும், நீதிமன்றங்கள் எப்படித் தீர்ப்பளித்தன என்பதை, நீதிபதி ஷாலோ, அவருடைய வேலையாள் டேவி ஆகிய இருவரின் பேச்சில் இருந்து விளங்கவைக்கின்றுர்.

டேவி: ஐயா, ஹில்லைச் சார்ந்த. கிளமென்ட் பெர்க்ஸ் என்பாரின் எதிரியான, வான்காட்டைச்சார்ந்த, வில்லியம் விசார் என்பாருக்குச் சாதகமாகத் தீர்ப்பளிக்கக் கோருகிறேன்.

[1] கி.பி. 1451-ல் நார்ஃபோக்கைச் சார்ந்த ஷெரீஃப் என்ற அரசரின் அதிகாரி, ராபர்ட் ஹங்கர்ஃபோர்டு, லார்ட் மோலின்ஸ் ஆகியோரை எதிர்த்து நீதிமன்றத்தில் வழக்குத் தொடர்வதில் பயன் ஏதும் இருக்காது என்று ஜான் பாஸ்டன் என்பாருக்கு அறிவித்தார். ஏன் என்ருல் அரசர், தனக்கு லார்ட் மோலின்ஸ்சுக்குச் சாதகமாகத் தீர்ப்பளிக்கக்கூடியவரைத் தேர்ந்தெடுத்து ஜூரிகளாக நியமிக்குமாறு கட்டளை அனுப்பியிருந்தார் என்று அறிவித்தார்.

ஷாலோ : டேவி, விசாரின்மேல் பல குற்றச்சாட்டுகள் இருக்கின்றன. எனக்குத் தெரிந்தவரையில் விசார் ஒரு பெயரெடுத்த கள்வனுவான்.

டேவி : ஐயா, நான் அதை ஒப்புக்கொள்கிறேன். எனக்காக விசாருக்குச் சாதகமாகத் தீர்ப்பளியுங்கள். நல்ல மனிதர்கள் தம்மைப்பற்றி நன்கு எடுத்துக்கூறமுடியும். ஆனுல், அப்படி ஒரு கள்வனுல் செய்ய முடியாது. நான் உங்களிடம் எட்டு ஆண்டுக் காலமாக உண்மையாய் உழைத்து வருகிறேன். ஓரிரண்டுமுறை நல்ல மனிதருக்கு எதிரியான கள்வனை ஆதரிக்காவிட்டால், உங்களிடம் வேலைசெய்யும் எனக்குப் பெருமை ஏது?

ஷாலோ : அப்படியானுல் சரி ; விசாரை விடுதலை செய்து விடுகிறேன்.

பதினைந்தாம் நூற்ருண்டில் நில உரிமையைப்பற்றிய வழக்குகள் பல ஆண்டுகளுக்கு நீடித்தன. இதனுல் நிலத்தைப் பயிர் செய்துவந்த குடியானவன் தொல்லைக்குள்ளாக்கப்பட்டான். நிலத்திற்கு உரிமை கொண்டாடிய இரு கட்சியினரும் தங்கள் ஆயுதம் தாங்கிய பணியாட்களை அனுப்பிப் பலவந்தமாகக் குத்தகைப் பணத்தைக் குடியானவர்களிடமிருந்து பெற்றனர். பணியாட்களை வைத்திருப்பதால் ஏற்பட்ட செலவு, வழக்குத் தொடர்வதால் ஏற்பட்ட செலவு, பயிர்த் தொழிலில் அதிக வருவாய் இல்லாமை ஆகியவை நிலக்கிழார்களைப் பழுதுபார்க்கவேண்டியவைகளைப் பழுதுபார்க்காமல் அப்படியே விட்டுவைக்கச் செய்தன. அத்துடன் குத்தகைப் பணத்தைக் குடியானவர்கள் கொடுக்க முடியாத அளவிற்கு உயர்த்தப்படுவதற்கும் அவை காரணமாய் இருந்தன. நிலக்கிழார்களின் செலவிற்குத் தேவைப்பட்ட பணம் குத்தகைப் பணத்திலிருந்துதான் கிடைத்தது. அக் காலத்தில் ஆடு வளர்ப்பவராக இல்லாதிருந்தவர்க்குப் பணமாக வருமானம் கொடுத்தது நிலம்தான். தங்கள் வீட்டிற்குத் தேவைப்பட்ட உணவு ஆடை முதலியன, தங்களுக்கென்று ஒதுக்கப்பட்ட நிலத்திலிருந்து நிலக்கிழார்கள் பெற்றனர். இதைத்தவிரக் குடியானவர் தாங்கள் கொடுக்கவேண்டிய குத்தகைப் பணத்திற்குப் பதிலாகக் கொடுத்த பொருள்களாலும் தங்கள் தேவைகளை அவர்கள் பூர்த்தி செய்துகொண்டனர்.[1]

[1] இக் காலத்தில் உயர்ந்த வகுப்பினரும் நடுத்தர வகுப்பினரும் தங்கள் சொத்துகளில் இருந்து வருமானம் பெற்று வருவதுபோல், அக் காலத்தில் சாதாரண மக்கள் எவ்வித வருமானமும் பெறவில்லை. ஆனுல், பிரபுக்களும் பாதிரியார்களும் நிலத்திலிருந்து மட்டுமன்றி, மற்ற வகையிலும் வருமானம் உடையவராய் இருந்தனர். அரசியலில் ஆபத்துகள் இருந்தாலும், நல்ல வருமானம் கிடைத்தது. அரசியல்வாதிகள், பெரிய வியாபாரிகளுடன் தொடர்பு

நிலக்கிழாருக்கும், குத்தகைக்குப் பயிரிட்ட குடியானவனுக்கும் இடையே இருந்த தொடர்பு, தற்காலத்திலே இருப்பதுபோல் இருந்தது. இந் நிலே வேலியிடப்படாத நிலங்களிலும், வேலியிடப் பட்ட நிலங்களிலும் ஒன்ருகவே இருந்தது. பண்ணேமுறை ஆட்சியும், குடியானவனின் அடிமைவாழ்வும் மறைந்துகொண்டிருந்தன. எனினும், நிலக்கிழார்கள் பண்ணே வீட்டு மன்றத்தில் தலேமை தாங்கும் உரிமையை விட்டுக்கொடுக்கவில்லே. ஆனுல், அவர்கள் தங்கள் பிரதிநிதிகளேத் தலேமைதாங்க வைத்தனர். பிரபு குடியானவர்கள் முதலியோருக்கிடையே, குத்தகைபற்றிய நிபந்தனேகள் இம் மன்றத்தில் நிச்சயிக்கப்பட்டன. குடியானவர்கள் ஒன்றுபட்டுப் பிரபு அல்லது அவரது பிரதிநிதி ஆகியோர்களின் விருப்பத்திற்கு மாருக, இம் மன்றத்தில் எதையும் செய்ய முடிந்ததில்லே. எனினும், குடியானவர்கள் தாங்களே நீதிபதிகளாக இம் மன்றத்தில் தீர்ப்புக் கூறியதாலும், பண்ணே வீட்டின் வழக்கங்களேயொட்டி எல்லார் முன்னிலேயிலும் விவகாரங்கள் தீர்க்கப்பட்டமையாலும், பிரபு கொடுமை செய்வதற்கு வழி இல்லாதிருந்தது. அத்துடன் இந்த மன்றத்தில் ஏழைகளாக இருப்பவரும் பங்குகொண்டமையால், தங்களேத் தாங்களே ஆண்டுகொள்வதில் பயிற்சி பெற்றனர்.

நிலக்கிழார்களுக்கும், குத்தகைக்கு எடுத்துக்கொண்ட குடியானவர்களுக்கும் இடையே, யார் எதைப் பழுதுபார்ப்பது, எவ்வளவு குத்தகைப் பணம் கொடுக்கவேண்டும் என்பவைகளேப் பற்றிச் சச்சரவுகள் நடந்தன. இச் சச்சரவுகள், பண்ணேமுறை ஆட்சியின்படி குடியானவர்கள் குத்தகைப் பணமும் கொடுத்து, பிரபுவின் நிலத்தில் வேலே செய்யவேண்டிய கட்டாயத்திற்குப் பதிலாக, ஒரு குறிப்பிட்ட தொகையைக் குத்தகையாகக் கொடுக்கும் பழக்கம் ஏற்பட்டுவந்ததை எடுத்துக்காட்டுகின்றன. நிலக்கிழார்களின் கடிதங்களில் இருந்து அவரது முழு கவனத்தையும் மேற்கூறிய சச்சரவுகளேத் தீர்த்து வைப்பதிலேயே செலவிட

---

கொண்டு அவ் வழியிலும் வருமானம் பெற்றனர். கார்டினல் பதவி வகித்த பூபோர்ட் என்ற பெருடைய பாதிரியார் கம்பளி வியாபாரத்திலும், கார்ன்வால் டெவான் என்ற இடங்களில் வெள்ளி தோண்டி எடுப்பதிலும் ஈடுபட்டிருந்தார். மந்திரியாகவும், சிஸ்டர் என்ற நகரத்தின் பிஷப்பாகவும் இருந்த ஆதம் மாலின்ஸ் என்பார் எத் துறைமுகத்திலிருந்தாவது கம்பளியை ஏற்றுமதி செய்ய, தனக்கிருந்த உரிமையை ரத்து செய்வதற்குப் பதிலாக ஆரும் ஹென்றியிடமிருந்து ஆயிரம் பொன் பெற்ருர். [ராம்சே என்பார் எழுதியுள்ள, 'யார்க் அண்டு லங்காஸ்டர்' (York and Lancaster) என்ற நூலில் பக்கம், 79] இந்த மாலின்ஸ் என்பார், அக் காலத்தில் வாழ்ந்துவந்தோருக்கு ஓர் எடுத்துக்காட்டாவர். அரசியல்வாதியாகவும் பாதிரியாராகவும் இருந்த இவர் நாட்டிற்குச் செய்த சேவைக்காக சிஸ்டர் நகரத்தின் பிஷப் பதவியைப் பெற்ருர். அத்துடன் 12,000 ஏக்கர் நிலத்திற்கு வேலியிட்டு ஒதுக்கவும், பன்னிரண்டு பண்ணே வீடுகளே மதில் சுவர்கள் கட்டிப் பாதுகாத்துக்கொள்ளவும் அனுமதி கொடுக்கப்பட்டார்.

வேண்டி இருந்தது என்று தெரியவருகின்றது. நிலக்கிழார்களின் பிரதிநிதிகளும், தொல்லை கொடுத்துவந்த குடியானவரிடமிருந்து குத்தகைப் பணத்தைப் பெறுவதில் அதிக சிரமப்படவேண்டியிருந்தது. பாஸ்டன் குடும்பத்தின், பாதிரியாராகவும், அக் குடும்பத்தின் மற்ற வேலைகளைக் கவனித்துவந்தவருமான, ஜேம்ஸ் கிளாய்ஸ் என்பவர், குடியானவர்கள் குத்தகைப் பணத்தைக் கொடுத்திராவிட்டால், அவர்களின் கால்நடைகளையும் ஏர்களையும் கைப்பற்றிக்கொண்டு திரும்புவார்; அல்லது அப்படிச் செய்வதாகப் பயமுறுத்திச் சேரவேண்டிய தொகையை வசூலிப்பார். ஆனால், அப்படிப்பட்ட அவரும் ஒரு குத்தகைக்காரனிடமிருந்து எதையும் எடுத்துச்செல்லாது விடுத்தார். ஏனென்றால், அக் குத்தகைக்காரன் தன் தாயின் வீட்டில் இருந்தான். அங்கிருந்து அவன் பொருள்களை எடுத்துச்சென்றால் அவனது தாயின் சாபத்திற்கு ஆளாகவேண்டும் என்று பயந்தே எதையும் எடுத்துச்செல்லாமல் விடுத்தார்.

நிலக்கிழார்களின் பிரதிநிதியாகப் பாதிரியார்கள் வேலை பார்த்துவந்தனர். இதன் காரணமாகப் பாதிரியார்கள் இழிந்த செயல்கள் செய்ய வேண்டியிருந்தது.[1] பொதுமக்கள் கிருத்தவ ஆலயங்களில் வேலைசெய்துவந்த பாதிரியார்களைத் தங்கள் தொழில்களில் பயன்படுத்தினர். இப்படிப் பாதிரியார்கள் சமயத் தொண்டன்றி, மற்றத் தொழில்களில் ஈடுபட்டுவந்தது தொன்று தொட்டுவந்த பழக்கமாகும். பாதிரியார்களைத் தவிர மற்றவர்கள் எழுதப்படிக்கத் தெரிந்தவராய் இல்லாததால், பாதிரியார்களைப் பொதுமக்கள் தங்கள் தொழில்களில் ஈடுபடச் செய்தனர். ஆறும் ஹென்றி அரசர் தம் அதிகாரிகளைப் பாதிரியார்களாக நியமித்து, மதஸ்தாபனத்தின் வருமானத்தில் இருந்து அவர்களுக்குச் சம்பளம் கொடுத்தார். மக்கள் வரிவசூலிப்பதை விரும்பாததால் அவர் இப்படிச் செய்தார்.

பாரிஷ் என்ற பிரிவுகளில் பாதிரியார்களாக இருந்தவர்கள், அவர்தம் கிருத்தவ ஆலயங்களுக்குச் சொந்தமான நிலங்களைப் பயிர் செய்வதிலேயே அனேகமாகத் தங்கள் கவனத்தைச் செலுத்தினர். ஆலயங்களுக்கு நாற்பது முதல் அறுபது ஏக்கர் நிலங்கள் சொந்தமாக இருக்கும், இந் நிலங்களைத் தவிர, மற்றவரிடம்

[1] 'பிளாக் ஆரோ' (Black Arrow) என்ற நூலில் வரும் சர் ஆலிவர் ஓட்ஸ் என்ற பெயருடைய பாதிரியாருக்கும், அவர்தம் எஜமானனை சர் டேனியல் பிராக்லி என்பாருக்கும் இடையே இருந்துவந்த தொடர்பைப்பற்றி, ஆர். எஸ். ஸ்டீவென்சன், 'பாஸ்டன் லெட்டர்ஸ்' (Paston Letters) என்ற நூலில் இருந்து தம் நூலில் எடுத்தாளுகிறார். சமுதாயத்தைப்பற்றிய மற்றச் செய்திகளும் அப்படி எடுத்தாளப்பட்டவைகளே. இவான் ஜான் என்பார் எழுதிய, 'கிரிப்பில்டு ஸ்பிலெண்டர்' (Crippled Splendour) என்ற நூலில் பதினைந்தாம் நூற்றாண்டில் சமுதாயத்தைப்பற்றிய விரிவான விளக்கத்தைக் காணலாம்.

நிலத்தைக் குத்தகைக்கு எடுத்துக்கொண்டு அவைகளையும் பயிர் செய்துவந்தனர். ஃபீல்டிங் எழுதிய, 'ஜோசப் ஆண்ட்ரூஸ்' (Joseph Andrews) என்ற நூலில் பயிர்த்தொழிலில் மிக்க அக்கறை காட்டிய 'ட்ரூலிபெர்' என்ற பாதிரியார் இடைக்காலத்தில் பாதிரியார்கள் வாழ்ந்துவந்த வாழ்க்கைக்கு ஓர் எடுத்துக்காட்டாவர்.

ஏதோ ஒரு சமயம் நிலங்களுக்கு வேலியிடப்பட்டன; மற்றும் ஒவ்வொரு குடியானவனும் தன் பாகத்தை ஒரே இடத்தில் ஒரே துண்டாகப் பெற்ருன். இப்படிச் செய்யக் குடியானவர்கள் ஒன்று கூடி முடிவு செய்யவேண்டும். ஒருவர், மற்றவர் பங்கைப் பணம் கொடுத்து வாங்கிக்கொள்ளமுடியும். பதினைந்தாம் நூற்ருண்டில் இங்கிலாந்தில் சிக்கனமாக வாழ்ந்த குடியானவர்கள், பத்தொன்பதாம் நூற்ருண்டில் ஃபிரான்சில் வாழ்ந்த குடியானவர்களைப் போலப் பணத்தைச் சேமித்து, அண்டைவீட்டாரின் நிலங்களை வாங்கித் தங்கள் நிலங்களுடன் சேர்த்துக்கொண்டனர்.

பதினைந்தாம் நூற்ருண்டு, பொதுவாகக் குடியானவர்களுக்கும், நிலத்தில் கூலிக்கு வேலை செய்தோருக்கும் நன்மை பயந்தது. இந்த நூற்ருண்டில் நிலத்தின் சொந்தக்காரர்களுக்கு நன்மை ஏற்படவில்லை. கொள்ளை நோய் (Black Death) என்று சொல்லப்பட்ட நோயினுல் குறைந்த ஜனத்தொகை, பிறகும் கொள்ளை நோய் அடிக்கடி தோன்றியதால் அதிகரிக்கவேயில்லை. கொள்ளை நோயினுல் அடிமைநிலையில் இருந்த குடியானவர்களின் எண்ணிக்கை மிகவும் குறைந்துவிடவே, கூலிக்கு வேலைசெய்துவந்த பயிர்த் தொழிலாளிகள் அதிகக் கூலி கேட்டனர். இதனுல் நிலக்கிழார்கள் தங்களுக்காக வைத்திருந்த நிலத்தைக் கூலிக்கு வேலை செய்தவரைக்கொண்டு பயிர் செய்வதற்கு அதிகமாகச் செலவிட வேண்டி இருந்தது. அத்துடன் தங்கள் உபயோகத்திற்கு வேண்டாத நிலங்களைக் குத்தகைக்கு விடுவதும் கடினமாயிற்று. பதின்மூன்ரும் நூற்ருண்டில் நிலத்திற்கு இருந்த மதிப்பு, கொள்ளை நோயின் காலத்திற்குப்பிறகு குறைந்துவிட்டது. பயிர் செய்யப்படுவதற்கு வேண்டிய நிலம் இருந்தது. ஆனுல், பயிர்த்தொழில் செய்யும் ஆட்கள் கிடைப்பது அரிதாயிற்று. இந் நிலை பதினன்கு, பதினைந்து நூற்ருண்டுகளில் தொடர்ந்து, டியூடர் வம்சத்தினரின் ஆட்சிக்காலத் தொடக்கம்வரை இருந்துவந்தது.

ரோஜாப்பூ அடையாளப் போரின் காலத்தில் இங்கிலாந்து முன்பிருந்ததைவிட ஏழ்மை நிலையில் இருந்தது. ஃபிரான்சுடன் நடந்த போரில் தோல்வியும், அதைத் தொடர்ந்து உள்நாட்டுப் போரும், ஜனத்தொகையில் குறைவும், இங்கிலாந்தின் ஏழ்மை நிலைக்குக் காரணமாயிருந்தன. நகரங்களிலும் துறைமுகங்களிலும்

மிகக் குறுகிய காலத்திற்குள் கொள்ளைநோய் திரும்பத் திரும்பத் தோன்றியது. அவ் விடங்களில் இந் நோய் பரவுவதற்குக் காரணமான எலிகள் விரைவில் அதிகரித்ததுதான் அதற்குக் காரணம். எந்த இடங்களில் செல்வம் அதிகரித்துவந்ததோ அந்த இடங்களில் கொள்ளைநோய் அடிக்கடி தோன்றிச் செல்வம் செழிப்பதைத் தடை செய்தது. இதன் காரணமாக நாட்டின் வருமானம், சாசரின் வாழ்நாளில் இருந்ததைவிடக் குறைவாகவே இருந்தது. ஆனால், மக்கள் அனைவரும் அனேகமாக ஒரே அளவு வருமானம் உடையவராய் இருந்தனர். பொதுவாகப் பொருளாதார நிலை குடியானவர்களுக்கும் ஏழைகளுக்கும் சாதகமாக இருந்து வந்தது.[1]

இக் காலத்தில் நாட்டுப்புறங்களில் வாழ்ந்தோரின் வாழ்க்கையைப்பற்றி, பாஸ்டன் குடும்பத்தினரின் கடிதங்களில் இருந்தும், ஸ்டோனர் (Stonor), செலி (Cely) முதலியோர் எழுதி வைத்துச் சென்ற ஏடுகளில் இருந்தும் நன்கு தெரியவருகின்றது. பதினைந்தாம் நூற்றாண்டில் உயர்ந்த வகுப்பினரிடையே ஆண்களும் பெண்களும், அவ் வகுப்பினரின் பிரதிநிதிகளாய் இருந்த பாதிரியார்களும், பாதிரியார் அல்லாதோரும், கடிதம் எழுதுவதை முதன் முதலாக ஆங்கிலத்தில் எழுதத் தொடங்கினர் என்பதை கவனத்தில் கொள்ளவேண்டும். அரசரும் பிரபுக்களும், தாங்கள் படித்தறிய முடியாத பத்திரங்களுக்கு முத்திரையிட்டுத் தங்கள் சம்மதத்தைத் தெரிவித்த காலம் முதற்கொண்டு, கல்வி கற்பதில் முன்னேற்றம் அடைந்திருந்தது.

[1] இதைப்போலவே இன்றும் நாட்டின் வருமானம் குறுகிய காலத்திற்குமுன் இருந்ததைவிடக் குறைவாகவே யிருக்கின்றது. ஆனால், எல்லா வகுப்பினரும் அனேகமாக சமமான வருமானத்தை உடையவராய் இருக்கின்றனர். இகௌனமிக் ஹிஸ்டரி ரிவ்யூ (Economic History Review) மே, மாதம், 1939 இதழில், பேராசிரியர் பாஸ்டனின், 'பதினைந்தாம் நூற்றாண்டு' (The 15th Century) என்ற கட்டுரையைப் பார்க்கவும்.

பதினைந்தாம் நூற்றாண்டில் இருந்த 450-க்கும் மேற்பட்ட பண்ணை வீடுகளின், வீட்டுக் கணக்கை ஆராய்ந்ததில், 400-க்கும் மேற்பட்ட பண்ணைகளில் குத்தகைக்கு விடப்பட்ட நிலம் குறைவாகவும், அதற்கு ஏற்றாற்போல் குத்தகைப் பணத்தில் இருந்து கிடைத்த வருமானம் குறைவாகவும் இருந்தது. ஜனத்தொகை குறைவும் விலைவாசிகளின் குறைவும், குடியானவரை எந்த வகையில் பாதித்தது என்று எண்ணிப்பார்க்கலாம். நிலம் ஏராளமாக இருந்ததால், குறைந்த குத்தகைப்பணமே பெற முடிந்தது. நிலத்தைக் குத்தகைக்கு எடுத்துக்கொண்ட குடியானவரின் பொருளாதார நிலை உயர்ந்தது. அதேபோல் பயிர்த்தொழிலில் ஈடுபட்டிருந்த தொழிலாளர்களின் வாழ்க்கைத் தரமும் உயர்ந்தது. உண்மையிலேயே பாதிக்கப்பட்டவர்கள் நிலத்தின் சொந்தக்காரர் ஆவர்.

கேம்பிரிட்ஜ் ஹிஸ்டாரிகல் ஜர்னல் (Cambridge Historical Journal) என்ற சஞ்சிகையின், 1941 ஆம் இதழில், ஜான் சால்ட் மார்ஷ் எழுதியுள்ள 'பிளேக் அண்டு இகௌனமிக் டிக்லைன் இன் இங்லண்டு இன் தி லேடர் மிடில் ஏஜஸ்' (Plague and economic decline in England in the later Middle Ages) என்ற கட்டுரையைப் பார்க்கவும்.

காக்ஸ்டனின் காலத்தில் கடிதங்கள் பொழுதுபோக்கிற்காக எழுதப்படவில்லை. சட்டம், வியாபாரம், வட்டார அரசியல் முதலியவற்றை மனத்திற்கொண்டு எழுதப்பட்டன. அதனால் ஏதாவதொரு பயனைக்கருதி எழுதப்பட்டன எனக் கூறலாம். இக் கடிதங்கள் சட்டங்கள், வியாபாரம், அரசியல் முதலியவற்றைப் பற்றிக் கூறுவதுடன் பழக்க வழக்கங்களையும் எடுத்துக்காட்டு கின்றன. குடும்ப வாழ்க்கை, காதல், திருமணம் முதலியவை களைப்பற்றி, பதினைந்தாம் நூற்றுண்டில் எழுதப்பட்ட இக் கடிதங் கள் எடுத்துச்சொல்லும் செய்திகள் கவனிக்கத்தக்கவையாகும். தற்காலத்தவருக்கு அவை புரிந்துகொள்ள முடியாதனவாக இருக்கலாம். இக் கடிதங்கள், எழுதப்பட்ட காலத்திலும், அதற்கு முன்னும் சமுதாய நிலை எப்படி இருந்தது என்று எடுத்துக் கூறு கின்றன எனலாம். இக் கடிதங்கள் எழுதப்பட்ட காலத்திற்கு, முந்திய காலத்திற்கு இவைபோன்ற கடிதங்கள் நமக்குக் கிடைத்தில. ஆகையால் இக் கடிதங்கள் தீட்டும் சமுதாய நிலையைக் கொண்டு இக் கடிதங்கள் எழுதப்பட்ட காலத்திற்குமுன் சமுதாயம் எவ்வாறிருந்தது என்பதை ஊகிக்கக்கூடும்.

சிறுவர், சிறுமியர் தங்கள் பெற்றோருக்குக் காட்டவேண்டிய மரியாதை, பள்ளியிலும் வீட்டிலும் அவர்களுக்கிருந்த கட்டுப்பாடு, சிறுவர், சிறுமியர், வேலையாட்கள் ஆகியோர் சாட்டையால் அடிக்கப்பட்டது ஆகியவை தற்காலத்தவருக்கு விந்தை பயப்பன வாய் இருக்கமுடியாது. நைட் பட்டம்பெற்ற குதிரை வீரர்கள் பெண்களுக்குப் பணிபுரிந்தும், அவர்களை இடர்களில் இருந்து காத்தும், அவர்கள் அன்பிற்காக ஏங்கியும் இருந்த காலம், இடைக் காலம் என்று நினைக்கும் சிலர் உண்மையை அறிவாரேயாயின், திடுக்கிடுவர். நைட் பட்டம்பெற்றவர், பிரபுக்கள் ஆகியோரின் வாழ்க்கையில் காதலுக்கும் திருமணத்திற்கும் சம்பந்தமில்லா திருந்தது; ஏனென்றால், மணமக்களைப் பெற்றோர் தேர்ந் தெடுத்தனர். அனேகமாகத் திருமணம் நிச்சயிக்கப்படும் காலத்தில் மணமக்கள் சிறுவர், சிறுமியராக இருந்தனர். வளர்ந்து வயதுவந்தவராயினும், பணம் அல்லது சொத்து முதலிய காரணங்களுக்காக அவர்களின் பெற்றோர்கள் திருமணத்திற்கு இசைந்தனர். பாஸ்டன் குடும்பத்தினரும், அவரது குடும்பத்தைப் போன்ற மற்றக் குடும்பத்தினரும், தங்கள் மக்களின் திருமணத்தின் மூலம், தங்கள் குடும்ப நிலையை உயர்த்திக்கொள்ள நினைத்தனர். செல்வாக்குடையவரின் ஆதரவைப் பெறவும், பணம் அல்லது சொத்து முதலியவைகளை அடையவும், பெற்றோர்களால் நிச்சயிக்கப் பட்ட வரனை மணக்கச் சம்மதிக்காவிட்டால், பெற்றோர்கள் அப்படிச் செய்தவரைக் கொடுமையாக நடத்தினர். இக் கொடுமை பெண்களை அதிகம் பாதித்தது. எலிசபெத் பாஸ்டன் என்ற

பெயருடையவர், ஐம்பது வயதான, வலிவிழந்த, வனப்பற்ற, ஏற்கெனவே மணந்து மனைவியை இழந்துவிட்ட ஒருவரை மணக்கத் தயங்கியபோது, சுமார் மூன்றுமாத காலத்திற்குக் கொடுமைக்குள்ளாக்கப்பட்டார். வாரத்திற்கு ஒன்று அல்லது இரண்டுமுறை நன்முகப் புடைக்கப்பட்டார். ஒரே நாளில் சில சமயம் இரண்டுமுறை அடிவிழும். இதன் காரணமாகத் தன் தலையில் இரண்டு அல்லது மூன்று இடங்களில் எலிசெபத் காய மடைந்தார். பாஸ்டன் குடும்பத்தின் பொறுப்பை ஏற்றுநடத்தி வந்த, மிகுந்த மதப்பற்றும், கௌரவமும்கொண்ட, எலிசெபெத்தின் தாயாரான ஆக்னஸ்தான் இப்படிக் கொடுமைப்படுத்தியது. பல பெற்றோர்கள் தங்களுக்கு மிகுந்த செல்வம் கிடைக்குமானால், தங்கள் மக்களை யாருக்கேனும் திருமணம் செய்துகொடுக்கத் தயாராய் இருந்தனர். பாஸ்டன் குடும்பத்தினரின் அண்டைவீட்டு வாசியான ஜான் வின்டாம் என்பார் லண்டன் நகரத்து வணிகர் ஒருவரிடம் பணம் பெற்றுக்கொண்டு தம் வயதுவராத மகனுக்குத் திருமணம் செய்துவைக்கும் உரிமையை விற்றுவிட்டார்.

பதினைந்தாம் நூற்றுண்டில் காணப்பட்ட இவ் வழக்கங்கள் பழங்காலத்திலிருந்து வந்தவையாகும். இடைக்கால இலக்கியத்தில் காணப்படும் பழக்கவழக்கங்களுக்கு, மேற்கண்ட பழக்க வழக்கங்கள் முரணானவையாகத் தோற்றமளிக்கலாம். பன்னிரண்டு, பதின்மூன்று, பதினான்கு நூற்றுண்டுகளில் தோன்றிய இலக்கியங்கள் ஆடவர் பெண்ணின் காதலுக்காக ஏங்குவதையும், நைட் என்ற பட்டம்பெற்ற குதிரைவீரர் தங்கள் காதல் சீமாட்டிகளுக்காகப் புரிந்த செயல்களையும் உருவகப்படுத்தி, உவகை பொங்கும்வகையில் விளக்கியிருக்கின்றன. இந் நிலை பாஸ்டன் குடும்பத்தினருக்கும் அவருடைய அண்டை வீட்டாருக்கும் தெரிந்ததே. இலக்கியத்தில் கண்ட வாழ்க்கைக்கும் அன்றாட வாழ்க்கைக்கும் எவ்வித ஒற்றுமையும் இருக்கவில்லை என்று கூறலாம். காதல் இலக்கியங்களில் காணப்படும் காதல் வாழ்க்கைக்கும் நடைமுறையில் நடந்த திருமணங்களுக்கும் எவ்விதத் தொடர்பும் இருக்கவில்லை. டான்டேயின் காதல் இலக்கியத்தில் பிறர் மனைவியை ஒரு தேவதை என்று கருதி வணங்குவதைக் காண்கிறோம். அதேபோல் மற்றக் காதல் இலக்கியங்களில் அரச அவையில் ஒரு பெண்ணின் காதலுக்காகப் பல ஆடவர் அவளுடன் நெருங்கிப் பழகிவந்ததைக் காண்கிறோம். இத்தகைய வாழ்க்கைக்கும் அன்றாட வாழ்வில் நடந்த திருமணங்களுக்கும் எவ்வித ஒற்றுமையும் இருக்கவில்லை என்று கூறலாம்.

இடைக்காலத்தில் கல்வி கற்ற ஆடவரும், பெண்மணிகளும், திருமணம் வாழ்க்கையில் ஏற்பட்ட உறவாகும் என்று கருதினர்.

காதலுக்கும் திருமணத்திற்கும் ஒருவிதத் தொடர்பும் கிடையாது என்று கருதினர். காதல், திருமணத்திற்குப் பிறகு தம்பதிகளிடையே தோன்றலாம் என்ற எண்ணமுடையராய் இருந்தனர். உண்மையில் திருமணத்திற்குப்பின் மணமக்கள் ஒருவர் மற்றவரை நேசிக்கத் தொடங்கினர். இதற்குமாறாக மணமக்கள் ஒருவர் மற்றவரை நேசிக்க முற்படவில்லையாயின், மனைவியானவள் தன் சொல் திறமையால் தன்னுடைய உரிமைகளைக் காத்துக்கொள்ளத் தலைப்பட்டாள். ஆனால், வீட்டின் அதிகாரம் கணவனைச் சார்ந்தது என்ற நம்பிக்கை இருந்துவந்தது. அதனால் கணவன் மனைவியைக் கையாலும் கழியாலும் புடைத்துத் தனக்கு அடங்கிநடக்கும்படி செய்தால் அவனது செயலைக் கண்டிக்காது விடுத்தனர். அடிக்கடி தாய்மையை எய்தும் நிலை பெண்களை ஆண்களுக்கு அடங்கி நடக்கச் செய்தது. பிறந்த குழந்தைகளில் பல இறந்துவிட்டதால் தாய்மை நிலையை அடையவேண்டிய நிலை பெண்களுக்கு அடிக்கடி ஏற்பட்டது. இத்தகைய மணவாழ்க்கை சிறந்ததாக இருக்கவில்லை. ஆனால், மருத்துவ அறிவு வளர்ந்திராத அக் காலத்தில் கொள்ளைநோயால் ஏற்பட்ட ஜனத்தொகைக் குறைவைச் சரி செய்வதற்கு இப்படிப் பெண்கள் அடிக்கடி தாய்மை நிலையை அடையவேண்டியிருந்தது.

மணவாழ்வு எவ்வளவு உயர்ந்தது, அது எப்படி அமைய வேண்டும் என்ற எண்ணங்கள் அக் கால மக்களிடையே காணப்படவில்லை. மதஸ்தாபனம் துறவியின் வாழ்க்கையை வற்புறுத்தி வந்ததால், மதஸ்தாபனம் மணவாழ்வைத் திருத்தி அமைக்கும் நிலையில் இருக்கவில்லை. பாதிரியார்கள் பெண்களைப் பேய்கள் என்று கருதிவந்தனர். மதஸ்தாபனம் பெண்களைக் கயவர்களிடமிருந்தும், கொடுமைகளினின்றும் காப்பாற்ற முயன்றுவந்தது. திருமணத்தினால் ஏற்பட்ட பிணிப்பை மதஸ்தாபனம் வற்புறுத்தி வந்ததால், கணவர்கள் தங்கள் மனைவியரை விட்டுவிட முடியாத நிலை இருந்துவந்தது. சில சமயம் பணத்தைக் கொடுத்துக் கணவர்கள் விவாகரத்து பெற்றுவந்தனர். பாதிரியார்கள் துறவியரின் வாழ்க்கையைச் சிறப்பித்து வந்ததால், மணவாழ்விற்கு முக்கியத்துவம் கொடுக்க முடியவில்லை. பல குறைகள் காணப்பட்ட இவ் வுலகில் பாதிரியார் அல்லாதார் மணவாழ்வுவாழ அனுமதிக்கப்படவேண்டும் என்ற எண்ணம் நிலவிவந்தது. எனினும், கணவனுக்கும் மனைவிக்கும் இடையே இருந்துவந்த உறவு ஆன்மீக வாழ்வைப்போல் சிறந்தது என்று எண்ணப்படவில்லை. ஆகையால் பாதிரியார்கள் குழந்தைப்பருவத் திருமணங்களுக்குச் சடங்குகள் மூலம் தங்கள் சம்மதத்தைத் கொடுத்துவந்தனர். ஆண்களும், பெண்களும் தங்கள் வாழ்க்கைத் துணைவரைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்ற எண்ணமும் பாதிரியார்கள் கொண்டிருக்கவில்லை.

ஒரு சிறுவனுக்கும் சிறுமிக்கும் நிச்சயிக்கப்பட்ட திருமணம் அவர்களுடைய பெற்றேர்களால் நடத்தப்பட்ட பண்டமாற்று வியாபாரம் என்ற எண்ணங் கொண்டிருந்தனர் பாதிரியார்கள்.[1]

திருமணத்தின் அடிப்படையில் காதல் இருக்கவேண்டும் என்ற எண்ணம் இல்லாதிருந்ததால் பதினென்ரும் நூற்ருண்டின், இறுதியில் லாங்யூடாக்கைச் சார்ந்த ட்ருபுதூர் என்ற கவிஞரும், அவருக்குப்பின் வந்த ஃபிரஞ்சு ஆங்கிலேயக் கவிஞர்களும் மண வாழ்வை அற்பமான ஒரு பொருளாகக் கருதினர். அதனல் மணம்புரிந்தவரிடையே தகாத காதலைக் கண்டிக்கவில்லை. திருமணத்தின்மூலம் பலனை எதிர்பார்க்கும் சமுதாயத்தில் காதலின் அவசியத்தை எடுத்துக்காட்ட, ஒழுக்கமற்ற காதலைச் சிறப்பித்துக் கூறவேண்டும் என்றும் எண்ணப்பட்டது.[2]

இடைக்காலக் கவிஞர்கள் ஓர் ஆடவனுக்கும் பெண்ணுக்கும் இடையே ஏற்படும் காதல் தெய்வீகத்தன்மை வாய்ந்தது; தெய்வீகத்தன்மை உடையவை அனைத்திலும் மேலானது என்ற கொள்கையை ஐரோப்பிய நாடுகளுக்கு அறிவித்தனர்.

> "காதற் கடவுளாகிய மன்மதனை அருள்புரிய வேண்டுங்கள். அவர் எத்துணை சக்தி வாய்ந்தவர்.
>
> தாழ்ந்தவரை இழிந்த குணத்தைவிட்டு உயர்ந்த குணமுடையவராக அவர் செய்வார். அதேபோல் உயர்ந்த குணம் படைத்தவரை இழிந்த குணம் உடையராய்ச் செய்வார்; அல்லது அவரை இறக்கச்செய்வார். கடின இதயம் படைத்தவரை இளகிய உள்ளம் படைத்தவராக அவர் செய்துவிடுவார்.
>
> காதற்கடவுள் எல்லாவித நன்மைகளையும் அருள வல்லவர். மதிப்பு, பண்பு, சுகம், இன்பம், தன்னம்பிக்கை, இளமை, அடக்கம், கொடை, மரியாதை, ஒழுங்கான பேச்சு, உண்மையான நட்பு ஆகிய நற்பண்புகளை எல்லாம் அவர் அருளுவர். தவருனதைச் செய்வதற்கு வெட்கும் தன்மையையும் அவர் உண்டாக்குவார்.

[1] எந்த அளவிற்கு மத ஸ்தாபனம் குழந்தைப்பருவத் திருமணங்களைத் தடை செய்தது, எந்த அளவிற்கு அனுமதித்தது என்பதைப்பற்றி, கௌல்டன், 'சாசர் அண்டு ஹிஸ் இங்லண்டு' (Chaucer and his England) என்ற நூலில் விளக்கியிருக்கின்ருர். (பக்கங்கள் 204-208)

[2] காதல் சம்பந்தப்பட்ட விவகாரங்களில் தீர்ப்புக் கூறும் நீதிமன்றம் ஒரு சமயம் மணமானபின் மணமக்கள் ஒருவரை ஒருவர் காதலிக்கக்கூடாது என்று தீர்ப்பளித்தது என்று கூறப்படுகிறது. காதலைப்பற்றிய சிறந்த நூல் ஒன்று மக்டலானைச் சார்ந்த சி. எஸ். லூயி என்பார் எழுதியுள்ளார். இடைக்கால வாழ்க்கையைப்பற்றி விளக்கும், தி அல்லிகரி ஆஃப் லவ் (The Allegory of Love) என்ற அந்த நூலைப் பார்க்கவும். பிரசுரம், ஆக்ஸ்ஃபோர்டு, 1936.

காதற் கடவுளை நேசிப்பவர்கள் அவமானத்திற்கு அஞ்சுவர்.
அதிலிருந்து தப்ப தம்முயிரை விடவும் துணிவர்.''

'தி கக்கு அண்டு தி நைட்டிங்கேல்' (The Cukoo and the Nightingale) என்ற பாடலிலிருந்து, இதை எழுதியவர் சர். தாமஸ் கிளேன்வவ் (by Sir Thomas Clanvowe, temp. H. IV., formerly attributed to Chaucer.) இப் பாடலை எழுதியவர் சாசர் என்று முன்னே நினைக்கப்பட்டது.

இக் கருத்து மனித குலத்திற்கு என்றைக்கும் ஊக்கம் அளிக்கக் கூடியது. பழங்காலத்தவர்க்குக் காதலைப்பற்றிய இக் கருத்து தெரிந்திருக்கவில்லை.[1] தொடக்கத்தில் மதஸ்தாபனத்திற்கும் தெரிந்திருக்கவில்லை. இடைக்காலக் கவிஞர்களின் இச் சிறந்த கருத்திற்கும் நடைமுறையில் நடந்த திருமணங்களுக்கும் தொடர்பை ஏற்படுத்தமுடியுமா? காதலர்கள் கணவனும் மனைவியும் ஆக மாறமுடியுமா? இளம் பருவத்தில் தோன்றும் காதல் இறக்கும்வரை நிலைக்கமுடியுமா? இவ் வினாக்களுக்கு விடையிறுப்பதுபோல் திருமணத்தைப்பற்றிய கருத்து, படிப்படியாக மாறிக் கொண்டேவந்தது. இத்தகைய மாற்றம் கட்டாயத்தினால் ஏற்பட்டதன்று. ஃபிரான்சில் இன்றும் பெற்றோர்கள் மணமக்களைத் தேர்ந்தெடுத்துத் திருமணம் முடித்துவைப்பது சாதாரணமான தொன்றாகும். ஆனால், நாகரிகத்தில் தோய்ந்த பெற்றோர்கள், மேலே கண்ட ஆக்னஸ் பாஸ்டன் அம்மையாரைப்போல் அல்லாமல், மணமுடிக்கப்போகின்ற பெண்ணும் பிள்ளையும் இசைந்து வாழ்வார்களா என்பதை ஆராய்ந்தும், பெண், பிள்ளை ஆகிய இருவரின் கருத்தை அறிந்தும் திருமணங்கள் செய்து வைத்தனர். இந்தவிதமாகத் தீர ஆலோசனைசெய்து பெற்றோர்கள் முடித்துவைத்த திருமணங்கள் மணமக்களின் இன்பவாழ்விற்கு வழிசெய்து கொடுத்தது. இருப்பினும், இங்கிலாந்தில் பெற்றோர்கள் தாங்களே தங்கள் பிள்ளைகளுக்குப் பெண்களைத் தேர்ந்தெடுத்து மணமுடித்து வைக்கும் பழக்கம் மறைந்துவிட்டது. ஆண்களும் பெண்களும் தாமே தமக்குத் தகுந்தவரைக் காதலித்து மணந்து கொள்வது வழக்கமாய்விட்டது. பெற்றோர்களுக்குப் பயந்து கிரெட்னா கிரீன் என்ற வட்டாரத்திற்குச்சென்று காதலர் மணந்து கொள்ளும் வழக்கத்திற்கு இடமில்லாமல் போய்விட்து.

காதலர் மணமுடித்து இன்பவாழ்வு வாழ்வதற்கு வழியேற்படுமுன் பலர் தங்களைத் தியாகம் செய்திருக்கின்றனர். இடைக்

[1] ஜான் புகான்(John Buchan) எழுதியுள்ள 'அகஸ்டஸ்' (Augustus) என்ற நூலில், கிரேக்க, ரோமானியர் காலத்திய காதல் திருமணங்களைப்பற்றி ஆய்ந்த கருத்துகளை, பக்கம் 244-ல் காணலாம்.

காலத்திலும்கூட, பல காதலர்கள் மணமுடித்து வாழ்ந்தனர். ஆண்கள் பொதுவாகத் தங்கள் தந்தையருக்குக் கீழ்ப்படிந்து நடந்ததில்லை. சில பெற்றோர்கள் தங்கள் மக்களின் கருத்தைப் புரிந்துகொண்டு அவர் வழியிலேயே விட்டுவிட்டனர். அனேக ஆண்மக்களின் தந்தையர் அவர்கள் சிறுவராக இருந்தபோதே இறந்துவிட்டதால், அவர்கள் தங்கள் மனத்திற்குப் பிடித்த பெண்களை மணந்துகொள்ள முடிந்தது. சாசர் எழுதிய 'ஃபிராங்ளினின் கதை' (Franklin's Tale) காதல், திருமணத்தில் முடிந்ததையும், திருமணத்திற்குப் பிறகும் காதல் தொடர்ந்து இருந்து வந்ததையும் எடுத்துக்காட்டுகின்றது. பதினைந்தாம் நூற்றாண்டில் காதலித்து மணந்துகொள்வது, மெதுவாக நடைமுறைக்கு வந்து கொண்டிருந்தது. கவிஞனும், ஸ்காட்லாந்தின் அரசனுமான முதலாம் ஜேம்ஸ் தன் காதலியை மணந்து பட்டத்தரசியாக்கினான். அத்துடன் தன் காதலியைக் கௌரவிப்பதற்காக, 'தி கிங்கிஸ் குவேர்' (The Kingis quair) என்ற நூலையும் இயற்றினான்.

சாதாரணக் குடும்பங்களில் ஒன்றான பாஸ்டன் குடும்பத்தின் கடிதங்களில் இருந்து, அக் குடும்பத்திலும் இரண்டு காதல் திருமணங்கள் நடந்தன என்று தெரியவருகின்றது. கி.பி. 1477-ல் மார்கெரி புரூஸ் (Margery Brews) என்ற பெண்மணி, ஜான் பாஸ்டன் என்பவரைக் காதலித்து மணந்துகொண்டார். இப் பெண்மணி, இளகிய மனத்தினரான தாயாரைத் தன் காதல் திருமணத்திற்கு சம்மதிக்கச் செய்தார். திருமணத்திற்கான பேச்சு வார்த்தைகள் நடந்துகொண்டிருந்தபோது, மார்கெரி, ஜானுக்கு எழுதிய காதல் கடிதத்தில் அவர் எழுதியதைக் காண்போம்.

'அன்புள்ள வாலன்டீன்,

'என்னுடைய தாயார் என் தந்தையிடம் உங்களுக்குக் கொடுக்கவேண்டிய பரிசப்பணத்தைப்பற்றி எவ்வளவோ எடுத்துக் கூறியும், உங்களுக்கு ஏற்கெனவே தெரிந்த தொகைக்குமேல் ஒன்றும் கொடுக்க மறுத்துவிட்டார் என் தந்தை. நான் இதற்காக வருந்துகிறேன் என்பதைக் கடவுளே அறிவார். நீங்கள் என்னை உண்மையிலேயே காதலிக்கிறீர்கள் என்று நம்புகிறேன். அதனால் உங்கள் பெற்றோர் கேட்கும் பரிசப்பணத்தைக் கொடுக்க மறுத்தாலும், என்னை நீங்கள் கைவிட்டுவிடமாட்டீர்கள் என்று நம்புகிறேன்.'

மார்கெரி எழுதிய அடுத்த கடிதம் உள்ளத்தை உருக்குவதாய் இருக்கின்றது.

'நீங்கள் என்னையும் என்னுடன் கொடுக்கப்போகும் பரிசப் பணத்தையும் கொண்டு திருப்தியடைவீரானால், நான் உலகிலேயே

இன்பத்தைப் பெற்றவளாவேன். உங்களுக்குக் கொடுக்கப்படும் பரிசப் பணத்தைக்கொண்டு திருப்தியடைய முடியாது, வேறு இடத்தில் இப் பணத்தைவிட அதிகம் கிடைக்கும் என்றெல்லாம் எண்ணினால், தயவுசெய்து என் இல்லத்திற்கு வந்து பரிசப் பணத்தைப்பற்றி மேலும் பேசவேண்டா. அதைப்பற்றி மறந்து விடுங்கள்; நான் என் வாழ்நாள் முழுவதும் உங்கள் காதலியாகவே இருந்து, உங்களுடைய நல்வாழ்விற்காக எப்போதும் பிரார்த்தனை செய்வேன்.'

இக் கடிதம் ஜானின் உள்ளத்தைத் தொட்டது. அவர் தம் தந்தை இறந்துவிட்டிருந்ததால், அவரே தம் திருமணத்தைப்பற்றி நிச்சயிக்கும் நிலையில் இருந்தார். தம்முடைய தாயாரும், மற்ற உறவினர்களும் என்ன நினைப்பார்கள் என்பதைப்பற்றிப் பொருட் படுத்தாமல் தம் திருமணத்தை முடித்துக்கொண்டார்.

பாஸ்டன் குடும்பத்தைச்சேர்ந்த மற்றொருவரின் காதல், கரடு முரடான பாதையில் நீண்டநாள் அலைந்து, முடிவில் திருமணத்தில் முடிந்தது. மார்கெரி பாஸ்டன் என்பவர் தன் குடும்பச் சொத்து களைக் கவனித்துவந்த ரிச்சர்ட் கலீ என்பவரை மணக்க ரகசியமாக நிச்சயம் செய்துகொண்டார். ரகசியமாக நடத்தப்பட்ட நிச்சய தார்த்தங்களையும் மதஸ்தாபனம் அங்கீகரித்தது. மேலும், நிச்சய தார்த்தம் நடத்தப்பட்டுவிட்டால் அது ரத்து செய்யமுடியாத தாய் இருந்தது. சில சமயங்களில் இரு கட்சியினரும் சம்மதித்தால் நிச்சயிக்கப்பட்ட திருமணத்தை நிறுத்தமுடியும். பல ஆண்டுக் காலம் மார்கெரி பாஸ்டன் தம் குடும்பத்தினரின் கோபத்தையும், எதிர்ப்பையும் தாங்கிநின்றார். இறுதியில் அவரது பிடிவாதத்தி னாலும், ரிச்சர்டை வேலையில் இருந்து நீக்க மனமில்லாமையாலும், மார்கெரியின் பெற்றோர்கள் திருமணத்திற்கு இசைந்தனர்.

பதினைந்தாம் நூற்றாண்டில் தோன்றிய கதைப் பாடல்களில் மிகுந்த அளவிற்குக் காதல் திருமணங்கள் இடம்பெற்றன. உதாரணமாக, 'நட் பிரவுன் மெய்டு' (Nut Brown Maid), என்ற கதைப்பாட்டும் அதைப் பின்பற்றித் தோன்றிய, 'பெய்லிஃப்ஸ் டாடர் ஆஃப் ஐலிங்டன்' (Bailiffi's daughter of Islington) என்ற கதைப்பாட்டும், அதைப்போல் நூறு கதைப் பாட்டுகளும், காதலித்து மணந்துகொண்ட பெண்களைக் கதைத் தலைவிகளாகக் கொண்டு இயற்றப்பட்டன. ஷேக்ஸ்பியரின் காலத்தில் பாடல் களும், நாடகங்களும், ஒருவரை ஒருவர் காதலித்து மணந்து கொள்ளும் வழக்கம் சிறந்தது என்ற கருத்தை வெளியிட்டன. காதலித்தவரை மணந்துகொள்ளத் தங்கள் பெற்றோரை எதிர்த்துப் போராடியவர் மக்களின் அனுதாபத்தைப் பெற்றனர். காதலர்

தங்கள் திருமணத்தை எதிர்நோக்கிக் காத்திருப்பதையும், மாஸ்டர் பென்டன், ஆன்பேஜ் ஆகிய இருவர் வீட்டைவிட்டு ஓடி, மணம் புரிந்துகொண்டு அனுபவித்த துன்பங்களையும், பொதுவாக நாடகங்களில் சித்திரிக்கவேண்டும் என்று மக்கள் எலிசெபெத் அரசியின் காலத்தில் எதிர்பார்த்தனர். டியூடர் வம்சத்தினரின் ஆட்சி முடிவதற்குள் காதல் திருமணங்கள் அடிக்கடி நடந்துவந்தன. ஆனால், குழந்தைப்பருவத் திருமணங்களும் நடந்துவந்தன. குழந்தைப்பருவத் திருமணத்தைப் பொறுத்தவரை இடைக் காலத்தில் மதஸ்தாபனம் செய்த தவற்றையே, சீர்திருத்தப்பட்ட மத ஸ்தாபனமும் தொடர்ந்து செய்தது. கி.பி. 1582-ல் சாடர்டன் என்ற பெயருடைய பிஷப்பானவர், தம்முடைய ஒன்பது வயதான ஒரே மகளை, பதினொரு வயதேயான சிறுவன் ஒருவனுக்கு மணம் புரிந்து கொடுத்தார். இதனால் கெடுதியே விளைந்தது. மற்றொரு சமயம் மூன்றே வயதான ஜான் ரிக்மார்டனை, ஒரு மதகுருவானவர், கையிலேந்திக்கொண்டு, மணச்சடங்கில் வரும் வார்த்தைகளைச் சொல்லச்செய்து ஐந்து வயதான பெண்ணுக்கு மணமுடித்து வைத்தார். இச் சடங்கு முடிவதற்குள் அச் சிறுவன் மதகுருவின் கரங்களில் இருந்து தன்னை விடுவித்துக்கொண்டு அதற்குமேல் பாடம் கற்க மாட்டேன் என்றான். மதகுருவானவர், 'இன்னும் சிறிது சொல்லிவிடு, அதற்குமேல் நீ விளையாடப் போகலாம்' என்றார் (இ. இ. டி. எஸ், 1897: குழந்தைப்பருவத் திருமணங்கள் முதலியன, பக்கம் 22).

பெற்றோர்களாகப் பார்த்துத் திருமணம் செய்யும் வழக்கத்தை விட்டுக் காதல் திருமணத்தை ஏற்றுக்கொள்ளும் மாறுதல் ஜேன் ஆஸ்டென், விக்டோரியன் குடும்பத்தினர் ஆகியோரின் காலத்தில்தான் முற்றுப்பெற்றது. இதற்குப்பிறகு, பெற்றோர்களாகப் பார்த்துத் திருமணம் செய்துவைப்பது மிக அபூர்வமானதாகவும், பெற்றோர்கள் மணமக்களைக் கட்டாயப்படுத்தியே இசையச் செய்திருப்பார்கள் என்றும் கருதப்பட்டது. இடைக்காலக் கவிஞர்கள் காதற்கடவுளுக்கு எழுப்பிய கோயில், ஆல்பிரெட் டென்னிசன், ராபர்ட் பிரவுனிங், ராபர்ட் பிரவுனிங் அம்மையார் முதலியோரின் காலத்தில் பூசனை செய்வதற்கு ஏற்றதாயிற்று.

ஏழைகளிடையே, காதலைத்தவிர, திருமணங்களில் வேறு எந்த நோக்கமும் இருந்திருக்கமுடியாது என்று கூறலாம். இதைப் பற்றி நாம் அறிந்துகொள்வதற்கான ஆதாரங்கள் மிகக் குறைவான அளவே கிடைக்கின்றன. இடைக்காலத்தில், மற்றக் காலங்களைப்போலவே, குடியானவரிடை, காதல் திருமணத்தைப்பற்றி நல்ல எண்ணம் இருந்தது எனலாம். 'டிக் என்ற ஆடவனும் நேன் என்ற பெண்ணும்' கதையில், இருவரும் காட்டினூடே ஒன்றாக

நடந்துசென்று, காதல்கொண்டு, ஆலயத்தை அடைந்து மணம் புரிந்து கொண்டதைப்போல், குடியானவரிடையே அத்தகைய காதல் மணங்கள் நிகழ்ந்தன என்று கூறலாம். இத்தகைய காதல் மணத்தால், நேன் ஒரு சிறந்த மனைவியாகவும், தாயாகவும் விளங்கியதைப்போலவும், டிக் ஒரு நல்ல தொழிலாளியாக விளங்கியதைப் போலவும் காதலர் விளங்குவர் என்ற எண்ணம் குடியானவரிடையே இருந்தது எனலாம். தன்னடக்கமின்மையால் தாய்மை நிலையை அடைந்துவிட்ட பெண்களுக்கும் அவர்தம் காதலர்களுக்கும் திருமணத்தை முடித்துவைத்தனர் பெற்ருேர்கள். கீழ்வகுப்பைச் சார்ந்த பெண்களைக் கற்பழிக்கப்படாமல் காக்க முடியாதிருந்ததால், கற்பழிக்கப்பட்ட பெண்களை அவர்தம் காதலர்களுக்கு மணமுடித்து வைக்கும் பழக்கம் ஏற்பட்டது. பாஸ்டன் குடும்பத்தைப் போன்ற குடும்பங்களில் தாய்மார்கள், தங்கள் பெண்களை அதிஜாக்கிரதையாகக் கண்காணித்துவந்தனர். இதனுல் ஜென்ட்ரி வகுப்பினர் தங்கள் காதல் விளையாட்டுகளை ஏழைப் பெண்களிடமும் செல்வரின் மனைவியரிடமும் வைத்துக்கொண்டனர்.

மணமானவுடன் மங்கையானவள் பலவித அலுவல்கள் நிறைந்தவளாகவும், அதிகாரமும் அந்தஸ்தும் உடையவளாகவும் மாறினுள். பாஸ்டன் குடும்பத்துக் கடிதங்களில் இருந்து மனைவியானவள் தன் கணவனுக்கு ஆலோசனை கூறுபவளாகவும், வாழ்க்கையில் நம்பிக்கையான துணையாகவும் இருந்துவந்தாள் எனத் தெரியவருகின்றது. மனைவியர் தங்கள் கணவரின் நலனுக்காகத் தங்கள் பிள்ளைகளின் நலனையும் அவர்கள் தியாகம் செய்யத் தயாராய் இருந்தனர். சிறந்த மனைவியராகவும், வீட்டைப் பரிபாலிப்பவராகவும் இருந்தனரே தவிர சிறந்த தாய்மார்களாக இருக்கவில்லை. பாஸ்டன் குடும்பத்தின் கடிதங்களில் இருந்து மனைவியர் வீட்டுவேலை மட்டுமன்றி, தங்கள் கணவரின் தொழிலிலும் பங்கு கொண்டனர் எனத் தெரியவருகின்றது.

மனைவியர், வீட்டில் உள்ள அனைவருக்கும் உண்ண உணவு, உடுக்க உடை ஆகியவற்றைச் சரிவர அளிப்பதற்காக வாழ்நாள் முழுவதும் உழைக்கவேண்டியிருந்தது. தற்காலத்தில் பெண்கள் பல தொழில்களில் காட்டும் திறமை அனைத்தும் உடையவராக மனைவியர் இருந்தனர். தேவைப்பட்ட பொருளை நினைத்த நேரத்தில் கடைக்குச் சென்று அக் காலத்தில் வாங்கமுடியாது. தங்கள் பண்ணையிலிருந்து கிடைக்காத பொருள்களைப் பல மாதங்கள் முன் கூட்டியே வாங்கிச் சேகரித்து வைக்கவேண்டும். உதாரணமாக, ஃபிரெஞ்சு மது, மத்தியதரைக்கடல் பிரதேசத்தில் தயாரிக்கப்பட்ட சர்க்கரை, வாசனைச் சாமான்கள், மிளகு, ஆரஞ்சுப் பழம், பேரீச்சம் பழம், உயர்தர ஆடைகள் முதலியவற்றின் தேவையைப் பல

மாதங்கள் முன்கூட்டியே கணக்கிட்டு, அவைகளைப் பெறுவதற்கான வழிகளைச் செய்யவேண்டியிருந்தது. அதற்காக இப் பொருள்களை விற்போரை அணுகிப் பொருள்களைத் தருவித்துக் கொடுக்குமாறு செய்யவேண்டும். நார்விக் போன்ற நகரங்களில் இருந்த வியாபாரிகள் கடல் கடந்துவந்த பொருள்களைத் தருவித்து அளிக்கும் நிலையில் இருக்கவில்லை. ஆகையால் அப் பொருள்களைப் பெறுவதற்காக லண்டன் நகர வியாபாரிகள் அல்லது வட்டாரங்களில் இருந்த சிறந்த வியாபாரிகள் ஆகியோரை அணுகி, வீட்டின் தேவையைத் தெரிவித்து அப் பொருள்களைப் பெற முன் கூட்டியே வழி செய்யவேண்டியிருந்தது. பண்ணையில் இருந்தே கிடைத்த பொருள்களைக்கொண்டு உணவைத் தயாரிப்பது, இறைச்சி, மீன் முதலியவைகளைப் பதம்செய்து சேகரித்து வைப்பது, கால்நடைகளைக் கவனிப்பது ஆகிய இவை அனைத்தும் மனைவியரின் கடமையாய் இருந்தது. வீட்டில் இருந்தவர்க்கு வேண்டிய ஆடைகள், வீட்டிலோ அல்லது வீட்டின் அருகிலோ வீட்டு எஜமானியின் கண்காணிப்பில் நெய்யப்பட்டுத் தைக்கவும் பட்டன. குடும்பத்தினர் தங்கள் உடைகளை அருகில் இருந்த நகரத்திற்குச் சென்று வாங்கிவரவில்லை. உயர்ரக ஆடைகள் மட்டுமே லண்டனில் இருந்து வாங்கிவரப்பட்டன. வெளியில் செல்லும் வாய்ப்புப்பெற்ற இளைஞர்கள் நகரத் தையற்காரரிடம் மனத்திற்கிசைந்தவண்ணம் ஆடையைத் தைத்துக்கொண்டனர். இளைஞர்களும், பெண்களைப்போலவே பளிச்சென்றும், விசித்திரமானதாகவும் இருந்த உடைகளை அணிந்தனர். மேலே குறிப்பிட்ட செல்வரின் மனைவியுடைய கடமைகளை மனத்தேகொண்டு சிந்திப்போமானால், சமுதாயத்தில் மனைவியர் செய்துவந்த பணிகளைப் புரிந்துகொள்ளலாம்.

பண்ணைவீட்டு அறைகளின் சுவர்கள், துணிகள் தொங்க விடப்பட்டு அழகு செய்யப்பட்டிருந்தன. கூடங்களும் வரவேற்பு அறைகளும், கிளாத் ஆஃப் அர்ராஸ் (Cloth of Arras) என்று அழைக்கப்பட்ட விலையுயர்ந்த திரைச்சீலைகளால் அலங்கரிக்கப் பட்டன. பல வண்ண நூலைக்கொண்டு பின்னப்பட்ட இத் திரைச் சீலைகள் வேட்டையாடும் காட்சி, மத சம்பந்தமான காட்சிகள் முதலியவற்றைக் கொண்டிருந்தன. மற்ற அறைகளில் பல நிறத் திலான அல்லது கோடுகள்கொண்ட பளிச்சென்ற துணிகள் தொங்கவிடப்பட்டிருந்தன. சட்டம் போடப்பட்ட படங்கள் அக் காலத்தில் வீட்டின் சுவர்களை அலங்கரிக்கவில்லை. அதற்குப் பதில் சுவர்களிலேயே அழகிய சித்திரங்கள் வரையப்பட்டிருந்தன. வில்லியம் பேகர் (William Baker) என்பவரால் கி.பி. 1479, 1488 ஆகிய ஆண்டுகளுக்கிடையில், எடான் கல்லூரியைச் சார்ந்த கிருத்தவ ஆலயச் சுவர்களில் வரையப்பட்ட சித்திரங்

களில் இருந்து ரோஜாப்பூ அடையாளப் போரின் காலத்தில் அழகிய சித்திரங்கள் வரையப்பட்டன என்பதை அறிந்துகொள்ள லாம். அக்காலத்தே வரையப்பட்ட மற்றச் சித்திரங்கள் அனைத்தும் வெகுகாலத்திற்கு முன்பே அழிந்துவிட்டன.

சுவரை அடுத்துப் புகைபோக்கிகளை அமைத்து அதனடியில் குளிர்காய்வதற்காக வசதி செய்துகொள்வது அதிகரித்துக் கொண்டே வந்தது. இதற்குமுன் குளிர்காய்வதற்காக அறையின் நடுவே நெருப்பை மூட்டினர். இதிலிருந்து கிளம்பிய புகை சாள ரங்கள் வழியே வெளிச் சென்றது. ஆரும் ஹென்றியின் ஆட்சிக் காலத்திலேயே பாஸ்டன் குடும்பத்தினர், தங்கள் பண்ணைவீடு களில் புகைபோக்கிகளை அமைத்துக்கொண்டனர். ஆனால், மற்ற இல்லங்களில் புகைபோக்கிகளை அமைப்பது மெதுவாகவே ஏற்பட்டுவந்தது. எலிசபெத் அரசியின் காலத்தில் வாழ்ந்த வில்லியம் ஹாரிசன் என்பார் வீட்டின் நடுவில் அடுப்பைமூட்டிக் குளிர்காய்ந்த முறையை நினைந்து, அம் முறை மறைந்துகொண்டு வந்ததற்காக வருந்தினர்.

'இப்போது பல புகைபோக்கிகள் இருக்கின்றன. இருப் பினும் உடல் வலியற்றவர் புகையினுல் ஜலதோஷம் பிடித்து மூக்கில் ஒழுகுகின்றது என்று குறைபட்டுக்கொள்கின்றனர். ஆனுல், புகைபோக்கிகள் இல்லாமல் கூடத்தின் நடுவே நெருப்பை மூட்டிக் குளிர்காய்ந்தபோது ஒருவிதத் தலைவலியும் இருந்ததில்லை. அக் காலத்தில் புகை, வீட்டில் இருந்த மரச்சாமான்களை உறுதி யுள்ளதாக்கும் என்றும், வீட்டில் இருந்தோர் ஆரோக்கியமாக இருப்பதற்குச் சிறந்த மருந்தாக இருந்தது என்றும் மக்கள் எண்ணங்கொண்டிருந்தனர். (இரண்டாம் தொகுதி : அத்தியாயம் 22) கி.பி. 1754-ல் தாமஸ் வார்ட்டன் என்பவரிடம், டாக்டர் ஜான்சன் கோதிக் கலை என்றழைக்கப்பட்ட கட்டடக் கலையில் கட்டப்பட்டிருந்த கூடங்களைப்பற்றிப் பின்வருமாறு கூறினர்: 'இக் கூடங்களில் பழங்காலத்தில் குளிர்காய்வதற்கான நெருப்பு மத்தியில் வைக்கப்பட்டிருந்தது. விக் என்ற பெயருடைய கட்சி யினர்தான் நெருப்பைக் கூடத்தின் ஒரு பக்கத்தில் அமைத்தனர்'. ஹாரிசன் இதைக் கேள்வியுற்றிருந்தால் அதற்காக இரக்கப்பட் டிருப்பார். ஏனென்ருல், விக் கட்சி தோன்றுவதற்கு மூன்று அல்லது நான்கு நூற்ருண்டுகளுக்கு முன்பே குளிர்காய்வதற்காக அறை யின் மத்தியில் வைக்கப்பட்டிருந்த நெருப்பு அறையின் ஒரு பக்கத்தில் வைக்கப்பட்டது.

குடும்பங்களில் கணவன், மனைவி ஆகிய இருவரையும் சார்ந்த வயதுவந்த அல்லது வயது முதிர்ந்த மணமாகாத பெண்களுக்கு

இடமில்லை. ஒரு பெண்ணை மணம்செய்வித்துக் கொடுக்க முடியவில்லை என்றால், அவளைக் கன்னிமாடத்தில் சேர்த்துவிட வேண்டும். கன்னிமாடத்தில் சேர்க்க ஒரு குறிப்பிட்ட தொகையைக் கொடுக்கவேண்டியிருந்தது. இப்படித் தொகையைக் கொடுக்காவிட்டால் கன்னிமாடத்தில் பெண்களைச் சேர்ப்பது கடினமாயிருந்தது. பதினான்காம், பதினைந்தாம் நூற்றாண்டுகளில் இப்படிப் பெண்களைச் சார்ந்தோர் கொடுத்த தொகைகளைக் கொண்டுதான், கன்னிமாடங்கள் நிறுவப்பட்டும் நடத்தப்பட்டும் வந்தன. கன்னிமாடங்கள் ஏழைப் பெண்களுக்கு ஆதரவு அளிக்கும் இடமாக இருக்கவில்லை. அத்துடன் கன்னிமாடத்தில் வாழ்ந்துவந்த பெண்டிர் சமய நெறியில் ஈடுபாடுடையவராக இருக்கவில்லை. பிஷப்புகளின் சுற்றுப்பிரயாண ஏடுகளில் இருந்து கன்னிமாடங்களில் வாழ்ந்த பெண்டிர் சாதாரணப் பெண்டிரைப்போலவே வாழ்க்கை நடத்திவந்தனர் எனத் தெரியவருகின்றது. கன்னிமாடப் பெண்டிருக்கென்று இருந்த கட்டுப்பாடுகள் அக் காலத்தில் தளர்த்தப்பட்டிருந்தன என்றும் தெரியவருகின்றது. கன்னிமாடப் பெண்களிடையே சில சமயங்களில் இழிந்த நடத்தையும் காணப்பட்டது. பொதுவாகக் கன்னிப்பெண்களும் கன்னிமாடப்பெண்களும், பெண்களிடம் சாதாரணமாகக் காணப்படும் குணாதிசயங்களை ஒழித்தவராகக் காணப்படவில்லை. சாசர் தீட்டியுள்ள எக்லன்டைன் (Eglentyne) என்ற சீமாட்டியைப்போல் கன்னிமாடத்தில் வாழ்ந்தோர் அலங்காரத்தின் இருப்பிடமாக இருந்து வந்தனர்; சமயநெறியில் பற்றற்றவராகவே இருந்தனர்.

வெகு காலத்திற்குமுன், துறவறத்தை நோக்கமாகக்கொண்டு ஆடை அணிவதில் வகுக்கப்பட்டிருந்த விதிகளைக் கன்னிமாடத்தில் வாழ்ந்தோர் அனுசரிக்கவில்லை. ஆறு நூற்றாண்டுக் காலத்திற்குமேல் பிஷப்புகள் கன்னிமாடங்களில் இருப்பவர் அலங்காரமான ஆடை அணிவதைத் தடுக்கப் பாடுபட்டுத் தோல்வியுற்றனர். பிஷப்புகள் கன்னிமாடங்களைப் பார்வையிடச் சென்றபோது, பல பெண்கள் ஒரே சமயத்தில் உரத்துப்பேசி, அவரது செவிகள் செவிடாகும் வண்ணம் கூச்சலிட்டனர். மடத்தின் தலைவி மற்றவர்களைப் பற்றியும், மற்றவர்கள் மடத்தின் தலைவியைப்பற்றியும் உரத்த குரலில் குற்றம் சாட்டினர். இப்படி இவர்கள் கூச்சலிட்டதால் பார்வையிட வந்த பிஷப்புகள் ஒருவிதச் சீர்திருத்தமும் செய்ய முடியாமல் திரும்பிச் சென்றனர். கன்னிமாடங்களில் கூட்டம் கூட்டமாக வேட்டை நாய்களை வைத்திருந்தனர். சில கன்னிமாடங்களில் குரங்குகளையும் வைத்திருந்தனர்.[1]

[1] ‘வெனிஸ், ஃபிளாரென்ஸ் ஆகிய இத்தாலிய நகரங்களுக்குச் சொந்தமான கப்பல்களில் இன்ப வாழ்க்கைக்கு அவசியமான பொருள்கள் நிறைந்திருந்தன. வாசனைப் பொருள்களும், மளிகைச் சாமான்களும், இனிய திராட்சை

இந் நாய்களுடனும், குரங்குகளுடனும் கன்னிமாடத்தில் இருந்தோர் பொழுதைப் போக்கிவந்தனர். லிங்கன் நகர பிஷப்பின் அதிகாரத்தின்கீழ் இருந்த கன்னிமாடம் ஒன்றிற்கு, போப்பால் (Pope) அனுப்பப்பட்ட விதிகளின் பிரதி ஒன்றை பிஷப்(bishop) எடுத்துச் சென்று, அவ் விதிகளின்படி நடக்கவேண்டும் என்று கன்னிமாடத்திலிருந்தவரிடம் கூறித் திரும்பினர். ஆனல், அவர் கன்னிமாடத்தின் வாசலை அடைவதற்குள், கன்னிமாடத்திலிருந்தவர் அவ்வுத்தரவை அவரது தலைமேல் வீசியெறிந்து, அவ் வுத்தரவின்படி எப்போதும் நடக்கமாட்டோம் என்று கூச்சலிட்டனர்.

கன்னிமாடங்கள் எண்ணிக்கையில் அதிகமாக இருப்பினும், அவை அளவில் சிறியனவாய் இருந்தன. அக் காலத்தில் இங்கிலாந்தில் இருந்த நூற்றுப் பதினென்று கன்னிமாடங்களில் நான்கு கன்னிமாடங்களில்தான் முப்பதிற்கும் மேற்பட்ட பெண்டிர் இருந்தனர். கன்னிமாடங்களில் வாழ்ந்த பெண்டிரின் மொத்த எண்ணிக்கை 1,500-ல் இருந்து 2,000 வரை இருக்கும். ஒவ்வொரு கன்னிமாடத்திலும் அதில் வாழ்ந்த பெண்டிருக்குப் பணிபுரியப் பணியாட்கள் இருந்தனர்.

பதினைந்தாம் நூற்ருண்டில் கன்னிமாடங்களின் செல்வநிலை குறைந்துகொண்டே வந்தது. எட்டாம் ஹென்றி கன்னிமாடங்களை அடியோடு அழிப்பதற்குமுன்பே, மதக்கோட்பாட்டில் தீவிர ஈடுபாடுடைய பிஷப்புகள், நாற்பது ஆண்டுக் காலத்திற்குள் எட்டுக் கன்னிமாடங்களை அழித்தனர். கி.பி. 1496-ல் செயின்ட் ரேடிகுண்ட் (St. Radegund) கன்னிமாடத்திற்குப் பதிலாக, கேம்பிரிட்ஜில், ஜீசஸ் கல்லூரியை (Jesus College) எலி (Ely) நகரத்தின் பிஷப்பான அல்காக் (Alcock) என்பவர் நிறுவினர். அக் கன்னிமாடம் கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலையின் அருகில் இருந்தது. இதன் காரணமாகக் கன்னிமாடத்தில் இருந்த பெண்டிர் தூய வாழ்வை மறந்து இழிந்த வாழ்வு வாழத் தலைப்பட்டனர், இதுவே, அல்காக் அக் கன்னிமாடத்தை அழிக்கக் காரணமாயிருந்தது. அக் கன்னிமாடம் மூடப்படும் தறுவாயில், அதில் இரு பெண்டிரே இருந்ததாகச் சொல்லப்படுகிறது. அந்த இருவரில் ஒருவர் அதில் இருக்கவே

---

ரசமும், விதவிதமான குரங்குகளும், அத்துடன் உபயோகமற்ற பலவிதப் பொருள்களும் அக் கப்பல்களில் இங்கிலாந்திற்குக் கொண்டுவரப்பட்டன. இத்தாலிய வியாபாரிகள் மேற்கண்ட பொருள்களை இங்கிலாந்தில் விற்றுவிட்டு அதற்குப் பதில் இங்கிலாந்தில் தயாரிக்கப்பட்ட உயர்ந்த ஆடைகளைகொண்டு சென்றனர் 'கன்னி மாடங்களைப்பற்றி மேலே குறிப்பிட்டவைகள் ஐலீன் பவர் Eileen Power) என்பார் எழுதிய, 'மிடீவல் இங்கிலிஷ் நன்னரீஸ்' (Mediaeval English Nunneries) என்ற நூலில் இருந்தும், 'மிடீவல் பீபிள்' (Mediaeval People) என்ற நூலில் 'மாடம் எக்லென்டீன்' (Madame Eglentyne) என்ற பெயர்கொண்ட அத்தியாயத்தில் இருந்தும் எடுக்கப்பட்டவையாகும்.



படம் 1 நுகத்தடி பூட்டிய எருதுகளைக்கொண்டு உழுதல்



படம் 2. நீர்-ஆலை (நீரோடையில் விலாங்கு மீன் பொறிகளைக் காணலாம்)




படம் 3. தானியத்தைக் குன்றின்மேல் கொண்டு செல்லல்
(தி லுட்ரல் சால்டர் என்ற, 14ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த படங்கள் நிறைந்த ஒரு கையெழுத்து நூலிலிருந்து எடுக்கப்பட்டது. இந் நூல் இப்பொழுது பிரிட்டிஷ் மியூசியத்தில் உள்ளது.

*National Buildings Record Library photograph*

படம் 4. கிளசஸ்டர்ஷயரில், லிட்டில் சோட்பரியில் உள்ள ஒரு பண்ணை இல்லம். இக் கல் கட்டடம் 15ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது.

படம் 5. சஃபோக்கில் லாவன்ஹாமிலுள்ள உல்ஹால் கட்டடம். 15ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது.

*Cantral Office of Information photograph.* 

8ஆம் ஹென்ரி

படம் 6. அரகாம் இளவரசி காதரின் முன்னிலையில் குதிரைமீதேறிப் பந்தயம் நடத்துதல் (ராயல் காலேஜ் ஆஃப் ஆம்ஸ் என்ற நிறுவனத்தின் வசமுள்ள வெஸ்ட்மின்ஸ்டர் பந்தயப் பதிவேட்டிலிருந்து எடுக்கப்பட்டது).



படம் 7. ஹார்பபைக் கையிலேந்தி, தனது விதூஷகர் வில் சாமர்ஸ் என்பாருடன்.



படம 8. தனது படுக்கையறையில் படித்துக் கொண்டிருக்கிறார்.

(படம் 7-ம், 8-ம் பிரிட்டிஷ் மியூசியத்திலுள்ள 8ஆம் ஹென்றியின் சால்டரிலிருந்து எடுக்கப்பட்டவை)

படம் 9. எலிசபெத் காலத்துப் பின்னல் வேலைப்பாடு. விக்டோரியா, ஆல்பர்ட் மியூசியத்திலுள்ள பிராட்போர்டு மேசைச் சமுக்காளத்தில் காணப்படும் காட்சிகள்.

படம் 10. சாமர்செட்டிலுள்ள மாண்டாகியூட் மாளிகையின் மாபெரும் கூடம். இம்மாளிகை சுமார் 1600-ல் கட்டி முடிக்கப்பட்டது.

*'Times' photograph*

இல்லை. அவருடைய பெயர் மட்டுமே பதிவு செய்யப்பட்டு இருந்தது. மற்றொருவர் யார் என்றால் அவர் ஒரு பெண் குழந்தையாகும். இப்படி இருந்ததால் பயன்தரக்கூடிய நிறுவனம் ஒன்றை ஏற்படுத்தலாம் என்று நினைத்து அக் கன்னிமாடத்தை பிஷப் மூடச் செய்தார்.

ரேடிகுண்ட், கன்னிமாடம் இருந்த சீர்கேடுற்ற நிலையில் இங்கிலாந்தில் இருந்த மற்றக் கன்னிமாடங்கள் இருக்கவில்லை. எனினும், கன்னிமாடங்கள் தற்போது சமயநெறியின்படி வாழும் இடமாகவும் பயனுள்ள இடமாகவும் இருப்பதுபோல், இடைக் காலத்தில் அவை இருக்கவில்லை என்பது மறுக்கமுடியாத உண்மையாகும்.[1]

விக்லிஃப் என்பார், மதஸ்தாபனம் ஏராளமான சொத்திற்கு உரிமையுடையதாய் இருந்ததைக் குறைகூறிய காலத்திற்கும், எட்டாம் ஹென்றி மடங்களை அழித்த காலத்திற்கும் இடையே மக்கள், மடங்களுக்கும் கன்னிமாடங்களுக்கும் தொடர்ந்து நிலமும் பணமும் பரிசாகக் கொடுத்துவந்தனர். நாளடைவில் மடங்களுக்கும், கன்னிமாடங்களுக்கும் கொடுப்பதை மக்கள் குறைத்துப் பிரார்த்தனைக் கூடங்களுக்கும் பள்ளிகளுக்கும் அதிகமாகக் கொடுத்துவந்தனர். இத்தகைய மாறுதல் ஏற்பட்டுவந்த காலத்தில், செல்வநிலையில் இருந்த ஜென்ட்ரி வகுப்பினரும், நகரமாந்தரும், தங்களுக்குப் பயன் அளிக்கக்கூடிய நிறுவனங்களுக்கு நிலமும் பணமும் கொடுக்க நினைத்தனர். மதஸ்தாபனத்திற்குக் கொடுக்கவேண்டும் என்ற எண்ணம் சிறிதே உடையவராய் இருந்தனர். பதினைந்தாம் நூற்றூண்டில் ஒரு பள்ளியை நிறுவினால், அது பொதுமக்களுக்கும், துறவியருக்கும் கல்விகற்கப் பயன்படும் என எண்ணினர். பிரார்த்தனைக் கூடங்களை நிறுவுவது தங்களுக்குத் தாங்களே செய்துகொண்டதாக நினைத்தனர். பிரார்த்தனைக் கூடங்களில் ஒன்று அல்லது இரண்டு துறவியர் அக் கூடங்களை நிறுவியவரின் ஆத்மாக்கள் சாந்தி அடையுமாறு பிரார்த்தனைகள் நடத்த நியமிக்கப்பட்டனர். மேலுலகத்தைப்பற்றி மக்கள் எத்தகைய கருத்து உடையவரேனும், பிரார்த்தனைக் கூடங்கள் நிறுவுவதின்மூலம் ஒருவரின் பெயர், அவர் இறந்தபிறகும் இவ் வுலகில் நிலைத்துநிற்க வழிசெய்தனர். கிருத்தவ ஆலயங்களின் பக்கங்களில் பிரார்த்தனைக் கூடங்கள் நிறுவப்பட்டன. அவை நுண்ணிய வேலைப்பாடு உடையவையாய் இருந்தன. பிரார்த்தனைக் கூடங்

[1] நான் கன்னிமாடங்களைப்பற்றி மேலே எடுத்துக்காட்டியவையெல்லாம், ஐலீன் பவர் என்பார் எழுதியுள்ள, 'மிடீவல் இங்கிலிஷ் நன்னெரீஸ்' (Mediaeval English Nunneries) என்ற நூலில், இருந்தும், அவருடைய, 'மிடீவல் பீபில்' (Mediaeval People) என்ற மற்றொரு நூலில், எக்லன்டீன் என்ற பெயருடைய சீமாட்டியைப்பற்றிய அத்தியாயத்தில் இருந்தும் எடுத்தவையாகும்.

களில், அக் கூடங்களை நிறுவியவரின் சமாதிகள் வைக்கப்பெற்றன. சிலவிடங்களில் பிரார்த்தனைக் கூடங்கள் கிருத்தவ ஆலயங்களின் ஒரு பகுதியாக இருக்காமல், தனித்துநின்ற சிறிய ஆலயங்களாக விளங்கின. ஒரு பெரிய மனிதரின் நினைவு அவர் இறந்து ஆறு மாத காலம்வரை நிலைத்து நிற்கலாம். ஆனால், அவர் கிருத்தவ ஆலயங்களைக் கட்டியவராய் இருப்பாரேயாகில், அவரது நினைவு என்றும் அழியாததாய் நிலைத்துநிற்கும் என்று மக்கள் எண்ணினர்.

பதினைந்தாம் நூற்றாண்டிலே மக்களுக்குப் பலவித தொல்லைகள் ஏற்பட்டிருப்பினும், அந் நூற்றாண்டிலே கல்விகற்க அதிகமான வசதிகள் இருந்தன என்று கூறலாம். சாசரின் காலத்திலேயே பல பள்ளிகள் இருந்தன. ஆனால், அதைவிட அதிகமான பள்ளிகள் மதச்சீர்த்திருத்தம் ஏற்படும் தருணத்தில் இருந்தன. பதினைந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த பிஷப்புகள் உலக அறிவு படைத்தவராய் இருந்ததால், அவர்கள் பள்ளிகள் நிறுவுவதில் செல்வத்தை அதிகம் செலவிட்டனர். நகரங்களில் இருந்து வந்த கழகங்களும், நகர மாந்தரும், வியாபாரிகளும் பள்ளிகள் நிறுவுவதில் பெருமை கொண்டனர். நகர மாந்தரும், வியாபாரிகளும் செல்வத்தைக் கொழித்துவந்தனர். ஜென்ட்ரி வகுப்பினருடன் திருமணத்தின்மூலம் தொடர்புடையவராய் அவர்கள் இருந்தனர். நகரம் அல்லது ஷீர் என்ற வட்டாரங்களில் பள்ளிகள் நிறுவப்பட்டால், அவை ஆங்காங்கே இருந்த சிறுவர் கல்விகற்று வாழ்க்கையில் முன்னேற வழிவகுக்கும் என்று அம் மக்கள் கருதினர். ஒவ்வொரு நகரத்தவரும், தங்கள் நகரப் பள்ளிகள், பிஷப்புகள், நகரசபைத் தலைவர்கள், வியாபாரிகள், மந்திரிகள், நீதிபதிகள், வழக்கறிஞர்கள், ஜென்ட்ரிகள் ஆகியோராக வருங்காலத்தில் தங்கள் சிறுவர் திகழ வழிசெய்யும் என நம்பினர்.[1]

இங்கிலாந்து இதனால் சிறந்த உயர்நிலைப் பள்ளிக் கல்வியைப் பெற்றது. இப் பள்ளிகளில் ஏழைச் சிறுவர்களுக்கு இலவசமாகப் பாடம் கற்பிப்பதற்காக நன்கொடைகள் கொடுக்கப்பட்டன. ஆனால், இப் பள்ளிகளினால் தொழிலாளரின் மக்கள் பயன் பெறவில்லை. இடைநிலை வகுப்பினரில் தாழ்ந்த வகுப்பைச் சேர்ந்த சிறு நிலக்கிழார், நகர மாந்தர் ஆகியோரின் மக்களே இப் பள்ளிகளினால்

[1] போப்புகளும், பிஷப்புகளும் கி.பி. 1390 க்கும் கி. பி. 1415 க்கும் இடையே எழுதி வைத்துச்சென்ற ஏடுகளில் 'படித்த மக்கள்' (Literate laymen) என்ற தொடரைக் காண்கிறோம். பதினைந்தாம் நூற்றாண்டில், ஆண்டுகள் செல்லச் செல்ல இத் தொடர் உபயோகத்தில் இருந்து மறைகின்றது. ஏன்என்றால் இத் தொடரால் குறிப்பிடப்பட்ட வகுப்பினர் எண்ணிக்கையில் பெருகி இத் தொடரைக் கொண்டு சுட்டிக்காட்ட முடியாத நிலையை ஏற்படுத்தியிருந்தனர். இலக்கணப் பள்ளிகள் கற்பித்து வந்தோரின் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டே போயிற்று. 'லாலர்ட் பைபிள்' (The Lollard Bible) என்ற நூலில் எம். டீன்ஸ்லி என்பார் பக்கம் 209-ல் இதைப்பற்றிக் குறித்துள்ளார். (1920)

பயன் பெற்றனர். இவர்தம் மக்கள் படித்துத்தேறி அரசாங்கத்தில் பங்குகொண்டனர். அடுத்த நூற்றுண்டில், சமுதாயத்திலும் மக்களின் மனநிலையிலும் ஏற்பட்ட மாறுதலுக்கு இவரே காரணமாவர். மேற்குறித்த வகுப்பினின்று தோன்றிய பாதிரியார்களும், கல்வி கற்றோரும் சிறிது காலத்திற்குப் பிறகு தோன்றிய இயக்கங்களில் பங்கு கொண்டனர். மதச் சீர்திருத்த இயக்கத்தால் இலக்கணப் பள்ளிகள் தோன்றின என்ற கருத்துத் தவருனதாகும்; அதற்குமாருக இலக்கணப் பள்ளிகள், இங்கிலாந்தில் மதச் சீர்திருத்தம் தோன்றுவதற்குக் காரணமாயிருந்தன.

பதினைந்தாம் நூற்றுண்டின் இறுதியில் கிரேக்க, ரோமன் இலக்கிய மறுமலர்ச்சி இங்கிலாந்திற்கு எட்டியது. இதற்குமுன்பே இங்கிலாந்திலிருந்த உயர்நிலைப் பள்ளிகளில், லத்தீன் மொழியில் இருந்த இலக்கியம் போதிக்கப்பட்டுவந்தது. உதாரணமாக, வெர்ஜில் (Vergil) ஓவிட் (Ovid) ஆகியோரின் நூல்களும், மற்றும் சில கிருத்தவ நூலாசிரியர்களின் நூல்களும் கற்பிக்கப்பட்டு வந்தன. பண்டைக்கால நூல்களில் கிருத்தவ மதத்திற்கு முரணான கருத்துகள் இருப்பினும், இடைக்கால மதஸ்தாபனம் அந் நூல்களைப் படிக்க நீண்டகாலமாக அனுமதித்துவந்தது. இதன் விளைவாக, ஐரோப்பியரின் பண்பாடு சிறப்புற்றது. இலக்கணப் பள்ளிகள் என்று அழைக்கப்பட்ட உயர்நிலைப் பள்ளிகளில், லத்தீன் மொழியில் உரைநடையும் செய்யுளும் இயற்றினர். அத்துடன் லத்தீன் மொழியில் இருந்த நூல்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தும் வந்தனர். ஆங்கிலம் நாடுமுழுவதும் பாடம் போதிக்கும் மொழியாக இருந்து வந்ததால், மற்ற மொழியில் இருந்த நூல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தனர். சில பள்ளிகளில் மாத்திரம் ஃபிரெஞ்சு மொழியில் பாடம் போதிக்கப்பட்டு வந்தது. மாணவர் தங்கள் இல்லங்களில் ஃபிரெஞ்சு மொழியைப் பேசாததால், அம் மொழியை ஆங்கிலேயர் மறந்துவிடாமல் இருப்பதற்காகவே, சில பள்ளிகளில் ஃபிரெஞ்சு மொழியில் பாடம் கற்பிக்கப்பட்டுவந்தது. ஆனால், பள்ளி நேரம் தவிர மற்ற நேரங்களில் லத்தீன் மொழியைத்தவிர வேறு எந்த மொழியிலும் பேசக்கூடாது என்று விதி ஏற்படுத்தியிருந்தனர். இக் காலத்திற்குப்பின்னும், சில நூற்றுண்டுக் காலத்திற்கு இவ் விதியைக் கட்டாயப்படுத்தினர். இவ் விதியை மீறியவர் சாட்டையால் அடிக்கப்பட்டனர். உளவு சொல்பவரை மாணவர்களுடன் வெளியே அனுப்பி, மாணவர் ஆங்கில வார்த்தைகளை உபயோகிக்கின்றனரா என்று கவனித்துவந்தனர், பள்ளி அதிகாரிகள். ஆங்கிலத்தை உபயோகிக்கக்கூடாது என்ற விதி நடைமுறையில் எந்த அளவிற்கு அனுசரிக்கப்பட்டுவந்தது என்று அறுதியிட்டுக் கூற முடியாது. பத்தொன்பதாம் நூற்றுண்டில் பொதுப்பள்ளிகளில்

இருந்ததைவிட, பதினைந்தாம் நூற்றுண்டில் இலக்கணப்பள்ளிகளில் லத்தீன் மொழி பேசும் மொழியாக இருந்ததா என்று வினவலாம். அப்படியே இருந்தது என்று எண்ணுவதற்கு இடமுண்டு. அப்படி இருந்ததற்குப் பல காரணங்களும் இருந்தன. அந் நாளில் பல தொழிலில் ஈடுபட்டிருந்தோர் லத்தீன் மொழியைக் கற்றிருக்கவேண்டிய அவசியம் இருந்தது. பாதிரியார்கள் மட்டுமன்றித் தூதர், வழக்கறிஞர், அரசாங்க அதிகாரி, மருத்துவர், வியாபாரியின் கணக்கை எழுதுபவர், நகரங்களில் குமாஸ்தாவேலை செய்பவர் ஆகிய அனைவரும் தங்கள் அன்ருட வேலையை நடந்த லத்தீன் மொழியை அறிந்திருக்கவேண்டியிருந்தது.

பிரபுக்கள், ஜென்ட்ரி வகுப்பினர் ஆகியோரின் பிள்ளைகள் பலவிதக் கல்வி கற்றுவந்தனர். தங்களுடைய அந்தஸ்திற்கும், விருப்பத்திற்கும் ஏற்றவாறு பிரபுக்களும், ஜென்ட்ரிகளும் தங்கள் பிள்ளைகளுக்குக் கல்வியளித்தனர். சில பிள்ளைகள் பண்ணை வீட்டில் இருந்துகொண்டே, பாதிரியார்களைக்கொண்டு கல்விகற்று வந்தனர். தங்களுக்குச் சொந்தமான காட்டின் காவலரைக் கொண்டு பலவித விளையாட்டுகளைக் கற்றனர். ஆயுதம் தாங்கிய சேவகரிடமும், நைட் பட்டம்பெற்ற குதிரை வீரரிடமும் ஆயுதப் பயிற்சி பெற்றனர். அனேகமாக, பிள்ளைகள் வீட்டிலேயே கல்வி கற்கச் செய்யப்படவில்லை. அவர்கள் நெடுந்தூரத்தில் இருந்த பள்ளிகளில் கல்விகற்க அனுப்பப்பட்டனர். இப்படிச் செய்ததை அயல் நாட்டவர், ஆங்கிலேயரிடையே இருந்த இரக்கமற்ற தன்மையைக் காட்டுகின்றது என்று நினைக்கின்றனர். ஆனால், இப்படிச் செய்ததில் தீமைக்குப்பதில் நன்மையே விளைந்தது. சில பிரபுக்களின் பிள்ளைகள், நகரத்தாரின் பிள்ளைகளுடனும், சிறிய நிலக்கிழாரின் பிள்ளைகளுடனும் இலக்கணப் பள்ளிகளில் லத்தீன் மொழியைப் பயின்றுவந்தனர். மற்றும்சிலர் தனிப்பட்டோர் நடத்திவந்த பள்ளிகளில் சேர்ந்து படித்தனர். இக் காலத்தில் மணமான ஆசிரியர்கள் இப் பள்ளிகளை நிறுவி நடத்திவந்தனர். [ஸ்டோனர் (Stonor) கடிதங்கள், ஒன்று, பக்கம், 21] மற்றும் சிலர் மடங்களில் தங்கி இருந்து மடத்தலைவரின் பிரத்தியேக கண்காணிப்பில் இருந்து படித்துவந்தனர்.[1] பதினுன்கு வயதிற்குமேல்

[1] மடங்கள் அழிக்கப்படுவதற்குச் சிறிது காலத்திற்குமுன் ரீடிங் (Reading) நகர மடத்தின் தலைவர், லிஸ்சில் பிரபுவிற்குப் (Lord Lisle) பின்வருமாறு எழுதினுர்: ‘உங்கள் இளம்மகனை வில்லியம் எட்வர்ட்ஸ் என்ற என் மேற்பார்வையாளரின் கவனிப்பில் விட்டுவைத்திருக்கிறேன். உங்கள் மகன் உடையை மாற்றிக்கொள்ளக்கூடத் தெரியாத சிறுவனுக இருப்பதால் அவனைக் கவனித்துக் கொள்ள ஒரு பெண்ணை நியமிக்கக் கட்டளையிட்டுள்ளேன். சிறுவனுக இருப்பினும் கல்வி கற்பதில் உங்கள் மகன் முன்னணியில் உள்ளான்.’ ஜி பாஸ்கர் வில்லி எழுதியுள்ள ‘இங்கிலீஷ் மான்க்ஸ் அண்டு தி சப்ரஷன் ஆஃப் தி மானுஸ்டரீஸ்,’ (English Monks and the Suppression of the Monasteries) என்ற நூலில் பக்கம் 37-ஐப் பார்க்க.

பதினெட்டு வயதிற்குள் பிள்ளைகள் ஆக்ஸ்ஃபோர்டு அல்லது கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலைக்கு மேல்படிப்பிற்காகச் சென்றனர். சிலர் அரசரின் அவைக்கோ, அல்லது பிரபுக்களின் அவைக்கோ சென்று வேலையில் அமர்ந்தனர். இவ்வித வேலையைச் செய்வதற்கு லத்தீன் மொழியை அறிந்திருக்கவேண்டிய அவசியமிருக்கவில்லை. அதற்குமாருகக் குதிரைஏற்றம், குதிரைமேல் இருந்து தனித்துப் போர் புரிவது, நடனம் செய்வது, இசைக் கருவிகளை இசைப்பது, பாட்டு பாடுவது ஆகியவற்றில் தேர்ச்சிபெற்றவராய் இருக்கவேண்டியிருந்தது. இத்துடன் காதல் கலையிலும் தேர்ச்சி பெற்றிருத்தல் வேண்டும். ஒழுக்கத்தை விரும்பியவர்கள், இளைஞர்கள் இத்தகைய கல்விகற்ருல் அது அவருக்குத் தீங்கையே விளைவிக்கும் என்று எடுத்துக்கூறினர். பதினைந்தாம் நூற்ருண்டின் இறுதியில், பிரபுக்களும் அவரது ஆயுதம் தாங்கிய பணியாட்களும் சீர்குலைந்து கொண்டிருந்தனர். இதற்கு மாருகப் பண்ணைவீட்டில் இருந்தவர், வியாபாரஸ்தலங்களில் இருந்தவர், இலக்கணப்பள்ளி, சர்வகலாசாலை முதலியவற்றில் கல்வி கற்றுவந்தவர் ஆகியோர் முன்னுக்கு வந்துகொண்டிருந்தனர். வருங்காலம் அவர்களுக்கு நன்மை பயப்பதாய் இருந்தது. கைத்தொழில்கள் நடத்தி வந்தோரிடமும், வியாபாரிகளிடமும் பயிற்சிபெற்றுவந்த பிரபுக்களின் பிள்ளைகள், பிற்காலத்தில் நல்ல நிலையில் இருந்தனர். இப்படிப் பிரபுக்களின் பிள்ளைகள் நகரத்தில் வாழ்ந்தோரிடம் பயிற்சி பெற்று வந்தது, பிரபுகளும், நகரத்தவரும் ஒருவரோடொருவர் கலக்க வழிசெய்தது. இத்தகைய கலப்பு இங்கிலாந்தைப் ஃபிரான்சிலிருந்து வேற்றுமைப்படுத்திக் காட்டுகின்றது. ஏனென்ருல், இத்தகைய கலப்பு ஃபிரான்சில் ஏற்பட வழியேதும் இருக்கவில்லை.

தற்காலத்தில் பொதுப்பள்ளிகள் என்று ஆங்கிலேயரால் அழைக்கப்படும் பள்ளிகளின் நிலையில், வைகாம் என்ற ஊரைச் சார்ந்த வில்லியம் என்பார் ஏற்படுத்திய வின்செஸ்டர் கல்லூரியும், கி.பி. 1440-ல் ஆரும் ஹென்றியால் ஏற்படுத்தப்பட்ட எடான் கல்லூரியும் இருந்தன. வின்செஸ்டரில் ஆரம்பகாலம் முதல் ஜென்ட்ரி வகுப்பினரின் பிள்ளைகள் படித்துவந்தனர். இந்தக் கல்லூரி அந்த வட்டாரத்தில் இருந்தவர்களுக்குமட்டுமல்லாமல், நாட்டின் பல பாகங்களில் இருந்தவர்க்கும் கல்விகற்க வாய்ப்பளித்தது. இக் கல்லூரியில் தென்பகுதியில் இருந்தும், மத்திய பிரதேசத்திலிருந்தும், வெகுதூரத்தில் இருந்த செஷீர், லங்காஷீர் ஆகிய இடங்களில் இருந்தும் வந்த மாணுக்கர்கள் கல்வி கற்று வந்தனர். அனேக மாணவர்கள் பதினெட்டு வயதுவரை இக் கல்லூரியில் கல்விகற்றனர். ரோஜாப்பூ அடையாளப் போரின் காலத்தில் எடான் கல்லூரியில் தீவிரப் பண நெருக்கடி ஏற்பட்டது. ஆனுல், இதைப்பற்றி லீச் என்பார் பின்வருமாறு குறித்துள்ளார்:

'இப் பண நெருக்கடி இக் கல்லூரியைப் பாதிப்பதற்குப் பதிலாக, மேலும் வளர்ச்சியடைந்து பொதுப்பள்ளிகளின் நிலையை அடையச் செய்தது. பிரபுக்களின் பிள்ளைகளும், உயர்ந்த வகுப்பினரின் பிள்ளைகளும் இக் கல்லூரியில் படித்து வந்தனர். இவர்கள் கல்வி கற்பதற்காக ஒன்றும் அளிக்காவிட்டாலும், அவ்வூரில் தங்கி இருப்பதற்காகப் பெருத்த தொகைகளை அளித்தனர். இதனால் அவர்களுக்கு ஒப்பிடான்ஸ் (Oppidans) என்ற பெயர் வழங்கலாயிற்று.' (ஸ்கூல்ஸ் ஆஃப் மிடீவல் இங்கிலண்டு (Schools of Mediaeval England) என்ற நூலில் 259 ஆம் பக்கம்).

லத்தீன் மொழியில் உரைநடையும் செய்யுளும் கற்கவும், பிரபுக்களின் பிள்ளைகளோடு சேர்ந்து பழகவும், கி.பி. 1477-ல் இளைஞரான வில்லியம் பாஸ்டன், நார்ஃபோக் பண்ணைவீட்டில் இருந்து, எடானுக்கு அனுப்பப்பட்டார். அவருடைய பெற்றோர்கள் அவர் எடானில் தங்கி இருந்த விடுதிக்கு வாடகைப்பணம் கொடுக்க முடியாமல், ஒன்பதுமாத வாடகைப்பணம் கொடுக்கவேண்டிய நிலை ஏற்பட்டது. வில்லியம் பாஸ்டனின் ஆசிரியர் ஒரு சமயம் அவருக்கு இருபது ஷில்லிங் பணங்கொடுத்து உதவினார்.

வில்லியம் பாஸ்டனின் தலைமுறை முன்தலைமுறைக் காலத்தில் முதலாம் ஜான் பாஸ்டன் சட்ட படிப்புப் படிப்பதற்காக கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலையைச் சார்ந்த டிரினிட்டி ஹாலுக்குச் (Trinity Hall) சென்றார். அதன் பிறகு 'இன்னர் டெம்பிள் (Inner Temple) என்று அழைக்கப்பட்ட வழக்கறிஞர்கள் தங்கியிருந்த இடத்திற்குச் சென்றார். வழக்குகள் மலிந்த அக் காலத்தில் தங்கள் சொத்துகளையும் பாதுகாக்கச் சட்டபடிப்புப் படித்திருக்கவேண்டிய நிலை இருந்தது. அதைத்தான் உலகியல் அறிவுபடைத்த அவரது தாயார் ஆக்னெஸ் தன் கடிதத்தில் குறிப்பிடுகிறார். 'பாஸ்டனில் யார் வாழ்ந்தாலும் தன்னைப் பாதுகாத்துகொள்ளச் சட்டத்தை அறிந்திருக்கவேண்டும் என்று ஒவ்வொருநாளும் பல தடவை உன் தகப்பனார் எடுத்துக் கூறியதை உனக்கு நினைவூட்டுகிறேன்' என்று எழுதினார்.

ஜானின் மகனான வால்டர் பாஸ்டன், ஜேம்ஸ் கிளாய்ஸ் என்ற பெயருடைய பாதிரியாரின் பொறுப்பில் வெகு தூரத்தில் இருந்த ஆக்ஸ்ஃபோர்டு சர்வகலாசாலைக்கு அனுப்பிவைக்கப்பட்டார். வால்டரின் தாயார் மார்கரெட் சர்வகலாசாலையில் இருந்த பாதிரியார்கள் தன் மகனையும் பாதிரியாராக மாறத் தூண்டிவிடுவார்களோ என்ற பயங்கொண்டிருந்தார். 'நான் என் மகனைப் பாதிரியாராகாமல் இருக்க விரும்புகிறேன்' என்று தம் கருத்தை வெளியிட்டார்.

பிஷப் வெயின்ஃபிளீட் (Waynflete) என்பவரால் இருபது ஆண்டுகளுக்குமுன் தொடங்கிவைக்கப்பட்டு, ரோஜாப்பூ அடையாளப் போரின் காரணமாகத் தடைபட்டுப் பின் உயர எழும்பிக் கொண்டிருந்த மக்டலீன் கல்லூரிக் கட்டடத்தைக் கி.பி. 1474-ல் ஆக்ஸ்ஃபோர்டில், தாம் இருந்தபோது, வால்டர் பாஸ்டன் கண்ணுற்றிருப்பார். வைகாம் (Wykeham) என்பாரால் நியூ காலேஜ் என்ற கல்லூரி தொடங்கப்பட்டு, அப்போது நூறு ஆண்டுக்காலம் முடிவடைந்துவிட்டிருந்தது. கட்டடக் கலைச் சிறப்பில் வைகாமின் கல்லூரியைவிட, மக்டலீன் கல்லூரி உயர்ந்ததாகவிருந்தது. மக்டலீன் கல்லூரியில் இருந்த நீண்ட சதுர வடிவமான கூடம், கூரைவேயப்பட்டுக் கல்லினுலான சிற்பங்களால் அழகு செய்யப்பட்டிருந்தது. ஆறும் ஹென்றியின் தொல்லைகள், கேம்பிரிட்ஜில் அரசரின் கல்லூரியைக் (King's College) கட்டிமுடிக்கும் பணியைத் தடைசெய்தன. அக் கல்லூரியில் உள்ள கிருத்தவ ஆலயம் டியூடர் வம்சத்தினரின் காலத்தில்தான் கட்டி முடிக்கப்பட்டது. இதன் காரணமாகத் தற்காலத்தில் காணப்படும் விசிறியின் மடிப்பைப்போன்ற கூரையை அவ் வாலயம் உடைத்தாய் இருக்கின்றது. (வில்சும், கிளார்க்கும் எழுதிய நூலில் பக்கம் 494.) ஆற்றங்கரையில் ஆன்ஜூவைச் சார்ந்த மார்கெரெட் அரசியாரால் ஏற்படுத்தப்பட்ட அரசியின் கல்லூரி (Queen's College) அவருடைய கணவரின் அரசாட்சிக் காலத்திலேயே கட்டிமுடிக்கப்பட்டது. செங்கற்களைக் கொண்டு எத்தகைய அழகான கட்டடங்கள் கட்டமுடியும் என்பதை அரசியின் கல்லூரியும், எடான் கல்லூரியும் எடுத்துக் காட்டின.

கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலை, ஆக்ஸ்ஃபோர்டு சர்வகலாசாலைக்குப் போட்டியாகப் பதினைந்தாம் நூற்றுண்டு முழுவதும் வளர்ந்துகொண்டே வந்தது. கி.பி. 1382-ல் விக்லிஃப் என்பாரைப் பின்பற்றியவரை, அரசாங்கமும் மதஸ்தாபனமும் சேர்ந்து ஆக்ஸ்ஃபோர்டு சர்வகலாசாலையில் இருந்து விலக்கின. இப்படிச் செய்தும் பெற்றேர்கள் மதக் கோட்பாட்டிற்கு முரணுன கருத்துக்கள் ஆக்ஸ்ஃபோர்டு சர்வகலாசாலையில் நிலவிவந்தன என்று எண்ணினர். ஆக்ஸ்ஃபோர்டு சர்வகலாசாலையில் இருந்த மாணவரின் எண்ணிக்கை, குறைவதற்கு இந்த எண்ணம் ஒரு காரணமாக இருந்தது. அடுத்த ஒரு நூற்றுண்டுக் காலத்தில், கேம்பிரிட்ஜில் இருந்த மாணவரின் எண்ணிக்கை அதிகரித்தது. இதுவரை கவனிப்பாறற்றுக்கிடந்த கேம் (Cam) நதியின் இரு மருங்கிலும் அரசரின் ஆதரவால் பல கல்லூரிகள் தோன்றலாயின. பதினைந்தாம் நூற்றுண்டு முடிவடைவதற்குள் அனேக பிஷப்புகள் கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலையில் படித்துத் தேறி வெளிவந்தனர்.

கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலை வேகமாக எண்ணிக்கையிலும், செல்வத்திலும், முக்கியத்வத்திலும் உயர்ந்துகொண்டே இருந்தது. எனினும், கேம்பிரிட்ஜும், ஆக்ஸ்ஃபோர்டும், டியூடர் வம்சத்தினரின் ஆட்சியின் தொடக்க காலம்வரை அறிவு வளர்ச்சிக்குப் போதிய வழி செய்து கொடுக்கவில்லை, மதக்கோட்பாட்டில் இருந்த தீவிரப் பற்று அறிவு வளர்ச்சியைத் தடை செய்துவந்தது.

ஆனால், மாற்றத்தை விரும்பாத இக் காலத்திலே கல்லூரிப் படிப்புமுறை வேரூன்றியது. கல்லூரிப் படிப்புமுறை வளரவளர, மாணவர்கள் கவலையற்றும், கட்டுப்பாடின்றியும் சர்வகலாசாலைகளில் வாழ்ந்துவந்த வாழ்க்கைக்கு, ஒரு முடிவு தோன்றலாயிற்று. எந்த ஓர் இயக்கமும் தொடக்கத்தில் தீவிரமாக இருப்பது இயற்கை. அதைப்போலவே பட்டப் படிப்பிற்குப் படித்துவந்த மாணவர்களுக்குப் பதினைந்தாம், பதினாறும் நூற்றாண்டுகளில் இருந்துவந்த கட்டுப்பாடுகளில் சில கடுமையானவைகளாக இருந்தன. யார்க் வம்சத்தினர், டியூடர் வம்சத்தினர் ஆகியோரின் ஆட்சிக்காலத்தில் கல்லூரிகள், சர்வகலாசாலைகள் ஆகியவற்றில் ஏற்படுத்தப்பட்டிருந்த விதிகள் அனைத்தையும் நடைமுறையில் அனுசரிக்கப்பட்டிருந்தால், பட்டப்படிப்பிற்குப் படித்துவந்த மாணவர்கள், பள்ளி மாணவர்களைப்போல் நடத்தப்பட்டிருக்க வேண்டும். சர்வகலாசாலையில் படித்துவந்த மாணவர்களுக்குத் தண்டனையாகக் கசையடி கொடுக்கலாம் என்ற புதிய விதியை ஏற்படுத்தியிருந்தனர். இது இப்படி இருக்க, பட்டப்படிப்பிற்குப் படித்துவந்தோரின் வயதும் முன்னைவிட அதிகமாக இருந்தது. விக்லிஃப் என்பாரின் காலத்தில் இருந்ததைவிட, ஏராஸ்மஸ்சின் காலத்தில் ஆக்ஸ்ஃபோர்டிலும் கேம்பிரிட்ஜிலும் பதினேழு வயதான மாணவர்களின் எண்ணிக்கை அதிகமாகவும், பதினான்கு வயதான மாணவர்களின் எண்ணிக்கை மிகக் குறைவாகவும் இருந்தது. எந்த அளவிற்கு விதிகள் நடைமுறையில் அனுசரிக்கப் பட்டுவந்தன எனக் கூறுவது எளிதான காரியமல்ல. சமய சந்தர்ப்பங்களுக்கு ஏற்றாற்போல் விதிகளை அனுசரிப்பதைக் கட்டாயப்படுத்தவோ அல்லது தளர்த்தவோ செய்திருக்க வேண்டும். எப்படி இருப்பினும் கல்வித்துறையில் கட்டுப்பாடு இல்லாதிருந்த காலம் மறைந்து வெகுகாலம் ஆகிவிட்டது. பதினைந்தாம் நூற்றாண்டிலேயே கல்லூரிப் படிப்புமுறை கேம்பிரிட்ஜிலும், ஆக்ஸ்ஃபோர்டிலும் ஏற்படுத்தப்பட்டது.

பள்ளிகளிலும், சர்வகலாசாலைகளிலும் மாணவரின் எண்ணிக்கை அதிகரித்தபோது, அவர்கள் எத்தகைய நூல்களைக் கற்றனர் என்ற வினா எழலாம். பக்தி நிறைந்ததும், மதத்தைச் சார்ந்ததுமான நூல்களை அதிகமாகப் படித்துவந்தனர். ஆனால்,

பைபிள் அவர்களுக்குத் தெரிந்திருக்கவில்லை. எவராவது மதஸ்தாபனத்தின் அனுமதியின்றி ஆங்கில மொழியில் மொழிபெயர்க்கப்பட்ட பைபிளை வைத்திருந்தால், அவர் மதக்கோட்பாட்டிற்கு முரணான கருத்துக்கொண்டவர் என்று கருதப்பட்டார். விக்லிஃப்பின் கருத்துகள் ஏழைகளிடையே காணப்பட்டன. விக்லிஃப்பின் கருத்துகள் அடங்கிய நூல்கள், மக்கள் படிக்கத் தகாதவை என்று குறிக்கப்பட்டன. அதனால் அந் நூல்கள் இரகசியமாகப் படிக்கப்பட்டுவந்தன. ஆகையால் விக்லிஃப்பின் கருத்துகள் அழிந்து மறைந்துவிடாமல் தக்க தருணத்தில் தலை தூக்கத் தயாராகவிருந்தன. பதினைந்தாம் நூற்றாண்டில் இருபது பேர் மதக்கோட்பாட்டிற்கு முரண்பட்டவர் என்று உயிருடன் எரிக்கப்பட்டனர். பலர் முரண்பாடுடைய கருத்துகளை மறந்து விட்டோம் எனக்கூறி உயிர்தப்பினர். மற்றும் பலர் தங்கள் கருத்துகளை வெளியிடாததால் கைதுசெய்யப்படுவதிலிருந்து தப்பினர்.

பக்தியூட்டும் நூல்களைத்தவிர, பள்ளிகளில் லத்தீன் மொழியில் இருந்த இலக்கியங்களும் கற்பிக்கப்பட்டுவந்தன. அத்துடன் பெரிய நூல்களையும் அறிவு வளர்ச்சிக்காகப் படிக்கவேண்டியிருந்தது. ஜென்டரி வகுப்பினரும் நகர மாந்தரும், உரைநடையிலும் செய்யுளிலும் இருந்த இங்கிலாந்து, ஃபிரான்சு ஆகிய நாடுகளின் வரலாற்றைக் கற்றுவந்தனர். அத்துடன் ஆர்தர் அரசரைப்பற்றிய கதைகள், டிராய் என்ற நகரைப்பற்றிய கதை, மற்றும் நூற்றுக்கணக்கான பழங்கதைகளை உரைநடையில் படித்து வந்தனர்.[1] சாசர், லாங்லண்டு முதலியவர்களின் நூல்களும், 'மான்டிவெல்லின் பிரயாணங்கள்' (எப்படி முதலையானது மனிதரை விழுங்கும்போது, கண்ணீர் வடிக்கின்றது என்பதைப் போன்ற கதைகள்) என்ற பெயருடைய நூலும் திரும்பத்திரும்ப அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டன. எந்த அளவிற்கு மக்கள் அந் நூல்களை விரும்பினர் என்பதையே இது எடுத்துக்காட்டுகின்றது. அரசியலைப்பற்றிய வசைப் பாடல்களைக் கையெழுத்துப் பிரதியில் ஒருவர்பின் ஒருவராகப் படித்துவந்தனர். கி.பி. 1436-ல் லைபெல் ஆஃப் இங்கிலிஷ் பாலிசி (Libel of English Policy) என்ற பெய

[1] ரோகர் ஆசாம் (Roger Ascham) என்ற பெயருடைய, எலிசபத் அரசியின் பள்ளி உபாத்தியாயர் கீழ்க்கண்டவாறு குறித்துள்ளார்: 'நம் முன்னோர்களின் காலத்தில், போப்பின் அதிகாரம் இங்கிலாந்து முழுவதும் பரவியிருந்தது. அக் காலத்தில் சிறு நூல்களே ஆங்கிலத்தில் இருந்தன. நூல்கள் பொழுது போக்கிற்காகவும் படித்து இன்புறுவதற்காகவும் படிக்கப்பட்டன. உதாரணமாக லா மார்டி டி ஆர்தர் (La morte d' Arthure) என்ற பெயருடைய நூல், துணிந்து கொலைசெய்தல், பெண்ணைக் கடத்திச் செல்லல் ஆகிய செயல்களைக் கொண்டிருந்ததால், மிக்க ஆவலுடன் படிக்கப்பட்டது. மதச் சீர்திருத்த இயக்கத்திற்குப் பிறகு, பைபிளுக்குப் பதிலாக இந் நூல் அரசியின் அறையில் இடம் பெற்றது.

ருடைய வசைப்பாடல், நாட்டைச்சுற்றி இருந்த கடல்களில் பாதுகாப்பிற்காகவும் வியாபாரத்திற்காகவும், போதுமான, பல முள்ள கப்பற் படையை வைத்திருப்பது அரசாங்கத்தின் முதல் கடமையாகும் என்று எடுத்துக்கூறுவதற்காக எழுதப்பட்டதாகும்.

> ‘இங்கிலாந்தைச் சுற்றியுள்ள கடல்களை நன்ருகக் கண்காணிக்கவும்;
>
> ஏனென்ருல், அது இங்கிலாந்தைப் பாதுகாக்கும் வட்ட வடிவமான அரண்போல் இருக்கின்றது. இங்கிலாந்து ஒரு நகர்போலவும், கடல் அதனைச் சுற்றியுள்ள அரண் போலவும் இருக்கின்றன’.

தனிப்பட்டோர் வைத்திருந்த நூல்நிலையங்களைத்தவிர, பொது நூல்நிலையங்களும் அமைக்கப்பட்டுவந்தன. உ தா ர ண மா க ஆக்ஸ்ஃபோர்டு சர்வகலாசாலையில் டியூக் பதவிவகித்த ஹம்ப்ரி (Duke Humphrey) என்பார் ஒரு நூல்நிலையத்தை ஏற்படுத்தி யிருந்தார். கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலையிலும் ஒன்று இருந்தது. லண்டனில், விட்டிங்டன் (Whittington) என்பார் ஏற்படுத்தி இருந் தார். கில்டுஹால் (Guildhall) என்ற இடத்திலும் ஒன்று இருந்தது. சிற்றிலக்கியங்களில் கதைப்பாட்டுகளைத் தவிர வேறு எந்த நூலும் இருக்கவில்லை. இவைகளை வாயால் பாடி வந்தனர். எழுதிப் படிக்கும் பழக்கம் இருக்கவில்லை. கதைகள் பிறர் சொல்லக்கேட்டு மகிழ்ந்துவந்தனர். ஆண்களிடையேயும் பெண்களிடையேயும் கதைசொல்லும் பழக்கம் இருந்துவந்தது. அத்துடன் பாடல்களைப் பாடுவதும் இசைக் கருவிகளை மீட்டி இசைப்பதும் அவரது பழக்கமாய் இருந்துவந்தது.

காக்ஸ்டன் அச்சுக்கூடத்தை இங்கிலாந்தில் அமைத்தபோது சமுதாயமும் கல்வியும் இந் நிலையில் இருந்தன.

வில்லியம் காக்ஸ்டன் (William Caxton) சமுதாயத்திலேயே புதியதாகத் தோன்றிய இடைநிலை வகுப்பைச் சார்ந்தவராவார். இவர் முதன்முதலில் உலகிற்குப் பெரிய தொண்டு செய்தவர்களில் ஒருவர் எனக் கூறலாம். பொழுதுபோக்கிற்காகத் தாம் எடுத்துக் கொண்டதைக்கூட, ஊக்கத்துடனும் திறமையுடனும் செய்த ஆங்கிலேயராவார். லண்டனில் இருந்த மெர்செர் என்ற வியா பார ஸ்தாபனத்தின் அங்கத்தினராக அவர் இருந்தார். அவர், ஹாலண்டு, பெல்ஜியம் ஆகிய இரண்டு நாடுகளிலும் முப்பது ஆண்டுக்காலம் இருந்து, ஏராளமான செல்வத்திற்கு அதிபதி யானுர். இப்படி அவர் செல்வநிலையை அடைந்தது, பிற்காலத்தில் இலக்கியத்திற்குத் தொண்டுசெய்ய உதவியது. ஃபிரெஞ்சு

மொழியில் இருந்து, நூல்களை முதன் முதலில் ஆங்கில மொழியில் மொழிபெயர்த்தார். இப் பணியில் அவர் ஈடுபட்டிருந்த சமயம் அச்சுகளை ஒன்ருகக் கோத்து அச்சிடும் முறையைப்பற்றி அறிய லானுர். இம் முறையை புரூஜெஸ் (Bruges), கலோன் (Calogne) என்ற பெயருடைய இரு நகரங்களில் தாம் இருந்தபோது கற்ருர். கி.பி. 1474 - 1475-ல் தாமே ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த இரண்டு நூல்களைப் புதுமுறையில் அச்சிட்டு வெளியிட்டார். அவைகளில் ஒன்று இடைக்காலக் காதல் கதையாகும். மற்ருென்று ‘ தி கேம் அண்டு பிளே ஆஃப் செஸ் ’ (The Game and Playe of Chesse) என்ற பெயருடைய, சதுரங்க ஆட்டத்தை விளக்கும் நூலாகும்.

கி.பி. 1477-ல் அவர் தன் அச்சு இயந்திரத்தை இங்கிலாந் திற்குக் கொணர்ந்து வெஸ்ட் மின்ஸ்டர் நகரில் இருந்த மடத்தைச் சார்ந்த கோயில் அருகில் அமைத்தார். இதன் பின்னர், அரசர், பிரபுக்கள் முதலானேரின் ஆதரவைக்கொண்டு, தாம் இங்கிலாந் திற்குத் திரும்பியபின் வாழ்ந்த பதினுன்கு ஆண்டுக்காலத்தில் சுமார் நூறு நூல்களை அச்சிட்டு வெளியிட்டார். சாசர், கோவர் (Gower), லிட்கேட் (Lydgate) ஆகியோரின் நூல்களும் மேலரி என்பார் எழுதிய மார்டி ஆர்தர் (Morte Arthur) என்ற நூலும், சிசரோவின் நூல்கள், இசாப் கதைகள் (Aesop's Fables) ஆகிய வற்றின் மொழிபெயர்ப்பையும் அவர் வெளியிட்டார். அவருடைய உழைப்பு ஆச்சரியப்படத்தக்கதாய் இருந்தது. அச்சுக்கூடத்தின் வேலையைக் கவனிப்பதுடன், இருபது நூல்களை மொழிபெயர்த் தார். மதப் பிரசாரகரிடையே காணப்பட்ட ஊக்கத்துடன், அவர் சிறந்த பயனுள்ள நூல்களை ஆங்கிலத்தில் வெளியிட்டார். அவரது தளராத உழைப்பும் மொழிபெயர்ப்பது, அச்சிட்டு நூல்களை வெளியிடுவது ஆகிய பணிகளில் அவர் கண்ட வெற்றியும் ஆங்கில இலக்கியத்தின் அடித்தளத்தை அமைத்துக் கொடுத் தன. அத்துடன் அடுத்த நூற்ருண்டில் ஏற்பட்ட இலக்கிய வளர்ச்சிக்கும் காரணமாய் இருந்தன.

காக்ஸ்டன் அச்சுக்கூடத்தை உயர்ந்த நோக்கங்களுக்கா கவும், நூல்களை வெளியிடுவதற்காகவும் பயன்படுத்தினுர். ஆனுல், பிற்காலத்தில் அச்சுக்கூடங்கள் அரசியலிலும், மதத்திலும் முரண்பாடுடைய கருத்துகளைப் பரவச்செய்யும் சாதனங்களாக இருந்தன. அறிவையும் கருத்துகளையும் பரப்ப, அச்சு இயந்திரம் சிறந்த சாதனமாக அமைந்தது. ஆனுல், காக்ஸ்டன் இறந்த போது அத்தகைய சாதனமாக அச்சுக்கூடங்கள் இருக்கமுடியும் என்று தோன்றவில்லை.

காக்ஸ்டன் கற்றோருக்கு ஏற்றவகையில், ஆங்கில மொழியின் அமைப்பு இருக்கவேண்டும் என்ற அவசியத்தை உணர்ந்தார். அதனால் அவர் தாம் மொழிபெயர்க்கும் நூல்களை ஆங்கிலத்தின் எந்தக் கிளை மொழியில் அச்சிடப்படவேண்டும் என்பதைத் தீர சிந்தனை செய்தும், பலரின் ஆலோசனையைக் கேட்டும் முடிவு செய்தார். எந்தக் கிளை மொழியில் அச்சிடப்படவேண்டும் என்ற சிக்கலின் காரணமாக அவருக்கு ஏற்பட்ட தொல்லைகளை, 'இனிடாஸ்' (Eneydos)[1] என்ற நூலின் ஆங்கில மொழிபெயர்ப் பின் முகவுரையில் குறிக்கின்றார். வெர்ஜில் (Vergil) என்பார் லத்தீன் மொழியில் எழுதிய ஈனீட் (Aeneid) என்ற, ஃபிரெஞ்சு மொழியில் இருந்த பொழிப்புரைதான் 'இனிடாஸ்' என்ற நூலாகும்.

'பல நூல்கள் மொழிபெயர்க்கப்பட்டு, அச்சிடப்பட்டபின், வேறு வேலை ஏதும் இல்லாமையால் நான் என் படிக்கும் அறையில் அமர்ந்திருந்தேன். அங்கே பலதரப்பட்ட சிறியனவும் பெரிய னவுமான நூல்கள் இருந்தன. அவற்றில் ஃபிரெஞ்சு மொழியில் இருந்த ஒரு சிறிய நூலைத் தற்செயலாகக் கண்டெடுத்தேன்; இந் நூல் சொற்ப காலத்திற்குமுன்தான் லத்தீன் மொழியில் இருந்து ஃபிரெஞ்சுப் பாதிரியார் ஒருவரால், ஃபிரெஞ்சு மொழியில் மொழிபெயர்க்கப்பட்டிருந்தது. வெர்ஜில் என்ற மகா கவியினால் லத்தீன் மொழியில் எழுதப்பட்டிருந்த அந் நூலின் பெயர் ஈனிடாஸ்.

'நான் இந்த நூலை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்க நிச்சயித் தேன். உடனே, மையையும் பேனாவையும் எடுத்துக்கொண்டு என் வேலையைத் தொடங்கினேன். ஒன்று அல்லது இரண்டு பக்கங்கள் எழுதி முடித்தவுடன், அப் பக்கங்களைத் திரும்பத் திரும்பப் படித்துப் பார்த்துப் பிழைகளைத் திருத்தியமைத்தேன். அப்படிச் செய்தபோது, என்னுடைய மொழிபெயர்ப்பில் புதிய வார்த்தைகளைக் கண்ணுற்றேன். முன்னமேயே சிலருக்குப் புரியாத வார்த்தைகளை என் மொழிபெயர்ப்புகளில் நான் உபயோகித்திருந்ததாகக் குறை கூறப்பட்டிருந்தேன். அப்படி இருக்கத் திரும்பவும் நான் புதிய வார்த்தைகளை உபயோகித்தால், அவ் வார்த்தைகள் அனைவருக்கும் புரியாது என்பதை உணர்ந் தேன். அதனால் நான் யாவரும் விரும்பக்கூடிய வகையில் மொழி பெயர்க்கத் தீர்மானித்தேன். இதற்காக ஒரு பழைய ஆங்கிலப் புத்தகத்தை எடுத்துப் படித்துப் பார்த்தேன். அப் புத்தகத்தில் இருந்த வார்த்தைகள் அனைத்தையும் என்னால் புரிந்துகொள்ள

[1] இ இ டி.எஸ். (E.E.T.S.) 1890) பக்கங்கள்—1-4.

முடியவில்லை. அப்போது உபயோகிக்கப்பட்டுவந்த ஆங்கில மொழியானது, நான் பிறந்தபோது எழுதப்பட்டதும் பேசப் பட்டதுமான ஆங்கில மொழியிலிருந்து மிகவும் மாறுபட்ட தாகவிருந்தது. ஒரு வட்டாரத்தில் பேசப்பட்ட ஆங்கிலமானது மற்றொரு வட்டாரத்தில் பேசப்பட்ட ஆங்கிலத்தினின்றும் மாறு பட்டது. ஒரு சமயம் சில வியாபாரிகள் தேம்ஸ் நதியின் முகத் துவாரத்தில் இருந்து கிளம்பிக் கடலைக் கடக்கப் புறப்பட்டனர். போதுமான காற்றில்லாததால் கென்ட் பிரதேசத்தில் இருந்த நார்த்போர்லண்டு என்ற இடத்தில் தங்கினர். ஷெப்ஃபீல்ட் என்ற பெயருடைய வியாபாரி, ஒரு வியாபாரி வீட்டினுள் நுழைந்து இறைச்சி கொடுக்குமாறு கேட்டார். அத்துடன் முக்கியமாக முட்டை கொடுக்குமாறு கேட்டார். அதற்கு அவ் வீட்டின் எஜமானி எனக்கு ஃபிரெஞ்சு மொழி தெரியாது; அதனால் நீங்கள் சொல் வதை என்னால் புரிந்து கொள்ளமுடியவில்லை என்றார். வியா பாரிக்கு உடனே கோபம் வந்தது. ஏனென்றால், அவர் பேசியது ஃபிரெஞ்சு மொழியன்று. அதற்குமாறாக ஆங்கிலத்திலேயே பேசினார். கடைசியில் வேறு ஒரு வியாபாரி வேறு வார்த்தையை உபயோகித்து முட்டைவேண்டும் என்று குறிப்பிட்டார். உடனே, அவ் வீட்டு எஜமானி இப்போது நான் நன்றாகப் புரிந்துகொண்டு விட்டேன் என்று பதிலளித்தார். இப்படி இருக்க நான் இப்போது எந்த வார்த்தைகளை உபயோகித்து என் மொழிபெயர்ப்பைப் பூர்த்தி செய்வது என்று எண்ணினேன்.

'எல்லாரையும் மகிழ்ச்சியடையச் செய்வதென்பது முடியாத காரியம். ஏனென்றால், மொழி ஓர் இடத்திலிருந்து மற்றோரிடத் திற்கு மாறுபட்டது. சில பாதிரியார்கள் என்னுடன் இருந்து கொண்டு புதிய வார்த்தைகளை உபயோகித்து எழுதச் சொன் னார்கள். இந் நிலையில் எப்படி எழுதுவது என்ற தயக் கத்தில் இருந்தேன். பழைய ஆங்கில வார்த்தைகளுக்குப்பதில் அன்றாட வாழ்க்கையில் உபயோகிக்கப்பட்டதும், எல்லாராலும் புரிந்துகொள்ளக் கூடியதுமான வார்த்தைகளை உபயோகிப்பது என்று எண்ணினேன். இந்த நூலைப்பொறுத்தவரை, முரட்டுத் தனம் வாய்ந்த மலைப்பிரதேச மக்களும், தொழிலாளரும் படித்துப் புரிந்துகொள்ளக் கூடியதன்று; இந் நூலைப் புரிந்துகொள்ளக் கூடியவர், காதலைப்பற்றியும், பெண்களுக்குச் சேவைசெய்வது பற்றியும் அறிந்திருந்த பிரபுக்களும் பாதிரியார்களும் ஆவர். அதனால் இந் நூலை முற்றிலும் பழைய ஆங்கில வார்த்தைகளைக் கொண்டு எழுதாமலும், முற்றிலும் புதிய வார்த்தைகளைக்கொண்டு எழுதாமலும், கூடியவரை பலர் புரிந்துகொள்ளும் வார்த்தைகளைக் கொண்டு எழுத நிச்சயித்தேன்.'

இப்படியாக, காக்ஸ்டன் தமக்குத்தாமே ஒரு வழியை வகுத்துக்கொண்டார். அக் காலத்தில் அவரது பணியைச் செய்வதற்கு உதவ அகராதிகள் இருக்கவில்லை. ஷேக்ஸ்பியரின் காலத்திலிருந்ததுபோல், அவரது காலத்தில் ஆங்கிலம் ஒரு தனி அமைப்பைப் பெற்றிருக்கவில்லை. இங்கிலாந்தில் எத்தனை கௌன்டிகள் (counties) என்ற பிரிவுகள் இருந்தனவோ, அத்தனைக் கிளை மொழிகள் ஆங்கிலத்தில் இருந்தன. அத்துடன் கிளைமொழிகள் மாறிக்கொண்டே இருந்தன. வடக்கிலும், மேற்கிலும், கென்ட்டிலும் (Kent) இருந்தவர் லண்டன் நகர வியாபாரி பேசிய ஆங்கிலத்தைப் புரிந்துகொள்ளமுடியாத நிலையில் இருந்தனர். மேலும், தங்களுக்குள் ஒருவர் பேசியதை மற்றவர் புரிந்து கொள்ளமுடியாத நிலையிலும் இருந்தனர். லண்டன் நகரிலும் அரச அவையிலும் பேசப்பட்டுவந்த ஆங்கிலம் கடைசியில் நாட்டின் மொழியாக இடம் பெற்றிருக்கும். அப்படி அது துரிதமாக ஆவதற்குச் சாசரும், பதினைந்தாம் நூற்றாண்டில் அவரைப் பின் பற்றிய மற்றவர்களும் செய்தனர். சாசரைப் பின்பற்றியோர், மேற்குப் பாகங்களில் வழங்கி வந்ததும், பீர்ஸ் என்ற குடியானவன் (Piers the Plowman) கதையில் உபயோகிக்கப்பட்டதுமான, கிளைமொழியைக் கற்றோர் விடுக்கும்படி செய்தனர். காக்ஸ்டனும் தம் நூல்களின்மூலம் அக் கிளைமொழியைக் கற்றோர் விடுக்கச் செய்தார். முடிவில், டியூடர் வம்சத்தினரின் காலத்தில் வெளியிடப்பட்ட ஆங்கில பைபிளும், பிரார்த்தனைப் புத்தகமும் அக் கிளைமொழியை அடியோடு விடுக்கும்படி செய்தன. இப்படியாகப் பதினைந்து, பதினாறும் நூற்றாண்டுகளில், கல்விகற்ற ஆங்கிலேயர் இலக்கியத்திற்கு ஒத்திருந்தும், பொதுவானதுமான மொழியைப் பேசத் தலைப்பட்டனர். கல்வி நாடுமுழுவதும் பரவப்பரவ, இப் பொதுவான மொழி நாடுமுழுவதிலும் ஏற்கப்பட்டது.

தொல்லைகள் நிறைந்திருந்த லங்காஸ்டிரியன், யார்க் முதலிய வம்சத்தினரின் காலத்தில்கூட, லண்டன் நகரத்தில் அமைதி நிலவியது. அதனால் லண்டன் நகரத்தின் செல்வமும் தொடர்ந்து அதிகரித்துவந்தது. பண்டிகை நாட்களில் லண்டன் நகர அதிகாரிகளின் ஊர்வலம் அளவில் பெரியதாகவும் அலங்காரமுடையதாகவும் இருந்தது. பொதுக்கட்டடங்கள், ஆலயங்கள், வீடுகள் முதலியவற்றைக் கட்டும் கலை வளர்ந்துவந்தது. ஸ்காட்லாந்தியக் கவிஞரான டன்பார் (Dunbar) என்பார், அந் நூற்றாண்டின் இறுதியில், லண்டன் நகரம் இங்கிலாந்தின் நகரங்களிலேயே மிக்க அழகானது என்று குறிப்பிட்டார்.[1]

[1] ஏழாம் ஹென்றியின் காலத்தில் இத்தாலியப் பிரயாணி ஒருவர், 'ஸ்டிராடா என்ற ஒரே வீதியில், 52 பொற்கொல்லரது கடைகள் இருந்தன ; அவைகளில் சிறியனவும் பெரியனவுமான வெள்ளிப் பாத்திரங்கள் நிறைந்திருந்தன. மிலான்

லண்டன் மாநகரத்தின் நகராட்சி பெரிய வர்த்தகக் கழகங்களின் அங்கத்தினரின் கையில் இருந்தது. உயர்தர ஆடைகள் விற்றவர், ஆடை வியாபாரிகள், மளிகை வியாபாரிகள், மீன் விற்போர், பொற்கொல்லர்கள் ஆகியவரில் பலர், நகரசபைத் தலைவர்களாகவும் அதிகாரிகளாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். அவர்கள் பலவிதப் பண்டங்களை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்து அதிக லாபமடைந்துவந்தனர். உதாரணமாக, உணவுப் பொருள்கள், கம்பளி ஆடைகள் முதலியனவற்றை ஏற்றுமதி செய்து அதிக லாபமடைந்துவந்தனர். வியாபாரக் கழகங்கள், ஐரோப்பாவில் ப்ருஜெஸ் (Bruges) போன்ற பல பிரதான நகரங்களில் தங்கள் பொருள்களை விற்பனை செய்துவந்தனர். அத்தகைய நகரங்களில் வில்லியம் காக்ஸ்டன் போன்றவர்களைத் தங்கள் வியாபாரத்தை கவனிக்க நியமித்திருந்தனர். இத்துடன் அன்னியக் கப்பல்களைக்கொண்டும் கடல்கடந்து வாணிபம் செய்துவந்தனர். ஆனால், இத்தாலிய வியாபாரிகளும், வடக்கு ஜெர்மனியில் இருந்த ஹன்சே (Hanse) நகர வியாபாரிகளும், லண்டனுக்குத் தங்கள் கப்பல்களிலேயே பண்டங்களைக் கொண்டுவந்தனர். நதியின் கரையோரம் கப்பல்துறைகள் பிரிட்ஜ் (Bridge) என்ற இடத்திலிருந்து அரசரின் அரண்மனைவரை இருந்தன.

லண்டன் நகராட்சியைத் தம்வசம் கொண்டிருந்த வியாபாரிகள், பட்டத்திற்காகப் போட்டியிட்ட இரு அரச குடும்பங்களின் சச்சரவில் தலையிட்டுக்கொள்ளவில்லை. (ஸ்டுவர்ட் வம்சத்தினரின் காலத்தில்தான் லண்டன் நகரம் அரசியலைச்சார்ந்த சச்சரவுகளில் தலையிட்டு ஒருவரை அரியாசனத்தில் அமர்த்தவோ அல்லது அதிலிருந்து தள்ளவோ முற்பட்டது.) லண்டன் நகர வியாபாரிகள் ரோஜாப்பூ ஆடையாளப்போரில் ஈடுபட்டிருந்த இரு தரப்பினரையும் லண்டன் நகரின் உரிமைகளையும் வியாபாரத்தையும் பாதிக்கப்படாமல் காக்கச்செய்தனர். ஆறும் ஹென்றி, நாலாம் எட்வர்ட், மூன்றும் ரிச்சர்ட், ஏழாம் ஹென்றி ஆகியோர் லண்டன் நகர வியாபாரிகள் ஆதரவு தமக்கு இருந்தால்தான், தாங்கள் பணமுடையின்றி வாழமுடியும் என்பதை அறிந்திருந்தனர். நாலாம் எட்வர்ட் லண்டனுக்கு அடிக்கடி விஜயம்செய்து, லண்டன் நகர வியாபாரிகளின் நட்பைப் பெற்றார். ஸ்டேபிள் (Staple) வியாபாரக் கழகம் அப்போதும் அரசருக்குக் கடன் கொடுத்துவந்தது.

---

(Milan), ரோம் (Rome), வெனிஸ் (Venice), ஃபிளாரென்ஸ் (Florence) ஆகிய நகரங்களில் இருந்த பாத்திரங்கள் அனைத்தையும் சேர்த்துக் கணக்கிட்டால், அவை லண்டனில் இருந்த அளவிற்கு இருக்கவில்லை என்பது விளங்கும்,' என்று குறித்துள்ளார். இடாலியன் ரிலேஷன் ஆஃப் இங்லண்டு (Italian relation of England) காம்டென் சாக்: 1847, பக்கம், 42. ஸ்டிராடா என்று குறிக்கப்பட்டது ஸ்டிரான்ட் எனப்பட்ட கடற்கரைப் பிரதேசம் அன்று. அதற்கு மாருக அது சீப்சைட் (Cheapside) என்ற இடமாகும்.

அரசரின் பண்ணையில் இருந்தும், ஹேஸ்டிங்ஸ் பிரபு, எஸ்செக்ஸின் பிரபு ஆகியோரின் பண்ணைகளினின்றும் கிடைத்த கம்பளியை, அரசரும், பிரபுக்களும், லண்டன் வியாபாரிகள்மூலம் வெளிநாடுகளில் விற்றுவந்தனர். மேற்குப் பிரதேசத்தில் ஆட்டுப்பண்ணைகளின் சொந்தக்காரரான ஜென்ட்ரி வகுப்பினர் ஸ்டேபில் கழகத்தின் அங்கத்தினர் என்று சொல்லிக்கொண்டனர். அக் காலத்திலேயே நிலம் வைத்திருந்தவர் முதலும் வைத்திருந்தனர். வியாபாரத்தால்பெற்ற செல்வத்தைக்கொண்டு நிலங்களை வளப்படுத்திவந்தனர். ஜென்ட்ரி வகுப்பினரின் இளைய பிள்ளைகள், லண்டனில் பலவிதத் தொழில்களைக்கற்றுச் செல்வராயிருந்தனர்.

ரோஜாப்பூ அடையாளப் போரின் காலத்தில் லண்டன் மட்டுமல்லாமல், மற்ற நகரங்களும் போரினால் பாதிக்கப்படாமல் இருந்தன. இதற்குக் காரணம் அந் நகரங்களும் எக் கட்சியுடனும் சேராமல் நடுநிலைமையை அனுசரித்து வந்ததாகும். அத்துடன் அரசர், அதிகாரிகள், நீதிபதிகள் ஆகியோருக்குச் சிறு தொகையைப் பரிசாகக் கொடுத்தும் தங்களைப் பாதுகாத்துக்கொண்டனர். கேம்பிரிட்ஜ் நகரின் கி.பி. 1484-85 ஆண்டுக் கணக்கில் கீழ்க் கண்டவைகளைக் காண்கிறோம்.

> அரசனுக்குப் பரிசாகக் கொடுத்த மீன்களின் மதிப்பு 6 பவுன் 5 ஷில்லிங்.
>
> அரசனின் உயர் நீதிபதிக்கு, மது, வாசனைச் சாமான், மீன், ரொட்டி முதலியவைகளைப் பரிசாகக் கொடுத்ததன் மதிப்பு 5 ஷில்லிங்.
>
> யார்க் நகர பிஷப்பிற்குக் கொடுத்த பரிசின் மதிப்பு 8 ஷில்லிங் 8 பென்ஸ்.
>
> நார்ஃபோக் பிரதேசத்தை ஆட்சி செலுத்திவந்த டியூக் அவர்களுக்குக் கொடுத்த பரிசின் மதிப்பு 6 ஷில்லிங் 8 பென்ஸ்.
>
> வில்லியம் கோப்ஸி என்பவரின் நட்பைப்பெறக் கொடுத்த பரிசின் மதிப்பு 6 ஷில்லிங் 8 பென்ஸ்.
>
> நார்ஃபோக் பிரதேசத்தை ஆட்சி செலுத்திவந்த டியூக் அவர்களுக்குப் பரிசாகக் கொடுத்த மதுவின் மதிப்பு 2 ஷில்லிங் 8 பென்ஸ்.

கூபர் (Cooper) எழுதிய, 'ஆனல்ஸ் ஆஃப் கேம்பிரிட்ஜ்' (Annals of Cambridge), பாகம் ஒன்று, பக்கங்கள், 230-231.)

இதைத்தவிர, கேம்பிரிட்ஜ் நகரம் பார்லிமெண்ட் கூட்டம் நடக்கும்போது, தனது பிரதிநிதிகளுக்கு ஒரு நாளைக்கு 12 பென்ஸ்வீதம் உபகாரச் சம்பளம் கொடுத்தது. இவ்விதமாகப் பார்லிமெண்டின் ஒரு பருவ காலத்திற்குக் கேம்பிரிட்ஜ் நகரம் செல விட்டது. புதியதாக வேலைக்குவந்த நகரசபைத் தலைவர், தாம் அணியும் அழகிய உடைக்காக வருடத்திற்கு 20 ஷில்லிங் செலவு செய்தார். ஊர் ஊராகத் திரிந்து நாட்டுப் பாடல்களைப் பாடிவந்த நாடோடிகளுக்காக அதிகப் பணம் செலவிடப்பட்டது. பணத் திற்குத் தற்காலத்தில் இருக்கும் மதிப்பைக்கொண்டு கணக்கிட் டால் கேம்பிரிட்ஜ் நகரம் அக் காலத்தில் மிகுதியான செலவு செய் திருக்க வேண்டும் எனத் தோன்றுகின்றது. நாட்டுப்புறங்களில் வாழ்ந்த பாதிரியார்கள் அக்காலத்தில் வருடத்திற்குப் பத்துப் பவுன் ஊதியம் பெற்றுவந்தனர். அத் தொகையைக்கொண்டு அவர்கள் குறைவற்ற வாழ்க்கை நடத்திவந்தனர்.

பதினைன்காம் நூற்றாண்டின் மத்தியிலிருந்து, ஆடைகள் உற் பத்தி செய்வதும் ஏற்றுமதி செய்வதும் அதிகரித்துவந்தது. ஆனால், கச்சாக் கம்பளி ஏற்றுமதி குறைந்துவந்தது. ஸ்டேபிள் கழகத்தினருக்குப்பதில், கடல்கடந்து வாணிபம் நடத்திவந்த வியாபாரிகள் தங்கள் வாணிபத்தைப் பெருக்கிவந்தனர். ஆடை வியாபாரம் கோல்செஸ்டர் (Colchester)போன்ற உள்நாட்டு நகரங் களைச் செழிக்கச்செய்தது. இத்தகைய நகரங்களில்தான் ஆடை கள் வாங்கிக் குவிக்கப்பட்டன. ஆடைகளை ஏற்றுமதி செய்த லண்டன் மாநகரமும் அதைப்போன்ற துறைமுகப் பட்டினங்களும் கூடச் செல்வத்தில் கொழித்தன. ஆனால், ஆடைகள் நாட்டுப்புறங் களில்தான் உற்பத்தி செய்யப்பட்டன. கிராமங்களில் கைத் தொழில்கள் தோன்றியதால், கிராம மக்களின் வாழ்க்கையில் மாறு தல்கள் ஏற்பட்டன. அம் மக்கள் முன்னைவிட இன்பமான வாழ்க்கை வாழத் தலைப்பட்டனர். பதின்மூன்றும் நூற்றாண்டில் இருந்து நகரங்களில் நடைபெற்றுவந்த ஆடை உற்பத்தி செய்யும் தொழில் கொஞ்சம் கொஞ்சமாக நகரங்களில் இருந்து கிராமங் களுக்கு மாறிற்று. பதினெட்டாம் நூற்றாண்டிலும், தொழிற் புரட்சி ஏற்பட்ட காலத்திலும் இந் நிலை மாறி, தொழிலாளர்கள் கிராமங்களை விட்டுத் திரள்திரளாக நகரங்களுக்குச் சென்றனர். பதினைந்தாம் நூற்றாண்டில் லண்டனைத் தவிர, மற்ற நகரங்கள் செல்வத்தில் அதி கரிக்காமலும், ஜனத் தொகையில் குறைந்தும் இருந்தன.[1]

[1] பேராசிரியர் பாஸ்டன் எழுதிய இகொனமிக் ஹிஸ்டரி ரிவ்யூ (Economic History Review) 1939 ஆம் ஆண்டு, மே மாத இதழில் பக்கங்கள், 164-165-ஐப் பார்க்கவும். பதினைன்காம் நூற்றாண்டின் இரண்டாம் பகுதியில்தான் ஆடை உற்பத்தி செய்வது மிகவும் அதிகரித்தது என்று குறிக்கின்றார். பாஸ்டன் டியூடர் வம்சத்தினரின் காலத்தில், பதினைந்தாம் நூற்றாண்டின் கடைசி இருபது ஆண்டுக் காலத்தில் திரும்பவும் ஆடை உற்பத்தி செய்வது அதிகரித்தது.

நகரங்களில் இருந்துவந்த ஆடை உற்பத்திசெய்யும்கழகங்கள், ஆடை வியாபாரம் நகரங்களின் கையில் இருந்து நாட்டுப் புறங்களின் கைகளுக்கு மாறுவதை விரும்பவில்லை. ஆகையால் அதைத் தடுக்க முற்பட்டனர். நகரங்களில் இருந்த வியாபாரிகளை நாட்டுப்புறங்களில் உற்பத்தி செய்யப்பட்ட ஆடைகளை வாங்கக் கூடாது என்று கட்டளையிட்டனர். ஆனால், இந்தத் தடை தொடர்ந்து அமலில் இருக்கவில்லை. அத்துடன் அதனால் எதிர் பார்த்த பலன் கிடைக்கவுமில்லை. வியாபாரிகளின் எண்ணங்களும், தொழிலாளரின் எண்ணங்களும் ஒன்றுக்கொன்று முரணானதாக இருந்தன. தவிர, நகரசபையில் வியாபாரிகளின் கை ஓங்கி நின்றது. பெரிய வியாபாரிகள் வியாபாரத்தைப் பெருக்கிக் கொண்டே போவதில் கண்ணும்கருத்துமாக இருந்தனர். அவர்கள் மூலதனத்தை வைத்துக்கொண்டு, நகரத்திலும் நாட்டுப்புறத்திலும் ஆடை வியாபாரத்தை நடத்த முற்பட்டனர். அவர்கள் நாட்டுப் புறங்களில் இருந்த நெசவுத் தொழிலாளர்களுக்கு வேண்டிய கச்சாப் பொருள்களை அளித்தனர். அதைக்கொண்டு நெய்யப்பட்ட ஆடைகளை அவர்களிடமிருந்து வாங்கி, விற்பனைக்கு ஏற்றதாகச் செய்வதற்காக மற்ற வகைத் தொழிலாளரிடம் அவ் வாடைகளைக் கொடுத்தனர்.

'எஸ்ஸெக்ஸ் முழுவதும் ஆடை உற்பத்தி செய்வதில் பெயர் பெற்ற கிராமங்கள் இருந்தன. காக்ஷல் (Coggeshall), பிரெயின்டிரீ (Braintree), போகிங் (Bocking), ஹால்ஸ்டெட் (Halstead), ஷல்ஃபோர்டு (Shalford), டெட்ஹாம் (Dedham) ஆகியவை அப்படிப்பட்ட கிராமங்களாகும். முக்கியமாக, கோல்செஸ்டர் ஆடை உற்பத்தியிலும் வியாபாரத்திலும் பிரசித்திபெற்று விளங் கியது. கிராமங்களில் வாழ்ந்த மக்கள் கைத்தொழில்களால் பிழைத்துவந்தனர். ஒவ்வொரு குடிசையிலும் நூல் நூற்கும் சக்கரத்தின் ஓசை கேட்கும். எந்த வீதியும் நெசவுக் கூடங்கள் இல்லாமல் இருக்கவில்லை. கச்சாக் கம்பளியைக் கொண்டுவந்து ஒரு வாரம் முடிவதற்குள் கம்பளி ஆடையைச் சுமந்துசெல்லும் குதிரைகளின் குளம்பொலியைக் கேட்கலாம். இக் குதிரைகள் கோல்செஸ்டர் போன்ற இடங்களில் இருந்த வியாபாரிகளுக்கு ஆடைகளைக் கொண்டு சேர்த்தன. பதினைந்தாம் நூற்றாண்டு முழு

பதினைந்தாம் நூற்றாண்டில் மொத்தத்தில் ஆடை உற்பத்தி அதிகரிக்காமலும் குறையாமலும் இருந்தது. கிழக்கு ஆங்கிலியா, யார்க் ஷீர் ஆகிய பிரதேசங் களிலும், மேற்குப் பிரதேசத்திலும், கிராமங்களிலும், நகரங்களிலும் உற்பத்தி பெருகிக்கொண்டே வந்தது. ஆனால், ஆடை உற்பத்தி செய்து வந்த பழைய நகரங்கள் குறைந்த அளவே உற்பத்தி செய்தன. ஸ்டேபிள் கழகம் செய்துவந்த கச்சாக் கம்பளி ஏற்றுமதி மற்றப் பொருள்களின் ஏற்றுமதியைவிட வேகமாகக் குறைந்துகொண்டே வந்தது. பதினைந்தாம் நூற்றாண்டில் கச்சாக் கம்பளி ஏற்றுமதி செய்வதில் ஏற்பட்ட குறைவை, அதிகமாக ஆடை ஏற்றுமதி செய்தும் ஈடுசெய்ய முடியவில்லை.

வதும் காக்ஷல் ஒரு முக்கிய வியாபாரஸ்தலமாக இருந்துவந்தது. அந் நகரம், பெரிய நகரங்களான நார்விக் (Norwich), கோல் செஸ்டர் (Colchester), சட்பரி (Sudbury) ஆகிய நகரங்களுக்கு அடுத்தபடியாக முக்கியத்துவம் பெற்றிருந்தது. இன்றும் காக்ஷல் நகரில் இருக்கும் இரு சத்திரங்கள் கம்பளியைக் குறிக்கும் 'உல்பாக்' (Woolpack), 'ஃபிளீஸ்' (Fleece) என்ற இரு ஆங்கில வார்த்தைகளைப் பெயராகக் கொண்டிருக்கின்றன. [ஐலீன் பவர் (Eileen Power) எழுதிய, 'மிடீவல் பீபிள்' (Mediaeval People) என்ற நூல்; பக்கம், 149].

தாமஸ் பேகாக் (Thomas Paycocke) என்பார், காக்ஷல்லில் இருந்த ஒரு பெயர்பெற்ற வியாபாரி ஆவார். அவர் மரத்திலே சித்திர வேலைப்பாடு அமைந்த அழகிய வீடு ஒன்றைக் கட்டினார். அவ் வீடு இப்போது 'நேஷனல் டிரஸ்ட்' (National Trust) என்ற ஸ்தாபனத்திற்குச் சொந்தமாயிருக்கிறது. கிராமங்களில் பெரிய வீடுகள் எழும்பத்தொடங்கின. இவ் வீடுகள் சமுதாயத்திலே புதியதொரு வகுப்பு ஒன்று ஏற்பட்டிருந்ததை எடுத்துக்காட்டுகின்றது. இவ் வகுப்பினர் நிலத்தைச் சொந்தமாகக் கொண்ட ஜென்ட்ரிகளைப்போல் செல்வம் படைத்திருந்தனர். இவ் வகுப்பினர் ஜென்ட்ரி வகுப்பினருடன் நாளடைவில் திருமணங்களின் மூலம் உறவு ஏற்படுத்திக்கொண்டனர். ஜென்ட்ரி வகுப்பினரைப்போலவே நிலங்களை விலைக்கு வாங்கி நிலக்கிழார் வகுப்பினராயினர்.

மேற்குப் பாகத்திலும் இத்தகைய மாறுதல் ஏற்பட்டுவந்தது. இரண்டு நூற்றுண்டுகளுக்குப் பிறகு, டீஃபோ (Defoe) என்பார் 'மேற்கில் ஜென்ட்ரி வகுப்பினராகத் தற்போது காணப்படும் பல குடும்பங்கள் ஆடை உற்பத்தித் தொழிலின் காரணமாக அந் நிலைக்கு வந்த குடும்பங்களாகும்' என்று குறித்துள்ளார். பதினைந்தாம் நூற்றுண்டில் காட்ஸ்வோல்டு (Cotswold) கம்பளி இங்கிலாந்திலேயே சிறந்தது எனக் கருதப்பட்டது. அதனால் ஐரோப்பா முழுவதிலுமே சிறந்ததாகக் கருதப்பட்டது. அழகிய காட்ஸ்வோல்டு பிரதேசத்தின் செல்வ நிலைக்குக் காரணம் கம்பளியே ஆகும். இதை உறுதிப்படுத்துவதுபோல், இன்றும் கற்களால் கட்டப்பட்ட பண்ணை வீடுகளையும், ஆற்றங்கரைகளில் முன் காலத்தில் கம்பளியைச் சுத்தம் செய்வதற்காக நிறுவப்பட்டிருந்த ஆலைகளையும் காணலாம்.

தாமஸ் பெட்சன் (Thomas Betson) என்பாரின் வாழ்க்கையும், கடிதங்களும், அக் காலத்தில் ஆங்கிலேய வியாபாரிகள் எவ்விதம் வாழ்ந்துவந்தனர் என்பதை எடுத்துக் காட்டுகின்றன. [ஐலீன் பவர் (Eileen Power) எழுதிய, 'மிடீவல் பீபிள்' (Mediaeval People),

என்ற நூலில், அத்தியாயம். 5).] பெட்சன் ஸ்டேபிள் கழகத்தைச் சார்ந்த கம்பளி வியாபாரியாவார். வியாபாரத்தின் பொருட்டு ஃபிரான்சில் இருந்த கலே துறைமுகத்தில் அவர் அடிக்கடி தங்கியிருந்தார். இருப்பினும் இங்கிலாந்தின் மேற்குப் பாகத்தில் வாழ்ந்து வந்த 'ஸ்டோனர்ஸ்' குடும்பத்தைப் போன்ற, பல பிரபுக்களின் குடும்பங்களை அறிந்திருந்தார். அக் குடும்பங்களின் பண்ணைகளில் இருந்து கிடைத்த கம்பளியை அவர் விலைக்குவாங்கி கலே துறைமுகத்தில் விற்றுவந்ததன் மூலமே அக் குடும்பங்களை அவர் அறிந்திருந்தார். நாளாவட்டத்தில் வியாபாரத்தின்மூலம் ஏற்பட்ட தொடர்பு திருமணத் தொடர்பை ஏற்படுத்திக் கொடுத்தது. 'ஸ்டோனர்ஸ்' குடும்பத்தின் உறவினரான காதரீன் ரீச் (Katherine Ryche) என்பாரைப் பெட்சன் மணந்தார். திருமணத்தின் போது காதரீனுக்கு வயது பதினைந்தாகும். ஆனால், திருமணத்திற்குச் சில ஆண்டுக் காலத்திற்குமுன்பே அவர்கள் இருவருக்கும் திருமணம் நிச்சயம் செய்யப்பட்டது. காதரீன் பன்னிரண்டு வயதினராக இருந்தபோது, தாமஸ் பெட்சன் அவருக்கு எழுதிய கடிதம் ஒன்று கிடைத்திருக்கிறது. கி.பி. 1476-ல் கலேயில் இருந்து ஆக்ஸ்ஃபோர்டு ஷீரில் 'ஸ்டோனர்' என்ற இடத்திலே இருந்த காதரீனுக்கு அக் கடிதத்தை எழுதியுள்ளார். ஒருவர் பன்னிரண்டு வயதுள்ள பெண்ணிற்கு நிச்சயம் செய்யப்பட்டால், பெட்சன் எழுதிய கடிதத்தைப்போல் எழுதுவது விரும்பத்தக்கதாகும். பெட்சன், காதரீனை அடியிற்கண்டவாறு நடக்கும்படி எழுதியுள்ளார்.

'இறைச்சியை எப்பொழுதும் நன்றாக உண்ணவும். அப்படிச் செய்தால்தான் நீ விரைவிலேயே ஒரு பருவ மங்கையாகத் திகழ்வாய். என்னுடைய குதிரையைக்கண்டு அதன் வயதில் நான்கு ஆண்டுகளை உனக்குக் கொடுத்து, உன்னை ஒரு மங்கையாக மாறும்படி செய்யக் கேட்டுக்கொள். நான் வீடு திரும்பியதும் என் வயதில் நான்கை என் குதிரைக்குக் கொடுப்பதுடன், நான்கு ரொட்டித் துண்டுகளும் அதற்குக் கொடுத்து அதற்கு ஏற்பட்ட நஷ்டத்தை ஈடுசெய்துவிடுகிறேன். இப்படி நான் எழுதினேன் என்று என் குதிரையிடம் கூறு. எல்லாம்வல்ல ஏசுநாதர் உன்னை ஒரு மங்கையாக்கி உனக்கு நீண்ட ஆயுளையும் உடல் நலத்தையும் அளிக்கட்டும். இக் கடிதம் ஜூன் மாதம் ஒன்றாம் தேதி, கலே பட்டணத்திலிருந்து எழுதுகிறேன். இதை எழுதும் போது, மற்றவர் அனைவரும் பகல் உணவிற்காகச் சென்றுவிட்டிருந்தனர். கடிகாரம் மணி பன்னிரெண்டு அடித்தது. வீட்டு வேலையாட்கள் என்னை உடனே பகல் உணவிற்காக வரவும் என்று கூச்சலிட்டனர். நான் என்ன பதில் அவர்களுக்கு அளித்தேன் என்பது உனக்கு முன்பே தெரிந்ததே.'

தாமஸ் பெட்சன் இக் கடிதத்தை எழுதி முடித்து நாலரை நூற்றுண்டுக்காலம் கழிந்துவிட்டது. இருப்பினும், அவர் விரும்பத் தக்க ஆங்கிலேயராக விளங்குகின்றார்.[1]

தற்கால நிலையை மனத்தில்கொண்டு நோக்கின், அக் காலத்தில் தொழிலாளர்கள், வயலிலும், தொழிற் கூடங்களிலும், நீண்ட நேரம் வேலை செய்திருக்கவேண்டும் என்று தெரியவருகின்றது. ஆனால், ஞாயிற்றுக்கிழமைகளிலும் கணக்கிட முடியாத கிருத்தவத் துறவியரின் ஞாபகார்த்த நாட்களிலும் ஓய்வு எடுத்துக் கொண்டனர். இப்படி இந் நாட்களில் ஓய்வு எடுத்துக்கொள்வது பழக்கமாக இருந்துவந்தது. மதஸ்தாபனம் இப் பழக்கத்தைத் தண்டனைகள்மூலம் மக்களை அனுசரிக்கச் செய்துவந்தது. மக்கள் பழங்காலத்தில் தங்கள் தொழில்களில்மட்டுமே ஈடுபட்டிருக்க வில்லை. வேட்டையாடுதல், மீன் பிடித்தல் முதலியவற்றில் அரண்களிலும், பண்ணை வீடுகளிலும் இருந்தவர்களும், மடங்களிலும், ஆலயங்களிலும் இருந்தவர்களும் ஈடுபட்டனர். பிறர் வேட்டை நிலத்திலே வேட்டையாடுவதைத் தொழிலாக கொண்டவன், தன் வேலையை யாரும் அறியாமல் செய்துவந்தான். மக்கள் நாடகம், பாட்டு மற்றும் பலதரப்பட்ட களியாட்டங்கள் ஆகியவற்றில் ஈடுபாடுடையவராக இருந்து, அதிகப் பொருளைச் செலவு செய்தனர். பலவித விளையாட்டுகளில் அம்பு எய்தல், மல்யுத்தம், ஓட்டப்பந்தயம், கல்லையோ அல்லது வேலையோ வீசி எறிவது ஆகியவை சிலவாகும். இவ் விளையாட்டுக்கள் நடக்கும்போது, விளையாட்டுகளில் பங்கு கொள்ளாதவர்களிடையே, யார் வெற்றி பெறுவர் என்று பந்தயம் கட்டுவது வழக்கமாய் இருந்தது. இதனால் பணமானது ஒருவர் கைகளிலிருந்து மற்றவர் கைகளுக்கு மாறியது.

இக் காலத்திலேதான் சீட்டுக்கட்டு விளையாடும் பழக்கமும் ஏற்பட்டது. சீட்டுக்கட்டில் அரசன், அரசி ஆகியோரின் உடை இன்றும் பதினைந்தாம் நூற்றுண்டு உடையாகவே இருக்கின்றது

[1] 'ஸ்டோனர் கடிதங்கள்' இரண்டாம் பகுதி பக்கங்கள், 6-8 (Stono Letters, Camd. Sec. II pp 6-8). பெட்சனைப்போன்ற ஸ்டேபிள் கழகத்தைச் சார்ந்த ஆங்கிலேய வியாபாரிகள் மேற்குப் பாகத்தில் இருந்த ஷீர்களில் இருந்து கச்சாக் கம்பளியை வாங்கியவர்களில் முக்கியமானவர்கள் ஆவர். இவர்கள் காட்ஸ்வோல்டு பிரதேசத்தில் சுற்றிவந்த இத்தாலிய வியாபாரிகளுடன் போட்டியிட நேரிட்டது. ஸ்டேபிள் கழக வியாபாரிகள் இங்கிலாந்தில் கிடைத்த கச்சாக் கம்பளியைப் ஃபிரான்சின் துறைமுகமான கலே பட்டினத்திற்கு அனுப்பி, அங்கிருந்து தாழ்ந்த நாடுகள் (ஹாலண்டு பெல்ஜியம்) வடக்கு ஐரோப்பிய நாடுகள் ஆகியவற்றிற்குக் கொண்டுசென்று விற்றனர். இக் கழக வியாபாரிகள் மத்தியதரைக் கடல் பிரதேசத்தில் சிறிய அளவிலேயே வியாபாரம் செய்தனர். இத்தாலிய வியாபாரிகள் இங்கிலாந்தில் கிடைத்த கச்சாக் கம்பளியை இத்தாலிக்கு எடுத்துச் செல்ல அரசரின் அனுமதி பெற்றிருந்தனர். அவர்கள் தங்கள் நாட்டிற்குக் கப்பலில் ஜிப்ரால்டர் ஜலசந்தியின் வழியாகக் கம்பளியை எடுத்துச் சென்றனர்.

சதுரங்க ஆட்டத்தைப்போலவே சீட்டாடுவது ஒரு பொழுது போக்காயிற்று. சூதாட்டக்காரர்களுக்குப்பொழுது போக்குவதற்கு மற்றும் ஒரு விளையாட்டு கிடைத்தது.

கைப்பந்து, கால்பந்து, வளைகோற்பந்து (hockey) முதலிய ஆட்டங்களுக்குப் பதிலாக பார்லிமெண்ட் வில்வித்தையை ஆதரித்தது. நீண்ட வில்லை உபயோகிப்பதில் இங்கிலாந்து கொண்டிருந்த தனித் திறமையைப் பாதுகாக்கவே இப்படிச் செய்யப் பட்டது. நீண்ட வில்லை உபயோகிக்க சிரமப்பட்டுக் கற்க வேண்டி யிருந்தது. ஏழாம் ஹென்றியின் காலத்தில் வாழ்ந்த ஹக் லாட்டிமர் (Hugh Latimer) என்பார் தனக்குத் தன் தந்தை எப்படி வில்லை உபயோகிக்கவேண்டும் என்று கற்றுக்கொடுத்ததைக் கீழே விளக்கு கின்றார்.

'என் தந்தை எப்படி வில்லை வளைப்பது, எப்படி வில்லை ஒட்டி நிற்பது என்பனவற்றைக் கற்றுக்கொடுத்தார். என்னுடைய வயதிற்கும், வலிமைக்கும் தக்கவாறு வில்களை வாங்கிக் கொடுத்தார். வயதிலும், வலிமையிலும் நான் அதிகரிக்க அதிகரிக்க அதற்கேற்றாற்போல், வலிமைமிக்க வில்களை வாங்கி அளித்தார். இளமையில் இருந்து கற்றால் ஒழிய இவ் வில்வித்தையைக் கற்றுக் கொள்ள முடியாது.'

வில்வித்தைப் போட்டிகளின்போது, சிறந்த வில் வீரரான ராபின் ஹூட் (Robin Hood), லிட்டில் ஜான்(Little John) முதலிய வரைப்போல் தலைவர்கள் உடை அணிந்து ஊர்வலமாக, மற்றவர் களைப் போட்டி நடக்கவிருக்கும் இடத்திற்கு அழைத்துச் செல்வர்.

பல நகரங்களிலும் செல்வத்தில் சிறந்த கிராமங்களிலும் அழகிய ஊர்வலங்களுக்கும் கொண்டாட்டங்களுக்கும் கழகங்கள் ஏற்பாடு செய்தன. சமயம் கிடைத்தபோதெல்லாம் ஊர்வலங்கள் நடத்தப்பட்டன. லண்டனில், நகரசபைத்தலைவரின் ஊர்வலமும், அரசர் பார்லிமெண்டைத் துவக்கிவைக்கச் செல்லும் ஊர்வலமும், இன்றும் நாம் காணும் ஊர்வலங்களில் சிலவாகும். சேமித்து வைத்த செல்வத்தை ஒரு தொழிலில் மூலதனமாகவைத்து லாபம் அடைவது கடினமாய் இருந்த அக் காலத்தில் மக்கள் செல்வத்தை ஆடம்பர வாழ்வு வாழச் செலவிட்டனர். செல்வர்கள் தங்கள் செல்வத்தை விலையுயர்ந்த ஆடை வாங்கி அணிவதில் செல விட்டனர். தங்கள் பெருஞ் செல்வத்தை வெளிக்காட்டுவதற்காக உண்ணும் அறையின் ஒரு பக்கத்தில் தட்டுகளாக அடுக்கி வைத்தனர். பாதிரியார்கள் கழகங்களில் அங்கத்தினர்களாகச் சேர்த்துக்கொள்ளப்படவில்லை. கழகங்கள் பொதுமக்களின் அறிவு வளர்ச்சியையும் அவர்கள் எடுத்துக்கொண்ட முயற்சி

களையும் எடுத்துக்காட்டின. சமயம், கழகங்களிலும் இடம் பெற்றிருந்தது. இதற்குக் காரணம் அக் காலத்தில் சமயமும் அன்றுட வாழ்க்கையும் ஒன்றி இருந்ததுதான். பிறர்க்கு உதவுவதற்காகவும், நற்காரியங்களுக்காகவும், அனைவரும் ஒன்றுகூடி இன்புறுவதற்காகவும் ஏற்படுத்தப்பட்ட கழகங்கள், சடங்குகளுடன் கிருத்தவத் துறவி ஒருவரின் ஆசியைப்பெற்றுத் தொடக்கப்பட்டன. பாதிரியார்களை எதிர்ப்பதற்காக ஏற்பட்ட கழகங்கள்கூடச் சமயச் சடங்குகளை விட்டுவிடவில்லை.

கழகங்கள், பிரார்த்தனைக் கூடங்களையும், பள்ளிகளையும் ஏழைகளுக்கு உதவியளிக்கும் இல்லங்களையும் ஏற்படுத்தின. பாலங்களைச் சீராக வைத்துக்கொள்வதையும் கழகங்கள் மேற்கொண்டன. இதைத்தவிர, அற்புத நிகழ்ச்சிகளை எடுத்துக்காட்டும் நாடகங்களை நடத்துவதற்குவேண்டிய பொருளையும் அளித்தன. பதினைந்தாம் நூற்றுண்டில் மக்கள் அத்தகைய நாடகங்களை விரும்பினர். பைபிள் ஒரு சிலருக்கே தெரிந்திருந்த அக் காலத்தில், பைபிள் கதைகளையும் மற்றப் பழங்கதைகளையும் மக்கள் அறிவதற்கு இந் நாடகங்கள் வழிசெய்தன.

' நடிகர்கள் மேடைமீது தோன்றி நான்தான் ஆப்பிரஹாம்; நான்தான் ஹெராட் (Herod) என்று அறிவித்துக்கொள்வர். நடிகர்கள் சாதாரணமாய் அக் காலத்தில் உடுத்திவந்த உடையையே உடுத்தி மேடையில் தோன்றினர். கடவுள் வேடதாரிகள் வெள்ளைத்தொப்பி, கிரீடம், கையுறை முதலியவைகளை அணிந்துகொள்வர். கொடிய அரசர் வேடம் தரித்தால் தலைப்பாகை அணிந்து கொண்டனர். அவ் வரசர்கள் மாஹவுண்டு (Mahound) என்ற கிருத்தவர் அல்லாதவரின் கடவுள்பேரில் ஆணையிடுவர். பாதிரியார்கள் வேடம் தரித்தோர் பிஷப்புகளின் உடையில் தோன்றுவர். சட்டநிபுணர்களாகத் தோன்றியவர் வட்டவடிவமான தொப்பிகளையும் விலங்குகளின் முடிகளாலான நீண்ட சட்டைகளையும் அணிந்துகொண்டனர். குடியானவராகவும், போர் வீரராகவும் வேடம் தரித்தோர் சாதாரண உடையிலேயே மேடையில் தோன்றினர். மேரி மக்டலீனி, (Mary Magdalene) கிருத்தவ மதத்தைத் தழுவுமுன், அலங்கார உடை அணிந்திருந்ததாகத் தோற்றுவிப்பர். தேவதூதர்கள் ஏணிகள் வழியாக மேலுலகத்திலிருந்து கீழேவந்து திரும்புவர். நரகத்தை மேடைமீது காண்பிக்கும்போது, அதன்வாய் திறந்து மூடுவதுபோல் காண்பிப்பர். அதனுள் இருந்து கருப்பு, நீலம், சிவப்பு ஆகிய நிறமுள்ள பேய்கள் வெளிவந்து பாவிகளை இழுத்துச் செல்வதாகக் காண்பிப்பர். நாடகம் பார்ப்போரின் கண்ணுக்குத் தெரியாத இடத்தில் இருந்து

பாத்திரங்களை ஒன்றோடொன்று அடித்துச் சத்தம்செய்து, நகரத்தினுள் ஒற்றுமையின்மையை உணரவைப்பர்.[1]

ஷேக்ஸ்பியரின் காலத்திற்கு நூறு ஆண்டுகளுக்குமுன், நாடகங்கள் மேற்கூறியவாறு நடத்தப்பட்டன.

மதச் சீர்திருத்தக் காலத்திற்குமுன், மக்கள் கிருத்துமஸ் பண்டிகையின்போது பொதுவாகப் பாடப்படும் பாட்டுகளைப் பாடித் தங்கள் சமயப்பற்றை வெளிப்படுத்தினர்.

> மலைமேல் ஆட்டிடையன் அமர்ந்திருந்தான்.
>
> அவன் மேற்போர்வையும் தொப்பியும் அணிந்திருந்தான்.
>
> அவன் தன்னிடம் ஒரு பெட்டியில் (ஆடுகளுக்கு அடிபட்டால் தடவுவதற்காக) தார் வைத்திருந்தான்.
>
> இசைக்கும் குழலும் கொண்டிருந்தான்.
>
> அவனை உல்லாசமான 'வாட்' என்று அழைத்தனர்; ஏன் என்றால் அவன் உற்சாகமுள்ள இடைப்பையனாக விளங்கினான்.
>
> அத்துடன் தன் குழலைக்கொண்டு இன்பமூட்டினான்.
>
> அவன் இப்போது ஏசு பிறந்த இடத்திற்குப் போகவேண்டும். ஏசுவிற்குத் தன்னுடைய குழல், உடை, தார் வைக்கப்பட்டிருந்த பெட்டி, பிரயாணத்தின்போது எடுத்துச்சென்ற பை முதலியவைகளை அவன் அறிந்தான்.
>
> பிறகு அவன் தன்னுடைய தோழர்களை அடைவதற்காகக் குதித்துக் குதித்துத் திரும்பிஓடினான். அவன் வீடு திரும்பியது அதற்காக மட்டுமல்ல; தன்னுடைய ஆடுகளைத் திரும்பவும் கவனிப்பதற்காகவும் ஓடிவந்தான். ஏன் என்றால் இப்பையன் உற்சாகமுள்ள நல்ல இடையன் ஆவான். அத்துடன் அவன் குழலைக்கொண்டு இன்பமூட்டுவான்.

பாதிரியார்களின் ஆதரவைப்பெற்று கிருத்தவ ஆலயங்களிலும் பீர் முதலிய மது வகைகளை ஆண்களும் பெண்களும் விற்றும் குடித்தும் வந்தனர். இப்படி மது வகைகளை விற்றுக்கிடைத்த பணத்தை நற்காரியங்களுக்குச் செலவிட்டனர். பதினைந்தாம் நூற்றாண்டில் சாதாரணமாகக் கிருத்தவ ஆலயங்களில் மது வகை

[1] கானன் மெய்னார்ட் ஸ்மித் (Canon Maynard Smith) என்பார் எழுதியுள்ள 'பிரி ரிஃபர்மேஷன் இங்கிலண்டு' [(Pre-Reformation England (1938)] என்ற நூலில் பக்கம், 146-ஐப் பார்க்கவும். இப் புத்தகத்தை அவசியம் படிக்கவேண்டும்.

கள் விற்கப்பட்டுவந்தன. கிருத்தவ ஆலயங்கள் கிராமப் பொதுக் காரியங்களை நடத்துவதற்கு உபயோகிக்கப்பட்டன.

தற்காலக் கருத்திற்கு முரணான 'சிறுவன் பிஷப்' (Boy Bishop) சடங்கை மதக்கோட்பாட்டில் பற்றுடையவரும், டீன் கோலட் (Dean Colet) என்பாரைப்போன்ற சீர்திருத்தக் கருத்துக்கொண்டவர்களும் ஆதரித்துவந்தனர். 'செயின்ட் நிக்லஸ்' (St. Nicholas) நாளன்றும், 'ஹோலி இன்னேசென்ட்ஸ்' (Holy Innocents) நாளன்றும் பள்ளிகளிலும் கிருத்தவ ஆலயங்களிலும் சிறுவர்கள் பிஷப்பைப்போல் ஆடை அணிவித்து ஊர்வலமாகக் கொண்டு செல்லப்படுவர். அச் சிறுவர்கள் போதித்ததை அவர்தம் தோழர்களும் பாதிரியார்களும் மரியாதையுடன் கேட்டுக்கொண்டனர். இச் சடங்கை நடத்துவதற்கென்றே நன்கொடைகள் அளிக்கப்பட்டன. இச் சடங்கின்போது, பாதிரியார்கள் அச் சிறுவர்களை மண்டியிட்டு வணங்கி அவர்கள் ஆசீர்வாதங்களைப் பெற்றனர்.

# 4. டியூடர் வம்சத்தினரின் காலம்

## முகவுரை

### இடைக்காலத்தின் முடிவு ?

ஏழாம் ஹென்றி 1485 ; எட்டாம் ஹென்றி 1509 ; மடங்கள் அழிக்கப்பட்டது 1536-1539 ; ஆரும் எட்வர்ட் 1547; மேரி, 1553; எலிசபெத் 1558 - 1603.

வரலாற்றைக் கற்பதற்கும், வரலாற்றைப்பற்றி விவாதிப்ப தற்கும் வரலாற்று நிகழ்ச்சிகள் எந்தெந்த ஆண்டில் நடைபெற்றன, எவ்வெக் காலத்தில் நிகழ்ந்தன என்பதை அறிவது அவசியம், வரலாற்றில் காணப்படும் நிகழ்ச்சிகள் அனைத்தும் அவை நிகழ்ந்த காலத்தைச் சார்ந்தவையாகும். அத்துடன் ஒன்றன்பின் ஒன்ருக நிகழ்ந்த செயல்களின் விளைவாகும், வரலாற்றைப்பற்றிய எந்தச் செய்தியையும், நிகழ்ச்சி நடந்த ஆண்டைக்கொண்டு உண்மை யானதா அல்லது தவருனதா என்று அறிந்துகொள்ளலாம்.

வரலாற்றில் காலங்கள் (periods) என்று குறிப்பிடப்படும் காலங்கள், வரலாற்றில் காணப்படும் நிகழ்ச்சிகளைப்போல் உண்மை யானவையல்ல. வரலாற்றை எளிதில் புரிந்துகொள்வதற்காக, நாமாகவே, காலங்களாகப் பிரிக்கின்ருேம். உதாரணமாக, முற் காலத்தை 'இடைக்காலம்' என்றும், 'விக்டோரியன்' காலம் என்றும் பிரித்துக் கூறுகின்ருேம். இப்படிக் கூறப்படுவதால், ஒரு காலத்தில் வாழ்ந்த அனைவரும், ஒரே விதமாக நினைத்தனர் என்றும் ஒரே விதமாகச் செயல் புரிந்தனர் என்றும் நினைக்க இடமேற்படுகிறது. உண்மை அதுவன்று. விக்டோரியா அரசியின் ஆட்சிக்காலத்தில் மக்கள் ஒருவரில் இருந்து மற்றவர் குணுதிசயங் களில் மாறுபட்டவராகவும், பலதரப்பட்ட வாழ்க்கை நடத்தியவர் களாகவும், சமுதாயத்தில் மாற்றங்களை வரவேற்பவராகவும் இருந்தனர் என்று கூறலாம். விக்டோரியா அரசியின் ஆட்சிக்கால முடிவில், அவரது ஆட்சிக்காலத்தின் தொடக்கத்தில் இருந்த நிலை இருக்கவில்லை. ஆகையால் ஒரு காலத்தைப்பற்றிப் பேசும்போது,

அக் காலச் சமுதாயத்தில் மாற்றம் ஏதும் நிகழவில்லை, சமுதாயம் தொடக்கத்தில் இருந்தபடியே இருந்தது என்று நினைப்பதும் தவருகும். சமுதாயத்தில் மாற்றங்கள் சிறிய அளவில் தொடர்ந்து நிகழ்ந்துகொண்டே இருந்தன என்பதை உணரவேண்டும். இத்தகைய மாற்றங்கள் எந்த ஆண்டில் தோன்றின, எந்த ஆண்டில் முடிவுற்றன என்று திட்டவட்டமாகக் கூறமுடியாது.

பொருளாதார, சமுதாய வரலாறுகளில், காலங்கள் ஒரு குறிப்பிட்ட ஆண்டில் தோன்றி, ஒரு குறிப்பிட்ட ஆண்டில் முடிவுற்றன எனக் கொள்வது தவருகும். அரசியலையொட்டி, 'டியூடர் வம்சத்தினரின் காலம்', பதினுன்காம் லூயியின் காலம் என்றெல்லாம் பண்டைக்காலத்தைப் பிரித்துக் கூறுகின்ருேம். ஆனுல், மக்களின் பொருளாதார, சமுதாய வாழ்க்கை நிலை, ஓர் அரசர் இறந்ததாலோ அல்லது புதிய வம்சத்தினர் பதவிக்கு வந்ததாலோ பாதிக்கப்படுவதில்லை. அடித்தளத்தில் கண்ணுக்குத் தெரியாமல் ஓடும் நதியைப்போல், மக்கள் தொடர்ந்து தங்கள் வாழ்க்கையை நடத்திவருகின்றனர். எப்போதாவது அவர்தம் செயல்கள் அரசியல் நிகழ்ச்சிகளுக்குக் காரணமாகின்றன.

பொருளாதார, சமுதாய வரலாறுகளில், காலங்களை வரையறுத்துக் கூறுவது மற்ருெரு வகையிலும் தவருகும். பழையவை முற்றிலும் அழிந்துவிடாமல், புதியனவற்றுடன் தொடர்ந்து பல தலைமுறைக் காலமோ அல்லது பல நூற்ருண்டுக் காலமோ இருக்கலாம். இங்கிலாந்தில் இடைக்காலத்தின் இறுதியிலும், தற்காலத்தின் தொடக்கத்திலும் கைத்தொழிலில், கழகங்கள் பண்டங்களை உற்பத்தி செய்தல், தனி மனிதர் அவரவர் வீட்டிலேயே உற்பத்தி செய்தல், முதலாளித்துவ முறையில் உற்பத்தி செய்தல் ஆகிய மூன்றுவகை முறைகளிலும் பண்டங்கள் உற்பத்தி செய்யப்பட்டதைக் காண்கிருேம். இதைப்போலவே, பயிர்த் தொழிலிலும், வேலி அமைக்காமல் பயிர்செய்யும் முறை, வேலியிட்டுப் பயிர் செய்யும் முறை, ஆங்கிலோ-சாக்ஸானியர் கால முறை, தற்காலத்திய முறை ஆகிய வெவ்வேறு முறைகளும் இடைக் காலம்தொட்டு, பத்தொன்பதாம் நூற்ருண்டுவரை ஒருங்கே காணப்படுகின்றன. அதேபோல் இங்கிலாந்தில் மக்கள் ஒரே காலத்தில் நிலப்பண்ணை ஆட்சி முறையையும், குடியாட்சி முறையையும் காண்கிருேம்.

இப்படியிருக்க, நம்மை யாரேனும் இடைக் காலம் எப்போது முடிவுற்றது என்று கேட்பார்களேயானுல், அதற்குச் சரியான பதில் என்ன என்பதை ஆராய்வோம். பல அறிஞர்கள், இங்கிலாந்தில் டியூடர் வம்சத்தினர் ஆட்சிக்கு வந்த கி.பி. 1485ஆம் ஆண்டில் இடைக்காலம் முடிவுற்றது என்று இயம்பினுலும், நாம்

அவ்வாறு கூற இயலாது. டியூடர் வம்சத்தைச்சேர்ந்த ஹென்றி யும் வேல்ஸ் நாட்டவரும் சேர்ந்து, கி.பி. 1485-ல் மூன்றும் ரிச்சர்டை முரியடித்தபோது, ஆங்கிலேயர் அன்று இடைக் காலம் முடிவுற்றதென்றும், புதிய காலம் ஒன்று தொடங்கியது என்றும் எண்ணினர் இல்லை. அவர்கள், முடிவில்லாமல் நடந்துகொண்டிருந்த ரோஜாப்பூ அடையாளப் போரில், திரும்பவும் லங்காஸ்டர் வம்சத்தினர், யார்க் வம்சத்தினரை முரியடித்தனர் என்றே நினைந் தனர். அதனால் ரோஜாப்பூ அடையாளப்போர் முடிவுற்ற காலமும், இடைக் காலம் முடிவுற்ற காலமும் ஒன்றே என்று கூறமுடியாது.

நார்மானிய அரசனான வில்லியம், ஹேஸ்டிங்ஸ் என்ற இடத் தில் வெற்றி கண்டபின், இங்கிலாந்தில் ஏற்பட்ட மாற்றங்களைப் போல், வேல்ஸ் நாட்டைச்சார்ந்த ஹென்றி வெற்றி கண்டபின் ஏதும் நிகழவில்லை. கி.பி. 1485 ஆம் ஆண்டிற்குப் பிறகு ஹென்றியின் மகன் போப்பின் அதிகாரத்தைத் தானே மேற் கொண்டு, மடங்களை அழித்து அவைகளின் செல்வத்தை எடுத்துக் கொண்ட காலம்வரை, ஓர் அரை நூற்றாண்டுக் காலத்திற்கு ஆங்கி லேயரின் சமுதாயம், முந்திய அத்தியாயத்தில் கண்டதுபோலவே இருந்தது. பயிர்த் தொழிலில் தோன்றிய மாறுதல்கள், முன்னை விடச் சிறிதளவு வேகமாகத் தொடர்ந்து ஏற்பட்டுவந்தன. லாங் லண்டு, சாசர், விக்லிஃப் ஆகியோரின் காலத்தில் மதஸ்தாபனம் குறைகூறப்பட்டதுபோலவே இக்காலத்தும் குறைகூறப்பட்டது. எனினும், மதஸ்தாபனம் எவ்வித மாற்றமும் இன்றி முன் இருந் ததுபோலவே இருந்துவந்தது. குறைகூறப்பட்டு வந்ததால் மதஸ்தாபனத்தில் மாற்றங்கள் ஏற்படும் என்று சொல்லுவதற்கிட மில்லாதிருந்தது. ஏழாம் ஹென்றியும், இளைஞரான எட்டாம் ஹென்றியும் மதப்பற்று உடையவராய் இருந்தனர். மதக் கோட் பாட்டிற்கு முரணான கருத்துகள் கொண்டவரைத் தீயில் எரித்து வந்தனர். இடைக்காலத்தில் இருந்துவந்த பழக்கத்தைக் கைவிடாமல், பிஷப்புகளைத் தங்கள் அரசியல் ஆலோசகராக அவர்கள் நியமித்துக்கொண்டனர். இப்படி நியமிக்கப்பட்டவர் களில் கடைசியானவர் கார்டினல் உல்சி என்பவராவர். உல்சி, இடைக்கால மதஸ்தாபனத்தின் பெருமையும் அதிகாரமும் விளங்கும்வகையில் நடந்துகொண்டார். போப்பின் அதிகாரம் வளர்வதற்குக் கருவியாய் இருந்த அவர், இங்கிலாந்தில் போப்பின் அதிகாரம் அதிகரிக்கச் செய்தார். பாதிரியார் அல்லாத பிரபுக் களையும் ஜென்ட்ரி வகுப்பினரையும் தம் காலடி தூசிற்குச் சமமாக மதித்து நடத்திவந்தார். அவரது செய்கை பாதிரியார்களின் அதிகாரத்தை ஒழிக்க ஓர் இயக்கம் ஏற்படுவதற்குத் துணை புரிந்தது. அவர் பதவி இழந்ததும் அவ் வியக்கம் தொடங்கியது. உல்சியின் இல்லத்தில் சுமார் ஆயிரம் ஆட்கள் பணிபுரிந்து

வந்தனர். அவர் வெளியில் சென்றபோது அவருக்குமுன் வெள்ளியினால் ஆன தடிகளையும், நீண்ட காம்பை உடைய கோடரிகளையும் தாங்கிச் சென்றனர். உல்சி பலவிதத்தில் வருமானம் உடையவராய் இருந்துவந்தார். ஆனால், அவர் யார்க் நகர ஆர்ச்பிஷப் (Archbishop) என்ற முறையிலும், டர்ஹாம் நகர பிஷப் (Bishop) என்ற முறையிலும், செயின்ட் ஆல்பன்ஸ் மடத்தின் தலைவர் (Abbot) என்ற முறையிலும் தாம் செய்யவேண்டிய கடமைகளைச் செய்யாமல் விடுத்தார். உல்சி, எட்டாம் ஹென்றி ஆகியோரின் வாழ்க்கை வரலாற்றை எழுதியுள்ள அறிஞர் ஒருவர், உல்சி அரசனைப்போலவே அத்தனைச் செல்வராக இருந்தார் என்று அவரது நூலில் குறிப்பிட்டுள்ளார். (போலார்ட் : 'உல்சி' என்ற நூலில், பக்கங்கள் 320-321.) தம்முடைய மகனுக்குப் பல பதவிகளை வாங்கித்தந்து, தம் மகனையும் ஏராளமான வருமானம் உடையவராகச் செய்தார். ஆனால், தம் மகனை டர்ஹாம் நகர பிஷப்பாக அவரால் ஆக்க முடியாமல் போய் விட்டது. தற்பெருமை, இன்பவாழ்வில் இருந்த விருப்பம், பணத்தாசை ஆகியவை எந்த அளவிற்கு உல்சியிடம் இருந்தனவோ, அதே அளவிற்கு அவரிடம் அழகுமிக்க பள்ளிகளையும் கல்லூரிகளையும் கட்டவேண்டும் என்ற ஆர்வமும், அதற்காக ஏராளமான செல்வத்தைச் செலவிடும் மனப்பான்மையும் இருந்தன. படிப்படியாக உயர்ந்த அதிகாரிகளைக்கொண்ட, பல நூற்றுண்டுக்காலமாக மக்கள் தலைவணங்கி மரியாதை செலுத்திவந்த ஐரோப்பாவின் நிறுவனம் ஒன்றின் இளவரசரைப்போல் உல்சி விளங்கினர். ஆனால், அவர் மதஸ்தாபனத்திற்காக உழைத்ததைவிட, அதிகமாக அரசருக்குப் பிரதம மந்திரியாகப் பணிபுரிந்து உழைத்து வந்தார். இவை அனைத்தையும் எண்ணிப்பார்த்தால், இடைக் காலத்தில் வாழ்ந்த சிறந்த மனிதர்களில் உல்சியும் ஒருவர் என்று கூற இடமுண்டு. பாஸ்வொர்த் என்ற இடத்தில் நடந்த போரிற்குப் பிறகு, நாற்பது ஆண்டுகளுக்குமேல் அவரது அதிகாரம் உச்ச நிலையில் இருந்துவந்தது.

மதச் சீர்திருத்தம் ஏற்படுவதற்கு அரை நூற்றுண்டுக் காலத்திற்கு முன், கிரேக்க-ரோமானிய இலக்கியங்களின் மறுமலர்ச்சி ஏற்பட்டது. அத்துடன் ஏராஸ்மஸ் (Erasmus), லினகர் (Linacre), கிரோசின் (Grocyn), கோலெட் (Colet), மூர் (More) ஆகியோர் பைபிளுக்குத் தங்கள் விளக்கங்களை வெளியிட்டனர். இவர்களின் தொண்டு, உல்சியின் அதிகாரம் மதச் சீர்திருத்தத்திற்கு வழி செய்ததைவிட, அதிகமாக மதச் சீர்திருத்தம் ஏற்படக் காரணமாயிருந்தது. ஆனால், அவர்தம் தொண்டு உடனடியாகப் பெருத்த மாறுதல்கள் ஏற்படச் செய்யாவிடினும், வருங்காலத்தில் பெருத்த மாறுதல்களை விளைவித்தது. மேற்குறிப்பிட்டவரில்

எவரும், தாங்கள் கிரேக்க-ரோமானிய இலக்கியங்கள், கிரேக்க மொழியில் இருந்த பைபிள் ஆகியவற்றில் இருந்து எடுத்துச் சொன்ன கருத்துகள் இடைக்கால மதஸ்தாபனத்தினை அழிக்கும் என்று நினைத்தார் இல்லை. அவர்கள் இடைக்கால மதஸ்தாபனத்தைத் திருத்தி அமைக்கவே எண்ணினர். வில்லியம் டின்டேல் (William Tyndale) என்பார், பைபிளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து முன் குறிப்பிட்டவர்களைவிட, வருங்காலத்தில் மக்களை, அவர்களுக்குத் தோன்றியபடி விளக்கம் கூற வழி செய்தார். இவர்தம் செயல் மற்றவர்களின் செயல்களைவிட அதிகமாக அமைதியைக் குலைக்கக் கூடியதாயிருந்தது.

ஏழாம் ஹென்றி, பிரபுக்கள் தங்களிடம் வைத்திருந்த ஆயுதம் தாங்கிய பணியாட்களைக்கொண்ட படைகளைக் கலைத்து நாட்டில் அமைதி நிலவச் செய்தார். இது சமுதாயத்திலே ஏற்பட்ட பெருத்த மாறுதலாகும். ஆனால், இம் மாறுதல் ஒன்றே இடைக்காலத்தின் முடிவைத் தேடித் தரவில்லை. ஆங்கிலேயர் நீண்ட காலமாக எதிர்நோக்கி இருந்த நாட்டின் அமைதியை ஹென்றியின் செயல் ஏற்படுத்தியது. ஏழாம் ஹென்றி, உல்சி ஆகியோரின் காலத்தில் பார்லிமெண்ட் கூட்டப்படாமல் இருந்ததால், அது அழிந்துவிடுமோ என்று எண்ணத் தூண்டியது. ஆனால், ஃபிரான்சிலும், ஸ்பெயினிலும் நிகழ்ந்ததுபோல் அல்லாமல், இங்கிலாந்தில் எட்டாம் ஹென்றியின் காலத்தில் இடைக்காலப் பார்லிமெண்டானது திரும்பவும் கூட்டப்பட்டு, பலம்பெற விருந்தது. அதைப் போலவே, இங்கிலாந்தின் 'பொதுச்சட்டம்' (Common Law) டியூடர் வம்சத்தினரின் காலத்தில் நிலைபெற்று ஆங்கிலேயரின் தற்கால வாழ்க்கைக்கும் உரிமைகளுக்கும் அடிப்படையாக விளங்கத் தொடங்கியது.

பதினாறும் நூற்றாண்டின் ஆரம்பத்தில் ஆங்கிலேயரின் வியாபாரம் சிறிதுகாலம் வளர்ச்சியடையாதிருந்து திரும்பவும் வளர்ச்சியடையத் தொடங்கியது. வடக்கு ஐரோப்பிய நகரங்களுடன் இடைக்காலத்தில் நடந்துவந்த வியாபாரமானது, இந் நூற்றாண்டில் மத்தியதரைக்கடல் பிரதேசத்திற்கும் நீட்டிக்கப்பட்டது. ஆடை வியாபாரம் தொடர்ந்து நடப்பதற்கு இப்படி வியாபாரத்தைப் பரப்ப வேண்டியிருந்தது. ஏழாம் ஹென்றியின் காலத்தில் கேபட் (Cabot) என்பார், பிரிஸ்டல் துறைமுகத்தில் இருந்து கிளம்பி வட அமெரிக்காவில் இருக்கும் நியூஃபவுண்டுலாந்து (Newfoundland) அடைந்தார். எனினும் எலிசெபெத் அரசி அரியாசனத்தில் அமரும் வரை, ஆங்கிலேயர் அட்லாண்டிக் சமுத்திரத்தைக் கடந்துசென்று வியாபாரம் செய்யவில்லை. எலிசபெத் அரசியின் தமக்கையான மேரி அரசியின் காலம்வரை, ஆங்கிலேயர் ஃபிரெஞ்சுக்காரர்களை

மட்டுமே வெறுத்து வந்தனர்; ஸ்பெயின் நாட்டவரை வெறுத்தார் இல்லை. மேரி அரசியின் காலம்வரை, புதிதாகக் கண்டுபிடிக்கப் பட்ட அமெரிக்கக் கண்டத்தில் ஒரு பங்கிற்காகவும், இங்குவிசிஷன் (Inquisition) என்ற நீதிமன்றத்தைப்பற்றியும் ஆங்கிலேயர் ஸ்பெயின் நாட்டவருடன் சச்சரவில் ஈடுபடவில்லை.

இங்கிலாந்தில் இடைக் காலம் (Middle Ages) எந்த ஆண்டில் முடிவிற்கு வந்தது என்று எண்ணிப்பார்ப்பது வீணான காரிய மாகும். பதின்மூன்றும் நூற்றாண்டில், ஆங்கிலேயரின் எண்ணங் களும், சமுதாயமும் இடைக்காலத்தைச் சார்ந்தவையாய் இருந்தன; ஆனால், பத்தொன்பதாம் நூற்றாண்டில் அப்படி யிருக்காமல் மாறுபட்டன என்றுமட்டுமே கூறலாம். இன்றும்கூட இடைக்காலத்தைச் சார்ந்தவைகளை இங்கிலாந்தில் காண்கிறோம். உதாரணமாக அரசாட்சி, பிரபுக்கள், ஷீர்கள் (Shires), நகரங்கள் ஆகியவைகளின் பிரதிநிதிகளைப் பார்லிமெண்ட் உடைத்தாய் இருத்தல், ஆங்கிலேயரின் பொதுச்சட்டம், நீதிமன்றங்கள் அப் பொதுச் சட்டத்தின்படி தீர்ப்பளித்தல், படிப்படியாக உயர்ந்த அதிகாரிகளையுடைய மதஸ்தாபனம் பாரிஷ் எனப்படும் பிரிவுகள், சர்வகலாசாலைகள், பொதுப்பள்ளிகள், இலக்கணப்பள்ளிகள் ஆகியவை இடைக்காலத்தைச் சார்ந்தவை ஆகும். இங்கிலாந்து கம்யூனிஸ நாடாக ஆகாதவரை இடைக்காலக் கருத்துகள் ஆங்கிலேயரின் சமுதாயத்திலே இருந்துகொண்டே இருக்கும். மக்களுக்கும் கழகங்களுக்கும் உரிமைகள் இருக்கின்றன; அவை களைப் பார்லிமெண்ட் புதிய சட்டம் செய்யும்போது நினைவில் வைத்துக்கொள்ளவேண்டும் என்ற கருத்து இடைக்காலத்தைச் சார்ந்ததாகும். பொதுவாகக் கூறுவோமேயானால், பழமையை விரும்பும் குணமும் பரந்த மனப்பான்மையும் இடைக்காலப் பண்புகளேயாகும். தொழிற்சங்கங்களும் இடைக்காலத்தே தோன்றியவையாகும். பதினேழாம்நூற்றாண்டில், ஸ்டூவர்ட் (Stuart) வம்சத்தினரின் காலத்தில், இடைக்காலத்தில் நிலவி வந்ததை உதாரணமாக எடுத்துக்காட்டி, நகரமக்களின் உரிமைகளை நிலை நிறுத்தினர் அரசியல்வாதிகள். வரலாற்றின் அமைப்பு ஒரு சிலந்தியின் வலையைப் போன்றதாகும். எந்த ஒரு விளக்கப் படத்தைக்கொண்டும் வரலாற்றில் உள்ள சிக்கலை விளக்கிக் காட்டமுடியாது.

பதினாறும் நூற்றாண்டின் சமுதாய வரலாற்று ஆசிரியர், டானி (Tawney) என்பார், டியூடர் வம்சத்தினரின் காலம் பலவற்றின் தொடக்ககாலமாக இருந்தது என்று குறிப்பிடுகின்றார். பதினெட் டாம், பத்தொன்பதாம் நூற்றாண்டுகளில் காணப்பட்ட பெரிய பண்ணைகளும், கைத்தொழிலில் முதலாளித்துவமும், டியூடர்

வம்சத்தினரின் காலத்திலிருந்து வளர்ந்தவையேயாகும். டியூடர் வம்சத்தினரின் காலத்தில் தொடங்கிய பொருளாதாரச் சமுதாய மாறுதல்கள் மூன்ரும் ஜார்ஜின் காலத்தில் முற்றுப்பெற்றதால், மூன்ரும் ஜார்ஜின் காலத்தை, இடைக் காலம் முடிவடைந்தகாலம் என்று ஏன் கருதக்கூடாது என்ற வினு எழலாம். ஆனல், டியூடர் வம்சத்தினரின் காலத்தில் உண்மையிலேயே இம் மாறுதல்கள் தொடங்கவில்லை என்று, மேலே குறிப்பிட்டதை ஞாபகத்தில் கொள்வோமேயானல், அவ் வினுவிற்கு இடமிருக்காது. உதாரண மாக. முதலாளித்துவம் டியூடர் வம்சத்தினரின் காலத்திற்கு நீண்ட நாட்களுக்கு முன்பே, பல தொழில்களில் காணப்பட்டது. அத்துடன் அடிமைநிலையில் இருந்த குடியானவர்கள் டியூடர் வம்சத்தினரின் காலத்திற்கு முன்பே சுதந்திரக் குடியானவர்களாக மாறினர். மேலும், பாஸ்வொர்த் போரிற்கு முன்பே, இடைக்காலப் பண்ணை முறை சீர்குலைந்துவிட்டிருந்தது.

இப்படியிருக்கையில் எந்த நூற்ருண்டில் இடைக்காலச் சமுதாயம் மறைந்தது என்று கூறலாம்; பதினுன்காம் நூற்ருண் டிலா. பதினுரும் நூற்ருண்டிலா அல்லது பதினெட்டாம் நூற்ருண் டிலா? இப்படி எண்ணிப்பார்ப்பதே முதலில் அவசியமன்று. இதற்குமாருக என்ன நடந்தது என்பதை அறிந்துகொள்வதுதான் அவசியம். கூடிய சீக்கிரம் பழங்கால வரலாற்றை இதுவரை பல காலங்களாகப் பிரித்துக்காட்டி வந்ததற்குப் பதிலாகப் புதிய கோணத்திலிருந்து நோக்க வழியேற்படலாம். மனிதனின் வாழ்க்கை ஆயிரம் ஆண்டுக்காலத்தில் அடைந்த மாற்றத்தைவிட, முந்திய நூற்ருண்டில் அடைந்த மாற்றமானது அதிகம் எனக் கூறலாம். அதனல் தற்காலத்தின் (Modern Age) கிரேக்க – ரோமானிய இலக்கிய மறுமலர்ச்சி, மதச்சீர்திருத்த இயக்கம் ஆகியவைகளின் காலத்தில் தொடங்கியது எனக் கொள்ளாமல், தொழிற்புரட்சி பெருகிய காலத்திலிருந்து தொடங்கியதாகக் கொள்ளலாம். விஞ்ஞான அறிவும், டார்வின் புகுத்திய கொள் கையும், மக்களின் கருத்துகளையும் மதத்தையும் மாற்றி அமைத்தது. இம் மாற்றம், ஏராஸ்மஸ், லூதர் ஆகியோர் தங்கள் காலத்தில் மதத்தில் ஏற்படுத்திய மாறுதல்களை ஒத்திருந்தது. எனினும், பதினுரும் நூற்ருண்டில் கிரேக்க - ரோமானிய இலக்கிய மறுமலர்ச் சியும், மதச் சீர்திருத்த இயக்கமும் இடைக்காலத்தின் முடிவைக் குறிக்கின்றன என்று சாதாரணமாக எண்ணப்படுகிறது.[1] இடைக் கால மதமும் இடைக்காலத்தில் பாதிரிகள் செலுத்திய அதிகாரமும்

[1] இப்படி எண்ணப்பட்டதற்கு மற்ருெரு காரணம், நாட்டுப்பற்றின் காரண மாக மக்கள் தங்களை வேறு வேறு நாட்டினராக எண்ணத் தொடங்கியதுமாகும். ஆங்கிலேயர்கள், ஃபிரான்சுடன் கிரெசி, அஜின்கோர்ட் முதலிய இடங்களில் போர்புரிந்த காலத்திலேயே தங்களை ஃபிரெஞ்சுக்காரரிலிருந்தும்

டியூடர் வம்சத்தினரின் காலத்தில் அழிந்தன. எனினும், எலிச பெத் அரசியின் அரசாட்சிக்காலத்தை நினைந்து பார்த்தால் இப்படிக் கூறுவதுகூட முற்றிலும் உண்மையாகாது என்பது புலனுகும். பியூரிடன் கலகம் ஏற்படும் வரையிலும், விக் (Whig), டோரி (Tory) ஆகிய கட்சிகள் தோன்றும் வரையிலும் இங்கிலாந்தின் மதம் முழுவதும் பிராடஸ்டென்ட் மதமாக மாறவில்லை – ஏன் இன்றும் அப்படியாகவில்லை என்று கூறலாம். இன்றும் இங்கிலாந்தின் மதஸ்தாபனம், அமைப்பிலும் உரிமைகளிலும் சடங்குகளிலும் கருத்துகளிலும் ஓர் அளவு இடைக்கால மதத்தின் சின்னங்களை உடையதாயிருக்கின்றது.

மதஸ்தாபனத்தில் எலிசபெத் அரசி ஏற்படுத்திய ஒழுங்கு, கிரேக்க - ரோமானிய இலக்கிய மறுமலர்ச்சி, மதச்சீர்திருத்த இயக்கம் ஆகியவைகளின் வெற்றியையே எடுத்துக்காட்டுகின்றது. கிரேக்க - ரோமானிய இலக்கிய மறுமலர்ச்சியும், மதச்சீர்திருத்த இயக்கமும் ஒன்றேடொன்று இணைந்ததால், அக் கால இலக்கியம் ஷேக்ஸ்பியர் காலத்து இலக்கியத்தைப்போல், அவ்வளவு சுவை யுள்ளதாக இருக்கவில்லை. ஷேக்ஸ்பியரின் காலத்தில் குறுகிய நீர்ப் பரப்பாகிய கடலைப்பற்றி பாடுவதைவிடுத்து, பெரிய நீர்ப்பரப்பாகிய சமுத்திரத்தை நினைத்துப்பாடினர். டிரேக் (Drake), ஃப்ரோபிஷர் (Frobisher), ஹாகின்ஸ் (Hawkins), ராலி (Raleigh) ஆகியோரும் மற்றவரும் உலகத்தின் பல பாகங்களைச் சுற்றிவந்தனர். தொலை வில் இருந்த தீவுகளைக் கண்டுபிடித்தனர். இப்படிச் செய்து தங்கள் நாட்டவர் வியாபாரம் செய்வதற்கு மேலும் புதிய இடங்களைத் தேடித் தந்தனர். அதே சமயம் அயர்லாந்தில் கொடுமைகள் இழைத் தனர்; அடிமை வியாபாரம் செய்தனர். ஆனுல், இக் கொடுமை களைக் கொடுமைகள் என்று உணராமலேயே இழைத்துவந்தனர். அவர்தம் செயல்களின் விளைவுகள் என்னவாய் இருக்கும் என்றும் நினைத்துப் பார்த்தார்கள் இல்லை. எலிசபெத்தின் அரசாட்சிக் காலத்தில், இடைக்கால வழக்கு, பியூரிடன் மதக் கொள்கைகள் ஆகியவற்ருல் பாதிக்கப்படாத தன் உணர்ச்சிப் பாடல்கள் எழுந்தன. இப் பாடல்கள் மக்கள் வாழ்க்கையில் பெற்ற இன்பத்தை வெளிப்படுத்தின. மக்கள் இயற்கைக் காட்சியில் இன்பம் கண் டனர். விவசாயமும் வியாபாரமும் செழித்தோங்கின. இயந்திரங்கள் உபயோகத்திற்கு வந்தபின், மக்கள் செல்வம் திரட்டுவதை ஒரே குறிக்கோளாகக் கொண்டனர். அத்தகைய மனநிலை எலிசெபெத் அரசியின் அரசாட்சிக் காலத்தில் காணப்படவில்லை.

---

வேறுபட்டவர்கள் என்று எண்ணத் தொடங்கினர். எட்டாம் ஹென்றி மதஸ்தா பனத்தின் அதிகாரத்தையும் மேற்கொண்டபோது, ஆங்கிலேயரின் நாட்டுப்பற்று மேலும் அதிகரித்தது.

மக்கள் கருத்திலும் உணர்ச்சியிலும், தாங்கள் வாழ்ந்த காலத்திற்கு முந்திய காலத்தினின்றும் மாறுபட்டனர் என ஷேக்ஸ்பியரின் நாடகங்களில் இருந்து தெரிகின்றது. ஷேக்ஸ்பியர் எழுதிய நாடகங்களில் 'ஹாம்லெட்' என்ற பெயருடைய நாடகம் ஒன்றுவது தற்காலத்திற்கு ஒத்ததாகும் எனக் கூறலாம். ஏழைகளும் செல்வரும் ஆங்கில மொழியில் பைபிளைக் கற்றனர். ஆங்கில மொழியில் கிருத்தவ ஆலயங்களில் பிரார்த்தனை செய்தனர். இச் செய்கை ஆங்கிலேயர் இடைக்கால நிலையில் இருந்து மாறுபட்டனர் என்பதை விளக்குகின்றது. ஆனால், சமுதாய அமைப்பு, அரசியல், பொருளாதார நிலை ஆகியவை பதினைன்காம் நூற்றுண்டில் இருந்ததுபோலவே இருந்தன. இவ் விருபதாம் நூற்றுண்டில் காணப்படுவதுபோல் அவை இருக்கவில்லை. அதனுல் ஷேக்ஸ்பியர், 'இரண்டாம் ரிச்சர்ட்', 'நான்காம் ஹென்றி', ஆகியோரின் நாடகங்களை எழுதியபோது, அவ் விரு அரசரின் கால நிலைகளை ஊகித்து எழுதமுடிந்தது.

எட்டாம் ஹென்றியின் காலத்தைப்பற்றி எழுதியுள்ள வரலாற்று ஆசிரியர் ஒருவர், மக்கள் வாழ்க்கையைப் பல கோணங்களில் இருந்து நோக்குவோமேயானுல், இடைக்காலத்திற்கும் தற்காலத்திற்கும் இடையே பெரிய பிளவு இருந்தது என்ற தவறுன எண்ணம் மனத்தில் எழாது என்று குறிப்பிட்டுள்ளார். (ஏ. எஃப். போலார்ட், 'உல்சி' என்பாரைப்பற்றி எழுதியுள்ள நூலில், பக்கம். 8).

ஷேக்ஸ்பியரின் குறுகிய வாழ்க்கைக் காலம் (கி.பி. 1564-1616) பொற்காலமாகக் கருதப்படுகின்றது. அவரது காலத்திற்கு முன் ஆண்ட டியூடர் வம்சத்தினரின் காலத்தில் இங்கிலாந்தில் பூரண அமைதி நிலவவில்லை. எனினும், மதம் காரணமாக நேர்ந்த போர்களினுல் ஃபிரெஞ்சுநாடு பாதிக்கப்பட்டதுபோல் இங்கிலாந்து பாதிக்கப்படவில்லை. இங்கிலாந்தில் அரசரின் அதிகாரம் பலமுள்ளதாய் இருந்ததே இதற்குக் காரணமாகும். அத்துடன் ஃபிரெஞ்சு மக்களைப்போல், ஆங்கிலேயர் மதவெறி பிடித்துத் தலைவிரித்தாடவில்லை. எனினும், மதச் சீர்திருத்தம் செய்தபோது, டியூடர் வம்சத்தினர் கொஞ்சமேனும் கொடுமை இழைக்கத்தான் செய்தனர். எட்டாம் ஹென்றி, நான்காம் எட்வர்ட், மேரி ஆகியோரின் அரசாட்சிக் காலத்தில் நாட்டில் பொருளாதார நெருக்கடி நிலவியது. அச் சமயத்தில் மதத்தில் பல மாறுதல்கள் கொண்டுவரப்பட்டன. விலைவாசிகள் அதிகரித்தன. அதனுல் விவசாயமும் வியாபாரமும் பாதிக்கப்பட்டன. உலகப் பொருளாதார நிலையும், ஹென்றியின் காலத்தில் நாணயத்தின் மதிப்புக் குறைவும் விலைவாசிகளின் ஏற்றத்திற்குக் காரணமாயிருந்தன. இவைகளைப்பற்றி அடுத்த அத்தியாயத்தில் காண்போம்.

# 5. பாதிரியார்களை எதிர்த்து நடத்திய போராட்டத்தின்போது இங்கிலாந்தின் நிலை

ஜான் லீலண்டு (John Leland) என்ற பெயருடைய பழம் பொருள் சேகரிப்பார், இங்கிலாந்தில் பணியாற்றிய காலத்தை இடைக்காலம் மறையத் தொடங்கிய காலமாகக் கொள்ளலாம். எட்டாம் ஹென்றியின் ஆட்சிக் காலத்தில் சுமார் பத்து ஆண்டுக் காலம் (1534-1543) அவர் இங்கிலாந்தின் பல பாகங்களைச் சுற்றிவந்தார். அப்படி அவர் பழம்பொருள்களைத் தேடிச் சுற்றி வந்தபோது புதிய பொருள்களையும் கண்ணுற்றார்.[1] வளமாக இருந்தவை பலவற்றையும் அவர் கண்டார். ஆயின், பழங்காலத்தைச் சார்ந்தவைகளையும் உணர்ந்துகொள்ளும் திறன் உடையவராய் இருந்தார்.

> ‘பழங்காலப் பொருள்கள் காலத்தின் கோலத்தால்
> சிதைந்து கிடந்ததை அவரால் உணர முடிந்தது.’

உயர்ந்த மாடங்கள் பல, மண்ணோடு மண்ணாய்ச் சரிந்து கிடந்ததைக் கண்டார். கோட்டைகள் பாழடைந்து கிடந்ததையும், நகரத்தைச் சுற்றி இருந்த மதில்கள் சிறிதுசிறிதாக இடிந்து விழுந்து கொண்டிருந்ததையும், கள்வர்கள் மடங்களின் கூரைகளைப் பிரித்து இறங்கி, அங்குள்ள செல்வத்தைக் களவாடிச் சென்றிருந்ததையும் அவர் கண்டார். காலத்திற்கு ஏற்றவாறு மாறுதல்கள் செய்யப்பட்ட பல கோட்டைகளையும் லீலண்டு கண்டார். ஆனால், பல கோட்டைகள் (உதாரணமாகக் கருப்பு இளவரசரின் பெர்க்ஹாம்ஸ்டெட் கோட்டை) ரோஜாப்பூ அடையாளப் போரிற்குப்பிறகு, ஏழாம் ஹென்றியின் சிக்கனத்தின் காரணமாகப் புழங்கப் படாமல் விடப்பட்டிருந்தன. தங்கள் முன்னோர்கள் வாழ்ந்த

[1] லூசி டவுல்மின் ஸ்மித் (Lucy Toulmin Smith) தொகுத்த ‘தி இடினரரி ஆஃப் ஜான் லீலண்டு. (The itinerary of John Leland, Ed. 1906-1910)

கோட்டைகளைப் பலர் உபயோகப்படுத்தாமல் விட்டுவிட்டனர். ஏனென்றால், அக் கோட்டைகள் பீரங்கித் தாக்குதலைத் தாங்கு வதற்கு ஏற்றதாகவோ அல்லது பிரபுக்களும் மற்றவர்களும் அதில் வந்து தங்குவதற்கு ஏற்றதாகவோ இருக்கவில்லை. சில கோட்டைகள் கூரைஇல்லாமல் இருந்தன. சில கோட்டைகளின் மதில்கள், கட்டடங்கள் கட்டுவதற்குத் தேவைப்பட்ட பொருள்களை எடுத்துக்கொள்ளக் கூடியவைகளாகச் சிதைந்து இருந்தன என்று லீலண்டு குறித்துள்ளார். சில கோட்டைகளில் ஏழைக் குடியான வர்களும் அவருடைய கால்நடைகளும் தங்கி இருந்தன என்றும் குறித்துள்ளார்.

இடைக்காலத்திலே, நகரங்கள் மதில்களால் சூழ்ப்பட்டுப் பாதுகாக்கப்பட்டுவந்தன. அரசியல், பொருளாதாரம், பாதுகாப்பு ஆகிய பல காரணங்களால் இம் மதில்கள் பாழடைய விடப்பட்டன. தற்போது நியூகாலேஜ் (New College), ஆக்ஸ்ஃபோர்டு முதலிய வற்றைச் சுற்றிக் காணப்படும் மதில்களைப்போல், அக் காலத்து மதில்கள் இருந்தன. அம் மதில்கள், டியூடர் காலத்தில் உப யோகிக்கப்பட்ட பீரங்கித் தாக்குதலை எதிர்த்து நிற்கும் வலிமை யற்றவைகளாய் இருந்தன. நூருண்டுகளுக்குப் பிறகு, சார்லசும் (Charles) கிராம்வெல்லும் (Cromwell) ஒருவரை ஒருவர் எதிர்த்துப் போர்புரிந்தபோது, லண்டன், ஆக்ஸ்ஃபோர்டு, பிரிஸ்டல் முதலிய நகரங்கள், ஏற்கெனவே இருந்த மதில்களைச்சுற்றி மண்ணால் ஆன மதில்களை எழுப்பிப் பாதுகாத்துக்கொள்ள முயன்றன. மேலும், இத்தகைய செல்வம் கொழித்த நகரங்கள் லீலண்டின் காலத்திற்கு முன்னமேயே புறநகர்களை உடையனவாய் இருந்தன. அத்துடன் இந் நகரங்களை இணைக்கும் சாலைகள் நெடுக நகரங்கள் வளர்ந்து கொண்டேபோயின. செல்வநிலை குலைந்த நகரங்களால் மதில் களைச் சீரான நிலையில் வைத்துக்கொள்ள இயலவில்லை. டியூடர் வம்சத்தினரின் காலத்தில் நாட்டில் அமைதி நிலவியதால் மதில்கள் தேவைப்படவும் இல்லை. இடைக்காலத்து மக்கள் தங்கள் நகரத் திடம் கொண்டிருந்த ஈடுபாடு குறைந்ததைப் பாழடைந்த மதில் கள் எடுத்துக்காட்டுகின்றன. மக்கள் தங்கள் நகரத்திடம் கொண்டிருந்த ஈடுபாட்டிற்குப் பதிலாக நாட்டுப்பற்று உடையவர் களாக மாற ஆரம்பித்தனர். அங்ஙனமே தொழிற் சங்கங்களின் கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டு நடப்பதற்குப் பதிலாகத் தனி மனிதர் தம் விருப்பம்போல் ஒரு தொழிலை மேற்கொள்ளவும் செய்தனர். அரசியல், நாட்டைக் காத்தல், வியாபாரம், கைத்தொழில் ஆகி யவைகளில் இம் மாறுதல் தெளிவாகத் தென்பட்டது. நகரங்களின் கட்டுப்பாட்டிலிருந்தும், தொழிற்சங்கங்களின் கட்டுப்பாட்டி லிருந்தும் தப்புவதற்காக, ஆடை உற்பத்தித் தொழில், நகரங்களில் இருந்து நாட்டுப் புறங்களுக்கு மாறிக்கொண்டிருந்தது

கொஞ்ச காலத்திற்கு முன்பே, லீலண்டு மற்றோர் அழிவையும் கண்டார். நாடு முழுதுமிருந்த மடங்கள் அரசரின் ஆணையால் இடித்துத் தள்ளப்பட்டிருந்தன. இப்படிச் செய்ததன்மூலம், இரண்டு நூற்றாண்டுக் காலமாகச் சமுதாயத்தில் இருந்துவந்த பிரச்சினையை அரசர் தீர்த்துவைத்தார்.

லீலண்டு இங்கிலாந்து முழுதும் சுற்றிவந்துகொண்டிருந்த பத்து ஆண்டுக் காலத்தில் எட்டாம் ஹென்றியானவர் பாராளுமன்றத்தை உபயோகித்துப் பாதிரியார்களை எதிர்த்து நாட்டில் ஒரு புரட்சியையே ஏற்படுத்திவிட்டார். மற்ற நிகழ்ச்சிகளைவிட, இந் நிகழ்ச்சி இங்கிலாந்தில் இடைக்காலச் சமுதாயம் முடிவிற்குவந்ததை எடுத்துக்காட்டுகின்றது எனலாம். மதஸ்தாபனம் போப்பின் அதிகாரத்தை ஏற்க மறுத்துவிட்டதால், பாதிரியார் அல்லாதவரின் கட்டுப்பாட்டின்கீழ்ச் கொண்டுவர முடிந்தது. அத்துடன் மடங்களுக்குச் சொந்தமான சொத்துகளைப் பொதுமக்கள் தங்களுக்குள் பகிர்ந்துகொள்ளவும் வழிசெய்தது. இவை அனைத்தையும் ஒரு சேர நோக்கின், சமுதாயத்தில் ஒரு புரட்சியே ஏற்பட்டுவிட்டது எனலாம். ஆங்கில மொழியில் பைபிளை எல்லாரும் உபயோகிக்கத் தொடங்கியதையும், சிலைகளை வைத்துப் பூசிப்பதில் காணப்பட்ட சில நாகரிகமற்ற செயல்கள் ஒழிக்கப்பட்டதையும், புனிதச் சின்னங்கள் என்று கூறிக்கொண்டு சிலர் நடத்திய வியாபாரம் ஒழிக்கப்பட்டதையும், ஆக்ஸ்ஃபோர்டு, கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலைகளில் தத்துவத்தையும் மதச் சட்டங்களையும் கற்பதை விடுத்துக் கிரேக்க, ரோமானிய இலக்கியத்தைப் படிக்கத் தொடங்கியதையும் எட்டாம் ஹென்றி அங்கீகரித்தார். இம் மாறுதல்கள் எல்லாம் மதக் கோட்பாட்டிற்கு முரணானவை அல்ல என்றும், மதச் சீர்திருத்தத்திற்குத் தேவையானவை என்றும் எட்டாம் ஹென்றி கருதினார். இவை அனைத்தையும் அங்கீகரித்தபோதிலும் பிராடஸ்டன்டு மதத்தினரை வெறுத்தார்; அத்துடன் அவர்களைத் துன்புறுத்தினார். ஆனால், அவர் இப்படிச் செய்யாதிருந்தால், பொதுமக்களின் மனநிலை அப்போது இருந்த நிலையில் தனது பதவியையே இழக்க நேரிட்டிருக்கும். எப்படியிருப்பினும் அவர் புதிய சமுதாயத்தையும், மதஸ்தாபனத்தையும் உருவாக்கியவர் ஆவார். ஆண்டுகள் செல்லச்செல்ல இவர் உருவாக்கிய சமுதாயமும் மதஸ்தாபனமும் பிராடஸ்டன்டு மதத்தைச் சார்ந்ததாக மாறிக்கொண்டேவந்தது.

இங்கிலாந்தில் மதச் சீர்திருத்த இயக்கமானது. அரசியல், மதம், சமுதாயம் ஆகியவற்றை ஒட்டிய நிகழ்ச்சி எனலாம். இம் மூன்றும் சம்பந்தப்பட்ட நிகழ்ச்சியாக அவ் வியக்கம் இருப்பினும், இந் நூலில் சமுதாயம் எவ் விதத்தில் அவ் வியக்கத்திற்கும் காரணமாயிருந்தது, அவ் வியக்கத்தினால் சமுதாயம் எப்படிப் பாதிக்கப்

பட்டது என்பதைமட்டும் ஆராய்வோம். பாதிரியாரை எதிர்த்துத் தோன்றிய இயக்கம், சமுதாயத்தில் தோன்றிய ஒரு குறிப்பிடத் தக்க நிகழ்ச்சியாகும். இவ் வியக்கத்திற்குக் கற்றவரும், கல்லாது தாழ்ந்தநிலையில் இருந்தவரும் ஆதரவு கொடுத்தனர். அதனால் தான் பிராடஸ்டன்டு மதத்தினர் சிறுபான்மையோராக இருந்தும், போப்பின் அதிகாரத்தை எதிர்க்கவும், மடங்களை அழிக்கவும் முடிந்தது.

எராஸ்மசும், ஆக்ஸ்ஃபோர்டில் இருந்த அவர் நண்பர்களும் பாதிரியாருக்கு எதிராகக் கொண்டிருந்த கருத்துகளை எட்டாம் ஹென்றியானவர் தாம் கல்விகற்றபோது அறிந்துகொண்டார். மேற்குறிப்பிட்டவர்கள் மதத்தில் பற்றுடையவராகவும், மதக் கோட்பாட்டிலிருந்து வழுவாதவராகவும் இருந்துவந்தனர். ஆனால், ஒன்றும் அறியாத, மூடநம்பிக்கையில் மூழ்கியிருந்த மக்களிடமே இருந்து பாதிரியார்கள் பணம் பறித்ததை வெறுத் தனர். முக்கியமாக மடங்களில்வாழ்ந்த துறவிகளையும், ஊர் ஊராகத் திரிந்துவந்த துறவிகளையும் அவர்கள் வெறுத்தனர். இதற்குக் காரணம், இத் துறவிகள் மதச் சீர்திருத்த இயக்கத்தை எதிர்த்தனர். தத்துவப் படிப்பு ஒன்றையே ஆதரித்தனர்; மதத் தின் உண்மைக் கருத்துகளை அறிந்துகொள்வதற்குக் கிரேக்க மொழியில் இருந்த பைபிளை மக்கள் படிக்கவேண்டும் என்று எராஸ்மசும், கோலட்டும் (Colet) எடுத்துக் கூறியதை எதிர்த் தனர்.

எராஸ்மசின் சில நூல்கள், சில பாதிரியாரை எதிர்த்துக் கூறப் பட்ட தீவிரமான கருத்துகளை உடையனவாய் இருந்தன. 'பிரெய்ஸ் ஆஃப் ஃபாலி' (Praise of Folly) என்ற தம் நூலில், அர்த்தமற்ற சடங்குகளையும் விதிகளையும் மிக்க கவனத்துடன் துறவிகள் அனுசரித்துவந்ததை எடுத்துக்காட்டினர். மேலும், துறவிகள் இன்ப வாழ்க்கை நடத்திவந்தனர் என்றும், வயிறு புடைக்க உண்டுவந்தனர் என்றும் அவர் குறிப்பிட்டார். ஊர் ஊராகச் சுற்றிவந்த துறவிகளைப்பற்றி அவர் இழிவாகக் குறிப்பிட் டுள்ளார். 'அவர்கள் மதப்பிரசாரம் செய்வதைப் பார்த்தால் அவர்கள் கோமாளித்தனம் செய்பவரிடம் பாடம் கற்றிருக்க வேண்டும் என்று உறுதியாகக் கூறமுடியும்; நன்குக ஆராய்ந்து பார்த்தால் கோமாளித்தனம் செய்பவரே இத் துறவிகளைவிட மேலானவர் என்று தோன்றும்' என்று ஓர் இடத்தில் குறித் துள்ளார்.

ஐரோப்பா முழுவதிலும் அறிவில் சிறந்தவரும், பக்குவமாக எடுத்துக்கூறுவதில் தேர்ந்தவரும், மதச் சீர்திருத்தத்தைத் தீவிர

மாக்கிய லூதரைக் கண்டித்தவருமான எராஸ்மஸ் துறவிகளைப் பற்றியும், ஊர்ஊராகச் சுற்றிவந்த துறவிகளைப்பற்றியும் லத்தீன் மொழியில் இப்படி எழுதினுர் என்ருல், பாதிரியார்களுக்கு எதிர்ப்பு தெரிவித்த ஆங்கிலேய எழுத்தாளர்கள் எவ்விதம் அவ் வியக் கத்தை வளர்த்திருக்கவேண்டும் என்று ஊகிக்கலாம். அத்தகை யோர் எழுதியதை அச்சுக்கூடங்கள் விரைவில் பிரசுரித்து வெளி யிட்டன. அவ் வெழுத்தாளர்கள் மதஸ்தாபனத்திற்குச் சொந்த மான ஏராளமான சொத்தை அபகரித்துக்கொள்ளும் எண்ணத் தைப் பொதுமக்களின் மனத்தில் தூண்டிவிட்டனர். மதஸ்தா பனத்திடம் இருந்த மதிப்பு முன்னமேயே மக்களிடை குறைந்திருந் தமையும் இதற்கு வழிசெய்தது. உதாரணமாக, மடங்கள் அழிக் கப்படுவதற்குச் சில ஆண்டுகளுக்குமுன், சைமன் ஃபிஷ் (Simon Fish) என்பவர் 'தி சப்ளிகேஷன் ஆஃப் தி பெக்கர்ஸ்' (The Supplication of the Beggars) என்ற சிறு நூலை எழுதினுர். இந் நூலை, எட்டாம் ஹென்றியும் லண்டன் மாநகர மக்களும் படித்து மகிழ்ந்தனர். லண்டன் மாநகர மக்கள் வெளிப்படையாகவே தங்கள் மகிழ்ச்சியை வெளியிட்டனர். அரசனிடம் முறையிடுவது போல் எழுதப்பட்டிருந்த அந் நூலில் கீழ்க்கண்டவாறு குறிக்கப் பட்டிருந்தது.

'உங்கள் முன்ஞேர்களின் காலத்தில் திருட்டுத்தனமாக யாசிப்பவர்களும், நாடோடிகளுமான பிஷப்புகள், ஆபட்டுகள், துறவிகள், மதஸ்தாபனத்தைச் சேர்ந்த மற்றுமுள்ளவர்கள் ஆகியோர் இந் நாட்டிற்கு வந்துசேர்ந்தனர். இவர்களின் எண்ணிக்கை கணக்கிடமுடியாததாகும். இவர்கள் அனைவரும் எதிர்ப்பு இல்லாமல் பிச்சை எடுத்துத் தங்களிடம், நாட்டில் உள்ள நிலத்தில் மூன்றில் ஒரு பங்கிற்குமேல் வைத்துக்கொண்டிருக் கிருர்கள். சிறந்த பண்ணைகளும் நிலங்களும் அவருடையனவே. இதைத்தவிர, எந்தப் பொருளாக இருந்தாலும் அதில் பத்தில் ஒரு பங்கைப் பெறுகின்றனர். உதாரணமாக, ஆடு, கோழி, பன்றி முதலிய மிருகங்களில் பத்தில் ஒன்றும், தானியம், மேய்ச்சல் நிலம், கம்பளி ஆகியவற்றில் பத்தில் ஒரு பங்கும் பெறுகின்றனர். இங்ஙனம் பத்தில் ஒரு பங்கைப் பெறுவதில் மிகுந்த கவனம் உடையவர்களாக இருக்கின்றனர். ஒவ்வோர் இல்லாளும் சீராக அவர்களுக்குத் தங்களிடத்திலுள்ள பொருளைப்பற்றி கணக்குச் சொல்லவேண்டும்; இல்லையேல் ஈஸ்டர் பண்டிகையின்போது அவளது உரிமையைப் பெறமாட்டாள்; அல்லது மதக் கோட்பாட் டிற்கு முரணுன கருத்துடையவள் என்று எண்ணப்படுவாள். மதஸ்தாபன நீதிமன்றங்களின்முன் தோன்றவேண்டும் என்ற கட்டளையுடன்வரும் சம்மனர் (Summoner) என்ற அதிகாரி, மக்கள் பணம்கொடுத்தால் அவரை விட்டுச்செல்வார். இவ்

வழியில் அவர் ஓர் ஆண்டில் எவ்வளவு பணம் சேர்க்கிருர் என்று கூற இயலாது. ஒரு பெண் வேலைசெய்தால் ஒரு நாளைக்கெல்லாம் மூன்று பென்ஸ் சம்பாதிப்பாள். ஆனுல், எவள் ஒருத்தி பாதிரியாரின் மனித இச்சைகளுக்கு உடன்படுவாளோ அவள் ஒரு மணி நேரத்தில் 20 பென்ஸ் சம்பாதிப்பாள்.'

இதை எழுதியவர், அரசனின் நலத்திற்காகவும், நாட்டின் நலத்திற்காகவும், துறவிகள் வைத்திருந்த செல்வத்தை இழக்கச் செய்யவேண்டும் என்றும், மற்றவர்களைப்போல் அவர்களையும் உழைக்கச்செய்யவேண்டும் என்றும், பிறர் மனைவியர் கற்பழிக்கப் படாமல் இருக்கத் துறவியரை மணந்துகொள்ள அனுமதிக்க வேண்டும் என்றும் எண்ணியவராகத் தெரிகின்றது.

பல நூற்ருண்டுக்காலமாக நீக்கப்படாத குறைகளைப்பற்றி எடுத்துக்காட்டி, மக்களின் கோபத்தையும் ஆசையையும் தூண்டி விடக்கூடிய நூல்கள், உல்சியின் காலத்தில் லண்டன் நகரில் இருந்துவந்தன. அவர் பதவி இழந்தபிறகு இத்தகைய கருத்துகள் அரச அவையிலும் நிலவ ஆரம்பித்தன. அக் காலத்தில் அரச அவையினரும், லண்டன் நகரத்தினரும் ஒரு முடிவுக்கு வந்துவிட்டால், அக் காரியம் அனேகமாக முடிந்துவிடும் எனலாம். ஹென்றி செய்ய நினைத்த காரியங்களுக்குப் பாராளுமன்றம் எளிதில் அங்கீகாரம் தெரிவித்தநிலை, இத்தகைய கருத்துகள் நாடு முழுதும் நிலவியிருந்திருக்கவேண்டும் என்பதை எடுத்துக்காட்டுகின்றது. வடக்குப் பாகத்தில் இருந்த கவுன்டி என்ற பிரிவுகளில்மட்டும் இந் நிலை இருந்திருக்கமுடியாது ; ஏனென்ருல், அங்கே மதஸ்தாபனத் திடமும், மடங்களிடமும் மக்கள் அப்போதும் மதிப்பு வைத்திருந் தனர்.

மதஸ்தாபனத்திடம் மக்களுக்கு இருந்த வெறுப்பு புயலைப் போல் உருவெடுத்தது. அப் புயலை அரசன் தன் காரியங்களுக்குப் பயன்படுத்திக்கொண்டான். அப்படி அவன் செய்தபோது பாதிரியார்கள் எந்த நிலையில் இருந்தனர் என்ற கேள்வி எழலாம். அவர்கள் பணிந்துபோவதோ அல்லது எதிர்ப்பதோ இங்கிலாந்தின் வருங்காலச் சமுதாய வளர்ச்சியைச் சார்ந்த ஒரு முக்கிய நிகழ்ச்சியாக இருந்தது. பாதிரியார்களான பிஷப்புகள், துறவிகள் ஆகியோர் இடைக்கால மதஸ்தாபனத்தின் உரிமைகளை விட்டுக் கொடுக்காமலும் போப்பின் அதிகாரத்தைத் தொடர்ந்து ஆதரிப்ப வராகவும் இருந்திருந்தால், அவர்களைப் பணியச் செய்திருக்க முடியாது. அப்படி அவர்கள் இருந்திருந்தால் ஒரு பெரிய சச்சரவு ஏற்பட்டு நாட்டின் ஒற்றுமையே குலைந்துபோயிருக்கும். ஆனுல், பாதிரியார்கள், அரசனும் மக்களும் ஒன்று சேர்ந்து தங்களை எதிர்ப்

பதைக் கண்டு பயந்துவிட்டனர். மேலும், அவர்கள் தங்களுக்குள் ஒருவித முடிவிற்கும் வர இயலாதவராய் இருந்தனர். அனேக பாதிரியார்கள் பொதுமக்களுடன் தினந்தோறும் நெருங்கிய தொடர்புள்ளவர்களாக இருந்ததால், அவர்கள் மக்களின் மன நிலையை நன்கு அறிந்திருந்தனர். இன்று ரோமன் கத்தோலிக்க மதப் பாதிரியார்களிடையே காணப்படும் கட்டுப்பாடும், மக்களிடத்திருந்து தனித்து வாழும் பண்பும், அக் காலத்து ஆங்கிலேயப் பாதிரியாரிடையே காணப்படவில்லை.

உதாரணமாக பிஷப்புகள், அரசரின் பிரதிநிதிகளாகவும், அதிகாரிகளாகவும் இருந்துவந்தனர். பாரிஷ் என்ற பிரிவுகளில் இருந்த பாதிரியார்கள், இதைப்போலவே பிரபுக்கள், இடைநிலை வகுப்பினர் ஆகியோரின் வியாபாரத்தைக் கவனிப்பவராகவும், அவரது நம்பத்தகுந்த பிரதிநிதிகளாகவும் இருந்துவந்தனர். தங்கள் சொத்துகளைக் கவனிப்பதற்காகத் துறவிகள் பொது மக்களை நியமிக்கும் வழக்கம் உடையவர்களாய் இருந்து வந்தனர். மேலும், தங்களை ஆதரித்தவரின் விருப்பத்திற்கு இணங்கியும் நடந்துவந்தனர். நன்கொடை கொடுத்து ஆதரிப்பவரோ அல்லது அவரது உறவினரோ அனேகமாக மடங்களிலேயே வாழ்ந்து வந்ததால், துறவிகள் அவர்களின் விருப்பத்திற்கு இணங்கி நடக்க வேண்டியிருந்தது.

இதனுல் பாதிரியார்களும் துறவிகளும் ஒன்றுசேர்ந்து பொது மக்களின் எதிர்ப்பைத் தகர்க்க முடியாதவராய் இருந்தனர். பிஷப்புகளும், பாரிஷைச்சார்ந்த பாதிரியார்களும், பல நூற்ருண்டுக் காலமாகத் துறவிகளை வெறுத்துவந்தனர். அத்துடன் இங்கிலாந்தின் மதஸ்தாபனத்தைத் தன்னலனுக்காகப் பயன்படுத்தி வந்த போப்பின் அதிகாரத்தையும் பாதிரியார்கள் வெறுத்து வந்தனர். உல்சி, போப்பின் பிரதிநிதி என்ற வகையில் பிஷப்புகளின் உரிமைகளுக்கும், அதிகாரத்திற்கும் மதிப்புக் கொடுக்காமல் நடந்துகொண்டார். உல்சி பதவி இழக்குமுன் பாதிரியார்கள் போப்பின் அதிகாரத்தின்கீழ் இருப்பதைவிட, அரசனின் அதிகாரத்தின்கீழ் இருப்பதே மேல் என நினைத்தனர். அப்படிச் செய்வதைத் தவிர வேறு வழியில்லை என்றும் நினைக்கத் தொடங்கினர். உல்சியின் வாழ்க்கை வரலாற்றை எழுதியவர், 'அவர் முரட்டுத்தனமாக நடந்துகொண்டதாகவும், போப்பின் அதிகாரத்தை இங்கிலாந்தில் வேண்டிய அளவு உபயோகித்து, அதனுல் அதற்கு ஒரு முடிவு ஏற்பட வழிசெய்தார்' என்றும் குறிப்பிட்டுள்ளார்.[1]

[1] பேராசிரியர் போலார்டு (Professor Pollard) மேலும் உல்சி என்ற நூலில்' 369-370 பக்கங்களில் கீழ்க் குறித்தவாறு எழுதியுள்ளார்.

'உல்சிக்கும் எட்டாம் ஹென்றிக்கும் இருந்த வேற்றுமை என்னவென்ருல், உல்சி, போப்பின் அதிகாரத்தை ஆதரித்தார்; அரசர் தன் அதிகாரத்தில்

எராஸ்மஸ், லூதர் ஆகியோரின் சீர்திருத்தக் கொள்கைகளைப் பாதிரியார்களில் பலர் உள்ளூர ஆதரித்தனர். சில பாதிரியார்கள் வெளிப்படையாக அக் கொள்கைகளை ஆதரித்தும், பிரசாரம் செய்தும் வந்தனர். இந் நிலை இல்லாமலிருந்தால் இங்கிலாந்தில் மதச் சீர்திருத்தமே ஏற்பட்டிருக்காது. அதற்குப் பதிலாக, ஃபிஷ் என்பார், ' சப்ளிகேஷன் ஆஃப் தி பெக்கர்ஸ் (Supplication of the Beggars) என்ற நூலில் எதிர்பார்த்ததைப்போலவும், மதச் சீர்த் திருத்தத்தை ஏற்றுக்கொள்ளாத மற்ற நாடுகளில் நடந்ததைப் போலவும் பாதிரியார்களின் உரிமைகளை எதிர்த்து முரட்டுத்தன மான சச்சரவுகள் இங்கிலாந்தில் நிகழ்ந்திருக்கும்.

ஆங்கிலேயப் பாதிரியார்களின் உள்ளத்திலே பலவித கருத்துக் கள் இடம்பெற்றிருந்தன. ஏழாம் ஹென்றியின் காலத்தில் ஆக்ஸ்ஃபோர்டு சர்வகலாசாலையில் இருந்தோர் எராஸ்மசின் (Erasmus) கருத்துகளை ஏற்றுக்கொண்டதுபோல், எட்டாம் ஹென்றியின் காலத்தில், கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலையைச்சார்ந்த கிரான்மர் (Cranmer), லாடிமர் (Latimer), டின்டேல் (Tyndale) கவர்டேல் (Coverdale) ஆகியோர் லூதரின் கருத்துகளை ஏற்றுக் கொண்டிருந்தனர். லூதரை முழுவதும் பின்பற்றுபவராக இல்லாம லேயே இங்கிலாந்தில் இருந்த அநேக பாதிரியார்கள் தங்க ளிடையே இருந்த குறைகளை நீக்கவேண்டும் என்று எண்ணினர். மதஸ்தாபனத்தின் உரிமைகள் யாவற்றிலும் பற்றுக்கொண்டவ ராகவும் அவர்கள் இருக்கவில்லை. மடங்கள் அழிக்கப்பட்டபின், ஆறும் எட்வர்டின் (Edward VI) காலத்தில் பல துறவிகள் பிராடஸ்டன்டு மதப் பாதிரியார்களாக மாறினர். இவர்கள் அனைவரையும் பிராடஸ்டன்டு மதத்தில் உண்மையான ஈடுபாடு அல்லாதவர் என்று கூறுவதற்கில்லை.

பாதிரியார்களின் கருத்துகளும் மக்களின் கருத்துகளும் மாறிக்கொண்டே இருந்தன. மக்கள் சீர்திருத்தத்தை விரும்புபவர், விரும்பாதவர் என இரு கட்சியினராகப் பிரிந்திருக்கவில்லை. அதனுல் அரசரின் பரந்த நோக்கங்கள் நிலவ வழிதோன்றியது.

---

நம்பிக்கை கொண்டவராய் இருந்தார். இவ் வேற்றுமையே, ரோமன் மத ஸ்தாபனத்தை, ஆங்கிலேய மதஸ்தாபனத்திலிருந்து பிரித்துக் காட்டு கின்றது. ஒன்றில் பாதிரியாரின் அதிகாரமும், மற்ருென்றில் அரசனின் அதிகாரமும் தலைதூக்கி நின்றன. உல்சி, மதஸ்தாபனத்தின் எதேச்சாதி காரத்தை நிலைநிறுத்த முற்பட்டார். நாட்டில் தன்னுரிமைகளைத் தாமே நிச்சயித்துக்கொள்ளும் எண்ணம் பரவி வளர்ந்துகொண்டிருந்தநாளில் உல்சி, போப்பின் அதிகாரத்தை நிலைநிறுத்த முயன்ருர். ஹென்றி மதஸ்தாபனத் தைத் தன் அதிகாரத்தின்கீழ்க் கொண்டுவந்து, போப்பின் எதேச்சாதிகாரத்தி லிருந்து நாட்டை விடுவித்தார். மதஸ்தாபனம் அவர் அரசாட்சியின்கீழ் வந்ததும், மக்களிடையே காணப்படும் கருத்து வேற்றுமை, மதஸ்தாபனத்தைப் பாதிக்கத் தலைப்பட்டது

அரசர் போப்பின் அதிகாரத்தை நிராகரிக்கவும், மடங்களை அழிக்கவும் மேற்கொண்டபோது, அருள் யாத்திரை (Pilgrimage of Grace, 1536) என்று அழைக்கப்பட்ட எதிர்ப்பு இயக்கம் வடக்குப் பாகத்தில் தோன்றியது. முற்போக்குக் கொள்கையில் நம்பிக்கையில்லாத நார்ஃபோக் (Norfolk) ஷுருஸ்பரி (Shrewsbury) போன்ற பிரபுக்களும், கார்டினர் (Gardiner), போனர் (Bonner) போன்ற பிஷப்புகளும் அப்போது அவ் வியக்கத்தை அடக்க அரசருக்கு உதவினர். மேற்கூறியோரும் ஹென்றியும் லூதரின் கொள்கைகளைப் பின்பற்றியவரைச் சுட்டுப்பொசுக்கும் எண்ணம் உடையவராய் இருந்தனர்.[1] எராஸ்மசின் நண்பர்களும் இலக்கிய மறுமலர்ச்சியின் இரு கண்கள் போன்றோருமான மூர் (More), ஃபிஷர் (Fisher) ஆகிய இருவரும் போப்பின் அதிகாரத்தை ஆதரித்தனர். மதஸ்தாபனத்தை அரசரின் கட்டுப்பாட்டின்கீழ்க் கொண்டுவருவதை எதிர்த்தனர். இதற்காக அவ் விருவரும் தண்டிக்கப்பட்டு உயிர் இழந்தனர்.

மதம், வாழ்க்கை, சமுதாயம் ஆகியவற்றைப்பற்றி எராஸ்மசும் அவருடைய ஆங்கிலேய நண்பர்களும் செய்த பிரசாரத்தின் விளைவாகத் துறவிகளின் குழுக்கள் கலைக்கப்பட்டன. அரச அவையிலும் சர்வகலாசாலைகளிலும், கிரேக்க ரோமானிய இலக்கியங்களையும், பைபிளையும் நன்கு கற்றறிந்தோர் அநேகர் இருந்தனர். அவர்கள் துறவிகளை மதச் சீர்திருத்தத்தை எதிர்ப்பவர் என்று கருதினர். வெகுகாலத்திற்குமுன் சிறந்ததெனக் கருதப்பட்ட துறவியின் வாழ்க்கை, அப்போது அப்படிக் கருதப்படவுமில்லை; அவ் வித வாழ்க்கையைத் துறவிகளும் அனுசரிக்கவில்லை. இதனால் அதிகப் பொருள் செலவிட்டு மடங்களை ஏன் தொடர்ந்து நடத்தவேண்டும் என்ற வினா எழுந்தது.

லண்டன் போன்ற நகர்களில் வாழ்ந்தோர் இவ் வினாவிற்கு விடையளித்தனர். சுயநலத்திற்காகச் சிலர் மடங்கள் அழிக்கப்படவேண்டும் என்று வற்புறுத்தினர். லாடிமர் (Latimer) போன்ற சீர்திருத்தத்தை விரும்பிய பாதிரியார்கள் மடங்களுக்குச் சொந்தமான சொத்துக்கள், மடங்கள் அழிக்கப்பட்ட பின் கல்விக்காகவும், மதத்திற்காகவும் உபயோகப்படுத்தப்படும் என்று நினைத்தனர் அதனால் மடங்கள் அழிக்கப்படுவதை ஆதரித்தனர். ஆனால்

[1] கார்ன்வால் பிரதேசத்தில் இருந்த மடங்களை அழிக்கும் வேலையில் சம்பந்தப்பட்டவர்களில் ஒருவரும் பிராடஸ்டென்ட் மதத்தைச் சார்ந்தவர் அல்லர். உதாரணமாக சர் தாமஸ் அருண்டேல், சர் ஜான் டிரகான்வெல் பிரிடாக்ஸ், பிரயர் பதவியில் இருந்த மண்டி என்பார் அனைவரும் பிராடஸ்டென்ட் மதத்தவரல்லர். இவர்கள் அனைவரும் கத்தோலிக்க மதத்தை ஆதரித்தவர். ரவுசி என்பாரின் டியூடர் கார்னவால், (Rowse's Tudor Cornwall) என்ற நூலில், பக்கம் 222-ஐப் பார்க்க.

இவர்கள் மிகுந்த ஏமாற்றமடைந்தனர். மடங்களின் அருகில் வாழ்ந்து வந்தவர்களும், மடங்களுக்கு ஆதரவு அளித்து வந்தவர்களும், மடங்கள் அழிக்கப்பட்டால், மடங்களுக்குச் சொந்தமான சொத்துகளைக் குறைந்த விலைக்கு வாங்கிக்கொள்ளலாம் என்ற எண்ணத்தில் மடங்கள் அழிக்கப்படுவதை ஆதரித்தனர். இவர்கள் மேற்குறிப்பிட்ட பாதிரியார்களைப்போல் அவ்வளவு ஏமாற்றம் அடையவில்லை. இன்பவாழ்க்கையிலும், ஃபிரான்சுடன் நடத்திய போரினாலும் காலியாகிவிட்டிருந்த தன் கஜானாவை, அரசன் மடங்களை அழித்து நிரப்பிக்கொள்ளலாம் என்று நினைத்தான். காமன்ஸ் சபையினர் தங்கள் வட்டாரத்தின்மீது வரிசுமத்தப்படுவதிலிருந்து தப்பிக்க, மடங்களின் சொத்தையெல்லாம் அரசாங்கம் அபகரித்துக்கொள்ளும் சட்டத்திற்கு அங்கீகாரம் கொடுத்தனர்.

அக் காலத்தில் வாழ்ந்த ஆங்கிலேயர், தீவிரமாக வரிகொடுக்க மறுத்தனர். பார்லிமெண்ட் புதிய வரிக்குச் சம்மதம் கொடுத்தாலும், வரிவிதிப்பு நாட்டின் எப் பாகத்திலாவது கலகத்தை விளைவித்தது. இத்தகைய கலகங்களை ஒடுக்குவதற்குப் போதுமான படையை டியூடர் வம்சத்தினர் வைத்திருக்கவில்லை. இவை காரணமாக, ஹென்றி தம் அரசாட்சிக் காலத்தின் இறுதியில் பணமுடையைச் சமாளிக்க இரு வழிகளைக் கையாளத் தலைப்பட்டார்; மடங்களின் சொத்தை அபகரிப்பதும், நாணயத்தின் மதிப்பைக் குறைப்பதும் அவர் மேற்கொண்ட இரு வழிகளாகும். ஹென்றியின் கொள்கைகள், சமுதாயத்தில் முக்கியமான விளைவுகளை ஏற்படுத்தின.

மிகக் குறுகிய காலத்திற்குள்ளாகவே, மடங்களுக்குச் சொந்தமான நிலங்களை விற்பதன்மூலம் அரசரின் கஜானா நிரப்பப்பட்டது. ஹென்றிக்குப் பணமுடை ஏற்பட்டிராவிட்டால், மடங்களை அவர் அழித்தே இருக்கமாட்டார். அப்படியே, மடங்களுக்குச் சொந்தமான நிலங்களையும், வருமானத்தில் பத்தில் ஒரு பங்கை மதஸ்தாபனம் பெற்றுவந்ததையும் தமக்காகவே வைத்துக்கொண்டிருந்திருப்பார்; அப்படிச் செய்திருந்தால் தமக்குப்பின் இங்கிலாந்தில் ஏதேச்சாதிகாரம் ஏற்பட வழி செய்திருப்பார். தவிர, தாம் முதலில் நினைத்ததுபோல் கல்விக்காகவும் ஏழைகளுக்காகவும் மடங்களின் செல்வத்தை அதிகமான அளவிற்கு உபயோகப்படுத்தியிருப்பார். கேம்பிரிட்ஜில் டிரினிட்டி (Trinity) கல்லூரியை, மற்றக் கல்லூரிகளைவிடப் பெரிய அளவில் துவக்கி வைத்தார். இப்படி அவர் செய்தபோது, அவர் உல்சி காட்டிய வழியைப் பின்பற்றினார் என்று நினைக்க இடமுண்டு. சிறிது காலத்திற்கு முன்தான், மடங்களிலிருந்து கொண்ட செல்வத்தைக்கொண்டு, ஆக்ஸ்ஃபோர்டில், கார்டினல் கல்லூரியை

உல்சி திறந்து வைத்திருந்தார். மடங்களின் செல்வத்தையும், மக்களின் வருமானத்திலிருந்து பெற்ற பத்தில் ஒரு பங்கையும் வேறு,வழியில் செலவிட ஏற்கெனவே உல்சி வழிகாட்டியிருந்தார். எனவே, ஹென்றி அப்படிச் செய்ததற்கு மதச்சீர்திருத்தம்தான் காரணம் என்று கூற இயலாது. அரசனுக்கு அக் காலத்தில் இருந்த வசதிகளை நோக்குங்கால், மக்களுக்கு நன்மை பயக்கும் வழியில் மிகக் குறைந்த தொகையே அவர் செலவழித்தார் என்று கூறலாம். மடங்களில் இருந்து, கொண்ட செல்வத்தின் ஒரு பகுதியைத் துறைமுகங்களையும், கப்பற் படைத் தளங்களையும் பாதுகாக்க மதில்களைக் கட்டுவதில் செலவழித்தார்.

மடங்களில் இருந்து கொண்ட நிலத்தின் பெரும் பகுதியையும், வருமானத்தில் பத்தில் ஒரு பங்கை வசூலிக்கும் உரிமையையும் சிலர் கருதியதுபோல ஹென்றி தம் சபையோருக்குப் பரிசாகப் பங்கிட்டுக் கொடுக்கவில்லை. பெரும்பாகத்தை அவர் விற்று விட்டார்.[1] பணமுடையின் காரணமாகவே அவர் விற்க நேரிட்டது. பணமுடை இல்லாதிருந்தால், நிலத்தின் பெரும் பகுதியைத் தமக்கே வைத்துக்கொண்டிருப்பார். அரசனிடமிருந்து அந் நிலங்களை வாங்கிய சில வியாபாரிகள் பின்பு அதிக லாபத்திற்கு அந் நிலங்களைப் பொதுமக்களுக்கு விற்றனர். பிற்காலத்தில் அந் நிலங்களுக்குக் கொடுத்த விலையானது, மிகக் குறைவானது எனக் கூறலாம். ஆகையால் நிலத்தை வாங்கிய பொதுமக்களே, மடங்களை அழித்ததால் உண்மையில் பயனடைந்தனர் எனக் கூறலாம். மதம், கல்வி முதலியனவும், ஏழைகள், அரசன் ஆகியோரும் உண்மையில் மடங்கள் அழிக்கப்பட்டதால் பயனடையவில்லை. சமுதாயத்திலும், பயிர்த் தொழிலிலும் ஏற்பட்டுக் கொண்டிருந்த மாறுதல்களை விளக்கும்போது அந் நிலங்களை வாங்கிப் பயனடைந்தவர்களைப்பற்றி மேலும் காண்போம்.

பல தலைமுறைக் காலத்திற்கு, மடங்களுக்குச் சொந்தமான நிலங்களும்,வருமானத்தில் பத்தில் ஒரு பங்கைப் பெறும் உரிமையும் அரசனிடமே இருந்து வந்தது. ஆனால், பணமுடை காரணமாக, எலிசபெத் ராணியாரும் (Queen Elizabeth), ஜேம்ஸ் I (James I) முதலாம் சார்லஸ் (Charles I) அரசர்களும் சிறிது சிறிதாக நிலங்களை விற்றுவந்தனர்.

டர்ஹாம், நார்த்தம்பர்லண்டு ஆகிய இடங்களில் இருந்த நிலக்கரிச் சுரங்கங்கள், மதஸ்தாபனத்திற்குச் சொந்தமாயிருந்தன.

[1] எச். ஏ. எல் ஃபிஷ்ஷர் எழுதிய இங்கிலாந்தின் அரசியல் வரலாற்றின் 5ஆம் பாகத்தில் இரண்டு பின்னிணைப்புகளை 497-499 பக்கங்களில் பார்க்கவும். (H.A.L Fisher's Vol. V of the Political History of England-table of Disposition of Monastic Lands, pp. 497-499)

ஆனுல், எட்டாம் ஹென்றி அவை ஒரு நல்ல குடும்பத்தினரின் கைகளுக்கு மாற வழிசெய்தார். ஸ்டுவர்ட் வம்சத்தினரின் காலத்தில் இக் குடும்பத்தினர், இச் சுரங்கங்களை அபிவிருத்திசெய்து மிக்க செல்வராயினர். இக் குடும்பத்தினரின் சந்ததியார், நிலக்கரி வியாபாரத்திஞலேயே பிரபுக்களின் நிலையை அடைந்தனர். மதஸ்தாபனத்திடமிருந்து இப்படி நிலக்கரிச் சுரங்கங்கள் அபகரிக்கப்பட்ட பிறகும், மதஸ்தாபனம் சிறிய அளவில் நிலக்கரிச் சுரங்கம் உடையதாய் இருந்தது. சில ஆண்டுகளுக்கு முன்புகூட, மதஸ்தாபனத்தைச் சார்ந்த 'எக்லஸ்ஸியாஸ்டிகல் கமிஷன்' (Ecclesiastical Commission) என்ற குழு, அச் சிறிய நிலக்கரிச் சுரங்கத்திலிருந்து வருடத்திற்கு 4,00,000 பவுன் வருமானம் பெற்று வந்தது. இந்த வருமானம் அரசருக்கு நிலக்கரிச் சுரங்கங்களில் இருந்து கிடைக்கும் வருமானத்தில் ஏழில் ஒருபங்காகும். [நெஃப் என்பவர் எழுதிய, 'ரைஸ் ஆஃப் தி பிரிட்டிஷ் கோல் இன்டஸ்டிரி' என்ற நூலின் முதல் பாகத்தில், பக்கங்கள் 134-135. (Nef, 'Rise of the British Coal Industry,' I, pp. 134-135)].

செயின்ட் ஆல்பன்ஸ், பியூரி செயின்ட் எட்மண்ட்ஸ் போன்ற நகரங்களில் வாழ்ந்துவந்த மக்களும் மடங்கள் அழிக்கப்பட்டதால் பயனடைந்தனர். பல நூற்றுண்டுக் காலமாக மடங்களின் ஆதிக்கத்தை எதிர்த்துப் போராடிவந்த அந் நகரங்கள், மடங்களின் ஆதிக்கத்திலிருந்து விடுபட்டன. இதற்குமாறுக, சில நகரங்களும், நாட்டின் சில பகுதிகளும், அவ் விடங்களிலிருந்த சில பெரிய மடங்கள் அழிக்கப்பட்டதால், தங்கள் முக்கியத்துவத்தையும் செல்வத்தையும் இழந்தன. இந் நகரங்கள் மடங்களுக்கு வேண்டிய பொருள்களை விற்றுவந்தன. அவ் வியாபாரம் மடங்கள் அழிக்கப்பட்டதால் மறைந்தது. அத்துடன் சில மடங்கள் யாத்திரை ஸ்தலங்களாக இருந்தன. அத்தகைய மடங்கள் அழிக்கப்பட்டபின், அம் மடங்கள் இருந்துவந்த நகரங்கள், யாத்திரை ஸ்தலங்களாக இருந்து பெற்றுவந்த பயனை இழந்துவிட்டன. இந் நகரங்கள், மடங்கள் அழிக்கப்பட்டதால் ஏற்பட்ட நஷ்டத்தைக் கைத்தொழிலாலோ அல்லது வியாபாரத்தாலோ ஈடு செய்து கொள்ள முடியாத நிலையில் இருந்தன. மடங்கள் அழிக்கப்பட்ட போது, மடங்களில் இருந்த நூல் நிலையங்களும் அழிக்கப்பட்டதால் இலக்கியமும், கல்வியறிவும் மிகவும் பாதிக்கப்பட்டன.

சொற்ப காலத்திற்குமுன், ஆராய்ச்சியினுல் கண்டுபிடிக்கப்பட்ட உண்மைகள் வெளியாவதற்குமுன் மடங்கள் அழிக்கப்பட்டதால், துறவிகள் மிகவும் பாதிக்கப்பட்டிருப்பார்கள் என்று நினைக்கப்பட்டுவந்தது. ஆனுல், அவர்கள் அந்த அளவுக்குப் பாதிக்கப்பட

வில்லை.[1] துறவிகளுக்குப் போதுமான உபகாரச் சம்பளம் கொடுக்கப்பட்டுவந்தது. பலர் பாதிரியார்களாகவும், பிஷப்புகளாகவும் வேலையில் அமர்ந்தனர். ஹென்றி, எட்வர்ட், மேரி, எலிசபெத் ஆகியோரின் ஆட்சிக் காலத்தில் இத் துறவிகள் மதஸ்தாபனத்தில் வேலைக்கமர்ந்தனர். மேற்கூறியோரின் ஆட்சிக் காலத்தில் பிராடஸ்டென்டு மதமும் கத்தோலிக்க மதமும் மாறிமாறி அரசாங்கத்தால் ஆதரிக்கப்பட்டுவந்ததால், இத் துறவிகளும் மற்றப் பாதிரியார்களைப்போலவே, தங்கள் கருத்துகளைக் காலத்திற்கேற்றவாறு மாற்றிக்கொண்டனர். ஒரு சில மடங்களின் தலைவர்களும், துறவிகளும் மடங்கள் கலைக்கப்படுவதை எதிர்த்து, அரசனால் கருணையின்றி மரண தண்டனை விதிக்கப்பட்டு உயிர் இழந்தனர். துறவிகளில் பெரும்பான்மையோர் மதஸ்தாபனத்தில் ஏற்பட்ட மாறுதல்களை ஏற்றுக்கொண்டனர். அப்படி மாறுதல்களை ஏற்றுக்கொண்டால் உலகிலே நல்வாழ்வு வாழ வழி ஏற்படும் என்று பல துறவிகள் நினைத்தனர். அதனால் அவர்கள் ஹென்றி கொண்டுவந்த மாற்றங்களை எதிர்ப்பதற்காக எந்தக் கட்சியையும் ஏற்படுத்தவில்லை. பண்ணைமுறை ஆட்சிநிலை, தொடர்ந்து நிலவிவந்த வடக்குப் பாகத்தில்தான் அரசனுக்கு எதிர்ப்பு இருந்தது.

பாரிஷ் பிரிவுகளின் பாதிரியார்களுக்குப் போட்டியாக இருந்துவந்த ஊர் ஊராகச் சுற்றிவந்த துறவிகளும் மறைந்தனர். மடங்கள் அழிந்தபின், மக்களுக்குப் பழக்கப்பட்ட கருப்பு, பழுப்புநிற ஆடைகளை அணிந்த டாமினீகன் (Dominican), ஃபிரான்சிஸ்கான் (Franciscan) துறவிகள் இங்கிலாந்தின் வீதிகளில் காணப்படவில்லை. அவர்கள் செய்துவந்த பணிகளை ஊர் ஊராகச் சுற்றிவந்த பிராடஸ்டென்ட் பிரசாரகர்கள் மேற்கொண்டனர். இவர்கள் சில சமயம் மதஸ்தாபனத்தை எதிர்த்தும் பிரசாரம் செய்துவந்தனர். மேரி, எலிசபெத் ஆகியோரின் ஆட்சிக்காலத்தில், வடக்கு எல்லையில் இருந்த கவுன்டி என்ற பிரிவுகளில், பெர்னார்ட் கில்பின் (Bernard Gilpin) என்பார் ஊர் ஊராகச் சென்று பிரசாரம் செய்துவந்தார். பெர்னார்ட் கில்பினின் வாழ்க்கை, முற்காலத்தில் ஊர் ஊராகச் சுற்றிவந்த துறவிகளின் வாழ்க்கையை எடுத்துக் காட்டுவதுடன், பிற்காலத்தில் வெஸ்லி (Wesley) என்பார் பிரசாரம் செய்ததையும் முன்கூட்டியே எடுத்துக்காட்டியது என்று கூறலாம்.

[1] ஜி. பாஸ்கர் வில்லி எழுதிய 'தி இங்கிலீஷ் மாங்ஸ் அண்டு தி சப்ரஷன் ஆஃப் தி மானஸ்டரீஸ்' நூலைப் பார்க்கவும். G. Baskerwille's 'The English monks and the Suppression of the Monasteries, 1938.) ரவுசி எழுதிய டியூடர் கார்ன்வால் என்ற நூலில் அத்தியாயங்கள் 8, 9-ஐப் பார்க்கவும். (Rowse's Tudor Cornwall, 1941, chaps. VIII-IX.)

5,000 மடங்களில் இருந்த துறவிகள், ஊர் ஊராகச் சுற்றி வந்த 1,600 துறவிகள், 2,000 கன்னிமாடத்திலிருந்த பெண்கள் ஆகியோர் உபகாரச் சம்பளம் கொடுக்கப்பட்டனர். கன்னி மாடங்கள் அழிக்கப்பட்டதால் சமுதாயத்தில் எத்தகைய மாறுதலும் ஏற்படவில்லை. கன்னிமாடங்கள், மடங்களைப்போல் அவ்வளவு செல்வம் படைத்தவையாக இருக்கவில்லை. கன்னிப் பெண்கள், ஊர் ஊராகச் சுற்றிவந்த துறவிகள் செய்துவந்த தொண்டுகளைச் செய்தார் இல்லை. அக்காலத்துக் கன்னிப் பெண்கள் நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவராயிருந்தனர். அவர்களைத் திருமணம் செய்துகொடுக்கமுடியாமல்போகவே, கன்னி மாடங்களில் உறவினர்கள் அவர்களைச் சேர்த்தனர். கன்னி மாடங்கள் சமுதாயத்தில் சிறந்த பணியேதும் செய்யவில்லை.[1]

மடங்கள் அழிக்கப்பட்டதால் மடங்களுக்குச் சொந்தமான நிலங்களைப் பயிர்செய்து வந்தவர்களும், மடங்களில் பணியாற்றி வந்தவரும், ஏழைகளும் எந்த அளவுக்குப் பாதிக்கப்பட்டனர் என்பது சிந்தனைக்குரிய விஷயமாகும்.

துறவிகள், மற்ற நிலச்சுவாந்தார்களைப்போல் நிலத்தைக் குத்தகைக்கு எடுத்துக்கொண்ட குடியானவரிடம் அதிகமான குத்தகைப்பணத்தை எதிர்பார்க்கவில்லை என்று கூறுதற்குச் சிறிதேனும் இடமில்லை. 1517-ல் தொகுக்கப்பட்ட 'டூம்ஸ்டே ஆஃப் என்கிலோஷர்ஸ்' (Domesday of Enclosures) என்ற விவரப் பட்டியலில், குத்தகைப்பணம் கொடுக்காததற்காகக் குடியானவர்கள் பயிர்செய்துவந்த நிலத்திலிருந்து விரட்டப்படும் வழக்கத்தைத் துறவிகளும் கையாண்டனர் என்பது தெரியவருகின்றது. சாதாரணமாக, மதஸ்தாபனத்தைச் சேர்ந்தவர்கள் தாங்கள் குத்தகைக்கு எடுத்துக்கொண்ட நிலங்களுக்குக் குறைவான குத்தகைப் பணம் கொடுத்தாலும், தாங்கள் குத்தகைக்குவிட்ட நிலங்களுக்கு அதிகப்படியான குத்தகைப் பணத்தை வசூலித்தனர். (லீடாம் எழுதிய 'டூம்ஸ்டே ஆஃப் என்கிலோஷர்ஸ்' என்ற நூலில் பக்கங்கள் 48, 65; R. H. S. Domesday of Enclosures, Leadam, pp. 48, 65.) சர் தாமஸ் மூர் (Sir Thomas More) என்பார், விளை நிலங்களை மேய்ச்சல் நிலங்களாக மடங்கள் மாற்றி அமைத்தன என்று குற்றம் சாட்டியுள்ளார். மற்றும் பலர், மடங்கள் நிலங்களுக்கு வேலியிட்டு அதிகக் குத்தகைப்பணம் வசூலித்தன என்று குறித்துள்ளனர்.

[1] பதினைந்தாம் நூற்றுண்டில் வாழ்ந்த கன்னிமார்களைப்பற்றி ஐலீன் பவர் எழுதிய, 'மிடீவல் இங்கிலீஷ் நன்னெரீஸ்' என்ற நூலைப் பார்க்கவும். (Eileen Power's Mediaeval English Nunneries.)

'மடங்கள் எப்படி நிலங்களைக் குத்தகைக்கு விடுகின்றன? அவை ஒரு புதிய வழியைக் கண்டுபிடித்துள்ளன. பலபண்ணைகளை ஒருவருக்கே குத்தகைக்குக் கொடுத்தன. அப் பண்ணைகளில் ஒன்று அல்லது இரண்டு செல்வம்படைத்த குடியானவர்கள் பயிர் செய்தனர். பலர் அப் பண்ணைகளைப் பயிர்செய்து பிழைப்பதற்குப் பதிலாக, இச் சிலரே அத்தனை பண்ணைகளையும், பயிர் செய்து மிக்க வருமானத்தை அடைந்தனர். மற்றவர்கள் ஒரு பண்ணைக்கு 20 பவுன் குத்தகைப் பணம் கேட்டால், மடங்கள், 30 பவுனுக்குக் குறைவாகக் குத்தகைக்கு விட மறுத்தன.'

(1527-1528, டானி, பவர் என்ற இருவர் எழுதியுள்ள "டியூடர் இகெனுமிக் டாகுமென்ட்ஸ்', என்ற நூலில் பக்கங்கள் 20-21. Tawney and Power, 'Tudor Economic Documents, III', pp. 20-21).

துறவிகள், தங்கள் நிலங்களைத் தாங்களே கண்காணிக்காமல், அவற்றைக் கண்காணிப்பதைச் சாதாரண மக்களின் கைகளில் விட்டிருந்தனர். மடத்திற்குச் சொந்தமான நிலங்களைப் பிரபுக்களும், இடைநிலை வகுப்பினரும், சிறிய நிலக்கிழார்களும் முதலில் குத்தகைக்கு எடுத்துக்கொண்டனர். பிறகு, அந் நிலங்களை அவர்கள் குடியானவர்களுக்குக் குத்தகைக்கு விட்டனர். குத்தகைக்கு எடுத்துக்கொண்ட பிரபுக்களும், மற்றவரும், லாபகரமாக இருந்தால் நிலங்களுக்கு வேலியமைத்தனர்; நிலத்திற்கு ஒருவகைப் பத்திரத்தின்மூலம் சொந்தம் கொண்டாடியவர்களை, குத்தகைக்காரர் நிலைக்கு மாற்றினர்; விலைவாசிகள் அதிகரித்தாலும், நிலங்களின் மதிப்பு அதிகரித்தாலும் குத்தகைப் பணத்தை அதிகரித்தனர். மடங்கள் அழிக்கப்பட்டபின்னும் மடத்தின் நிலங்களை விலைக்கு வாங்கியவர்கள், மேற்கூறியவாறே குத்தகைக்கு விட்டனர். எட்டாம் ஹென்றி நாணயத்தின் மதிப்பைக் குறைத்ததால், அவர்தம் மகனின் ஆட்சிக் காலத்தில் பொருள்களின் விலைகள் மிகவும் அதிகரித்தன. இதைச் சமாளிப்பதற்காகப் பண்ணைகளை வைத்திருந்தவர் குத்தகைப் பணத்தை உயர்த்திக் கொண்டே போயினர். அதற்காக அவர்கள் குறைகூறப்பட்டனர். ஆனால், இந் நிலங்கள் மடங்களின் கையிலேயே இருந்திருந்தால் கூட மடங்களின் தலைவர்களான ஆபட்டுகள், குத்தகைப் பணத்தை உயர்த்தியிருப்பர். குத்தகைப் பணத்தை உயர்த்துவது வெகு காலமாக ஆபட்டுகளுக்குப் பழக்கமாயிருந்தது; முன்னுளில் அதற்காகவே அவர்கள் குறைபட்டனர். ஆண்டுகள் செல்லச் செல்ல மடங்கள், மற்றவர்களைப்போல் அதிகமான குத்தகைப் பணம் வாங்கவில்லை என்ற நம்பிக்கை வளரத் தொடங்கியது. அந் நம்பிக்கை தவறுனது என்பதைத் தற்கால ஆராய்ச்சி எடுத்துக்

காட்டியுள்ளது.[1] மடங்களுக்குச் சொந்தமான நிலங்களைக் குத்த கைக்கு எடுத்துக்கொண்டு பயிர் செய்துவந்தவர்கள், மடங்கள் அழிக்கப்பட்டதால் லாபம் அடைந்தனரா அல்லது நஷ்டமடைந் தனரா என்று நிச்சயமாகக் கூறமுடியாது. மடங்களில் துறவிகளை விட எண்ணிக்கையில் அதிகமாய் இருந்த பணியாட்களின் கதி என்னவாயிற்று என்று நினைத்துப் பார்க்க வேண்டும். அப் பணி யாட்கள் உண்ணுவதையும், குடிப்பதையும் தவிர, வேறு எவ் வேலையும் இல்லாதவர்கள் என்று நினைப்பது வழக்கமாகிவிட்டது. (ஸ்டார்கி எழுதிய நூலில் பக்கம் 131; Starkey's England, temp. H. VIII, E.E.T.S., p. 131). பிரபுக்கள், இடைநிலை வகுப்பினர் ஆகியோரின் ஆயுதம் தாங்கிய பணியாட்களின் குழுக்களை ஏழாம் ஹென்றி கலைத்தபின், அவர்கள் சாதாரணப் பணியாட்களை வைத் திருந்தனர். மடங்களிலும் அத்தகைய பணியாட்களே இருந்தனர். ஷேக்ஸ்பியரின் காலத்தில்கூடப் பணியாட்கள் பாராட்டப்பட்டவர் களாக இருக்கவில்லை. மடங்களின் நிலத்தை வாங்கியவர்கள், மடங்களில் பணிபுரிந்து வந்தோரை வேலைக்கமர்த்திக் கொண் டனர். சிலர் மடங்களைப் பண்ணை வீடுகளாக மாற்றி அமைத்துக் கொண்டனர். அப்படிச் செய்தவர்கள், அம் மடங்களில் இருந்த பணியாட்களை அப்படியே வைத்துக்கொண்டனர். இருப்பினும் மொத்த எண்ணிக்கையில் சிலர் தங்கள் வேலையை இழந்து, உடல் ஊறு ஏதும் இல்லாத பிச்சைக்காரரின் கூட்டத்தில் சேர்ந்து அவர்கள் எண்ணிக்கையை அதிகரிக்கச் செய்தனர். இதற்குக் காரணம், துறவிகள் தங்களுக்குக் கொடுக்கப்பட்ட உபகாரச் சம்ப ளத்தில் பணியாட்களை அமர்த்திக்கொள்ளும் நிலையில் இல்லை.

மடங்களில் பணிபுரிந்து வந்தவர்களில் பலர் ஸ்குவீர் (squire) என்ற நிலம்படைத்த வகுப்பினரைச் சார்ந்தவராகவும், வயதில் இளையவராகவும், மடங்களின் அடையாளத்தைத் தன் உடையில் தரித்திருந்தவராகவும் இருந்தனர். அவர்கள் மடங்களின் நிலங் களை மேற்பார்வையிடுபவராகவும், பண்ணை நீதிமன்றத் தலைவர் களாகவும், மடங்களின் பிரதிநிதிகளாகவும், பெயிலிஃப் போன்ற அதிகாரிகளாகவும் இருந்துவந்தனர். இவர்கள் அனைவரும் சம்ப ளம் பெற்றுவந்தனர். இவர்களைத் தவிர, மடங்களில் விருந்தினர் கள் இருந்துவந்தனர். நன்கொடை கொடுத்ததாலோ அல்லது

[1] மடங்களைப்பற்றி இந்த அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளவற்றை பாஸ்கர் வில்லி எழுதிய, 'இங்கிலீஷ் மாங்ஸ் அண்டு தி சப்ரஷன் ஆஃப் மானஸ்டரீஸ்' (English Monks and the Suppression of the Monasteries); சவைன் (Savine) எழுதியுள்ள, 'இங்கிலிஷ் மானஸ்டரீஸ் ஆன் தி ஈவ் ஆஃப் டிஸ்ஸல்லூஷன் (English Monasteries on the Eve of Dissolution; Oxford Studies, edited by Vinogradoff, 1909); ஸ்னேப் (Snape) எழுதியுள்ள, 'இங்கிலீஷ் மானஸ்டிக் பினான்சஸ் (English Monastic Finances 1926); என்ற நூலைப் பார்க்கவும்.

மடத்தை ஏற்படுத்தியவரின் உறவினர் என்ற வகையிலோ, பிரபுக் களும், இடைநிலை வகுப்பினரும் மடங்களின் நிர்வாகத்தில் அதிக மாகத் தலையிட்டுவந்தனர். மடங்கள் அழிக்கப்படுமுன்பே, சமுதாயத்திலே உயர்ந்த வகுப்பினரான பிரபுக்களும், அவருக்கு அடுத்தபடியாக இருந்த இடைநிலை வகுப்பினரும் இவ்வாறு மடங் களுடன் நெருங்கிய சம்பந்தம் உடையவராக இருந்தனர். மடங்கள் அழிக்கப்படுமுன்னமேயே மடங்களின் நிலங்கள் பொதுமக்களின் கைகளுக்குக் கொஞ்சம் கொஞ்சமாக வந்துகொண்டிருந்தது; மடங்கள் அழிக்கப்பட்டபோது அது முற்றுப்பெற்றது எனலாம்.[1]

மடங்களின் வாயில்களில் எப்பொழுதும் ஏழைகள் இருந்து வந்தனர். இப்படி ஏழைகளுக்கு உதவிசெய்வது பழங்காலம் தொட்டு இருந்துவந்த பழக்கமாகவும், கிருத்தவ மதக் கோட்பாட் டின்படி செய்யவேண்டிய கடமையாகவும் இருந்துவந்தது. ஏழைகளைப்பற்றிய சட்டத்தை (Poor law) ஆராய்ந்த வரலாற்று அறிஞர், நடைமுறையில் இப் பழக்கம் ஏழைகளுக்கு உதவி அளிப் பதற்கு பதிலாகப் பிச்சைக்காரரின் எண்ணிக்கையை அதிகரித்து வந்தது என்று கூறியுள்ளார். (லியோனர்டு எழுதிய 'பூர் லா' என்ற நூலில் பக்கம் 18. Leonard, Poor Law, p. 18.) மடங்களின் வாயில்களில் ஏழைகளுக்குக் கொடுக்கப்பட்டுவந்த பணம்மடங்கள் அழிக்கப்பட்டதால் நின்றுவிடவே, ஏழைகள் மற்ற இடங்களில் அதிகரித்தனர் என்று நினைக்கக்கூடும். ஆனால், பிச்சைக்காரரின் தொல்லை முன்பிருந்ததைவிட, மடங்கள் அழிக்கப்பட்டதால் அதிக மானதற்கு ஆதாரம் ஏதும் இல்லை. எலிசபெத் ராணியின் அரசாட்சிக் கால இறுதியில் பிச்சைக்காரரின் தொல்லை குறைந்தே காணப்பட்டது.

மடங்களின் நிலங்களை வாங்கியவர்களின் சந்ததியார் எந்த அளவுக்கு ஏழைகளுக்கு உதவினர் என்றுகேட்கலாம். எலிசபெத் ராணியின் அரசாட்சிக் காலத்தில் பிரபுவும் அவர் மனைவியும், துறவிகள் கொடுத்துவந்ததைவிட, ஏழைகளுக்கு அதிகமாக உதவி னார்களா அல்லது குறைவாக உதவினார்களா என்றும் கேட்கப்பட லாம். இவ் வினாக்களுக்குப் பதிலிறுத்தல் இயலாததாகும். சிலர் அதிகமாகவும் உதவியிருக்கலாம்; சிலர் குறைந்த அளவும் உதவி செய்திருக்கலாம்.[2] ஸ்டூவர்ட் வம்சத்தினரின் ஆட்சியின் ஆரம்ப

[1] பாஸ்கர்வில்லி எழுதிய நூலில், இரண்டாம் அத்தியாயமும் அதற்குப் பின்னும் (Baskerville, Chap II and Passim) சவைன் எழுதிய இங்கிலீஷ் மானஸ் டரீஸ் என்ற நூலில் பக்கம் 244 முதல் 267 வரை. (Savine, English Monasteries, etc., pp. 244-267 )

[2] 1534-ல் மடங்கள் அழிக்கப்பட்டுக்கொண்டிருந்தபோது, ராபர்ட் பை (Robert Pye) என்பவர் தாமஸ் கிராம்வெல் (Thomas Cromwell) என்பவருக்கு, அரசன்

காலத்தில், கிராமத்தில் இருந்த ஏழைகளுக்கு உதவி செய்வதை ஸ்குவீர் என்ற நிலம்படைத்த வகுப்பினரின் மனைவியர் தங்கள் கடமையாகக் கருதத் தொடங்கினர். சில சமயங்களில், லெடிஸ் (Letice), லேடி ஃபாக்லண்டு (Lady Falkland) போன்ற பிரபுக்களின் மனைவியரும், நோயுற்றவர்களை அவரது இல்லத்திற்குச் சென்று பார்த்து, அவர்களுக்கு வேண்டிய மருந்து கொடுப்பதையும், எதையாவது படித்துக்கூறி, அவர்களுக்கு ஆறுதல் அளிப்பதையும் பழக்கமாகக்கொண்டனர். பண்ணை வீட்டில் இருந்த பிரபுவும், அவர் மனைவியும், மடங்கள் எந்த அளவுக்கு உதவி செய்தனவோ அந்த அளவுக்கு ஏழைகளுக்கு உதவி செய்து வந்தனர்.

மடங்கள் அழிக்கப்பட்டதால், ஏழைகள் எந்த அளவுக்குப் பாதிக்கப்பட்டனர் என்பது சரியாக விளங்கவில்லை. ஆனால், ஏழைகளுக்காகவும், கல்விக்காகவும் மடங்களின் செல்வத்தைப் பயன்படுத்தக்கூடிய வாய்ப்பு இழக்கப்பட்டது. லாடிமர் (Latimer), கிரௌலி (Crowley) போன்ற மதச்சீர்திருத்தத்தை விரும்பிய பாதிரியார்களும் மற்றும் பலரும் அக் காலத்திலேயே இதை உணர்ந்தனர். 1550-ல் கிரௌலி கீழ்க்கண்டவாறு எழுதியுள்ளார்:

'நான் தனியே உலவிவரும்போது என்னுடைய வாழ்நாளில் அரசர்கள் செய்த காரியங்களை நினைத்துப் பார்த்தேன். அப்படி நினைத்தபோது இப்போது அழிந்துகிடக்கும் மடங்கள் என் நினைவுக்கு வந்தன. கல்விக்காகவும், ஏழைகளுக்கும் இம் மடங்கள் எப்படித் தொண்டு செய்தன என்பது நினைவுக்கு வந்தது. மடங்களின் நிலங்களையும், செல்வத்தையும், தகாத வழியில் செல்லும் மக்களைத் திருத்தியமைக்கக்கூடிய தெய்வத் தன்மை பொருந்திய பிரசாரகர்களுக்கு உதவப் பயன்படுத்தியிருக்கலாம் ; பட்டினியால் வாடும் ஏழைகளுக்கு உதவவும் பயன்படுத்தியிருக்கலாம்.'

---

மதஸ்தாபனத்தில் கொண்டுவந்த மாறுதல்களைப்பற்றி நாட்டில் மக்கள் என்ன நினைக்கிறார்கள் என்று எழுதியது :

மடங்கள் அழிக்கப்பட்டபின் ஏழைகளின் நிலை எப்படி இருக்கின்றது என்று நான் நாட்டுப்புறங்களிலிருந்த மக்களைக் கேட்டேன். அதற்கு அவர்கள் எப்போதும் ஏழைகள் நல்ல நிலையில் இருந்ததில்லை என்று பதிலளித்தனர். பிரபுக்கள் தேவைக்குமேல் எண்ணிறந்த வேட்டை நாய்களை வளர்த்துவந்தனர். அத்துடன் பிரபுக்கள் குடியானவர்களையும் அத்தகைய நாய்களை வளர்க்கச் செய்தனர். சில குடியானவர்கள் தாங்களாகவே வேட்டை நாய்களை வளர்த்து வந்தனர். இப்படி வளர்க்கப்பட்டுவந்த நாய்கள் மீதமிருந்த இறைச்சியையும், உணவையும் காலிசெய்தன. (மடங்களில் இருந்த துறவிகளும் இப்படியே எண்ணிறந்த நாய்களை வளர்த்து வந்தனர் என்று குறை கூறப்பட்டனர்.) நரிகளைத் துரத்த நாய்கள் தேவைப்பட்டன என்று கூறுகின்றனர். நரிகளை வலைவைத்துப் பிடிக்கப் போதுமான ஆட்கள் இருக்கின்றனர். ஆனால், இதைப் பிரபுக்கள் அனுமதிப்பது இல்லை. பிரபுக்கள் தாங்களே நரிகளை வேட்டையாடுவதை விரும்பினர்.

இதற்குமாறாக, மடங்கள் அழிக்கப்பட்டது இடைநிலை வகுப்பினரின் ஆதிக்கம் அதிகரிப்பதற்கு வழி செய்தது. பண்ணைமுறை ஆட்சிக் காலந்தொட்டு இருந்துவந்த பிரபுக்கள், பாதிரியார்கள் ஆகியோரின் ஆதிக்கம் ஒடுங்கியது. இடைநிலை வகுப்பினரான ஜென்ட்ரிகள் பல நூற்றாண்டுக் காலத்திற்கு நாட்டுப்புறங்களில் ஆதிக்கம் செலுத்தினர். நாட்டுப்புறங்களில் அவர்கள் சொன்னது தான் சட்டமாக இருந்தது.

டியூடர் வம்சத்தினரின் ஆட்சிக்கால ஆரம்பத்தில் நாட்டில் உலவிவந்த கொழுத்த பிச்சைக்காரர்கள் பலவிதங்களில் தோன்றியவர்களாவர். வேலையற்றோர், வேலையில் அமர்த்திக்கொள்ளத் தகுதியற்றோர், ஃபிரெஞ்சுப் போருக்கும், ரோஜாப்பூ அடையாளப் போருக்கும்பிறகு வேலையில் இருந்து நீக்கப்பட்ட போர் வீரர்கள், ஏழாம் ஹென்றியின் கட்டளையால் வேலையிலிருந்து நீக்கப்பட்ட ஆயுதம் தாங்கிய பணியாட்கள், பணமில்லாமையால் பிரபுக்களும் ஜென்ட்ரிகளும் வேலையிலிருந்து நீக்கிவிட்ட வேலையாட்கள், காடுகளிலிருந்து துரத்தப்பட்ட ராபின் ஹூட்டின் ஆட்கள், விளைநிலங்கள், மேய்ச்சல் நிலங்களாக மாற்றப்பட்டதால் வேலையிழந்த பயிர்த் தொழிலாளிகள், ஊர் ஊராகச் சுற்றிவந்தவர் ஆகியோர் அனைவரும் பிச்சையெடுத்துப் பிழைத்தனர். டியூடர் வம்சத்தினரின் ஆட்சிக் காலத்தில் தனிமையில் பண்ணைகளில் வாழ்ந்தோரும், குக்கிராமங்களில் வாழ்ந்தோரும், இப் பிச்சைக்காரர்கள் தங்கள் இருப்பிடங்களுக்கு வருகிறார்கள் என்று தெரிந்தால், அச்சத்தால் நடுங்குவர். அதிகாரிகளும், பிரிவி கவுன்சில் அங்கத்தினரும், பாராளுமன்ற உறுப்பினர்களும் இப் பிச்சைக்காரர்களை என்ன செய்வது என்று யோசித்து வந்தனர். பின்னர்ப் பிச்சைக்காரர்களுக்கு உதவி செய்வதற்காகக் கட்டாயவரி ஒன்று விதிக்கப்பட்டது. உண்மையிலேயே உதவி வேண்டியோருக்கு உதவியளிக்கப்பட்டது. ஐரோப்பாவிலேயே இங்கிலாந்துதான் முதன் முதலில் இப்படி ஒரு வழியேற்படுத்தியது. கொழுத்த பிச்சைக்காரர்களுக்குக் கசையடி கொடுப்பதன்மூலம் அவர்களைப் பிச்சையெடுப்பதினின்றும் நிறுத்தமுடியாது என்பதை விரைவில் மக்கள் புரிந்துகொண்டனர். வேலையற்றவருக்கு வேலைகொடுப்பதும் உழைக்க முடியாதவர்களுக்கு உதவியளிப்பதும், சமுதாய மக்களின் கடமையாகும் என்ற கருத்து டியூடர் வம்சத்தினரின் காலத்தில் சிறிதுசிறிதாக வளரத் தொடங்கியது. எட்டாம் ஹென்றியின் ஆட்சிக் காலத்தில் லண்டன், இப்ஸ்விச் (Ipswich) போன்ற பெரிய நகரங்கள் ஏழைகளுக்கு உதவுவதை நகரத்தின் பணிகளில் ஒன்றாக மேற்கொண்டன. எலிசபெத் ராணியின் ஆட்சிக்கால இறுதியிலும், முதல் இரண்டு ஸ்டூவர்ட் அரசர்களின் காலத்திலும் ஏழைகளுக்கு ஆதரவளிப்பது ஒரு கடமை எனச் சட்டம் செய்யப்

பட்டது. மக்களிடமிருந்து ஏழைகளுக்கு உதவ, கட்டாய வரி வசூலிக்கப்பட்டது. பிரிவி கௌன்சில் எனப்பட்ட அரசரின் ஆலோசனை சபை, வட்டார அதிகாரிகள், ஏழைகளுக்குச் சரிவர உதவி அளிக்கின்றனரா என்று கவனித்துவந்தது.[1]

மடங்களை அழித்தபின் எட்டாம் ஹென்றி பிரார்த்தனைக் கூடங்களையும் (chantries) அழிக்கத் திட்டமிட்டார். ஆனால், அப்படிச் செய்வதற்குள் அவர் இறந்தார். அவருக்குப்பின் ஆறும் எட்வர்ட் 1547-ல் பட்டத்திற்கு வந்தபோது, பிராடஸ்டென்ட் மதக் கொள்கைகள் நாட்டில் பரவத் தொடங்கின. பிராடஸ்டென்ட் மதத்தினர் இறந்தவர்களுக்காகப் பிரார்த்தனை செய்வது மூடத் தனம் என்று கருதினர். இக் கருத்து, பிரார்த்தனைக் கூடங்களை அழிப்பதற்கு வழிசெய்தது. இளைஞரான அவையில் இருந்தோரும் நாட்டுப் புறங்களில் இருந்த ஜென்ட்ரிகளும் பிரார்த்தனைக் கூடங்களின் செல்வத்தை அபகரிப்பதற்கு பிராடஸ்டென்ட் மதக் கொள்கையைப் பயன்படுத்த முடிவுசெய்தனர். ஹென்றி பணமுடையின் காரணமாக, விற்றதுபோக மீதமிருந்த நிலத்தைத் தமக்காக வைத்துக்கொண்டார். ஆனால், அவர் மகன், தம் அவையினரும் மற்றவரும் பிரார்த்தனைக் கூடங்களுக்குச் சொந்தமான நிலங்களை அபகரித்துக்கொள்ள விட்டுவிட்டார். பிரார்த்தனைக் கூடங்கள் மதத்தைச் சார்ந்த நிறுவனங்களாக மட்டுமல்லாமல், பாலங்கள், துறைமுகங்கள், பள்ளிகள் முதலியவற்றை நல்ல நிலையில் வைத்திருக்கும் பொறுப்புள்ள நிறுவனங்களாகவும் இருந்தன. ஆகையால் பிரார்த்தனைக் கூடங்களை அழிக்க முற்பட்ட போது, அவை செய்துவந்தத் மற்றத் தொண்டுகளைத் தொடர்ந்து நடத்த வழிசெய்யவேண்டி இருந்தது. சிற்சில இடங்களில் அத் தகைய ஏற்பாடு செய்யப்பட்டது. லின் (Lynn) நகரமாந்தர், தங்களது ஹோலி டிரினிடி கில்டு (Holy Trinity Gild) என்ற பிரார்த் தனைக் கூடம் அழிக்கப்பட்டபோது, அதற்குச் சொந்தமான சொத்துகளை நகரத்தினுள்ளே கடல்புகாமல் தடுப்பதற்காகக் கட்டப்பட்டிருந்த மதில்களை நல்லநிலையில் வைத்துக்கொள்வதற்

[1] ராபர்ட் கிரௌலி என்பார் ஏறத்தாழ 1550ஆம் ஆண்டில் தன் வஞ்சகப் புகழ்ச்சிப்பாடலில் கீழ்வருமாறு குறித்துள்ளார்: (Robert Growley in his Epigrams )

வேலியின் அருகே அமர்ந்துகொண்டு இரண்டு பிச்சைக்காரர்கள் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டேன். அவர்கள் இருவரின் கால்களும் அருவருக்கத் தக்க புண்களை உடையனவாயிருந்தன. பிச்சைக்காரர்களில் ஒருவன், 'என் கால் களை இந்த நிலையில் வைத்ததற்காக நான் கடவுளுக்கு நன்றி செலுத்துவேன்' என்று கூறினான். மற்றவன் அதற்கு, 'நான் உலகத்தில் எது எனக்குக் கிடைப்பதாயினும் என் கால்களைக் குணப்படுத்திக்கொள்ளமாட்டேன்; ஏன் என்றால் என் கால்கள் நல்லநிலையில் இருந்தால், ஒருவரும் என்னிடம் பரிவு காட்டமாட்டார்கள்' என்று கூறினான். 'அதுமட்டுமல்ல, என் கால்கள் நல்ல நிலையில் இருந்தால் உழைக்க வேண்டியிருக்கும்; அப்படி உழைக்காவிட்டால் கசையடிபட நேரிடும்' என்றும் கூறினான்.

காகப் பெற்றுக்கொண்டனர். ஆனால், செல்வாக்கில்லாத சங்கங்களின் பிரார்த்தனைக் கூடங்கள் அழிக்கப்பட்டபோது, அச் சங்கங்களுக்கு ஒன்றும் கொடுக்கப்படவில்லை. ஆகையால் பிரார்த்தனைக் கூடங்கள் செய்துவந்த பணிகளைத் தொடர்ந்து நடத்த முடியாமற் போய்விட்டது. பல பள்ளிகள் தாங்கள் பெற்றுவந்த நன்கொடைகளை இழந்தன.

ஆறும் எட்வர்ட் இறந்து முந்நூறு ஆண்டுகட்குப் பிறகு, அவர் பல பள்ளிகளை ஏற்படுத்திய சிறந்த அரசர் என்று புகழப்பட்டார். ஆனால், உண்மையில் அவரது பெயரால் அழைக்கப்படும் இலக்கணப் பள்ளிகள், அவரது அதிகாரிகளால் அழிக்கப்படாமல் விட்டுவைக்கப்பட்டவைகளே ஆகும். அவர் இறந்த பிறகு அவரைக் கவுரவிப்பதற்காக அப் பள்ளிகளுக்கு அவரது பெயர் இடப்பட்டன. பிரார்த்தனைக் கூடங்களால் உதவி செய்யப்பட்டு வந்த அநேக பள்ளிகள் எட்வர்டின் ஆட்சிக் காலத்தில் இயற்றப்பட்ட சட்டத்தினால் பாதிக்கப்பட்டன. இப் பள்ளிகளை நடத்துவதற்காக விடப்பட்டிருந்த நல்ல வருமானத்தைத் தரும் நிலங்கள் அரசாங்கத்தால் எடுத்துக்கொள்ளப்பட்டன. அதற்குப் பதிலாகக் குறிப்பிட்ட தொகை உபகாரச் சம்பளமாகக் கொடுக்கப்பட்டது. நாணயத்தின் மதிப்புக் குறைந்துவந்த நாளில், குறிப்பிட்ட தொகையை அளித்தது பள்ளிகளைப் பாதித்தது.[1]

பிரார்த்தனைக் கூடங்களுக்குச் சொந்தமாயிருந்த செல்வத்தில் பாதியையாவது பள்ளிகளுக்குச் செலவிட்டிருந்தாலும், பள்ளிகளுக்குச் சொந்தமான நிலங்களை அபகரிக்காமல் இருந்திருந்தாலும், சிறிது காலத்திற்குள்ளேயே இங்கிலாந்து உலகிலேயே சிறந்த உயர் நிலைப் பள்ளிக் கல்வியை ஏற்படுத்தி இருக்கும். இங்கிலாந்தின் வரலாறும், உலகத்தின் வரலாறும் மேலும் சிறப்படைந்திருக்கும். மடங்களின் செல்வத்தைக் கல்விக்காகப் பயன்படுத்தக் கிடைத்த ஒரு சந்தர்ப்பத்தை இழந்துவிட்டதற்காக லாடிமர் (Latimer) கண்டனம் தெரிவித்திருக்கிறார். மதத்தின் தேவையைப் பூர்த்தி செய்வதற்கேற்ற மானியங்கள் ஏற்படுத்தவேண்டும் என்றும் அவர் அறைகூவினார்.

[1] ஆறும் எட்வர்டால் (Edward VI) பழுப்புநிற ஆடை அணிந்த துறவிகளின் மடம் இருந்த இடத்தில், கிரைஸ்டு மருத்துவ விடுதி (Christ Hospital) ஏற்படுத்தப்பட்டது. ஆனால், அது வெகுசீக்கிரம் ஒரு பள்ளியாக மாறியது. மடங்கள் நடத்திவந்த மருத்துவ விடுதிகள் சிலவற்றை எட்டாம் ஹென்றி அழித்தார். எனினும் பார்ட்ஸ் (Barts), செயின்ட் தாமஸ் (St. Thomas), பெட்லாம் (Bedlam) என்ற பெயர் கொண்ட விடுதிகள் அழிக்கப்படாமல் தப்பின. ஆயின் அவை மக்களின் கட்டுப்பாட்டின்கீழ் வந்தன. மருத்துவ விடுதிகளின் நிலத்தை அபகரித்துக்கொண்டது மடங்களின் நிலத்தை அபகரித்துக்கொண்டதைவிட அதிகமாக ஏழைகளைப் பாதித்தது. மருத்துவ விடுதிகள் ஏழைகளுக்காகவே தக்க இடங்களில் இருந்துவந்தவையாகும்.

'இங்கே நான் ஒரு வேண்டுகோள் விடுக்கின்றேன். ஏழைக் குடும்பங்களில் பிறந்த அறிவிற் சிறந்தவர்களைத் தற்போது இருக்கும் பாதிரியார்களுக்குப்பதிலாக நியமிக்க வேண்டுகிறேன். அத்தகையவரிடம் மதத்தைச் சார்ந்தவற்றை விட்டுவிடுங்கள்.'

ஆனால், இத்தகைய வேண்டுகோள் ஆரும் எட்வர்டின் மந்திரிகள், அவையினர் ஆகியோரின் கொள்கையை மாற்றமுடிய வில்லை. அவர்கள் அரசரின் இளமையைப் பயன்படுத்திக்கொண்டு வேண்டிய அளவு செல்வத்தைத் தேடிக்கொள்ள முற்பட்டனர். லாடிமரின் வேண்டுகோள் மற்றவர்களின் மனத்தைக் கவராமல் இருக்கவில்லை. டியூடர் வம்சத்தினரின் காலத்தில் வாழ்ந்த அத்தனை ஆங்கிலேயரும் ஒரே கொள்கை உடையவராக இருக்க வில்லை. தங்கள் நிலையை உயர்த்திக்கொண்டிருந்த ஜென்ட்ரிகளும் வழக்கறிஞர்களும், வியாபாரிகளும், நிலத்தைச் சொந்தமாகக் கொண்ட குடியானவர்களும், கல்விக்காக நன்கொடைகள் வழங் கினர். எலிசபெத் ராணியின் அரசாட்சிக் காலத்தில் அப்பிங்காம் (Uppingham), ஓகாம் (Oakham) ஆகிய நகரங்களிலும் மற்றும் பல நகரங்களிலும், புதிய பள்ளிகள், ஸ்தாபிக்கப்பட்டிருந்ததைக் காம்டன் (Camden) என்பார் குறிப்பிட்டுள்ளார். ஜான் லயான் (John Lyon) என்ற குடியானவர், ஹாரோ (Harrow) என்ற இடத் தில் சிறுவர்களுக்காக ஓர் இலவச இலக்கணப் பள்ளியை ஏற் படுத்தினர். இப் பள்ளியில் உயர் படிவங்களில் கிரேக்க மொழி கற்றுக்கொடுக்கப்பட்டது. முதலாம் ஜேம்ஸ் (James I) பதவிக்கு வந்த ஆண்டில் யார்க் ஷீரில் இருந்த செழிப்பான டென்ட் (Dent) பள்ளத்தாக்கில் ஓர் இலக்கணப் பள்ளியை, அரசியல்வாதிகளும் மற்றவரும் நன்கொடை அளித்து ஏற்படுத்தினர். இதற்குப் பிறகு அங்கிருந்து பல நூற்றுண்டுக் காலம், அதாவது பேராசிரியர் ஆதம் செட்ஜ்விக் (Adam Sedgwick) காலம்வரை, மாணவர்கள் மேல் படிப்புக்காகக் கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலைக்குச் சென்றனர். அத் துடன் வடக்கே தேவைப்பட்ட பாதிரியார்களையும் இப் பள்ளி ஆக்கித் தந்தது. ஆர்ச்பிஷப்பாக இருந்த சாண்டீஸ் (Sandys) என்பார் ஹாக்ஷெட் (Hawkshead) என்ற இடத்தில் ஓர் இலக் கணப் பள்ளியை ஏற்படுத்தினர். இங்கேதான் கவிஞர் ஓர்ட்ஸ் வொர்த் (Wordsworth) கல்வி கற்றார்.

பியூரி செயின்ட் எட்மண்டஸ் (Bury St. Edmunds) மடத்து அதிகாரியின் மகனும், ஃபிரான்சிஸ் பேகனின் (Francis Bacon) தந்தையுமான நிகலெஸ் பேகன் (Bacon) டியூடர் வம்சத்தினரின் காலத்தில், புதிய கருத்துகளைக் கொண்டவராக வாழ்ந்தவர்களில் ஒருவராவர். வழக்கறிஞராகப் பணி புரிந்தும், அரசியலில் பங்கு கொண்டும் செல்வம் ஈட்டித் தன் தகப்பனர் கவனித்துவந்த

மடங்களுக்குச் சொந்தமான பால் பண்ணைகளுக்கு அதிபதியானுர். அந் நிலத்தில் ஓர் இலவச இலக்கணப் பள்ளியை அவர் ஏற்படுத்தினுர். அப் பள்ளியில் இருந்து தேறி கேம்பிரிட்ஜ் சர்வகலா சாலைக்கு மேற்படிப்பிற்காகச் சென்ற மாணவருக்கு அவர் உபகாரச் சம்பளமும் கொடுத்தார். தாம் கல்விகற்ற கார்பஸ் கிரிஸ்டி (Corpus Chiristi) என்ற பெயர்கொண்ட கல்லூரிக்கும் நன்கொடை அளித்தார். தாம் கேம்பிரிட்ஜில் பயின்றுவந்தபோதுதான், தம் வாழ்நாள் முழுவதும் நண்பர்களாய் விளங்கிய மாத்யூ பார்க்கர் (Matthew Parker), வில்லியம் செசில் (William Cecil) ஆகியோரை முதன்முதலில் சந்தித்தார். இவ் விருவரும் எலிசபெத் ராணியின் வாழ்க்கைக் காலத்தில் அரசாங்கத்திலும் மதஸ்தாபனத்திலும் பெரிய பதவிகள் வகித்தவர் ஆவர். அக் காலம்வரை, ஆக்ஸ்ஃபோர்டு சர்வகலாசாலையைவிட அளவில், சிறியதாக இருந்த கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலை விரைவில் வளரத் தொடங்கியது. அதில் கல்விகற்றுத் தேறியவர்கள் அக் காலத்தில் தோன்றிய மாறுதல்களுக்குக் காரணமாய் இருந்தனர்.

கிரேக்க ரோமானிய இலக்கியங்களையும், கிரேக்க மொழியில் முதலில் தொகுக்கப்பட்ட பைபிளையும் கற்கவேண்டும் என்ற ஆவல் பள்ளிப் படிப்பு, கலாசாலைப் படிப்பு ஆகியவற்றின் மதிப்பை அதிகரித்தது. கேம்பிரிட்ஜில் இருந்த செயின்ட் ஜான் (St. John) கல்லூரியைச் சார்ந்த ஜான் செக்கி (John Cheke), ரோகர் ஆஷாம் (Roger Ascham) என்பாரின் கருத்துகள் அநேகரின் உள்ளத்தைக் கவர்ந்தன. கிரேக்க ரோமானிய இலக்கியப் படிப்பிற்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டுவந்த புதுமுறைக் கல்வியை இலவசமாகக் கற்கும் வாய்ப்பை ஷேக்ஸ்பியர் ஸ்டிராஃபோர்டு இலக்கணப் பள்ளியில் பெற்றுர். இதற்காக இடைக் காலத்தில் ஸ்டிராஃபோர்டு (Stratford) பள்ளியைத் துவக்கிவைத்தவர்களுக்கு நமது தாழ்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்ளக் கடமைப்பட்டவர் ஆவோம். அத்துடன் அக் காலத்தில் புதுமுறைக் கல்வியைப் புகுத்தியவர்களுக்கும் நமது நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்ளவேண்டும்.

எட்டாம் ஹென்றி, ஆரும் எட்வர்ட் ஆகியோரின் அரசாட்சிக் காலத்தில் கத்தோலிக்க மதத்தவர், மதஸ்தாபனத்திடமிருந்து கைப்பற்றப்பட்ட நிலங்களை விலைக்கு வாங்கிக்கொள்ள மறுத்துவிட்டனர். அப்படிப்பட்டவர்களின் பிள்ளைகளும் பேரப் பிள்ளைகளும் பிராடஸ்டென்ட் மதத்தை ஏற்றுக்கொண்டிருக்கமுடியாது என்று கூறலாம். எலிசபெத் ராணியின் ஆட்சிக் காலத்தில் இங்கிலாந்தின் உள்நாட்டு விவகாரத்தில் தலையிடுவதன்மூலம் கத்தோலிக்க மதத்தை நிலைநிறுத்தப் பிறநாட்டுக் கத்தோலிக்க

மதத்தவர் முற்பட்டனர். அவ்வமயம், மடங்கள், பிரார்த்தனைக் கூடங்கள் ஆகியவற்றின் நிலங்களை வாங்கியவர்கள், தாங்கள் வாங்கிய நிலங்களை இழக்காமல் இருப்பதற்காக, மதச்சீர்திருத்த இயக்கத்தை ஆதரிக்கவேண்டிய நிர்ப்பந்தத்தை உணர்ந்தனர்.[1]

பல நூற்றுண்டுகளாக, நிலங்களுக்கு நிரந்தரமான வேலிய மைத்துப் பாதுகாக்கும் வழக்கம் டியூடர் வம்சத்தினரின் காலத்தில் தொடர்ந்து இருந்துவந்தது. தரிசல் நிலங்களுக்கும், காட்டில் இருந்த நிலங்களுக்கும் வேலி அமைத்தனர். வேலி அமைக்கப் படாமல் பயிர்செய்துவரப்பட்ட நிலங்களைச் சிறு பாகங்களாக்கி வேலியமைத்தனர். இப்படிச் செய்வதால் குடியானவர்கள் ஊக்கத் துடன் உழைத்துப் பயிர்செய்வதற்கு வழியேற்படும் என்று எண்ணப்பட்டது. கிராமத்தின் பொது நிலங்களுக்கும் வேலி அமைத்தனர். பயிர்செய்யப்பட்டுவந்த நிலங்கள் வேலியமைக்கப் பட்டு மேய்ச்சல் நிலமாக மாற்றப்பட்டன. நிலங்களுக்கு வேலி அமைத்தது செல்வத்தைப் பெருக்கியது. இதனுல், சில சமயம் ஏழைகள் பாதிக்கப்பட்டனர்; ஜனத்தொகையும் குறைந்தது. சில இடங்களில் குடியானவர்களின் ஒத்துழைப்புடன் வேலியமைக்கப் பட்டது. ஆனுல், பொது நிலங்களை வேலியிட்டு ஒதுக்கியபோது, அதைக் குடியானவர்கள் விரும்பவில்லை. அதனுல் கலகங்கள் ஏற்பட்டன.

ஏழாம் ஹென்றியின் காலத்தில் தங்கள் நிலங்களை ஒன்று சேர்த்து, மேய்ச்சல் நிலங்களாக மாற்றியமைத்ததைக் குடியான வர்கள் எதிர்த்தனர். விளை நிலங்களை மேய்ச்சல் நிலங்களாக மாற்று வது பொதுமக்களின் நலனைப் பாதிக்கும் என்றும், கிராமங்கள் அழிந்துவிடக் காரணமாகும் என்றும் குறை கூறப்பட்டது. விளை நிலங்கள் மேய்ச்சல் நிலங்களாக மாற்றப்படுவதை, 1489ஆம் ஆண்டிலும், 1515ஆம் ஆண்டிலும் இயற்றப்பட்ட சட்டங்கள் தடைசெய்தன. எனினும், தொடர்ந்து விளை நிலங்கள் மேய்ச்சல் நிலங்களாக மாற்றப்பட்டுவந்தன. எட்டாம் ஹென்றியின் அரசாட்சிக்கால இடையிலும், இறுதியிலும் வெளியிடப்பட்ட அரசரின் அறிக்கைகளும், இயற்றப்பட்ட சட்டங்களும், நியமிக்கப் பட்ட குழுக்களும் விளை நிலங்கள் மென்மேலும் மேய்ச்சல் நிலங் களாக மாற்றப்பட்டு வந்ததையும், அதன் காரணமாக கிராம ஜனத்

[1] ஆரும் எட்வர்டின் காலத்தில் பிரார்த்தனைக் கூடங்களைப்பற்றியும், பள்ளி களைப்பற்றியும், போலார்டு எழுதியுள்ள 'பொலிடிகல் ஹிஸ்டரி ஆஃப் இங்கி லண்டு.' பாகம் 6, பக்கங்கள் 15-20 பார்க்கவும். (Pollard, Longman's Political History of England, vol. vi, 1547—1603, pp. 15-20) லீச் எழுதியுள்ள, 'இங்கிலிஷ் ஸ்கூல்ஸ் அட் திரிபர்மேஷன்' என்ற நூலையும் பார்க்கவும். (Leach, English Schools at the Reformation).

தொகை குறைந்துவந்ததையும் அறிவிக்கின்றன. ஆனால், இப்படி விளை நிலங்களுக்கு வேலியிட்டு ஒதுக்குவது மத்தியப் பிரதேசத்தில் இருந்த ஷீர் என்ற பிரிவுகளில்தான் அதிகமாக நடந்துவந்தது. அதனால், விசாரணை நடத்தி நிலைமையை அறிவிக்க அரசரின் குழு ஒன்று இப் பிரதேசத்திற்கு அனுப்பப்பட்டது. அங்கும்கூட விளை நிலங்களுக்கும், மேய்ச்சல் நிலங்களுக்கும் வேலியமைத்து ஒதுக்கு வது குறைந்த அளவிலேயே நடந்ததாகத் தெரிகிறது. இப் பிர தேசத்தில் பதினெட்டாம் நூற்றாண்டில், பண்ணைக்குச் சொந்த மான விளை நிலங்களும், பொது நிலங்களும் வேலியிடப்படாமல் இருந்ததைக் காண்கிறோம். இந் நிலங்களுக்கு வேலியமைக்கும்படி ஹானோவர் (Hanover) வம்சத்தினரின் காலத்தில் பார்லிமெண்ட் சட்டங்கள் செய்தது. [கோனர் எழுதிய, 'காமன் லேண்டு அண்டு என்குளோஷர்', என்ற நூலில் காணலாம்; (Gonner, Common Land and Enclosure].

பொருளாதார, சமுதாய மாறுதல்களை எதிர்த்து எழுப்பப்படும் கூக்குரல்கள், அம் மாறுதல்களின் முக்கியத்துவத்தையோ அல்லது அவற்றின் அளவையோ எடுத்துக்காட்டுவதற்குமாறாக, அக் கால மக்கள் அம் மாறுதல்களை எந்த அளவுக்கு விரும்பவில்லை என்ப தைத்தான் எடுத்துக்காட்டுகின்றன. உதாரணமாக, டியூடர் வம்சத்தினரின் காலத்தில் கிராமங்களில் ஜனத்தொகை குறைந்த தைப்பற்றி அழுத்தமாகக் கூறப்படுவதைக் காண்கிறோம். இதற்குக் காரணம் ஜனத்தொகை குறைவது நன்மை பயக்காது என்று மக்கள் நினைத்ததே ஆகும். மேய்ச்சல் நிலங்களாக மாற்றுவதற் காக வேலியிடப்படுவதை, மூர் (More), லாடிமர் (Latimer) மற்றும் நூற்றுக்கணக்கான கத்தோலிக்கப் பிராடஸ்டெண்ட் ஆசிரியர் களும், பிரசாரகர்களும் கண்டித்தனர். நாற்பதுபேர் பயிர்செய்து பிழைத்துவந்த இடத்திலே ஒருவனும், அவன் இடையனும் பிழைக்கின்றனர் என்று ஓலமிட்டனர். சில இடங்களில் உண்மை யிலேயே இந் நிலை இருந்துவந்தது. இத்தகைய கூக்குரலிடா விட்டால் பல இடங்களில் இந் நிலை ஏற்பட்டிருக்கும். இக் கூக்குர லால் அரசாங்கம் வேலியிட்டு, விளை நிலங்களை மேய்ச்சல் நிலமாக்கு வதைக் குறைக்க முயன்றது. டியூடர் வம்சத்தினரின் காலத்தில் எப்போதாவது, எங்காவது ஜனத்தொகை குறைந்துவந்தது. இங்கிலாந்து முழுவதிலும் தொடர்ந்து ஜனத்தொகை குறைந்து விடவில்லை. தவிரவும் ஜனத்தொகை ஓர் இடத்தில் குறைந்தால் மற்றோர் இடத்தில் அதிகரித்துவந்தது. சுமார் கி.பி. 1880-ல் தான் உண்மையிலேயே நாடு முழுவதும் ஜனத்தொகை குறையத் தொடங்கியது. இதற்குக் காரணம் அமெரிக்காவில் இருந்து உணவுப் பொருள்களை இறக்குமதி செய்ததாகும். சமுதாயத்திற்கு

ஏற்பட்ட இப் பெரிய கேட்டை, விக்டோரியன் வம்சத்தில் கடைசி யில் வந்த அரசர்கள் கவனிக்காது விடுத்தனர். தடையேதும் விதிக்கப்படாத வியாபாரத்தை (Free Trade) ஏற்றுக்கொண்டதால் ஏற்பட்ட விளைவு இது என்று எண்ணி, ஜனத்தொகை குறைவ தைத் தடுக்க முயற்சியேதும் செய்யாமல் விடுத்தனர். போர் காரணமாக பிரிட்டிஷ் தீவுகளுக்கு உணவுப் பொருள்கள் செல் லாமல் தடுத்துவிட்டால், உணவுப் பஞ்சம் ஏற்பட்டுவிடும் என்ற அச்சம் நான்கு நூற்றுண்டுகளுக்குமுன், கிராமங்களில் ஜனத் தொகை குறைவதைக்கண்டு அஞ்சியதைவிட, இருபது மடங்கு அதிகமாக இன்று ஆங்கிலேயரை அஞ்சவைக்கின்றது.

சமுதாய, பொருளாதாரக் குறைபாடுகள், கி.பி. 1549-ல் நார்ஃபோக் (Norfolk) என்ற இடத்தில், கெட் (Kett) என்பாரின் தலைமையின்கீழ் நிகழ்ந்த கலகத்திற்குக் காரணமாய் இருந்தன. மவுஸ்ஹோல்டு ஹீத் (Mousehold Heath) என்ற இடத்தில் தங்கியிருந்த கலகம் செய்த குடியானவர்கள், 20,000 ஆடுகளை வெட்டி வீழ்த்தினர். பொதுநிலங்களில், நிலக்கிழார்கள் எண் ணிறந்த ஆடுகள் வைத்திருந்ததை எதிர்த்தே இப்படிச்செய்தனர். விளைநிலங்களை வேலியிட்டு மேய்ச்சல் நிலங்களாக மாற்றப்பட்ட தற்காக நார்ஃபோக் குடியானவர்கள் கலகம் செய்யவில்லை. இந்தச் சம்பவம் நடந்த ஒரு தலைமுறைக் காலத்திற்குப்பின் காம்டன் (Camden) என்பார், அங்கே வேலியிடப்படுவதை யாவரும் எதிர்த் தனர் என்றும், ஆனால், அங்கே கணக்கிறந்த ஆடுகள் இருந்தன என்றும் எடுத்துக்கூறியுள்ளார்.

மடங்கள் அழிக்கப்பட்டதால் பயிர்த்தொழிலில் மிகுந்த தொல்லைகள் தோன்றின என்று கூறுவதற்கில்லை. ஆனால், அத் தொல்லைகள், ஹென்றி நாணயத்தின் மதிப்பைக் குறைத்ததால் ஏற் பட்டனவாகும். அதற்குமேலாகச் சமுதாயத்தில் ஏற்பட்டுவந்த மாறுதலே அடிப்படைக் காரணமாகும். பதினான்காம், பதினைந்தாம் நூற்றுண்டுகளில் பயிர்த்தொழிலாளரின் எண்ணிக்கை குறைந்திருந் ததால், குடியானவர் கொடுக்கவேண்டிய குத்தகைப் பணமும் குறைந்திருந்தது. ஆனால், பதினாறும் நூற்றுண்டிலே சிறு சிறு பகுதி களாகக் குடியானவர்களுக்குக் குறைந்தகுத்தகைக்கு விடுவதற்குப் பதிலாக, அந் நிலங்கள் அனைத்தையும் ஒன்று சேர்த்து அதிகமான குத்தகைப் பணத்திற்குக் கொடுக்கத்தலைப்பட்டனர். இம் மாறுத லால், தனக்குமட்டும் தேவையான உணவுப் பொருளைக் குடியான வர்கள் உற்பத்தி செய்துவந்ததற்குப் பதிலாக, அதிகமாக உற் பத்தி செய்து வியாபாரம் செய்யமுடிந்தது.

இந்த மாற்றம் மேம்பட்ட வாழ்க்கைநிலையைத் தாழ்த்தியும் இருக்கலாம்; இல்லாமலும் இருக்கலாம்; ஆனால், இம் மாற்றம் நாட்டுப்புறங்களில் செல்வம்பெருக வழிசெய்தது. நாட்டில் ஜனத் தொகை அதிகரிக்க, அந்த ஜனத்தொகைக்கு உணவு அளிப்பதற்கு இத்தகைய மாற்றம் தேவைப்பட்டது. நாட்டின் செல்வநிலையை உயர்த்துவதற்கும் மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்கும் இது தேவைப்பட்டது.

ஜெர்மனி, ஃபிரான்சு ஆகிய நாடுகள் குடியானவர்களின் அடிமைநிலையை ஒழிப்பதற்கு முன்பே, இங்கிலாந்தில் அது பதினாறும் நூற்றாண்டிலேயே ஒழிக்கப்பட்டது. ஏழாம் ஹென்றியின் காலத்தில் அடிமைநிலையில் இருந்த குடியானவர்களின் எண்ணிக்கை மிகக் குறைந்திருந்தது. எலிசபெத் ராணியின் காலத்தில் குடியானவர்களின் அடிமை வாழ்வு முற்றிலும் மறைந்தது. பயிர்த்தொழிலில் ஏற்பட்ட மாற்றங்கள் பதினேழாம், பதினெட்டாம் நூற்றாண்டுகளில் மற்றுமொரு மாறுதலை ஏற்படுத்தின. நிலத்தைக் குத்தகைக்கு எடுத்துப் பயிர்செய்துவந்த குடியானவன் ஒன்று, நிலத்தைச் சொந்தமாகக் கொண்ட குடியானவனாக மாறினான்; அல்லது ஏதும் இல்லாத பயிர்த்தொழிலாளியாகவோ அல்லது நகரத்தில் வாழும் கைத்தொழிலாளியாகவோ மாறினான். இத்தகைய மாற்றங்கள் ஏற்பட்ட ஆரம்பத்திலேயே டியூடர் வம்சத்தினரின் காலத்தில், குடியானவர்கள் தங்கள் எதிர்ப்பைத் தெரிவித்தனர். எந்தச் சூழ்நிலையில் இந்த மாற்றங்கள் தொடங்கின என்பதை இங்கே ஆராயவேண்டும்.

பதின்மூன்றாம் நூற்றாண்டில் பயிர்த்தொழிலில் ஈடுபட்டிருந்த அனைவருக்கும் பயிர்செய்ய நிலம் இருக்கவில்லை. இதன்பயனாக நிலக்கிழார்களின் கை மேலோங்கியிருந்தது. ஆனால், அதற்கு அடுத்த இரண்டு நூற்றாண்டுகளில் கொள்ளைநோயின் காரணமாய்ப் பயிர்த்தொழில் செய்வோரின் எண்ணிக்கை அதிகமாகக் குறையவே பயிர்செய்யக்கூடிய நிலம் மிக அதிகமாக இருந்தது. இதன் காரணமாகப் பயிர்த்தொழில் செய்வோரின் கை மேலோங்கியது. இந்த நிலை ஏற்பட்டபோதுதான், அடிமைநிலையில் இருந்த குடியானவர் சுதந்திர மனிதராக மாறினர். ஆனால், திரும்பவும் பதினாறும் நூற்றாண்டில் பயிர்த்தொழிலில் ஈடுபட்டவர் அதிகமாகவும் பயிர்செய்யும் நிலம் குறைவாகவும் இருந்தது. லண்டனிலும் அதைப்போன்ற நகரங்களிலும் அடிக்கடி கொள்ளைநோய் தோன்றினாலும், கொள்ளைநோயினால் குறைந்த ஜனத்தொகை மறுபடியும் முன்பிருந்த நிலைக்கு வந்துவிட்டிருந்தது. செல்வர்கள் மட்டுமே மருத்துவ சிகிச்சை செய்துகொள்ளும் நிலையில் இருந்

தனர். ஆயினும், அவர் தம் குழந்தைகள் அதிகப்படியாக இறந்து கொண்டிருந்தனர். இப்படி இறப்பது இயற்கை என்று அவர்கள் எண்ணிவந்தனர். அப்படி இருந்தும் ஜனத்தொகை மெதுவாக அதிகரித்துக்கொண்டேவந்தது. இங்கிலாந்தின் ஜனத்தொகை 4 மில்லியன் ஆயிற்று. ஆகையால் டியூடர் வம்சத்தினரின் காலத்தில் மறுபடியும் பயிர்த்தொழில் செய்வோரின் எண்ணிக்கை அதிகமாகவும், பயிர்செய்யக்கூடிய நிலம் குறைவாகவும் இருந்தது. வேலையற்ற பயிர்த் தொழிலாளிகள், பிழைப்பதற்குப் பிற நாடுகளுக்குச் சென்று குடியேறும் முயற்சியும் கைக்கொள்ளவில்லை; கைத்தொழில் அபிவிருத்தியையும் நாடவில்லை. இதன் காரணமாகச் சமுதாயத்தில் கொழுத்த பிச்சைக்காரர்கள் தோன்றினர். காடுகளை அழித்துப் பயிர்செய்யவும், தரிசு நிலத்தைப் பயிர்செய்யவும் பதினைந்தாம் நூற்றுண்டில் நின்றுவிட்ட வேலையை மறுபடியும் மக்கள் தொடங்கினர். இதன்காரணமாக நிலக்கிழார்கள் தங்கள் நிலங்களைத் தங்கள் இஷ்டம்போல் செய்யவும், அதிகமான குத்தகைப் பணம் வசூலிக்கவும் சந்தர்ப்பம் பெற்றனர்.

பயிர்செய்யப் போதிய நிலம் இல்லாத காரணத்தால் நிலக்கிழார்கள் குத்தகைப் பணத்தை அதிகரிக்கவும் பயிர்செய்வதில் மாற்றம் ஏற்படுத்தவும் முடிந்தது. விலைவாசி உயர்வும், அவர்கள் இப்படிச் செய்வதைத்தவிர, வேறுவழியில்லாமல் செய்துவிட்டது. கி. பி. 1500ஆம் ஆண்டிற்கும் கி.பி. 1560ஆம் ஆண்டிற்கும் இடையே, நிலக்கிழார்கள் தங்கள் வீட்டிற்கு வேண்டிய பொருள்களை வாங்க இரண்டு மடங்கிற்கும் மேம்பட்ட விலையைக் கொடுத்து வாங்கவேண்டி இருந்தது. குத்தகைப் பணத்தை அதிகரிக்காவிட்டால், நிலக்கிழார்கள் நசித்துப் போகவேண்டிய நிலை ஏற்பட்டது: அத்துடன் நிலத்தை மிக லாபகரமான வழியில் உபயோகப்படுத்த வேண்டியும் இருந்தது. உதாரணமாக விளைநிலங்களை மேய்ச்சல் நிலங்களாக மாற்றும் நிர்ப்பந்தம் ஏற்பட்டது.[1]

[1] டியூடர் வம்சத்தினரின் காலத்தில் விலைவாசி ஏற்றம் மூன்றுமுறை ஏற்பட்டது. (1) 1510—1540. ஜெர்மனியில் வெள்ளி உற்பத்தி செய்யப்பட்டதாலும், ஏழாம் ஹென்றி சேர்த்து வைத்துவிட்டுப்போன செல்வத்தை எட்டாம் ஹென்றி செலவழித்ததாலும், உணவுப் பொருள்களின் விலையை முப்பது சதவீதம் அதிகரித்தது. (2) 1541-1561 எட்டாம் ஹென்றி நாணயத்தின் மதிப்பைக் குறைத்தபோதும் இதற்குச் சிறிது காலத்திற்குப்பின் அமெரிக்காவில் வெள்ளிச் சுரங்க வேலை தொடங்கப்பட்டபோதும் எல்லாப் பொருள்களின் விலைகளும் நூறு சதவீதம் அதிகரித்தது. (3) 1561-1582. மேரி ராணி பொருளாதார நிலையைச் சரிசெய்தபோதும், எலிசபெத் ராணி, இருந்த நாணயத்திற்குப் பதிலாகப் புதிய நாணயத்தை வெளியிட்டபோதும், விலைவாசிகள் மெதுவாக அதிகரித்தன. ஸ்டுவர்ட் வம்ச ஆட்சியின் ஆரம்பகாலத்தில் அமெரிக்காவில் வெள்ளிச்சுரங்கங்கள் வேலைசெய்யத் தொடங்கியபோது, 1643-லிருந்து 1652 வரை விலைவாசி உச்சநிலையை அடைந்தது. இதற்குப்பிறகு விலைவாசிகள் குறையத் தொடங்கின.

ஆனால், நிலக்கிழார்களின் நிலையை மக்களால் புரிந்துகொள்ள முடியவில்லை. நிலக்கிழார்கள் செய்ததை மதஸ்தாபனமும் அங்கீகரிக்கவில்லை. கத்தோலிக்கரும் பிராடஸ்டென்ட் மதத்தினரும் இடைக்காலத்தில் எதை நேர்மையானது என்று கருதினரோ அதையே பதினாறும் நூற்றாண்டிலும் நேர்மையானது என்று கருதினர். கடன்கொடுத்த பணத்திற்கு வியாபாரிகள் வட்டி வாங்கியதற்குச் சட்டமும், பொதுமக்கள் கருத்தும் விரோதமாயிருந்தன. உதாரணமாகக் கி.பி. 1552ஆம் ஆண்டில் பார்லிமெண்ட், வட்டி வாங்குவது ஒரு கொடிய செயல் என்று அதைச் சட்டத்தின்மூலம் தடைசெய்தது. முடிவில் கி.பி. 1571-ல் இச் சட்டம் ரத்துச் செய்யப்பட்டது. பத்து சதவீத வட்டி வாங்குவது குற்றமன்று என்று மக்கள் கருதத் தலைப்பட்டனர்.

பிரசாரகர்களும், சிறு நூல்களை வெளியிட்டோரும், கவிஞர்களும், நிலத்திற்கு வேலியிட்டு ஒதுக்குவதையும், அதிகக் குத்தகைப்பணம் வாங்குவதையும் நேர்மையற்ற செயல்களாகக் கருதியதில் வியப்பேதும் இல்லை. சில நிலக்கிழார்கள் நேர்மையானவர்களாக இருக்கவில்லை. பலர் பொருளாதார நிலையின் காரணமாக மேற்குறிப்பிட்டபடி செய்யவேண்டியிருந்தது. பொருளாதார நெருக்கடியைக் காரணமாகக் காட்டி நிலக்கிழார்கள் அதிகக் குத்தகைப்பணம் பெற முயன்றனர். பிற்காலத்தில் பல நூற்றாண்டுக் காலத்திற்கு இந்தக் காரணத்தைச் சுலபமாகஎடுத்துக் காட்டி வந்தனர். டியூடர் வம்சத்தினரின் காலத்தில் வெளிவந்த நூல்கள் நிலக்கிழார்களின் நிலையைப் பொருளாதார நிலையிலிருந்து நோக்காமல், வேறு கோணங்களிலிருந்து நோக்கின. அவை நிலக்கிழார்கள் இழைத்த கொடுமைகளைப்பற்றிப் பேசினவே ஒழிய, அக் கொடுமைகளுக்குக் காரணம் என்ன என்று ஆராயவில்லை.

ஆனால், சில நூல்கள் இதற்கு விதிவிலக்காக இருந்தன. ஆறும் எட்வர்டின் காலத்தில், சமுதாயத்தில் குழப்பம் நிறைந்திருந்தபோது, 'எ டிஸ்கோர்ஸ் ஆஃப் தி காமன் வீல்' (A Discourse of the Common weal) என்ற பெயரில் எழுதப்பட்ட நூல், எல்லாக் கட்சியினருக்கும் பொதுவாக உண்மைநிலையை எடுத்துக்கூறியது. விலைவாசி உயர்வினால் குத்தகைப்பணம் அதிகரிப்பதைத் தவிர்க்க முடியாததையும், குத்தகைப்பணம் உயர்வதற்கு ஹென்றி நாணயத்தின் மதிப்பைக் குறைத்தது முக்கிய காரணம் என்றும் எடுத்துக் காட்டியது. எலிசபெத் ராணியின் அரசாட்சியின் ஆரம்ப காலத்தில் தாமஸ் டஸ்ஸர் (Thomas Tusser) வேலியமைத்து நிலத்தை ஒதுக்குவதை ஆதரித்து எழுதினார்.

'நிலத்திற்கு வேலியமைத்து ஒதுக்கும் நாட்டில்தான் மிகுதியான இறைச்சியும், தானியமும், வெண்ணெய், பாலாடை முதலியனவும், மிகுந்த செல்வமும் கிடைக்கும்; பார்வைக்கு அழகான மக்களும் காணப்படுவர்.'

ஆனால், நிலத்திற்கு வேலியமைத்து ஒதுக்குவதைப் பாகுபாடு இன்றிக் கண்டித்தனர். உண்மையிலேயே கொடுமை செய்தவரைக் கண்டித்திருக்கலாம். உதாரணமாகப் பிரபுக்கள் பொது நிலத்தை வேலி அமைத்து ஒதுக்கியபோது அதைக் கண்டித்திருக்கலாம். நிலம்படைத்த ஜென்ட்ரிகள் அதிகக் குத்தகைப் பணம் கேட்டதற்காக அவர்களைக் கண்டித்ததும் முறையற்றதாக இருந்தது. விலைவாசி உயர்வினால், குடியானவர்கள் இரண்டு அல்லது மூன்று மடங்கு விலைக்குத் தங்கள் பொருள்களை விற்றுவந்தனர். நிலக்கிழார்கள் அதனால் தங்களுக்கு வேண்டிய பொருள்களை அவ் விலைக்கு வாங்கவேண்டியிருந்தது.[1] இப்படி இருக்கையில் குத்தகைப் பணத்தை எப்படி அதிகரிக்காமல் இருக்கமுடியும்.

மக்கள் தொடர்ந்து இடைக்காலக் கருத்துகளைக் கொண்டவராயிருந்தனர். அதனால் நாணயத்தின் மதிப்புக் குறைந்தாலும் விலைவாசி உயர்ந்தாலும் பழக்கமாக வாங்கப்பட்ட குத்தகைப்பணத்தையே வாங்கவேண்டும் என்ற எண்ணமுடையவராக இருந்தனர்.

விலைவாசி உயர்வு எல்லாரையும் ஒரேவகையில் பாதிக்கவில்லை. சில குடியானவர்கள் நிலத்தை நீண்டநாள் குத்தகைக்கு எடுத்துக்கொண்டிருந்தனர். சட்டப்படி, அத்தகைய குத்தகையை ரத்துசெய்ய முடியாததாய் இருந்தது. இப்படிக் குத்தகைக்கு எடுத்துக்கொண்டிருந்த குடியானவர்கள் விலைவாசி உயர்ந்துகொண்டே போனதால் அதிக லாபம் அடைந்துவந்தனர். எவ்வாறெனில், அவரது குத்தகைப் பணத்தை நிலக்கிழார்கள் உயர்த்தமுடியாத நிலையில் இருந்தனர். இதன் காரணமாக யாருடைய குத்தகை முடிவடைந்ததோ, அவர்களிடம் நிலக்கிழார்கள் அதிகக் குத்தகைப்பணம் கேட்டனர். சில குத்தகைகள் ஒவ்வொரு வருடமும் புதுப்பிக்கவேண்டி இருந்தது. அக் குத்தகையைப் புதுப்பிக்கவேண்டி வந்தபோது நிலக்கிழார்கள் அதிகக்

[1] 'டிஸ்கோர்ஸ் ஆஃப் தி காமன் வீல்' (Discourse of the Common Weal) என்ற நூல் இதை எடுத்துக்காட்டினாலும், இக் காலத்தில் வெளிவந்த மற்ற இலக்கியங்கள், நிலக்கிழார்களின் நிலையை எடுத்துக்காட்டாமல் விட்டிருக்கின்றன. ஆனால், எலிசபெத் அரசியின் ஆட்சிக்கால ஆரம்பத்தில் வெளிவந்த 'பியர்ஸ் ப்ளோமேன்' (Piers Ploughman) என்ற நூலில் கவிஞர் காஸ்கோயின் (Gascoigne) குடியானவர்களைப்பற்றிக் கீழ்வருமாறு குறிக்கின்றார்:

'நிலக்கிழார்கள் குத்தகைப் பணத்தை உயர்த்திவிட்டனர் என்று, குடியானவர்கள் கூச்சலிடுகின்றனர். ஆனால், தங்கள் நிலக்கிழார்களுக்கு விற்கும் ஆடுகளுக்கு முன்பிருந்ததைவிட, மிக அதிகமான விலையைக் கேட்கின்றனர்.'

குத்தகைப்பணம் கேட்டனர். ஆகையால் குடியானவரில் சிலர் குறைந்த குத்தகைப்பணம் கொடுத்துக்கொண்டு அதிக லாபம் அடைந்துகொண்டிருந்த அதேசமயத்தில் மற்றக் குடியானவர்கள் அதிகக் குத்தகைப்பணம் கொடுக்கவேண்டிய நிர்ப்பந்தத்தில் இருந்தனர். நிலத்தைச் சொந்தமாகக்கொண்ட குடியானவர்கள், விளைபொருள்களைத் தங்கள் பாட்டனர்கள் விற்ற விலையைவிட மூன்று மடங்கு அதிக விலைக்கு விற்றுவந்தனர்.

ஆறும் எட்வர்ட், மேரி ராணி ஆகியோரின் காலத்தில் சிலர் பெரும் லாபத்தை அடைந்துகொண்டிருக்கும்போது, பல பிரபுக் களும், நிலக்கிழார்களும், எட்டாம் ஹென்றி நாணயத்தின் மதிப்பைக் குறைத்த காரணத்தால், உண்மையிலேயே பாதிக்கப் பட்டனர். அதே காரணத்தால் நிலமற்ற தொழிலாளியும் அவதி யுற்றான். விலைவாசி உயர்ந்ததே தவிர, அவனுக்குக் கொடுக்கப் பட்ட கூலி உயரவில்லை.[1]

அந் நாளில் நிலமில்லாத தொழிலாளிகளின் எண்ணிக்கை, மொத்தத் தொழிலாளரின் எண்ணிக்கையில் சிறுபான்மையாகும். ஓர் அளவிற்கு அவன் கூலியைப் பொருளாகவே பெற்றுவந்தான். அதனால் விலைவாசி உயர்வினால் உண்மையிலேயே அவன் அதிக மாகப் பாதிக்கப்படவில்லை. கைத்தொழிலாளிகள், உற்பத்தி செய்பவர், வியாபாரிகள் ஆகியோர் குத்தகைப்பணம் அதிகம் கொடுக்காத குடியானவன், எந்த அளவு லாபம் சம்பாதித்தானோ அந்த அளவு லாபம் சம்பாதித்தனர். பொதுவாக விலைவாசி உயர்வானது, நகரங்களிலும் நாட்டுப்புறங்களிலும் வியாபாரத் தையும் உற்பத்தியையும் பெருக்க ஊக்கமளித்தது. பழக்கமும், மாற்றமுடியாத உரிமைகளும் ஊன்றியிருந்த பழைய இங்கிலாந் திற்குப் பதிலாகத் துணிகரமும் போட்டியும் நிறைந்த புதிய இங்கிலாந்து தோன்றுவதற்கு வழிபிறந்தது.

பதினாறும் நூற்றாண்டு முடிவதற்குள் பொருளாதார நிலை சீர் செய்யப்பட்டது. ஆறும் எட்வர்டின் ஆட்சிக்கால இறுதி ஆண்டு களில் பொருளாதார நிலையைச் சீர்செய்ய முயற்சி எடுக்கப்பட்டது. அம் முயற்சி மேரி அரசியின் காலத்தில் தொடர்ந்து மேற்கொள்ளப் பட்டு எலிசபெத் அரசியின் காலத்தில் பலனளித்தது. தனது அரசாட்சியில் இரண்டு ஆண்டுகள் முடிவதற்குள் எலிசபெத் அரசி நாணயத்தின் மதிப்பை முன்பு இருந்த நிலைக்கு உயர்த்த

[1] கி.பி. 1501-க்கும் கி.பி. 1560-க்கும் இடையே உணவுப் பொருள்களின் விலை 100-ல் இருந்து 290 ஆயிற்று. அதேசமயத்தில் கட்டடவேலையில் ஈடுபட்டிருந் தோரின் கூலி, 100-லிருந்து 169 ஆயிற்று. பயிர்த்தொழிலாளிகளின் கூலியைப் பற்றி இவ்விதமாகக் குறிப்பிட முடியாது.

முடிந்தது. மேலும் நீண்டகாலக் குத்தகைகளின் எண்ணிக்கை குறைந்துவரவே நாட்டில் ஒரே அளவான குத்தகைப்பணம் நிலவத் தொடங்கியது. இதன் காரணமாக ஷேக்ஸ்பியரின் காலத்தில் விவசாயிகளிடம் குறைபாடு இருப்பதற்குப்பதிலாக நிம்மதியும், செல்வநிலையில் உயர்வும் காணப்பட்டது. விளைச்சல் எதிர்பார்த்த அளவு இல்லாத காலங்களில்தான் விவசாயிகள் தொல்லையுற்றனர்.

பொருளாதாரநிலை இப்படிச் சீர் செய்யப்படுமுன் பல முக்கிய மாற்றங்கள் ஏற்பட்டன. தற்காலத்தில் பல ஏக்கர் நிலத்தைக் குத்தகைக்கு எடுத்துக்கொண்டு பயிர்செய்யும் குடியானவனைப் போல் அனேகர் இருந்தனர். இடைக்காலத்தில் சிறிய அளவு நிலத்தைக் குத்தகைக்கு எடுத்துக்கொண்டு பயிர்செய்துவந்த குடியானவனைப்போல் இருந்தவர் மிகச் சிலரேயாகும். இருப்பினும், நாட்டின் மத்தியப் பிரதேசங்களில் செழிப்பான விளை நிலங்கள் சிறு துண்டுகளாகப் பிரிக்கப்பட்டு, வேலி இடப்படாமல் குடியானவர்களால் பயிர் செய்யப்பட்டுவந்தன.

டியூடர் வம்சத்தினர் காலத்தில் அரசாங்கம் தொடர்ந்து சட்டம் செய்தும், விசாரணைக் குழுக்களை அனுப்பியும், 'ஸ்டார் சேம்பர்,'(Star Chamber), 'கோர்ட் ஆஃப் ரிக்வெஸ்ட்ஸ்' (Court of Requests) ஆகிய நீதி மன்றங்கள்மூலமும், குடியானவர்களைப் பிரபுக்களின் கொடுமைகளிலிருந்து காப்பாற்றியும் நிலத்திற்கு வேலியமைத்து ஒதுக்குவதைக் குறைத்தும் வந்தது. ஆனால் இந் நடவடிக்கைகள் எல்லாம் மெதுவாக ஏற்பட்டுக்கொண்டிருந்த மாற்றத்தைத் தடுத்து நிறுத்தமுடியவில்லை.

இயோமென் (yeoman) என்று குறிக்கப்பட்ட வகுப்பினர், முற்காலத்தில் இருந்ததைவிட, எண்ணிக்கையிலும் செல்வத்திலும் அதிகரித்தனர். இயோமென் வகுப்பு மூன்று வகையான குடியானவர்களைக் கொண்டிருந்தது. இந்த மூன்று வகையானவர்களும் செல்வத்தில் கொழித்துக்கொண்டிருந்தனர். தமக்குச் சொந்தமான நிலத்தைத் தாமே பயிர்செய்தனர், சில குடியானவர்; முதல் வைத்திருந்த குடியானவர், குத்தகைக்கு நிலத்தை எடுத்துக் கொண்டு பயிர்செய்தனர். நீண்ட காலத்திற்கு மாற்றமுடியாத குத்தகைக்கு நிலத்தை எடுத்துக்கொண்டனர் சிலர்; இம் மூன்று வகையான குடியானவர்களும் வேலியிடப்பட்டிருந்த நிலத்தையும் பரந்த வெளியில் இருந்த நிலத்துண்டுகளையும் பயிர்செய்து வந்தனர். இவர்களில் பெரும்பாலோர் ஆடுகளை வளர்த்து அவற்றின் கம்பளியை விற்றுச் செல்வராயினர். டியூடர், ஸ்டூவர்ட் வம்சத்தினரின் காலத்தில் தோன்றிய இலக்கியங்கள்

இயோமென் வகுப்பினரைச் சமுதாயத்திலேயே சிறந்த ஆங்கிலேயர் என்று குறிப்பிடுகின்றன. இவர்கள் சமுதாயத்தில் பல வகுப்பினரையும் அணைத்துக்கொண்டும், தங்களுக்கு மேம்பட்டவரிடத்துத் தாழ்ந்துபோகாமலும், தங்களைவிடத் தாழ்ந்த நிலையில் இருந்த ஏழைகளை அலட்சியம் செய்யாமலும் பெருந்தன்மை, மன உரம், விருந்தோம்பும் பண்பு முதலியன உடையவராயும் வாழ்ந்து வந்தனர்.

இயோமென் வகுப்பினரை. நாட்டிற்குப் பலமும் பாதுகாப்பும் அளிக்கக் கூடியவராகக் குறிப்பிட்டனர். வெகு காலத்திற்குமுன் நடந்த அஜின்கோர்ட் (Agincourt) போரிலும், சிறிது காலத்திற்கு முன்பு நடந்த ஃபிளாடன் ஃபீல்டு (Flodden Field) போரிலும், வெற்றிக்குக் காரணமாய் இருந்தவர் அவர்களேயாகும். இயோமென் வகுப்பினர் போர்நடந்தபோது இல்லாதிருந்தால் நாம் கஷ்டப்பட வேண்டியிருந்திருக்கும். அவர்களால்தான் இங்கிலாந்தைப் பாதுகாக்க முடியும் என்று ஒருவர் கூறியுள்ளார். (ஸ்டார்க்கி எழுதிய நூலில் பக்கம் 79; Starkey's England, Temp. H. VIII, E.E.T.S., p. 79.) மற்ற நாடுகளில் இவ் வகுப்பினர் இருக்கவில்லை; குடியானவர்களும், அக் குடியானவரை நசுக்கிவந்த பிரபுக்களுமே இருந்தனர் என்று கூறிக்கொள்வதில் ஆங்கிலேயர் பெருமைப்படுகின்றனர்.

ஆங்கிலேயர் போர்புரிவதையே தொழிலாகக் கொண்ட போர் வீரரைப்பற்றி நல்லபிப்ராயம் இல்லாதிருந்தனர். பழங்காலத்தில் பிரபுக்களின் ஆயுதம்தாங்கிய பணியாட்களால் துன்புற்றதே இதற்குக் காரணம். டியூடர் வம்சத்தினர் இவ் வாயுதம்தாங்கிய பணியாட்களைக் கலைத்தனர். ஆனல். நாட்டைக்காப்பதற்குப் படையை வைத்திருக்கவில்லை. இதனுல் இயோமென் வகுப்பினர் நாட்டைப் பாதுகாக்கத் தேவைப்பட்டனர். ஆங்கிலேயர் தங்கள் உரிமைகளைப்பற்றிப் பெருமைகொண்டனர். அவ் வுரிமைகள் எவை என்று தெளிவாக எடுத்துக்கூறப்படவில்லை. அவ் வுரிமைகள் அரசனைப் பார்லிமெண்டின்மூலம் கட்டுப்படுத்தும் உரிமை என்றோ, அரசன் அல்லது பிரபு இவர்கள் தலையிடுதல் இன்றிச் சுதந்திரமாக வாழும் உரிமை என்றோ தெளிவாக எடுத்துச் சொல்லப்பட்டிருக்கவில்லை. ஆறும் எட்வர்ட்டின் ஆட்சிக்காலத்தில் வெளியான 'டிஸ்கோர்ஸ் ஆஃப் தி காமன் வீல்' (Discourse of the Common Weal) என்ற நூலில் குடியானவனும், ஒரு வியாபாரியும் நாட்டில் கலகங்களை அடக்கப் படை தேவையா என்று கீழ்வருமாறு விவாதிக்கின்றனர்:

குடியானவன்: நம்மிடையே எப்போதும் வேலையில் இருக்கும் கொடியவர் (போர்வீரர்) இல்லாதிருக்கக் கடவுள்

செயல்புரியட்டும். ஃபிரான்சு நாட்டில் அக் கொடியவர் ஏழைகளின் கோழி, பன்றி, மற்ற உணவுப் பொருள்களை எடுத்துக்கொண்டு அதன் விலையைக் கொடுப்பதில்லை; பெண்களின் கற்பை அழிக்கின்றனர் என்றும் கூறப்படு கிறது.

வியாபாரி : அத்தகைய படை இருக்குமானால் கிளர்ச் சியை அடக்குவதற்குப் பதில், அது கிளர்ச்சியைத் தூண்டிவிடும். இதை ஆங்கிலேயர்களால் பொறுக்க முடியாது. ஆயின் இங்கிலாந்தின் இயோமென் வகுப்பினர் அத்தகையவர் அல்லர்.

இயோமென் வகுப்பினர் மட்டுமல்லாமல், ஸ்குவீர் (Squire) என்று அழைக்கப்பட்ட நிலக்கிழார்களும் முன்னணிக்கு வந்து கொண்டிருந்தனர். விலைவாசி உயர்ந்த காலத்தில் அதை எப்படியோ சமாளித்து, எலிசபெத் அரசியின் காலத்தில் நாட்டுப் புறங்களில் முக்கிய வகுப்பினராகத் திகழ்ந்தனர். மடங்களின் நிலத்தைக் குறைந்த விலைக்கு வாங்கியதாலும், பொருளாதார நிலையில் ஏற்பட்ட மாறுதல்களாலும், அவருடைய செல்வமும், செல்வாக்கும் அதிகரித்தன. இவ் வகுப்பைச் சேர்ந்த பலர் பயிர்த் தொழில் அன்றி, ஆடை வியாபாரத்திலும் வெளிநாட்டு வியாபாரத் திலும் ஈடுபட்டிருந்தனர்.

மடத்தின் தலைவர்களான ஆபட்டுகளும், பிரயர்களும், பண்ணை முறை ஆட்சிப் பிரபுக்களும் இல்லாது மறைந்திடவே, ஸ்குவீர் வகுப்பினர் மென்மேலும் நாட்டில் முன்னிலைக்கு வந்துகொண் டிருந்தனர். அரசனது சார்பில் கவுன்டி என்ற பிரிவுகளை, அமைதிக் காவலர்களாக (Justices of the Peace) பரிபாலித்துவந்த ஜென்ட்ரி வகுப்பினர் பலம்பொருந்திய பிரபுக்கள் தங்கள் வேலை யில் குறுக்கிடுவார்கள் என்ற பயம் அற்றுப் பணியாற்றிவந்தனர். பிளான்டாஜனட் (Plantagenet) வம்சத்தினரின் காலத்தில் நாட்டில் பீதியை உண்டுபண்ணிய பழைய பிரபுக்களின் குடும்பங்கள், தங்கள் பலத்தையும், நிலங்களையும் இழந்துவிட்டிருந்தனர். ரோஜாப்பூ அடையாளப்போரின்போது, அவர் நிலங்கள் அரச ரால் கைப்பற்றப்பட்டன. டியூடர் வம்சத்து அரசர்களில் முதலில் அரசாண்டவர்கள் இப் பிரபுக்களை அடக்குவதை நோக்கமாகக் கொண்டிருந்தனர். பக்கிங்காம் பிரபு கொடுங்குற்றம் செய்தார் என்று தண்டிக்கப்பட்டதைப்போல், மற்றப் பிரபுக்களும் ஒடுக்கப் பட்டனர். பண்ணைமுறை ஆட்சிக்கால பிரபுக்கள் ஸ்காட்லாந்தின் எல்லைப் பகுதியில்தான் காணப்பட்டனர். இப் பகுதியை அரசன் ஆளவில்லை; பெர்சி (Percy) என்ற பிரபுவின் குடும்பமே ஆண்டு

வந்தது என்று மக்கள் எண்ணிவந்தனர். வடக்கே கி.பி. 1570-ல் எர்ல் (Earls) பதவி வகித்துவந்த அதிகாரிகளின் கலகத்திற்குப்பிறகு, இப் பகுதியில் இருந்த பிரபுக்களும் எலிசபெத் அரசியால் ஒடுக்கப்பட்டனர். இங்கிலாந்தின் மற்றப் பாகங்களில் இத்தகைய பிரபுக்கள் முன்னமேயே மறைந்துவிட்டிருந்தனர்.

டியூடர் வம்சத்தினர் அந்தப் பிரபுக்களின் நிலைக்கு ரஸ்ஸல் (Russell), காவென்டிஷ் (Covendish), செய்மூர் (Seymour), பேகன் (Bacon), டட்லி (Dudley), செசில் (Cecil), ஹெர்பெர்ட் (Herbert) ஆகிய குடும்பத்தினரை உயர்த்தினர். இக் குடும்பங்கள் அரசனின் அதிகாரிகளாகத் தொண்டு புரிந்ததால்தான் இந் நிலைக்கு அரசனால் உயர்த்தப்பட்டனர். இக் குடும்பத்தினர் ஜென்ட்ரி வகுப்பினரோடு தொடர்புள்ளவராய் இருந்தனர். தாங்கள் பிரபுக்களின் நிலைக்கு உயர்த்தப்பட்டவராயிருந்தும் அவர் ஜென்ட்ரி வகுப்பைச் சேர்ந்தவராகவே இருந்துவந்தனர்.

அரசியல் காரணங்கள் அன்றிப் பொருளாதாரக் காரணங்களும் பழைய பிரபுக்களின் வம்சங்களைத் தாழ்ந்த நிலைக்குக் கொண்டு வந்துகொண்டிருந்தன. பிரபுக்களின் குடும்பங்கள் ஜென்டரிகளை விட, நாணயத்தின் மதிப்புக் குறைவினால் அதிகம் பாதிக்கப் பட்டனர். தங்கள் பரந்த நிலங்களைத் தாங்களே கவனிக்க முடியவில்லை. குறைந்த அளவு நிலத்தை வைத்துக்கொண்டிருந்த நிலக்கிழார்கள், குத்தகைப்பணம் கொடுக்காத குடியானவரை விரட்டியும், குத்தகையை ரத்து செய்தும், குத்தகைப் பணத்தை அதிகரித்தும் செய்துவந்ததைப்போல, பிரபுக்களால் உடனுக்குடன் செய்யவும் முடியவில்லை. டியூடர் வம்சத்தினரின் ஆட்சிக் காலத்தில் பிரபுக்கள் நசித்துவந்தனர். ஜென்ட்ரிகள் முன்னுக்கு வந்துகொண்டிருந்தனர்.

ஏழாம் ஹென்றியின் காலத்திலேயே ஜென்ட்ரி வகுப்பினர், தங்கள் இளைய புதல்வர்களைத் தொலைவில் இருந்த நகரங்களில் வியாபாரத்திலும் கைத்தொழிலிலும் செழித்து விளங்கிய வியாபாரிகள், தலைமைக் கைத்தொழிலாளிகள் ஆகியோரிடம் வேலைகற்க அனுப்பிவைத்தனர். இதை ஏழாம் ஹென்றியின் காலத்தில் இங்கிலாந்திற்கு விஜயம் செய்த அயல்நாட்டினர் கண்டு ஆச்சரியமடைந்தனர். இப்படி நெடுந்தூரம் தங்கள் புதல்வர்களை அனுப்பிவந்ததை அயல் நாட்டவர் கண்டு, இங்கிலாந்தில் பெற்றோர்கள் புதல்வரிடம் அன்பில்லாதவர்களாய் இருந்ததுதான் அதற்குக் காரணம் என்று கூறியுள்ளனர். ஆயின், தம் புதல்வருக்கு எது மிக்க நன்மை பயக்கும் என்று ஆய்ந்தறியும் திறன் ஆங்கிலேயரிடை இருந்ததே அதற்குக் காரணம் என்று கூறலாம்.

அத்துடன் எந்தவகையில் குடும்பத்தை முன்னுக்குக் கொண்டுவர முடியும் என்று அறிந்து, செயல்படுத்தும் திறன் ஆங்கிலேயரிடை காணப்பட்டதும் ஒரு காரணம் எனலாம். தந்தை இறந்தபின் எல்லா நிலங்களையும், பெரும்பான்மையான செல்வத்தையும் மூத்த மகனே அடையும் பழக்கம், பெரிய அளவில் சொத்துகள் வளர்வதற்கு வழிசெய்தது. ஹானேவர் (Hanover) வம்சத்தினர் காலத்தில் பெரும் சொத்துகளை உடையவர்கள் நாட்டுப்புறங்களில் காணப்பட்டனர்.

பிரபுக்களின் இளைய புதல்வர்கள் பண்ணைவீட்டிலே சோம் பேறித்தனமாகக் காலம் கழிக்கவில்லை. அவர்கள் அப்படி விடப் பட்டிருந்தால் பண்ணை வருமானத்திலிருந்து செலவு செய்யவேண்டி யிருந்திருக்கும். ஐரோப்பாவில் இருந்த பிரபுக்களின் புதல்வர்கள் வேறு ஒருவரிடம் வேலைக்கமர்ந்து பணிபுரிவதை அவரது அந்தஸ் துக்குக் குறைவானது என்று எண்ணி, குடும்ப வருமானத்தையே தங்கள் செலவிற்கும் எதிர்பார்த்துக்கொண்டு இருந்தனர். ஆனால், இங்கிலாந்தில் இருந்த பிரபுக்களின் இளைய புதல்வர்கள் பண்ணை வீட்டை விட்டுச் சென்று, வியாபாரம் செய்தல், வழக்கறிஞராகப் பணிபுரிதல் ஆகிய வழிகளில் செல்வம் சேர்த்தனர். அனேகமாக இப்படி வெளியில் சென்றவர், வீட்டிலேயே தங்கியிருந்த தங்கள் தமையன்மாரைவிட அதிக செல்வராகவும், செல்வாக்குடையவ ராகவும் தங்கள் வாழ்க்கையை அமைத்துக்கொண்டனர். அவர்கள் நாட்டுப்புறங்களில் நிலங்களை வாங்கித் தங்கள் பிற்கால வாழ்க் கையை அங்கே கழிக்கலாயினர். தாங்கள் நாட்டுப் புறங்களில் தோன்றியவராதலால், அங்கேயே அவர்களது பிற்கால வாழ்க் கையைக் கழித்தனர்.

அயல்நாட்டவர்கள், ஜென்ட்ரிகள் நாட்டுப்புறங்களில் வாழ விரும்பியதை நினைந்து ஆச்சரியப்பட்டனர். 'ஒவ்வொருவரும் நாட்டுப்புறங்களுக்கு ஓடிவிடுகின்றனர். சிலரே பெரிய நகரங் களிலும், சிறிய நகரங்களிலும் வசிக்கின்றனர். அச் சிலரைத் தவிர, மற்றவர்கள் நகரங்களில் வாழ்வதைப் பெரிதாக நினைக்கவில்லை என்று அயல்நாட்டவர் கூறினர். (ஸ்டார்க்கி எழுதிய நூலில் பக்கம் 93; Starkey's England, Temp. H. VIII, E.E.T.S., p. 93.) லண்டன் ஐரோப்பாவிலேயே அப்போது மிகப் பெரிய நகரமாகத் திகழ்ந்தாலும், இங்கிலாந்தில் வாழ்ந்துவந்தவர்கள் நாட்டுப் புறத்தில் உள்ளோரின் பழக்க வழக்கங்களையே விரும்பினர். இதற்குமாறாக ஃபிரான்சிலும், இத்தாலியிலும் ரோமானியர் ஆட்சியின்கீழ் மக்கள் நகர வாழ்க்கையில் விருப்புக் கொண்டவ ராயினர். நாட்டுப்புறத்தில் வாழும் இத்தாலியப் பிரபு ஒருவர்

என்ன நினைக்கிறார் என்று ராபர்ட் பிரௌனிங் (Robert Browning) கீழ்வருமாறு எடுத்துக் கூறுகிறார்.

> 'என்னிடம் தேவைக்குமேல் வேண்டிய செல்வம் இருக்குமானால் நான் நகரத்தின் நடுவே வசிப்பேன்.'
>
> ஸ்குவீர் வகுப்பினரைச் சேர்ந்தவர்கள் ஏழையானாலும் செல்வரானாலும் நாட்டுப்புறத்தில் வாழ்வதையே விரும்பினர்.

ஜென்ட்ரி வகுப்பினர் தங்கள் இளைய புதல்வர்களை வியாபாரிகளிடம் தொழில்கற்க அனுப்பிவைத்தது. அவர்களை வியாபாரத்தில் ஈடுபட்டுவந்த வகுப்பினரிலிருந்து பிரிக்காமல், இரு வகுப்பினரையும் இணைத்துவைத்தது. ஃபிரான்சில் இரு வகுப்பினரும் தங்களுக்குள் ஒருவிதச் சம்பந்தமும் வைத்துக்கொள்ளாமல் இருந்தது கி. பி. 1789-ல் ஏற்பட்ட புரட்சிக்கு ஒரு காரணமாயிற்று. ஃபிரெஞ்சுக்காரரைப்போல் அல்லாமல் இங்கிலாந்தில் வாழ்ந்த ஜென்ட்ரிகள் தங்களைப் பிரபுக்கள் என்று கூறிக்கொள்ளவில்லை. பிரபுக்களின் சபையில் அங்கத்தினராக இருந்தவர் மட்டுமே தங்களைப் பிரபுக்கள் என்று கூறிக்கொண்டனர். பண்ணை வீடுகளில் வாழ்ந்தவர்கள் அண்மையில் இருந்தவர்க்கும் நண்பர்களுக்கும் விருந்தளிப்பதில் ஆர்வம் உடையவராய் இருந்தனர். அவர்கள் தங்கள் புதல்வர்களில் ஒருவர் வியாபாரத்திலும், மற்றவர் வழக்கறிஞர் துறையிலும், மற்றும் ஒருவர் பண்ணையிலும் இருந்தார் என்பதைக் கூறிக்கொள்வதை அவமானமாகக் கருதவில்லை. நிலம் படைத்தவரும், முதல் வைத்திருந்தவரும் ஒருவருக்கொருவர் போட்டியில் ஈடுபட்டவர்போல் பேசிக்கொண்டாலும், ஒருவருக்கொருவர் உறவினராய் இருந்தனர். நிலம் படைத்தவரின் குடும்பத்தில் பிறந்தவர்கள் தொடர்ந்து நகரங்களில் வாழச் சென்றுகொண்டிருந்தனர். அதேசமயம் நகரங்களில் வாழ்ந்துவந்த செல்வம் படைத்தவர் நாட்டுப்புறங்களுக்குச் சென்று தங்கள் செல்வத்தைக் கொண்டு நாட்டுப்புறங்களைச் செழிப்படையச் செய்தனர்.

டியூடர், ஸ்டுவர்ட், ஹானோவர் ஆகிய வம்சத்தினரின் காலத்தில் செல்வரான வழக்கறிஞர்கள் கவுன்டிகள் என்ற பிரிவுகளில் வாழ்ந்துவந்த மக்களோடு கலந்தனர்; நாட்டுப்புறங்களில் நிலங்களை வாங்கி, அங்கே பண்ணை வீடுகளை அமைத்து அவர்கள் கவுன்டியில் இருந்த மக்களுடன் கலந்து வாழ்ந்தனர். கவுன்டிகளில் புதிய குடும்பங்களை ஏற்படுத்தியவர்களில், வியாபாரிகளை விட வழக்கறிஞர்களே எண்ணிக்கையில் அதிகமாவர். இப்படி நகரத்திலிருந்து நாட்டுப்புறங்களுக்குக் குடும்பங்கள் இடைக்காலத்திலேயே செல்லத் தொடங்கிவிட்டன. ஆறும் ஹென்றியின்கீழ்

நீதிபதியாயிருந்த ஒருவர் நார்ஃபோக்கைச் (Norfolk) சார்ந்த பாஸ்டன் (Paston) குடும்பத்தை உண்டாக்கினர். எட்டாம் ஹென்றி, அவர்தம் மக்கள் ஆகியோரின் அரசாட்சிக்காலத்தில் வழக்காடுவது மக்களின் இயல்பாக இருந்தபோது, வழக்கறிஞர்கள் நல்ல ஊதியத்தை அடைந்தனர். அவர்கள் அரசாங்க ஊழியர் ஆகவும் வேலைபார்க்க நல்ல சந்தர்ப்பம் கிடைத்தது. அரசியலிலும், அவையிலும் சட்டப்படிப்பு கற்றிருந்தவர் முன்னுக்குவர வாய்ப்பு இருந்தது. பேகன் (Bacon), செசில் (Cecil) குடும்பத்தினர் இவ்வாறுதான் முன்னுக்கு வந்தனர். சட்டமன்றங்களில் வழக்கறிஞராகப் பணியாற்றிக் கிடைத்த வருமானத்தைக்கொண்டுதான் பெரியனவும், சிறியனவும் ஆகித் தற்போதும் இங்கிலாந்தை அழகு செய்யும் பல அழகிய இல்லங்கள் கட்டப்பட்டன.

ஸ்குவீர்கள், வழக்கறிஞர்கள், வியாபாரிகள், இயோமென் வகுப்பினர் ஆகியோருக்குப் பொதுவான தொடர்பு ஒன்றிருந்தது. இவர்கள் அனைவரும் இடைக்காலத்திற்குப் பிற்பட்ட புதிய காலத்தைச் சேர்ந்தவர்கள் ஆவர். மறைந்துகொண்டிருந்த பண்ணை முறை ஆட்சிக்கொள்கையில் இவர்கள் விருப்பமில்லாது இருந்தனர். மேலும், இவர்கள் பிராடஸ்டென்ட் மதத்தை ஊக்கத்தோடும் நம்பிக்கையோடும் தழுவிவந்தனர். இடைநிலை வகுப்பினரின் குடும்பங்களுக்கு ஏற்றவகையில் மதத்தை உருவாக்கினர்.

பிராடஸ்டென்ட் மதக்கொள்கை, குடும்ப வாழ்க்கையையும், வியாபாரம் செய்வதையும் மேம்படுத்திக் கூறிற்று. ஆனல், இடைக்கால மதமோ, மணம் புரிந்துகொள்ளாமல் மற்றவரிட மிருந்து பிரிந்து, துறவியின் வாழ்க்கை வாழ்வதே உண்மையில் மதக் கோட்பாட்டின்படி வாழும் வாழ்க்கை என்று கூறிவந்தது. ஆரும் எட்வர்ட், எலிசபெத் அரசி ஆகியோரின் காலத்தில் பாதிரியார்கள் மணம் புரிந்துகொள்ள அனுமதி அளிக்கப்பட்டது, மக்கள் மனநிலையில் மாற்றம் ஏற்பட்டிருந்ததை எடுத்துக்காட்டுகின்றது. வீட்டிலேயே பிரார்த்தனை செய்வதும், பைபிளை வீட்டில் தாங்களே படிப்பதும் பிராடஸ்டென்ட் மதத்தில் அனுமதிக்கப்பட்டுள்ளன. இதைத்தவிரக் கிருத்தவ ஆலயங்களில் கூடியும் பிரார்த்தனைகள் நடத்தவேண்டியிருந்தது. இவ் வழக்கங்கள், முரணான கருத்துகள் கொண்ட பியூரிடன் (Puritan) மதத்தவரிடையேயும் காணப்பட்டன. டியூடர் வம்சத்தினரின் இறுதிக் காலத்திலும், ஸ்டூவர்ட் வம்சத்தினரின் காலத்திலும் பிரார்த்தனைப் புத்தகத்திற்காகப் போராடிய ஆங்கிலிகன் (Anglican) மதத்தவரிடையேயும் இக் கொள்கைகளைக் காணலாம். இங்கிலாந்தில் பிராடஸ்டென்ட் மதத்தவரிடையே வீட்டிலேயே பிரார்த்தனை நடத்துவதும்,

வீட்டிலேயே பைபிள் படிப்பதும் சாதாரண பழக்கமாய் இருந்தது. முதன்முதலில் ஸ்குவீர், இயோமென், வியாபாரிகள் ஆகியோரின் வீடுகளில் இது சாதாரண பழக்கமாக இருந்துவந்தது. பிறகு, இப் பழக்கம் ஏழைகளின் குடிசைகளிலும் சாதாரணமாகக் காணப் பட்டது.

ஆங்கிலேயரின் புதிய மதமானது தொழில்புரிவதை இலட்சிய மாகக் கொண்டது. இம் மதத்தினர் வியாபாரம் செய்வதையும், பயிர்த்தொழில் செய்வதையும் கடவுளுக்காகச்செய்யும் தொண்டு என்று நினைத்தனர். ஜியார்ஜ் ஹெர்பர்ட் (George Herbert) என்பார்.

'கடவுள் விதித்த முறைப்படி எவன் ஒருவன் அறையைச் சுத்தம் செய்கின்றானோ அவன் அத் தொழிலையும், அவன் பணியையும் சிறப்படையச் செய்கிறான்' என்று எழுதியுள்ளார்.

ஆறாம் எட்வர்ட், மேரிஅரசி ஆகியோரின் காலத்தில் இப் பழக்கங்களும் கருத்துகளும் மக்களின் மனத்தில் வித்திட ஆரம் பித்தன. அச் சமயத்தில்தான் கிரான்மர் (Cranmer) பிரார்த்தனைப் புத்தகத்தைத் தயாரித்துக்கொண்டிருந்தார். மேரி அரசியார் பிராடஸ்டென்ட் மதத்திற்காக உயிர்விட்டவர்களைத் தியாகிகள் என்று மக்கள் கருதும்படி செய்துவந்தார். மதஸ்தாபனத்தின் சொத்தை எட்டாம் ஹென்றி அபகரித்துக்கொண்டதால், அவர் ஏற்படுத்திய மதம் நேர்மையானதாகத் தோன்றவில்லை. பிராடஸ் டென்ட் மதத்தினர் தங்கள் மதத்திற்காக உயிரைத் தியாகம் செய்தபோது, பிராடஸ்டென்ட் மதத்தின் உயர்வு மக்களுக்குப் புலப் பட்டது. எலிசபெத் அரசி பட்டத்திற்கு வந்தபோது பைபிளும் பிரார்த்தனைப் புத்தகமும் புதிய சமுதாயத்தின் அடிப்படைப் பொருள்களாயிருந்தன.

ஒரு நாட்டின் அரசியல், சமுதாய அமைப்பு ஆகியவற்றை அந் நாட்டின் படை அமைப்புக்கொண்டு அறிந்துகொள்ளலாம். நூற்றாண்டுப் போரின்போது, இரண்டு விதமான படைகள் இருந்தன. உள்நாட்டுப் பாதுகாப்பிற்காகவும், ஸ்காட்லாந்தி யரின் படைஎடுப்பைச் சமாளிக்கவும், வட்டாரங்களில் கட்டாய ராணுவ சேவை இருந்துவந்தது. ஃபிரான்சுடன் போரிடுவது, நாட்டைப் பாதுகாப்பதைவிடக் கடினமான காரியமாக இருந்ததால் போர்ப்பயிற்சி பெற்ற போர்வீரர்கள் தேவைப்பட்டனர். இவர் களைப் பிரபுக்கள் சம்பளம்கொடுத்து வைத்திருந்தனர். அரசன் பிரபுக்களுக்குப் பணம்கொடுத்து அவரது படையின் தொண்டைப் பெற்றுவந்தான். இப்படி இரண்டு விதமாகப் படை திரட்டுவது,

ஏழாம் ஹென்றி, எட்டாம் ஹென்றி ஆகியோரின் ஆட்சிக்காலத்திலும் தொடர்ந்து இருந்துவந்தது. இருப்பினும் ஒரு வேற்றுமை இருந்தது. ரோஜாப்பூ அடையாளப்போரின் காலத்தில், அரசர்கள் பிரபுக்களின் படைபலத்தை அழித்து, அவர் நிலங்களை அபகரித்துக்கொண்டது, பிரபுக்களின் படைபலத்தைக் குறைத்தது, மேலும் அவ் வரசர்கள், ஆயுதம் தாங்கிய பணியாட்கள்கொண்ட படைகளைப் பிரபுக்கள் வைத்திருக்கக்கூடாது என்ற கொள்கை உடையராய் இருந்தனர்; அதனால் பிரபுக்கள் படை வைத்துக்கொண்டிருந்தது தங்கள் கொள்கைக்கு முரணானதாக அவர்களுக்குத் தோன்றியது. இருப்பினும் படையைத் திரட்டி, அதை எப்போதும் வைத்திருக்க முடியாததால், போர்க் காலங்களில்மட்டும் பிரபுக்களின்மூலம் படைகளைத் திரட்டச் செய்து, குறிப்பிட்ட தொகையை அவர்களுக்குக் கொடுத்துவிட்டு அப் படைகளை உபயோகப்படுத்திக்கொண்டனர். படை, போரின் போது அவசரமாகத் திரட்டப்பட்டதால், போர்வீரர்கள் கட்டுப்பாடற்றவராகவும், கலகம் செய்யக்கூடியவர்களாகவும், திறமையற்றவராகவும் இருந்தனர். பின்னர், டியூடர் வம்சத்தினர் ஐரோப்பாவுடன் போர்புரிந்தபோதுதான். இதைப் புரிந்து கொண்டனர். கிரெசி (Crecy), அஜின்கோர்ட் (Agincourt), என்ற இடங்களில் நிகழ்ந்த போர்களில் பிரபுக்களிடம் சேவை செய்து வந்த போர்வீரர்கள் பங்குகொண்டனர். ஆயின், டியூடர் வம்சத்தினரின் காலத்தில் பிரபுக்களின் படைகள் இருக்கவில்லை; அரசன் தானும் எந்தப் படையையும் வைத்திருக்கவில்லை.

அக் காலத்திலும், ஆங்கிலேயர் தேர்ந்த வில்லாளிகளாக இருந்ததால், துப்பாக்கிகள் உபயோகப்படுத்தப்படவில்லை. ஃபிளாடன் ஃபீல்டு (Flodden Field)என்ற இடத்தில் நடந்தபோரில் வெற்றிக்குக் காரணமாய் இருந்தவர் வில்லாளிகளே. வில்லையும் கோடரியையும் காலாட் படையினரும், வேலைக் குதிரைவீரர்களும் உபயோகித்துவந்தனர். பீரங்கிப் படையை அரசன் ஒருவனே வைத்துக்கொண்டிருந்தான். இதை அவன் முற்றுகை இடுவதற்கும், கலகக்காரர்களையோ அல்லது ஸ்காட்லாந்தியரையோ ஒடுக்கவும் உபயோகித்தான். உதாரணமாக லூஸ் கோட் ஃபீல்டு (Loose Coat Field), பின்கி க்ளு (Pinkie Cleugh) என்ற இடங்களில் நடந்த போர்களில் பீரங்கிப்படை உபயோகப்படுத்தப்பட்டது. இந்த நிலையில் கட்டாய ராணுவ சேவையின்மூலம் போரின்போது திரட்டப்பட்ட படையைக்கொண்டு, அரசன் உள்நாட்டுக் கலகங்களை அடக்கும்நிலையில் இருந்தான். ஆனால், இப்படித் திரட்டுவதில் ஒரு சிக்கல் இருந்தது. அரசன் மக்களால் விரும்பப்பட்டவனாய் இருக்கவேண்டும்.

அரசன் தனக்கே ஒரு படையை வைத்திராவிட்டாலும், கப்பற் படையை மெதுவாக உருவாக்கிக்கொண்டுவந்தான். போர்க் காலங்களில் வியாபாரிகளின் கப்பல்களைத் திரட்டி, நாட்டை எதிரியின் தாக்குதலிலிருந்து காப்பாற்றுவது தொடர்ந்து செய்ய முடியாத காரியமாக இருந்தது. எட்டாம் ஹென்றி இங்கிலாந்தின் கடற்படையைத் தோற்றுவித்தவர் என்று கருதப்படுகிறார். ஆயின் கப்பற்படையை உருவாக்கிய பெருமையில் ஏழாம் ஹென்றிக்கும் பங்கு உண்டென்று கூறலாம். கப்பற்படையைப் பிரத்தியேகமாகக் கவனிக்க, அரசாங்கத்தில் ஒரு பிரிவு ஏற்படுத்தப்பட்டது. கப்பற் படை ஒன்றும் உருவாக்கப்பட்டது. அரசன் கப்பற்படையின் செலவுகளை ஏற்றுக்கொண்டான். எட்டாம் ஹென்றி தன் செல்வத்தையும் மடங்களின் செல்வத்தையும் பெருவாரியாகக் கப்பற் படையின் வளர்ச்சிக்காகவே செலவிட்டார். அவர் கப்பல்கள் கட்டுவிப்பதுடன் நிற்கவில்லை. உல்விச் (Woolwich), டெப்ட் ஃபோர்ட் (Deptford) என்ற இடங்களில் கப்பல்துறைகளும் கட்டுவித்தார். இவ் விடங்கள் எதிரிகள் எளிதில் தாக்கமுடியாதனவாக இருந்தன. போர்ட்ஸ்மவுத் (Portsmouth) துறைமுகத்தைத் தன் கப்பற்படையின் இருப்பிடமாகச் செய்தார். ஃபால்மவுத் ரோட்ஸ் (Falmouth Roads) போன்ற துறைமுகங்களுக்கு மதில்களால் பாதுகாப்பு அளித்தார்.

போருக்குரிய கப்பற்படையை ஏற்படுத்துவது அவசியமாகப் பட்டது. கப்பற்போர்முறையிலும் மாற்றம் ஏற்பட்டுக்கொண்டு வந்தது. கப்பல்களில் பீரங்கிகளைக்கொண்டு எதிரிக் கப்பல்களைத் தாக்கும்முறை நடைமுறைக்கு வந்து கொண்டிருந்தது. பழங்கால எகிப்தியரும், கிரேக்கர்களும், அவருக்குப்பின் மற்றவர்களும், இடைக்காலத்தின் இறுதிவரை, தங்கள் கப்பல்களை எதிரிக் கப்பல்களுடன் மோதி அழிப்பதையே அறிந்திருந்தனர். பீரங்கிகளைக் கப்பலில் உபயோகப்படுத்தி வெற்றியடைய முடியும் என்பது, ஸ்பெயின் நாட்டுக் கப்பற்படையுடன் போர்புரிந்தபோது தான் முதன்முதலில் வெளிப்பட்டது. இப்படிப் பீரங்கிகளைத் திறமையுடன் உபயோகப்படுத்தித்தான் இங்கிலாந்து தன் கடல் ஆதிக்கத்தையும், பேரரசையும் நிலைநாட்டிற்று. இவற்றை ஏற்படுத்த எட்டாம் ஹென்றியின் கொள்கைதான் காரணமாய் இருந்தது.

டியூடர் வம்ச ஆட்சியின் ஆரம்பக் காலத்திலும், இடைக் காலத்திலும் பொருளாதார நிலை சீராக இல்லாதிருந்தாலும், மக்களின் வாழ்க்கைத்தரம் மெதுவாக உயர்ந்துகொண்டே வந்தது. எலிசபெத் அரசியின் அரசாட்சிக்காலத்தில் நாடு பொருளாதார நிலையில் அடைந்த முன்னேற்றம் நாட்டிலுள்ள

அனைவரும் செல்வம் பெருகிவாழ வழிசெய்தது. கி.பி. 1577-ல் வில்லியம் ஹாரிசன் (William Harrison) என்ற பாதிரியார், 'பிரபுக்கள், ஜென்ட்ரி வகுப்பினர் ஆகியோர் மட்டுமல்லாமல், தென்பகுதியில் அநேக இடங்களில் வாழ்ந்துவந்த ஏழைகளும் தங்கள் பொருளாதார நிலையில் உயர்ந்திருந்தனர்' என்று குறிப்பிட்டுள்ளார்.

'எங்கள் முன்னோர்களும் நாங்களும், ஒரு துணியால் மூடப்பட்ட வைக்கோல் மெத்தைகளின்மேல் துயில்வோம். முயலின் தோலால் ஆன போர்வையை மேலே போர்த்திக்கொள்வோம். தலையணைக்குப்பதிலாக உருண்ட மரத்துண்டை வைத்துப் படுப்போம். ஆட்டின் தோலால் ஆன படுக்கையும் தலையணையும் தமக்கு இருந்துவிட்டால், கிராமத் தலைவரின் அந்தஸ்தை உடையவராக எண்ணிக்கொள்வர். என் முன்னோர்களில் எவரேனும் பறவைகளின் சிறகால் ஆன படுக்கையில் படுத்திருந்தால், அது அபூர்வமான தொன்றாகும். தலையணைகள் பெண்களால் பிள்ளைப் பேற்றின்போதுதான் உபயோகிக்கப்பட்டுவந்தன. பணியாட்கள் மேலே போர்த்துக்கொள்ள ஏதாவது ஒன்றை வைத்திருந்தால், அவர்கள் நல்லநிலையில் உள்ளனர் என்று கருதப்பட்டனர். பணியாட்கள் வைக்கோலால் ஆன படுக்கையின்மேல் ஏதும் விரிக்காமல் படுத்தனர். அதனால் சிலசமயம் படுக்கையில் திணிக்கப்பட்டிருந்த வைக்கோல் அவரது உடலைப் புண்படுத்தும்.'

ஹாரிசன் என்பார், குடிசைகளில்கூட புகைபோக்கிகள் சாதாரணமாகக் காணப்பட்டன என்று குறிப்பிட்டுள்ளார். அத்துடன் 'நான் வசிக்கும் கிராமத்தில் இருக்கும் வயது முதிர்ந்தோர், அவர்கள் இளைஞர்களாக இருந்தபோது மலைப்பிரதேசத்தில் இருந்த கிராமங்களில் இரண்டு அல்லது மூன்று புகைப்போக்கிகளுக்குமேல் பார்க்கமுடியாது என்று கூறுவர் என்றும், பண்ணை வீடுகளிலும் பாதிரியார்கள் வசித்துவந்த வீடுகளிலும், புகைபோக்கிகள் இருந்தனஎன்றும், புகைபோக்கிகள் உண்ணும் அறையின் ஒரு பக்கம் இருந்தன என்றும் கூறுவர்', என்று எழுதியுள்ளார். விறகிற்குப் பதிலாக நிலக்கரியே வீடுகளில் உபயோகப்படுத்தியது புகைபோக்கிகளின் தேவையை அதிகரித்தன. செங்கற்களைக் கட்டட வேலையில் உபயோகப்படுத்துவது அதிகரிக்க அதிகரிக்கப் புகைபோக்கிகள் அமைப்பது சுலபமாயிற்று. வீட்டின் சுவர்கள் வேறு எந்தப் பொருளைக்கொண்டு கட்டப்பட்டிருந்தாலும், செங்கற்களைக்கொண்டு புகைபோக்கிகள் அமைக்கமுடிந்தது.

குடிசைகளும் பொதுவிடங்களும் மரத்தினாலேயே கட்டப்பட்டிருந்தன. அல்லது குறுக்கும் நெடுக்குமாக ஊன்றப்பட்ட மரங்

களுக்கு இடையில் களிமண்ணை நிரப்பி வீடுகளின் சுவர்கள் எழுப் பப்பட்டன. கற்கள் கிடைத்த வட்டாரங்களில் குடிசைகளைவிட, மேம்பட்ட வீடுகள் கற்களைக்கொண்டு கட்டப்பட்டன. கற்கள் கிடைக்காத பிரதேசங்களிலும், வீடுகட்டப் போதிய மரங்கள் கிடைக்காத பிரதேசங்களிலும் செங்கற்களை உபயோகித்து வீடுகள் கட்டுவது சாதாரணமாயிற்று. முக்கியமாகக் கிழக்குப் பிரதேசத் தில் இருந்த கவுன்டி என்ற பிரிவுகளில் வீடுகட்டுவதற்குச் செங்கற் கள் உபயோகப்படுத்தப்பட்டன.

ஹாரிசன் தன் வாழ்நாளில் ஏற்பட்ட மற்ருெரு மாற்றத்தையும் குறிப்பிட்டிருக்கிருர். மரத்தட்டுகளுக்குப்பதிலாக, ப்யூடர் (pewter) என்ற உலோகத்தால் செய்யப்பட்ட தட்டுகளும், மரத்திஞல் செய் யப்பட்ட, உண்ண உபயோகப்பட்டுவந்த சிறு கரண்டிகளுக்குப் பதிலாக, வெள்ளி அல்லது தகரத்திஞல் செய்யப்பட்ட கரண்டிகளும் உபயோகத்திற்கு வந்தன. குத்தியெடுத்து உண்ணவுதவும் முள் கரண்டிகள் உபயோகத்திற்கு அக் காலம்வரை வரவில்லை. எலிச பெத் அரசியே, கத்தியாலும் கரண்டியாலும் எடுக்கமுடியாததைத் தன்னுடைய நீண்ட விரல்களை உபயோகித்து எடுத்து உண்டார். அவரது ஆட்சிக்காலம்வரை ஒரு குடியானவன் வீட்டில் நான் கிற்கு மேற்பட்ட ப்யூடர் உலோகத்திஞல் செய்யப்பட்ட பொருள் களைக் காணமுடியாததாய் இருந்தது. அக் காலத்தில் பீங்கான் சாமான்களை ஆங்கிலேயர் அறிந்திருக்கவில்லை.

டியூடர் வம்சத்தினரின் ஆட்சிக்கால ஆரம்பத்தில் மக்கள் எளிய வாழ்க்கை வாழ்ந்துவந்தனர். அக் காலத்திற்குமுன் மக்க ளின் வாழ்க்கை அப்போதிருந்ததைவிடச் சில சமயம் இழிந்ததாக இருந்தது. எலிசபெத் அரசியின் காலத்திருந்த பாதிரியார் ஒருவர் குறிப்பிட்டுள்ளதுபோல், மக்களின் வாழ்க்கைநிலை மேம்பாடு அடைந்துகொண்டிருந்தது. பழங்காலத்தில் வீடுகளில் இன்ப வாழ்க்கைக்கான வசதிகள் இருக்கவில்லை. நாளாவட்டத்தில் கொஞ்சம் கொஞ்சமாகத்தான் மக்கள், வாழ்க்கை வசதிகளை ஏற் படுத்திக்கொண்டனர்.

எட்டாம் ஹென்றியின் காலத்தில், 'கோதிக்'(Gothic) கட்டடக் கலை மறைந்துவிட்டது என்று கூறலாம். ஆக்ஸ்ஃபோர்டில் 'கிரைஸ்டு சர்ச்' (Christ Church) என்று அழைக்கப்பட்ட ஆலயத் தின் கூடத்தை உல்சி (Wolsey) கட்டுவித்தார். கேம்பிரிட்ஜில் அரசரின் கல்லூரி (King's College) ஆலயத்தை எட்டாம் ஹென்றி கட்டுவித்தார். இக் கட்டடங்கள் கோதிக் கட்டடக் கலையின் சிறந்த எடுத்துக்காட்டுகளாகும். இவை கட்டப்பட்டபின் கட்ட டக் கலையில் ஒரு புதிய காலம் தோன்றியது. இத்தாலியக் கைத்

தொழிலாளிகள் நீண்ட சதுரவடிவில் அமைக்கப்பட்டிருந்த ஹாம்ப்டன் நீதிமன்றத்தின் (Hampton Court) கூடத்தைச் சுட்ட மண்ணுல் ஆன ரோமானியப் பேரரசர்களின் சிலைகளைக்கொண்டு அழகு செய்தனர். இச் சிலைகள் கிரேக்க ரோமானிய இலக்கியத்தில் காணப்பட்ட இலக்கணப்படி செய்யப்பட்டிருந்தன.

டியூடர் வம்சத்தினரின் காலத்தில் கிருத்தவ ஆலயங்கள் அதிகமாகக் கட்டப்படவில்லை. மடங்களில் இருந்த ஆலயங்கள் அழிக்கப்பட்டபோது, அவற்றிலிருந்து கிடைத்த கற்கள், ஈயம் முதலியவற்றைப் பிரபுக்களும், இயோமென் வகுப்பினரும் தங்கள் பண்ணை வீடுகளைக்கட்ட உபயோகப்படுத்திக்கொண்டனர். நாடு முழுதும் புதிய பண்ணை வீடுகள் கட்டப்பட்டும், விசாலமாக்கப்பட்டும் வந்தன. இவற்றில் அறைகள் விசாலமாகவும், வீட்டின் உட்புறங்களுக்குச் செல்லும் பாதைகள் நல்ல வெளிச்சமுள்ளவைகளாகவும், சிறிய சாளரங்களுக்குப்பதில் விசாலமான குறுக்கும் நெடுக்கும் வேலைப்பாடமைந்த சாளரங்களை உடையவையாகவும் இருந்தன. இவையெல்லாம் டியூடர் வம்சத்தினரின் காலத்தில் நாட்டில் இருந்த அமைதிநிலையையும், மக்களின் இன்ப வாழ்க்கையையும் எடுத்துக்காட்டுகின்றன. பெரிய பண்ணைவீடுகள் எல்லாப் பக்கங்களிலும் அடைக்கப்பெற்று, கோபுரம்போன்ற வாயில்களை உடையவையாயிருந்தன. இக் கட்டடங்கள் அனேகமாகச் செங்கற்களைக் கொண்டு கட்டப்பட்டன. எலிசபெத் அரசியின் காலத்தில் வீட்டைச் சுற்றி மதில்களைக்கட்டும் அவசியம் இல்லாதிருந்ததால் மூன்று பக்கங்களையுடைய திறந்த கூடங்களைக் கட்டினர்.

ஒவ்வொரு பண்ணைவீடும், மான்கள் தங்கக்கூடிய தோட்டங்களை உடையனவாய் இருந்தன. இத் தோட்டங்களுக்கு உயர்ந்த மரவேலிகள் அமைக்கப்பெற்றிருந்தன. சில வீடுகளில் இரண்டு வகை மான்கள் திரிவதற்கு இரண்டு தோட்டங்கள் இருந்தன. இதன் காரணமாகப் பண்ணைவீட்டிற்குச் சொந்தமான விளைநிலங்கள் அளவில் குறைந்தன. சிலசமயம் இத் தோட்டங்கள் கிராமத்திற்குச் சொந்தமான பொதுநிலங்களையும் உட்கொண்டிருந்தன. பிரபுக்களும் அவர் மனைவியரும், விருந்தினருடன், வேலியிடப்பட்ட இத் தோட்டங்களில், வேட்டை நாய்கள் துரத்திச்செல்ல, சுலபமாகக் குதிரைகளின்மேல் ஏறிக்கொண்டு மான்களை வேட்டையாடினர். இப்படி வீட்டிலிருந்தவர் வேட்டையாட ஜேன் கிரே சீமாட்டி (Lady Jane Grey) வீட்டினுள்ளே பிளேட்டோவின் நூலைப் படித்துக்கொண்டிருந்தார். தோட்டங்களுக்கு அப்பாலும் வேட்டையாடுவதற்குக் கணக்கற்ற மான்கள் இருந்தன. பினைன்ஸ் (Pennines), சிவ்வியாட்ஸ் (Cheviots) மலைச்சரிவுகளிலும் வடக்குப் பாகத்திலிருந்த கரம்பு நிலத்திலும் மான்கள் கூட்டம் கூட்டமாக

வாழ்ந்துவந்தன. தெற்குப் பாகத்திலும் காடுகளில் மான்கள் நிறைய இருந்தன. இம் மான்கள் விளைநிலங்களில் அடிக்கடி புகுந்து பயிர்களை மேய்ந்தன. இம் மான்கள் பயிரைப் பாழ் செய்யாமல் தடுக்க நிலங்களுக்கு வேலியமைப்பது உதவியாக இருந்தது.

வேட்டையாடுவதென்றால், நரிகளைமட்டும் வேட்டையாடுவதன்று. குடியானவர்கள் நரிகளை வேட்டையாட அனுமதிக்கப்பட்டிருந்தனர்.[1] பிரபுக்கள் மான்களை வேட்டையாடினர். அவர்கள் குதிரைமேல் இருந்தும், ஓடியும் முயல்களை வேட்டையாடினர். வேகமாக ஓடும் பஸ்டார்ட்ஸ் (bustards) என்ற ஒருவகைப் பறவைகளை வேட்டையாடக் குதிரையாட்களுக்கு வேட்டை நாய்கள் உதவின. பிறர் வேட்டை நிலத்தில் புகுந்து மான்களை வேட்டையாடுவது மக்களிடையே சாதாரண பழக்கமாக இருந்தது. ஆக்ஸ்ஃபோர்டு கலாசாலையில் படித்துவந்தவர்கள் ராட்லி பார்க் (Radley Park) என்ற தோட்டத்தில் பகிரங்கமாகப் புகுந்து வேட்டையாடினர். இதைத் தடுக்கமுடியாததால் அத் தோட்டத்தின் சொந்தக்காரர் அத் தோட்டத்தைச்சுற்றி இருந்த வேலியையே எடுத்துவிட்டார். பறவைகளை வேட்டையாட வேட்டைப் பறவைகளையும், வில்லையும் அம்பையும் உபயோகப்படுத்தினாலும், சில சமயங்களில் துப்பாக்கிகளை உபயோகித்தனர். ('மெர்ரி ஓய்ப்ஸ்' என்ற நூலில் பார்க்கவும்; Merry Wives, IV, 2,58.) வலைகளைக் கொண்டும் ஒட்டிக்கொள்ளும் பசைகளைக் கொண்டும் பறவைகளையும், மிருகங்களையும் பிடித்துவந்தனர். மாமிசத்திற்காகவும், பொழுதுபோக்கிற்காகவுமே இவ்வாறு வேட்டையாடினர்.

ஆங்கிலேயர், குதிரைகளிடமும் நாய்களிடமும் மிகுந்த அன்பாய் இருந்தனர் என்பது ஐரோப்பாக் கண்டம் முழுதும் தெரிந்து இருந்தது. பலவகையான குதிரைகளையும் நாய்களையும் கணக்கில்லாது வளர்த்துவந்தனர். குதிரைகள் பருத்து இருந்தன. வேகமாக ஓடக்கூடியதும், வேட்டையாடத் தகுந்ததும், பருமனற்றதுமான குதிரைகள் கிழக்கு நாடுகளில் இருந்து இங்கிலாந்திற்கு அதுவரை கொண்டுவரப்படவில்லை. பிரபுக்கள் கனமான கவசம் தரித்த வீரர்களைத் தாங்கிச் செல்லக்கூடிய குதிரைகளை வைத்திருந்தனர். பண்ணைகளில் இருந்த குதிரைகள், மாடுகளைப்போல் நிலத்தை உழுவதற்கும் பயன்படுத்தப்பட்டன. அக் காலத்தில் ஒருவர் மற்றவரை எதிர்த்துத் தனிப்போர் புரிவதை ஒரு விளையாட்

[1] 'இருப்பினும், எலிசபெத் அரசியின் ஆட்சிக்காலத்தில் சில வட்டாரங்களில் நரிகளையும், பாட்ஜர் (badger) என்ற மிருகங்களையும் வேட்டையாடும் உரிமை பிரபுக்களுக்கே இருந்தது. இப்படி இருந்திராவிட்டால் குடியானவர்கள் நரிகளையும், பாட்ஜர்களையும் வேட்டையாடித் தீர்த்திருப்பார்கள் என்று ஹாரிசன் அவரது நூலில் கூறியுள்ளார். (Book III Ch. IV)

டாகக் கருதினர். இதைச் சீமாட்டிகளும் மற்றவரும் கண்டு ரசித்தனர்.

'கற்களைக்கொண்டு அமைக்கப்பட்ட உறுதியான இடத்தில் கைகளில் வாள்களுடன், வாயில் நுரைதள்ளும் குதிரைகளின்மேல் இருந்து தங்கள் அன்பிற்குரிய மங்கையர் காணத் தனித்துப் போர் புரிந்தனர்,' என்று எட்டாம் ஹென்றியின் அவையில் இருந்த கவிஞர் சர்ரே (Surrey) எழுதியுள்ளார். அரச அவையிலே நடந்த மற்றப் பொழுதுபோக்குகளைப்பற்றியும் அவர் கீழ்வருமாறு குறிப் பிட்டுள்ளார்:

'நடனம் ஆடுவதும் ஒருவர் கதைசொல்ல மற்றவர் நீண்ட நேரம் அதைக் கேட்டுக்கொண்டிருப்பதும் அவையினரிடையே காணப்பட்ட பொழுதுபோக்குகள் ஆகும். புலிகளும் கண்டு வெட்கும்முறையில் கூரிய நோக்குடன் உரத்த குரலில் ஒருவருக் கொருவர், உரிமைகளைப்பற்றிச் சர்ச்சைசெய்வதும் அவரிடையே வழக்கமாய் இருந்தது. டென்னிஸ் ஆடுவதும் உண்டு. மாடங் களில் நின்று வேடிக்கைபார்க்கும் தங்கள் அன்பிற்குரிய மங்கை யரின் நன்மதிப்பைப்பெறக் கவனமாக ஆடுவதும் உண்டு.'

இளைஞரான ஹென்றி, விளையாட்டுகளிலும், வில் வித்தை யிலும் தேர்ச்சி பெற்றிருந்தார். அவையிலே மேற்குறிப்பிட்ட கேளிக்கைகளுக்கு அவரது ஊக்கமும் உற்சாகமுமே காரணமா யிருந்தன. நாட்டின் கொள்கைகளை உருவாக்குவதை, நம்பிக் கைக்குப் பாத்திரமான அமைச்சர் உல்சியிடம் விட்டுவிட்டுக் கேளிக்கைகளில் தம் நேரத்தையும், தம் தகப்பனர் திரட்டிவைத்த பொருளையும் செலவிட்டார். அரச அவையில் இல்லாதவரின் வாழ்க்கையைப் பயனற்றதாகக் கருதவேண்டும் என்று டச் ஸ்டோன் (Touchstone) என்பார் குறிப்பிட்டுள்ளார். அரச அவை யில் பிரபுக்கள் காதல் வாழ்க்கையிலும், அரசியலிலும் அனுபவம் அடைந்தனர். அத்துடன் இசை, கவிதை, இலக்கியம் ஆகிய கலை களிலும் ஆர்வம் கொள்ளச் சந்தர்ப்பங்கள் இருந்தன. அரச அவை யில் இருந்து நாட்டுப்புறங்களுக்கு அவர்கள் சென்றபோது அங்கே தாம் கற்றவற்றைப் புகுத்தினர். இலக்கிய மறுமலர்ச்சிக் காலத்தில் இத்தாலி நாட்டில் காணப்பட்ட கலை, கல்வி, பண்பாடு முதலியன ஆங்கிலேயப் பிரபுக்களையும் அவையினரையும் கவர்ந்தன. இவற் றைக் கற்பதில் ஆங்கிலேயப் பிரபுக்கள் ரோஜாப்பூ அடையாளப் போரின் காலம்தொட்டு, எலிசபெத் அரசியின் ஆட்சிக்காலம்வரை ஆர்வம் காட்டினர். கல்விகற்ற பாதிரியார்க்கும், கற்காத பிரபுக் களுக்கும் இடையே இடைக்காலத்தே காணப்பட்ட வேற்றுமை மறைந்துகொண்டிருந்தது. பிரபுக்கள் சகல கலைகளையும் கற்றவராக

இருக்கவேண்டும் என்ற கருத்து மேலோங்கியிருந்தது. இக் கருத்து ஸர் தாமஸ் வியாட் (Sir Thomas Wyatt) என்ற அரசாங்க அதிகாரியின் வாழ்க்கைக் காலத்திற்கு (1503—1542) இரண்டு தலைமுறைக்கு முன் மக்கள் மனத்திலே எழுந்து, சர் பிலிப் சிட்னி (Sir Philip Sydney) என்பார் காலத்தில் வேரூன்றியது. ஸர் தாமஸ் வியாட் அரச அவையில் இருந்து நீங்கியபின், நாட்டுப்புறத்தில் இருந்த தமது இல்லத்தில் வசிக்கலானார். அரச அவையில் எவ்வளவு ஆனந்தமாக வாழ்ந்தாரோ அப்படியே அங்கும் வாழ்ந்தார்.

'நான் இருக்குமிடம் வேட்டையாடுவதற்கு ஏற்றதாய் இருக்கிறது. வேட்டையாடமுடியாத காலங்களில் வீட்டில் இருந்துகொண்டே ஏதாவது ஒரு நூலைப் படிப்பேன். மூடுபனியிலும், பனி உறைந்திருந்தபோதும் நான் வில்லை எடுத்துக்கொண்டு ஒருவரும் செல்லாத இடங்களுக்குச் சென்று வேட்டையாடுவேன். காற்று வீசும் விரும்பத்தக்க தங்குமிடங்களில் என் விருப்பம்போல் இருப்பேன். கென்டிலும் (Kent) கிரிஸ்டென்டோமிலும் (Christendome) தன்னை மறந்து ஆழ்ந்த படிப்பில் இருப்போரில் ஒருவனைகப் படிப்பதிலும், பாட்டெழுதுவதிலும் காலத்தைக் கழிப்பேன்.'

வியாட்டைப்போன்ற பல கலைகளையும் அறிந்திருந்த பிரபுக்கள் பலர் ஏற்கெனவே நாட்டுப்புறங்களில் காணப்பட்டனர். [இ. கே. சேம்பர்ஸ், இ. எம். டில்லியார்டு ஆகியோர், சர் தாமஸ் வியாட்டைப்பற்றி எழுதியுள்ள நூல்களில் பார்க்கவும்; (E. K. Chambers' and E. M. Tillyard's books on Sir Thomas Wyatt.)]

அரச அவையை அலங்கரிக்க, ஹால்பீன் (Holbein) ஹென்றியின் உருவப்படங்களையும், அவரது பிரதான பிரபுக்களின் உருவப் படங்களையும் தமது கலைக்கூடத்தில் உருவாக்கிக்கொண்டிருந்தார். உருவப்படங்களைக்கொண்டு கூடங்களை அலங்கரிக்கும் பழக்கம் அரச அவையிலிருந்து நாட்டுப்புற வீடுகளுக்கும் பரவியது. அவ் வீடுகளில் குடும்பத்தினரின் உருவப்படங்கள் திரைச் சீலைகளுடன் இடம்பெற்றன. சில குடும்பத்தினரின் உருவப் படங்கள் அரச அவையில் இருந்த ஓவியர்களால் தீட்டப்பெற்றவையாய் இருந்தன. ஆனால், அனேகப் படங்கள், வட்டாரங்களில் வாழ்ந்துவந்த ஓவியர்களால் தீட்டப் பெற்றவைகளேயாகும். பிரபுக்கள், சீமாட்டிகள் ஆகியோரின் உருவப்படங்களில் அவர் முகங்கள் வெள்ளை நிறத்தில் தீட்டப்பெற்றன. அவர்கள் சுவர்களிலிருந்து தங்கள் சந்ததியாரைப் பார்ப்பதுபோல் தோன்றியது. இப்படி ஓவியங்கள் தீட்டப்படுவது கான்ஸ்புரு (Gainsborough), ரெய்னல்ட்ஸ் (Reynolds) ஆகியோரின் காலம்வரை நீடித்திருந்தது.

அரசரின் ஆலயத்தின் இசை (Chapel Royal) ஐரோப்பாவி லேயே மிகச் சிறந்ததாக இருந்தது. அரசன் முதல் அவையி லிருந்த அனைவரும் பாட்டுகள் இயற்றி அதற்கு இசை அமைத் தனர். டியூடர் வம்சத்தினரின் காலத்தில் இங்கிலாந்து, இசை யிலும் உணர்ச்சிப் பாடல்களிலும் மிகச் சிறந்து விளங்கியது. இதற்குக் காரணமாயிருந்தது எட்டாம் ஹென்றியின் அவை என்று கூறலாம். நாடு முழுதும் ஆண்களும் பெண்களும் பாட்டு இயற்று வதும், இசை அமைப்பதும், பாடுவதுமாக இருந்தனர். இலக்கிய மறுமலர்ச்சி தோற்றுவித்த மகிழ்ச்சி பொங்கும் மன நிலையே இதற்கு அடிப்படைக் காரணமாகும். இயற்றப்பட்ட பாட்டுகள் கிராமத் தில் இருந்தோரின் மன நிலையைச் சித்திரிப்பதாகவும், பறவைகளின் இன்குரலைப்போன்ற இசையுள்ளனவாகவும் இருந்தன. இப் பாடல் களில் இருந்துதான் ஷேக்ஸ்பியர் காலத்து இலக்கியமும் இசையும் உருவாயின.

டியூடர் வம்சத்தினரின் ஆட்சிக்கால ஆரம்பத்தில் வெனிஸ் நகரம் கிழக்கே இருந்த ஆசிய நாட்டுப் பொருள்களை ஐரோப்பிய நாடுகளுக்கு விற்றுச்செழித்துக்கொண்டிருந்தது. கிழக்கு நாடுகளில் இருந்து வந்த விலையுயர்ந்த பொருள்கள் ஒட்டகங்களின்மேல் ஏற்றப்பட்டு, கிழக்கு மத்தியதரைக்கடல் பிரதேசங்களுக்குக் கொண்டுவரப்பட்டன. அங்கிருந்து வெனிஸ் நகரத்துக் கலங் களில் அப் பொருள்கள் இங்கிலாந்துக்குக் கொண்டுசெல்லப் பட்டன. கிழக்கு நாட்டுப் பொருள்களை இங்கிலாந்தில் விற்று விட்டுத் திரும்புகையில், இங்கிலாந்தின் கம்பளியை வெனிஸ் நகர வியாபாரிகள் அக் கலங்களில் கொண்டுசென்று ஏட்ரியாடிக் கடல் நாடுகளுக்கு (Adriatic Sea) விற்றுவந்தனர். இதனால் வெனிஸ் நகரமாந்தர் ஆங்கிலேயருக்கு மிகவும் அறிமுகமானவர் களாக இருந்தனர். கொலம்பஸ் (Columbus) அட்லாண்டிக் சமுத் திரத்திற்கு அப்பால் இருந்த பிரதேசங்களைக் கண்டுபிடித்தார். இதற்கு ஐந்து ஆண்டுகளுக்குப்பின், தன் நாட்டவரான ஜான் காபெட் (John Cabot) என்பார், 1497-ல் நியூஃபவுண்ட்லாந்து (Newfoundland) பிரதேசத்தைக் கண்டுபிடித்ததை வெனிஸ் நகர வியாபாரி ஒருவர் தம் நகரத்தவர்க்கு அறிவித்தார்.

'வெனிஸ் நகரவாசியான அவர் (ஜான் காபெட்) பிரிஸ்டல் துறைமுகத்திலிருந்து 700 காததூரம் கப்பலில் சென்று அங் கிருக்கும் பிரதேசங்களைக் கண்டுபிடித்தார். அவர் அப் பிரதேசங் களின் கரை ஓரமாக 300 காததூரம் பயணம் செய்தார். அப் பிரதேசத்தில் மனிதர் எவரையும் அவர் காணவில்லை. ஆனால், மரங்கள் வெட்டப்பட்டு இருந்ததைக் கண்ணுற்றார். இதிலிருந்து அங்கே மக்கள் இருக்கவேண்டும் என்று ஊகித்தார். அவர்

அங்கிருந்து இங்கிலாந்து திரும்பித் தம் மனைவியுடன் வாழ்ந்து வருகிறார். அவருக்கு மிக்க மரியாதைகள் செய்யப்படுகின்றன. பட்டினால் ஆன உடையை அவர் தரிக்கின்றார். ஆங்கிலேயர்கள் பைத்தியக்காரர்கள்போல் அவர் பின்னால் திரிகின்றனர். அவர் தாம் கண்டுபிடித்த புதிய பிரதேசத்தில் இங்கிலாந்தின் கொடியை யும், வெனிஸ் நகரத்தின் சின்னமாகச் செயின்ட் மார்க்கின் (St. Mark) கொடியையும் ஒருங்கே நாட்டினார். அதனால் 'நமது கொடியானது வெகு தூரத்திற்கு அப்பாலும் பறந்துகொண்டிருக் கிறது' என்று எழுதினார்.

வெனிஸ் நகரத்திற்குச் சொந்தமான கப்பலில், செயின்ட் மார்க்கின் கொடி நியூஃபவுண்டுலாந்திற்கு எடுத்துச் செல்லப்பட வில்லை. அப்படிச் செய்யாதது முக்கியமான விளைவை ஏற்படுத் தியது. காபெட் நியூஃபவுண்டுலாந்தைக் கண்டுபிடித்த பிறகு, இரண்டு தலைமுறைகளுக்குத் தொடர்ந்து எவ்வித முயற்சியும் செய் யப்படவில்லை. காபெட்டால் அப் பிரதேசம் கண்டுபிடிக்கப் பட்டது, வெனிஸ் நகரின் செல்வநிலையைச் சீர்கெடச் செய்தது. அதேசமயம் இங்கிலாந்து செல்வத்தில் செழிப்பதற்கான ஒரு தொடக்கம் ஏற்பட்டது எனலாம். ஆங்கிலேயர், ஃபிரெஞ்சுக்காரர், போர்த்துகீசியர் ஆகியோர் நியூஃபவுண்டுலாந்துக் கரையோரம் காட்மீன்பிடிப்பதைத்தவிர வேறு ஒன்றும் செய்யவில்லை.[1]

டியூடர் வம்சத்தினரின் ஆட்சிக்காலத் தொடக்கத்திலும், இடைக்காலத்திலும், இங்கிலாந்தின் வியாபாரம் தொடர்ந்து பால்டிக் கடலில் (Baltic Sea) இருந்து ஸ்பெயின், போர்த்துகல் ஆகிய நாடுகள்வரை விரிந்திருந்தது. முக்கியமாக நெதர்லாந்து (Netherlands) என்று அழைக்கப்பட்ட தாழ்ந்த நாடுகளுடன் ஆங்கி லேயர் வியாபாரம் நடத்திவந்தனர். அங்கே ஐரோப்பாவின் முக்கிய வியாபார ஸ்தலமான ஆன்ட்வெர்ப் (Antwerp) நகருடன் ஆங்கிலேயர் வியாபாரத் தொடர்பு கொண்டிருந்தனர்,

பதினைந்தாம் நூற்றாண்டில் ஸ்டேபிள் (Staple) கழகத்தார் கச்சாக் கம்பளி ஏற்றுமதி செய்துவந்ததைவிடத் தனிப்பட்ட வியாபாரிகள் அதிகமாக ஆடையை ஏற்றுமதி செய்துவந்தனர். லண்டன் நகரத்தின் வியாபாரம் மொத்தத்தில் அதிகரித்துக்

[1] ஆழமான கடல்களில் மீன்பிடித்தல் டியூடர் ஆட்சிக்காலத்தில் தொடக் கத்தில் அதிகரித்தது. அதனால் ஆங்கிலேயர் கடல்களில் பிரயாணம் செய்வதில் மேலும் பழக்கமுள்ளவராயினர். அப் பழக்கம் நாட்டின் பாதுகாப்பிற்கு உதவியது. ஹெர்ரிங் (herring) மீன்கள் பால்டிக் (Baltic) கடலிலிருந்து வடக்குக் கடலை (Narth Sea) அடைந்தன. அதனால் ஹெர்ரிங் மீன்பிடிப்பது முக்கியத்துவம் பெற்றது. 'எங்கள் பாட்டனார்களின் காலத்தில் நார்வே (Norway) நாட்டின் கரையோரம் உலவிவந்த ஹெர்ரிங் மீன்கள், எங்கள் காலத்தில் இங்கிலாந்தின் கரையோரம் உலவின' என்று காம்டன் (Camden) குறித்துள்ளார்.

கொண்டேவந்தது. ஏழாம் ஹென்றி, எட்டாம் ஹென்றி ஆகியோரின் அரசாட்சிக் காலத்தில் ஆங்கிலேயரின் கலங்கள் மத்தியதரைக் கடலில் கிரீட் (Crete) தீவுவரை சென்று வந்தன. கி.பி. 1486-ல் இத்தாலியில் இருந்த பைசா (Pisa) நகரத்தில் ஆங்கிலேயரின் வியாபாரத்தைக் கவனித்துக்கொள்ள ஆங்கிலேய அதிகாரி ஒருவர் நியமிக்கப்பட்டார். பைசா நகரில் ஆங்கிலேய வியாபாரிகள் ஃபிளாரன்ஸ் (Florence) நகர் வியாபாரிகளுடன் ஒன்று சேர்ந்துகொண்டு வெனிஸ் நகரத்தாரின் வியாபாரத் தனியுரிமையைத் தகர்த்தெறிந்துகொண்டிருந்தனர். எனினும், இங்கிலாந்தின் பொருள்கள் இத்தாலிக்கு அந் நாட்டுக் கலங்களிலேயே கொண்டு செல்லப்பட்டன.

இதற்கிடையில் போர்த்துகீசியர்கள், ஆஃபிரிக்கக் கண்டத்தின் தெற்குக் கோடியில் இருந்த குட்ஹோப் முனையைச் (Cape of Good Hope) சுற்றிக் கடல்மார்க்கமாகக் கிழக்கு நாடுகளுக்கு ஒரு வழியைக் கண்டுபிடிக்க முயற்சி செய்துகொண்டிருந்தனர். இது வெனிஸ் நகரத்தின் வியாபாரத் தனியுரிமையைத் தகர்த்தெறிந்தது. ஆங்கிலேயர்களும் போர்த்துகீசியரின் உரிமைக் கூவலைப் பொருட்படுத்தாமல், ஆஃபிரிக்கக் கண்டத்தின் மேற்குக் கரையோரம் கலங்களைச் செலுத்திவந்தனர். கி.பி. 1528ஆம் ஆண்டிலேயே வில்லியம் ஹாக்கின்ஸ் (William Hawkins) என்பார் கினியா (Guinea) பிரதேசத்தில் இருந்த நீக்கிரோ ஜாதியாருடன், வியாபாரத் தொடர்பை ஏற்படுத்தினார். அதன்மூலம் ஆங்கிலேயருக்குத் தந்தம் கிடைத்தது. பிற்காலத்தில் ஹாக்கின்ஸின் சந்ததியார் தீரமிக்க மாலுமிகளாகத் திகழ்ந்தனர். அவரைவிடப் பெயர்பெற்ற அவர் மகன் ஜான் (John) நீக்கிரோக்களுடன் வியாபாரம் செய்வதற்குப் பதிலாக, எலிசபெத் அரசியின் அரசாட்சிக் காலத்தில் நீக்கிரோக்களையே ஏற்றுமதி செய்தார். இப்படிச் செய்யவே, நீக்கிரோக்களுடன் செய்துவந்த வியாபாரம் தடைப்பட்டது. நீக்கிரோக்கள் வெள்ளையரைத் தங்கள் ஜென்ம விரோதிகள் என்று கருதத் தலைப்பட்டனர். ஆறும் எட்வர்ட், மேரி ஆகியோரின் ஆட்சிக்காலத்தில் மேற்கு ஆஃபிரிக்கப் பிரதேசங்களுடன் வியாபாரம் பெருகிவந்தது. அத்துடன் வடமேற்கு ஆஃபிரிக்காவின் கரையோரமிருந்த கானரி தீவுகளில் (Canaries) இருந்து வடக்கே வெள்ளைக்கடல் துறைமுகமான ஆர்க்காஞ்சல் (Archangel) வரை ஆங்கிலேய வியாபாரிகள் தங்கள் கலங்களில் சென்றுவந்தனர். நிலமார்க்கமாக மாஸ்கோவிற்குக்கூடச் சென்றனர். எலிசபெத் அரசியின் ஆட்சிக்காலத்திற்குமுன். அட்லாண்டிக் சமுத்திரத்திற்கு அப்பால், நியூஃபவுண்டுலாந்து கரையோரம் காட்மீன் பிடிப்பதைத்தவிர, வேறு எதையும் செய்ய ஆங்கிலேயர் முயற்சி செய்யவில்லை.

ஆடை வியாபாரம் தொடர்ந்து எப்போதும்போல் ஐரோப்பாவின் பழைய வியாபார ஸ்தலங்களுடன் நடந்துவந்தாலும், அது அதிகரித்துக்கொண்டேவந்தது. நகரங்களிலும், அதைவிடக்கிராமங்களிலும் ஆடை உற்பத்தி செய்வது அதிகரித்துவந்தது. பதினைந்தாம் நூற்றாண்டில் முன்னைவிடக் குறையாமலும் அதிகரிக்காமலும் இருந்த ஆடை வியாபாரம் திரும்பவும் மிகுந்த அளவில் அதிகரித்தது. இதன் விளைவாக நிலங்கள் மேய்ச்சலுக்காக ஒதுக்கப்பட்டதை எதிர்த்து மக்கள் முறையிடுமுன்பே, அயல் நாட்டவர் இங்கிலாந்தில் நம்பமுடியாத அளவிற்கு இருந்ததைக் கண்டு வியந்தனர்.

கச்சாக் கம்பளியைக்கொண்டு ஆடை தயாரிக்கப் பலவிதத் தொழில்களில் ஈடுபடவேண்டியிருந்தது. ஒரு வகையான தொழிலைச் செய்துவந்த தொழிலாளிகளைக்கொண்டு மற்றத் தொழில்களை நடத்த முடியவில்லை. மற்றும் ஒரே இடத்திலும் அத்தனை தொழில்களும் நடத்தப்படவில்லை. முதல் வைத்திருந்த நிர்வாகிகள் கச்சாக் கம்பளியை ஒருவகைத் தொழிலாளியின் கையிலிருந்து மற்றொருவகைத் தொழிலாளியின் கைக்கு மாற்றி, முடிவில் ஆடையாக வெளிவரச் செய்தனர். இப் பலவகைத் தொழிலாளரும் பலவிடங்களில் இருந்ததால் கம்பளியோ அல்லது நெய்யப்பட்ட ஆடையோ ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு எடுத்துச் செல்லப்பட்டுவந்தது. இத் தொழிலாளிகளை நிர்வாகியானவர் கூலிக்கு வேலைசெய்யச் செய்தார்; சில சமயங்களில் தலைமைக் கைத்தொழிலாளிகளிடமிருந்து நெய்யப்பட்ட ஆடைகளை வாங்கிக்கொண்டார். ஆறும் எட்வர்டின் காலத்தில் வில்லியம் ஃபாரஸ்ட் (William Forrest) என்பார், எங்கும் காணப்பட்ட ஆடை வியாபாரத்தைப்பற்றியும், அவ் வியாபாரிகள் பலவிதத் தொழிலாளரை வேலைக்கமர்த்திக்கொண்டதைப்பற்றியும் கவிதையாகப் பாடியுள்ளார்.

'இங்கிலாந்தில் எந்த நகரமும், கிராமமும் ஆடை வியாபாரத்தில் ஈடுபடாமல் இருக்கவில்லை. ஒரே இடத்தில் ஆடை உற்பத்தி செய்யப்படாவிட்டாலும், நகரத்தின் பல பாகங்களில் ஒவ்வொரு விதத் தொழில் செய்யப்பட்டுவந்தது. ஓர் இடத்தில் கம்பளி நூல் நூற்பவர், மற்றோர் இடத்தில் ஆடை நெய்பவர், மற்றும் ஓர் இடத்தில் சாயம் தோய்ப்பவர், சுத்தம் செய்பவர் என்று இருந்தனர். இதனால் ஆடை வியாபாரி தனக்கு வேண்டிய ஆடையை அதே ஊரில் பெறமுடிந்தது.'

வில்லியம் ஃபாரஸ்ட், குறைந்துகொண்டே வந்த கம்பளி ஏற்றுமதிக்குப் பதிலாக ஆடை வியாபாரத்திற்கு ஊக்கமளிப்பதை ஆதரித்துப் பின்வருமாறு குறிப்பிட்டார்:

'ஸ்டேபிள் கழகத்தினர் வெளிநாடுகளுடன் செய்துவந்த கம்பளி வியாபாரம் நிறுத்தப்படட்டும் அதற்குப் பதிலாக ஆடை வியாபாரத்தைச் செய்துவந்த வியாபாரிகள், அதன் உரிமையைப் பெறட்டும். சுத்தம் செய்பவர், கம்பளி நூல் நூற்பவர் முதலிய பலவிதத் தொழிலாளர்கள் இதற்கு வேண்டியதைச் செய்யட்டும்'.

அநேகமாக, நெசவுத்தொழில் வீடுகளிலேயே நடைபெற்று வந்தது. வீட்டின் அறையிலோ அல்லது அடுப்படியிலோ தறியை அமைத்துத் தறியின் சொந்தக்காரரே கம்பளி ஆடையை நெய்து வந்தார். மேற்கே இருந்த சிற்ருறுகளின் கரையில் அமைக்கப் பட்டிருந்த ஆடையைச் சுத்தம்செய்யும் ஆலைகள், தற்காலத்தில் காணப்படும் தொழிற்சாலைகளைப்போல் இருந்தன. ஆடை நெய் வதும் தற்காலத்தில் தொழிற்சாலைகளில் உற்பத்தி செய்யப்படுவது போல் செய்யத் தொடங்கப்பட்டுவிட்டது என்று கூறலாம். ஆடை வியாபாரி ஜான்வின்ச்கோம்பு (John Winchcomb) என்பார் பெருத்த செல்வராக இருந்தார். கி.பி. 1520-ல் அவர் இறந்தபோது, அவரைத் தலைவனுகக்கொண்டு 'ஜாக் ஆஃப் நியூபரி' (Jack of Newbury) என்ற பெயருள்ள கதைப்பாடல் இயற்றப்பட்டது. அவரது புகழ் டிக் விட்டிங்டனின் (Dick Whittington) புகழைப் போல் மேலோங்கி நின்றது. அவர் தம்மிடம் தொழில் கற்றுவந்த நூறுபேர்களுடன் ஃபிளாடன் ஃபீல்டு(Flodden Field)போரில்கலந்து கொண்டார். அத்துடன் அரசனைத் தன் வீட்டிற்கு அழைத்து விருந்தளித்து உபசரித்தார். எலிசபெத்தின் அரசாட்சிக் காலத்தில் இயற்றப்பட்ட கதைப்பாட்டு, அவரது ஆடை நெய்யும் தொழிற் சாலையைச் சித்திரிக்கின்றது.'

'ஒரே ஒரு நீண்ட அகலமான அறையில் இருநூறு தறிகள் இருந்தன. இருநூறு தொழிலாளிகள் வரிசையாக அமர்ந்து ஆடை நெய்தனர். ஒவ்வொருவர் பக்கத்திலும் சிறுவர் மகிழ்ச்சியுடன் மெத்தைகள் தைத்துக்கொண்டிருந்தனர். மற்றோர் இடத்தில் நூறு பெண்கள் மகிழ்ச்சியுடன் பாடிக்கொண்டே கம்பளியைச் சுத்தம் செய்துகொண்டிருந்தனர்.'

அவர்களின் மகிழ்ச்சியையும், எண்ணிக்கையையும் கவிஞர் மிகைப்படுத்திக் கூறி இருக்கலாம். (இ. பவர். 'மிடீவல் பீபில்' என்ற நூலில் பக்கம் 158; E. Power, Mediaeval People, p. 158.) நியூபரியைச்சார்ந்த ஜாக் என்று மேலே குறிப்பிடப்பட்டவர், ஒரு செல்வம் கொழித்த குடும்பத்தைத் தோற்றுவித்தவர் ஆவார். அவருடைய மகன், 'பில்கிரிமேஜ் ஆஃப் கிரேஸ்' (Pilgrimage of Grace) என்றழைக்கப்பட்ட, அரசனுக்கு எதிராகத் தோன்றிய இயக்கத்தின்போது, அரசனுக்கு உதவி செய்தார். மடங்கள் அழிக்

கப்பட்டபோது, மடங்களுக்குச் சொந்தமான நிலங்களை விலைக்கு வாங்கினர். பார்லிமெண்டில் அங்கத்தினராகவும் இருந்தார்.

உள்நாட்டு வியாபாரம், வெளிநாட்டு வியாபாரத்தைவிட மிகவும் அதிக அளவில் நடந்துவந்தது. இங்கிலாந்து தொடர்ந்து, செல்வர் உபயோகித்துவந்த பொருள்களைமட்டுமே இறக்குமதி செய்துவந்தது. தவிர ஆங்கிலேயர் தங்களுக்குத் தேவையான உணவு, ஆடை முதலியவற்றைத் தாங்களே உற்பத்தி செய்து கொண்டனர். வீடுகள் கட்டுவதற்குக்கூட, உள்நாட்டுப் பொருள்களே உபயோகிக்கப்பட்டன.

தற்காலத்தில் பளுவான பொருள்களை ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு அனுப்புவதற்கு ரயில்கள் உதவுவதுபோல், அக் காலத்தில் நதிகள் உதவின. உள்நாட்டில் இருந்த யார்க் (York), கிளஸ்டர் (Gloucester), நார்விக் (Norwich), ஆக்ஸ்ஃபோர்டு, கேம்பிரிட்ஜ் ஆகிய நகரங்களும் துறைமுகங்கள் என்று கூறும் வண்ணம் நதிக்கரையில் இருந்தன.

ஊர்களுக்குள், ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குப் பொருள்களை எடுத்துச்செல்ல எப்போதும் சாலைகள் பயன்படுத்தப்பட்டன. தற்கால நிலையைக்கொண்டு நோக்கின் சாலைகள் மோசமான நிலையில் இருந்தன எனக் கூறலாம். எனினும், அவை மக்களின் உபயோகத்திற்குத் தகுந்தனவாக இருந்தன. கோடைக் காலத்தில் வண்டிகளில் பொருள்களை ஏற்றிச்செல்ல முடிந்தது. மழைக்காலத்தில் குதிரைகளின்மேல் சுமையை ஏற்றிக்கொண்டு சாலைகளில் சென்றனர். வியாபாரத்திற்காகப் பயன்படுத்தப்பட்ட சாலைகள், இங்கிலாந்தின் பல பாகங்களில் காணப்பட்ட சுண்ணும்பு அல்லது உறுதியான நிலத்தில் அமைக்கப்பட்டிருந்தன. சதுப்பு நிலத்தைக் கடந்து செல்லவேண்டிய இடங்களில் மேடாக, அமைக்கப்பட்ட பாதைகளைக்கொண்டு கடந்தனர். இத்தகைய பாதைகள் சிலவற்றைத் தங்கள் உபயோகத்திற்காக வியாபாரிகளே அமைத்தனர். லீலண்டு (Leland), வென்டோவருக்கும் (Wendover) ஐலஸ்பரிக்கும் (Aylesbury) இடையில் இருந்த அத்தகைய பாதையைக் குறிப்பிட்டுள்ளார்.

கனமான பொருள்களை நெடுந்தூரம் எடுத்துச் செல்வதற்கு முழுவதும் நதிகளே உபயோகப்படுத்தப்படவில்லை. லண்டன் நகருக்கு சவுத்தாம்ப்டன் (Southampton) ஒரு துறைமுகமாக உதவிவந்தது. சிலவகையான பொருள்கள் சவுத்தாம்ப்டனில் இறக்கப்பட்டு, லண்டனுக்குச் சாலைவழியாக அனுப்பப்பட்டன. கென்ட் பிரதேசத்தைச் சுற்றிக்கொண்டு லண்டனுக்குச் செல்ல வேண்டிய அவசியத்தை நீக்கவே இப்படிச் செய்யப்பட்டது.

# 6. ஷேக்ஸ்பியரின் காலத்தில் இங்கிலாந்தின் நிலை

## (கி. பி. 1564—1616)

### பாகம் ஒன்று

நகரங்கள் — நாட்டுப்புறம் — பல வகுப்பினரும், அவரது வாழ்க்கை நிலையும் — வேல்ஸ் — வடக்கே கவுன்டிகள் என்று அழைக்கப்பட்ட பிரிவுகள் — எலிச பெத் அரசியின் காலத்தில் வீட்டு வாழ்க்கை — சத்திரங்கள் — சமுதாயத்தில் ஒருவருக்கும் மற்றொருவருக்கும் இருந்த தொடர்பு—மக்கள் படை—சட்டம்— அமைதிக் காவலர்கள் — ஏழைகளைப் பாதுகாக்கும் சட்டம்.

(எலிசபெத் அரசி, கி.பி. 1558—1603, ஆர்மடா கி.பி. 1588 )

டியூடர் வம்சத்தினரின் ஆட்சிக் காலத்தின் இடையில் பொருளாதாரம், சமயம் ஆகியவற்றின் காரணமாக நாட்டில் நிலவிய அமைதியின்மைக்குப் பிறகு, இங்கிலாந்தின் பொற்காலம் தோன்றியது. வரலாற்றில் பொற்காலங்கள் என்று குறிப்பிடப் படுபவை அனைத்தும் பொற்காலங்கள் என்று கூறுவதற்கில்லை. அவை நெடுநாள் நீடித்ததும் இல்லை. ஷேக்ஸ்பியர் ஒரு சிறந்த நாட்டிலே, ஒரு சிறந்த காலத்தில் அதிர்ஷ்டவசமாகத் தோன் றினர் எனலாம். இதன் காரணமாக அவரால் தம் இலக்கியத் திறனைச் சிறந்தமுறையில் பயன்படுத்த முடிந்தது. காடுகள், நிலங்கள், நகரங்கள் அனைத்தும் உன்னதநிலையில் இருந்தன. கவிஞனின் திறன் பூரணத்துவம் அடைவதற்கு இத்தகைய நிலை தேவைப்பட்டது. அவரது நாட்டினர் தங்களுக்குத் தேவைப் பட்ட பொருள்களை இயந்திரங்களைக்கொண்டு செய்துகொள் ளாமல், தங்கள் கைத்திறனைக்கொண்டு அழகிய பொருள்களைத் தொடர்ந்து உருவாக்கிவந்தனர். மக்களின் மனம் இடைக்காலத்தில்

இருந்த கட்டுப்பாடுகளால் மேலும் கட்டுண்டு இருக்கவில்லை. அத்துடன் பியூரிடானியரிடை (Puritans) காணப்பட்ட மதவெறி அல்லது தற்காலத்தில் காணப்படும் அத்தகைய மனநிலை ஆகிய எவற்றுலும் அவர்கள் பாதிக்கப்படவில்லை. எலிசபெத் அரசியின் ஆட்சிக்காலத்தே வாழ்ந்த ஆங்கிலேயர் தங்கள் வாழ்க்கையை விரும்பினர்; கனவுலக வாழ்க்கையில் விருப்பு இல்லாதிருந்தனர். அனேகர் ஏழ்மைநிலையில் இருந்து உயர்ந்ததன் காரணமாக அவரது மகிழ்ச்சியைச் சிரிப்பிலும், இசையிலும், பாட்டிலும் வெளியிட்டனர். ஆங்கில மொழியானது அழகியதாகவும் உணர்ந்ததை நன்ருக எடுத்துரைக்கக் கூடியதாகவும் வளர்ந்திருந்தது. ஸ்பெயினுடன் கடற்போர் நடந்தபோதும் அமைதியும், ஒழுங்கும் நாட்டில் நிலவிவந்தது. அரசாட்சி மக்களை அடக்கி, அவரது செல்வத்தைக் கொள்ளை கொள்வதாய் இருக்கவில்லை. அதனுல் அரசாட்சிக்கு மக்கள் பயந்து வாழவில்லை. எலிசபெத் அரசிக்கு அரசியல்வாதிகள் செய்துவந்த பணியாகவே அவ் வரசாட்சி விளங்கிற்று. நாட்டின் ஒற்றுமை, செழிப்பு, சுதந்திரம் ஆகியவற்றின் அடையாளமாக அரசி விளங்கிஞள். அரசியலில் பங்கு கொண்டோர், அத்தகைய மங்கைக்குத் தாங்கள் தொண்டு செய்வதாகக் கருதிவந்தனர்.

இத்தாலியில் தோன்றி அப்போது நசித்துக்கொண்டிருந்த இலக்கிய மறுமலர்ச்சியானது, இங்கிலாந்தில் முழுமையை எய்தியது. ஏராஸ்மசின் (Erasmus) காலத்தில் இலக்கிய மறுமலர்ச்சி அறிஞர்களிடமும் அரசனின் அவையிலும்தான் காணப்பட்டது. ஆனுல், ஷேக்ஸ்பியரின் காலத்தில் பொதுமக்களையும் எட்டிவிட்டது. பைபிளும், கிரேக்க ரோமானிய இலக்கியங்களும், கற்றறிந்த சிறுபான்மையோருக்கு மாத்திரம் தெரிந்திருக்கவில்லை. இலக்கணப் பள்ளிகளில் இருந்த இவ் விலக்கியங்கள் நாடக மேடையையும் எட்டின; நூல் வடிவிலிருந்து கதைப் பாட்டாகவும் மிளிர்ந்தன. நீதிபதி அப்பியசின் கொடுமை (Tyranny of Judge Appius) அரசஞன மைதாசின் பரிதாபநிலை (The miserable state of King Midas) ஆகியவற்றை விளக்கும் கதைகள் மற்றும் கிரேக்க ரோமானியக் கதைகள் ஆகியவற்றை நாடகமூலமாக மக்கள் அறிந்தனர். பழங்கால யூதர்கள், கிரேக்கர், உரோமானியர் ஆகியோரின் வாழ்க்கையைப்பற்றி ஆங்கிலேயர் உணர்ந்துகொண்டனர். அவரது வாழ்க்கைநிலை பழங்காலத்திற்கே உகந்தது என்று நினைத்து ஒதுக்கவில்லை. அதற்குமாருக அவரது வாழ்க்கை வழியைத் தங்கள் வாழ்க்கைக்கு ஏற்றவாறு அமைத்துக்கொண்டனர். புளுடார்ச் (Plutarch) எழுதிய ஜூலியஸ் சீசர் (Julius Caesar) ஆண்டனி (Antony) ஆகியவர்களின் வாழ்க்கை

வரலாற்றை அடிப்படையாகக்கொண்டு ஷேக்ஸ்பியர் அவர்களைப் பற்றி நாடகங்களை உருவாக்கினர். மற்றவர்கள் பைபிளை எடுத்துக் கொண்டு ஆங்கிலேயருக்குப் புதிய சமய வாழ்க்கையை உரு வாக்கிக் கொடுத்தனர். கடல்களில் (seas) புயலைக்கூடப் பொருட் படுத்தாமல் கலங்களைச் செலுத்திவந்த ஆங்கிலேய மாலுமிகள், சமுத்திரங்களிலும் (oceans) தங்கள் கலங்களை எலிசபெத்தின் ஆட்சிக் காலத்தில் செலுத்த முற்பட்டனர். துணிகரமான இளைஞர்கள், புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட நாடுகளின் கரை யோரம் வியாபாரம் செய்தும், அந் நாட்டு மக்களுடன் போர் புரிந்தும் செல்வத்தைத் தேடத் தலைப்பட்டனர். பிளான்டாஜனட் (Plantagenet) வம்சத்தினரின் காலத்தில் ஆங்கிலேயர் ஃபிரெஞ்சு நாட்டைக் கவர்வதிலேயே கண்ணும் கருத்துமாயிருந்தனர். ஆனால், அப்போது சமுத்திரங்களுக்கு அப்பாலும் தங்கள் வலிமை யால் நாடுகளைக் கைப்பற்றமுடியும் என்ற எண்ணம் அவர்கள் உள்ளத்தில் எழுந்தது. ஸ்பெயின் நாட்டுக் கப்பற்படையான ஆர்மடாவை (Armada) ஆங்கிலேயர் முரியடித்தபிறகு, கடல் ஆதிக்கத்தால் தங்கள் நாட்டின் சுதந்திரத்தைப் பாதுகாத்துக் கொள்ள முடியும் என்பதை உணர்ந்தனர். ஒரு பேரரசை நிறுவி அதன் ஆட்சிப்பொறுப்பை ஏற்கும் அவசியம் அப்போது ஏற் பட்டிருக்கவில்லை.

இதுவரை ஆங்கிலேயரின் வாழ்க்கையை ஒரு கோணத்தி லிருந்து கண்டோம். இப்போது மற்றொரு கோணத்திலிருந்து நோக்குவோம். பல நூற்றாண்டுகளாக ஆங்கிலேயரிடையே இருந்துவந்த கொடிய பழக்கங்கள் எளிதிலும் விரைவிலும் மறையக்கூடியனவாக இருக்கவில்லை. எலிசபெத்தின் ஆட்சிக் காலத்தில் வாழ்ந்த ஆங்கிலேயர், ஆஃபிரிக்கக் கண்டத்தி லிருந்து மற்ற இடங்களுக்குத் தங்கள் கலங்களில் நீக்கிரோக்களை ஏற்றிச்சென்று அடிமைகளாக விற்றனர். அப்படி அவர்கள் செய்தபோது நீக்கிரோக்களின் உரிமைகளைப்பற்றி அவர்கள் நினைத்துப்பார்க்கவில்லை.

அயர்லாந்து மக்களையும் இரக்கமில்லாமல் கொன்றும் கொள்ளை யிட்டும் வந்தனர். அப்படிச் செய்யும்போதும் அம் மக்களின் உரிமைகளை எண்ணிப் பார்த்தனர் அல்லர். ஜான் ஹாக்கின்ஸ் (John Hawkins), எட்மண்டு ஸ்பென்சர் (Edmund Spenser), போன்ற சில சிறந்த ஆங்கிலேயர்கள்கூட, தாங்கள் முறையே கோல்டுகோஸ்ட் பிரதேசத்திலும், அயர்லாந்திலும் புரிந்த செயல் கள் விஷவித்துகளை ஊன்றும் என்று உணரவில்லை. உள் நாட்டி லேயே சில மங்கையர் மாயக்காரிகளென்று அண்டையில் வாழ்ந் தோரால் வேட்டையாடப்பட்டனர். ஜெஸ்யூஇட் (Jesuit) மதப்

பிரசாரகர்கள் உயிருடன் துண்டுதுண்டாக வெட்டி வீழ்த்தப் பட்டனர்; யூனிடேரியன் (Unitarian) மதத்தினர் உயிருடன் எரித்துச் சாம்பலாக்கப்பட்டனர்; பியூரிடன் (Puritan) மதத்தவர் தூக்கில் இடப்பட்டனர்; அல்லது இரும்புச் சுமையைத் தாங்கிச் சிறையில் வாழ்ந்தனர். ஆனால், எலிசபெத்தின் ஆட்சிக்காலத்தில் மேற்கூறியவாறு அவதிப்பட்டவர்களின் எண்ணிக்கை ஐரோப்பாவின் மற்ற பாகங்களில் அவதிப்பட்டோரின் எண்ணிக்கையோடு ஒப்பிட்டுப்பார்த்தால் குறைவாகவே இருந்தது. மதத்தின் பெயரால் ஸ்பெயின், ஃபிரான்சு, நெதர்லாந்து (Netherlands) ஆகிய நாடுகளில் இரக்கமில்லாமல் எண்ணிறந்த மக்கள் கொல்லப்பட்டு வந்தனர். அநேகர் மதத்திற்காக உயிரைத் தியாகம் செய்தனர். மற்ற நாடுகள் படுகுழியில் வீழ்ந்துகொண்டு இருந்தபோது, இங்கிலாந்தை அத்தகைய படுகுழியில் விழாமல் தடுத்துவந்த எலிசபெத் அரசியின் ஆட்சியை ஆங்கிலேயர் மெச்சினர்.

எட்டாம் ஹென்றியின் அரசாட்சிக் காலத்தில் இங்கிலாந்தைச் சுற்றிப் பார்வையிட்டு, லீலண்டு (Leland) எழுதி வைத்ததைப் போல், எலிசபெத்தின் அரசாட்சிக் காலத்தில் இங்கிலாந்தில் பழம் பொருள் சேகரிப்போரில் மிகச் சிறந்தவரான வில்லியம் கேம்டன் (William Camden), சுற்றிவந்து தம்முடைய 'பிரிட்டானியர்' என்ற நூலில் தாம் கண்ணுற்றவைகளை எழுதிவைத்துள்ளார். அவரது காலத்திற்குச் சற்றுமுன் வில்லியம் ஹாரிசன் (William Harrison) என்ற பாதிரியாரும், அவருக்குச் சற்றுப்பின்னே வாழ்ந்த ஃபைனஸ் மாரிசன் (Fynes Moryson) என்ற பிரயாணியும், தங்கள் வாழ்நாளில், தாங்கள் மக்களிடம் கண்டதை எழுதிச் சென்றுள்ளனர். ஷேக்ஸ்பியர் மக்கள் வாழ்க்கையைப்பற்றி விரித்துக் கூறியவற்றுடன் மேற்குறிப்பிட்டவர்கள் எழுதிச் சென்றதை ஒப்பிட்டுப் பார்ப்பதில் நாம் மகிழ்ச்சியடையலாம்.

இங்கிலாந்திலும், வேல்சிலும் (Wales) எலிசபெத் ராணியின் ஆட்சிக்கால முடிவில் நூறு மில்லியன் மக்களுக்குமேல் வாழ்ந்தனர் என்று கூறலாம். இந்த எண்ணிக்கை தற்போது இருக்கும் ஜனத் தொகையில் பத்தில் ஒரு பங்காகும். அப்போது இருந்த ஜனத் தொகையில் ஐந்தில் நான்கு பங்கினர் நாட்டுப்புறங்களில் வாழ்ந்து வந்தனர். குறிப்பிடத்தகும் அளவிற்குக் கைத்தொழிலில் ஈடுபட்டிருந்தனர். கிராமங்களில் தேவைப்பட்ட பொருள்கள் அனைத்தையும் அவர்கள் தயாரித்துக்கொடுத்தனர். அத்துடன் ஆடை வியாபாரிகள், சுரங்கவேலை செய்பவர் ஆகியோரைப் போன்றவர் கிராமத்தின் தேவைக்குமட்டுமன்றி நாடுமுழுவதும் தேவைப்பட்ட பொருள்களைத் தயாரித்துக் கொடுத்தனர். ஜனத் தொகையில்

பெரும்பான்மையோர் பயிர்தொழிலில் அல்லது ஆடு வளர்க்கும் தொழிலில் ஈடுபட்டிருந்தனர்.

நகரங்களில் வாழ்ந்த சிறுபான்மையோர்களில், அனேகர் சிறிது நேரத்திற்காவது பயிர்த்தொழிலில் ஈடுபட்டிருந்தனர். மாகாணங்களில், நகரங்கள் ஒவ்வொன்றிலும் சுமார் 5,000 பேர்கள் இருந்தனர். நகரங்களில் ஜனத்தொகை அதிகமாக இருக்கவில்லை. கண்ணுக்கினிய பூந்தோட்டங்களும், பழத்தோட்டங்களும், பண்ணை வீடுகளும், வரிசையாய்நின்ற கடைகளோடு காட்சியளித்தன. சிறிய நகரங்களும், துறைமுகங்களும் சீர்குலைந்துகொண்டிருந்தன. கடல் பின்னுக்குச் சென்றதும், நதிகளின் முகத்துவாரங்கள் அடைபட்டதும், பெரிய கலங்களின் எண்ணிக்கை அதிகரித்த தால், பெரிய துறைமுகங்கள் தேவைப்பட்டதும், ஆடை தயாரிக்கும் தொழிலும், மற்றத் தொழில்களும் ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு மாற்றப்பட்டுவந்ததும் பழைய கைத்தொழில் ஸ்தலங் களும் வியாபார ஸ்தலங்களும் சீரழிவதற்குக் காரணங்களா யிருந்தன. நதியின் முகத்துவாரத்தில் இருந்த செஸ்டர் (Chester) துறைமுகம், நதி முகத்துவாரம் தூர்ந்துவிட்டதால், கலங்களின் போக்குவரத்திற்குப் பயனற்றதாய் ஆகியது.

இங்கிலாந்து முழுவதையும் எடுத்துக்கொண்டால் ஜனத் தொகை அதிகரித்துக்கொண்டேவந்தது. முக்கியமாக வடக்கு பாகத்தின் தலைநகரான யார்க்கிலும் (York), நார்விச் (Norwich), பிரிஸ்டல் (Bristol) ஆகிய நகரங்களிலும் ஜனத்தொகை அதிகரித்தது. நெதர்லாந்தில் ஆல்வா (Alva) என்பவரின் கொடுமைகளைப் பொறுக்கமுடியாமல், அங்கிருந்து வெளியேறிக் கொண்டிருந்த கைத்தொழிலில் தேர்ந்த மக்களை நார்விச் நகரம் வரவேற்றது. லண்டன் நகருக்குக் கட்டுப்பட்டிருக்காமல் தானே உள்நாட்டு வெளிநாட்டு வியாபாரத்தில் ஈடுபட்டிருந்தது பிரிஸ்டல் நகரம். மேற்கூறிய நகரங்கள் ஒவ்வொன்றிலும் 20,000 மக்கள் இருந்தனர். அட்லாண்டிக் சமுத்திரத்திற்கு அப்பாலிருந்த நாடு களுடன் நடத்திவந்த வியாபாரம், மேற்குப் பாகத்தில் இருந்த பிட்ஃபோர்டு (Bideford) போன்ற துறைமுக நகரங்களைச் செல் வத்தில் செழிக்கச் செய்தது.

லண்டன் நகரம் உள்நாட்டு, வெளிநாட்டு வியாபாரத்தைச் சிறிய நகரங்களுக்குப் பாதகமான விதத்தில் அதிகரித்துக் கொண்டே போயிற்று. ஏற்கெனவே இங்கிலாந்திலும் ஐரோப் பாவிலும் ஒரு நகரம் எந்த அளவு இருக்கவேண்டும் என்பதை லண்டன் எடுத்துக்காட்டிக்கொண்டிருந்தது. டியூடர் வம்சத்தைச் சார்ந்த மேரிஅரசி இறக்கும்போது, லண்டனில், 1,00,000

மக்கள் இருந்தனர். எலிசபெத் அரசி இறக்கும்பொழுது அந் நகரம் 2,00,000 மக்களை உடையதாயிருந்தது எனலாம். நகரைச்சுற்றி இருந்த பழைய சுவர்களுக்கு வெளியே வாழ்ந்தவர்களும் லண்டன் நகர உரிமைகளை உடையராயிருந்தனர். நகரத்தின் மத்தியில் திறந்தவெளிகள் இருந்தன. வீடுகள், முற்றங்கள், தோட்டங்கள், கால்நடைக் கொட்டில்கள் ஆகியவற்றை உடையனவாய் இருந்தன. கொள்ளைநோய் அடிக்கடி தோன்றினும், வியர்வை கொட்டும் புதிய வியாதி தோன்றினும் டியூடர் வம்சத்தினரின் காலத்தில் லண்டன் நகரம் மற்ற நகரங்களைவிடச் சுகாதாரம் உள்ள தாகவும், இறந்தவரின் எண்ணிக்கை, பிறந்தவரின் எண்ணிக் கையைவிடக் குறைந்ததாகவும் இருந்த நகரமாகவும் விளங்கியது. பதினெட்டாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் லண்டனில் ஜன நெருக்கம் அதிகமாக இருந்தது. ஆனால், அப்போது லண்டன் நகரில் ஜனநெருக்கமில்லை. ஜனநெருக்கத்தின் காரணமாகப் பதினெட்டாம் நூற்றாண்டில் மக்கள் அனேகமாகச் சேரிகளில் நெருங்கிச் சுகாதாரமற்ற வகையில் வாழ்ந்துவந்தனர். அக் காலத்தில் கொள்ளைநோயால் மக்கள் பாதிக்கப்படாவிட்டாலும், அம்மை, டைபாயிடு போன்ற வியாதிகளால் பாதிக்கப்பட்டனர்.

எலிசபெத்தின் ஆட்சிக்காலத்தில் லண்டன் நகரம் செல்வத் திலும், செல்வாக்கிலும், அளவிலும் பெருகி இருந்தது. பதினாறும் நூற்றாண்டில் பிராடெஸ்டென்ட் மதம் நிலைபெறவும், பதினேழாம் நூற்றாண்டில் பார்லிமெண்ட்டின் செல்வாக்குப் பெருகவும், லண்டன் நகரம் காரணமாயிருந்தது. நகரத்தின் முக்கிய பாகம் வியாபாரி களின் இருப்பிடமாயிருந்தது. நகரில் வியாபாரிகளின் செல்வாக் கிற்குப் போட்டியாக எந்த வகுப்பினரும் இருக்கவில்லை. இடைக் காலத்திலிருந்த பெரிய மடங்கள் மறைந்துவிட்டிருந்தன. லண்டன் நகர மக்கள் தாங்களே தங்கள் மதத்தைத் தங்களுக்கு ஏற்ற வகையில் கிருத்தவ ஆலயங்களிலும் தங்கள் வீட்டிலும் அமைத் துக்கொண்டனர். அரசனின் அதிகாரத்திற்கும் பிரபுக்களின் அதிகாரத்திற்கும் லண்டன் நகரினுள் ஆதரவு இருக்கவில்லை. அரசனின் அதிகாரத்திற்கு நகருக்கு வெளியே ஒயிட் ஹாலிலும் (Whitehall), வெஸ்ட்மின்ஸ்டரிலும் (Westministry), டவரிலும் (Tower) ஆதரவு இருந்தது. இடைக்காலந்தொட்டு லண்டனில் இருந்த தங்கள் இல்லங்களைவிடுத்து, தேம்ஸ் நதிக்கரையில் ஸ்டிராண்டு (Strand) என்ற இடத்திலும், அரச சபையை அடுத்தும் பார்லிமெண்டு கூடும் இடத்தை அடுத்துமுள்ள இடங்களில் பெரிய பிரபுக்கள் வசிக்கத் தொடங்கினர். நகராட்சி உரிமை பெற்றிருந்த லண்டன் நகரம் இங்கிலாந்தினுள்ளே தனித்த ஒரு சிறு நாடுபோல் இருந்தது. அரசன், பிரபுக்கள் ஆகியோரின் பலம் இங்கிலாந்தின் பல பாகங்களில் மேலோங்கி இருக்கையில்,

லண்டன் நகரிலே மத்திய வகுப்பினரின் பலம் மேலோங்கி இருந்தது. லண்டன் நகரைக்கண்டு இங்கிலாந்தின் மற்றப் பாகங் களும் லண்டனின் நிலையை அடைய முற்பட்டன.

லண்டன் நகரில் உள்ளவர்களுக்குத் தேவையான உணவுப் பொருளை அளிப்பது, கவுன்டி என்ற பிரிவுகளின் (counties) நோக்கமாய் இருந்துவந்தது. தலைநகரில் இருந்த மக்களுக்கு உணவுப் பொருள்கள் ஏராளமாகத் தேவைப்பட்டன. உயர்ந்த ரக உணவுப் பொருள்கள் லண்டனில் இருந்த செல்வர்களின் உபயோகத்திற்குத் தேவைப்பட்டன. வேலிகள் அமைக்கப்பட்ட நிலங்களைக் கொண்ட கென்ட் (Kent) ஏற்கெனவே 'இங்கிலாந்தின் பழத்தோட்டம்' என்று கருதப்பட்டுவந்தது. லண்டனில் விற்கப் பட்ட ஆப்பிள்களும், செர்ரிகளும் அங்கிருந்துதான் வந்தன. கிழக்கு ஆங்கிலியா (East Anglia) பிரதேசத்தில் விளைந்த பார்லி யானது, ராய்ஸ்டன் (Royston) போன்ற மது தயாரிக்கும் நகரங் களில் மாற்றப்பட்டு மதுவாக லண்டனுக்கு வந்துசேர்ந்தது.

கென்ட், எஸ்ஸெக்ஸ் (Essex) முதலிய பிரதேசங்களில் இருந் தவர் ஹாம் என்ற செடியின் பழங்களைக்கொண்டு பார்லியில் செய்யப்பட்ட மதுவிற்கு வாசனையூட்டி வந்தனர். லண்டனில் ரொட்டி செய்வதற்குத் தேவைப்பட்ட கோதுமையும், ரை (rye) என்ற தானியமும், தென்கிழக்குக் கவுன்டிகளில் பயிர் செய்யப் பட்டன. தலைநகரின் தேவையானது நாட்டின் பல பகுதிகளை அவற்றில் எதைச் சிறந்தமுறையில் பயிர்செய்யமுடியுமோ, அதைமட்டும் பயிர்செய்யும்படி செய்துவிட்டது. லண்டன் அருகே கால்நடைகளுக்கு வேண்டிய உணவுப் பொருள்கள் எளிதில் கிடைத்தன. அதனால் அங்கே குடியானவர்கள் ஆடுகளை வளர்த்து ஸ்மித் ஃபீல்டு (Smithfield) என்ற இடத்தில் இறைச்சி வியாபாரம் செய்துவந்தனர். வேறுசிலர் லண்டனில் தேவைப் பட்ட பால், மற்றும் உணவுப் பொருள்கள் ஆகியவற்றை லண் டனுக்கு வெளியே இருந்து எடுத்துச்செல்ல வண்டிகள் தேவைப் பட்டதால், வண்டி ஓட்டுவதைத் தொழிலாகக் கொண்டு லாப மடைந்துவந்தனர். லண்டனில் தேவைப்பட்ட பொருள்களை உற்பத்தி செய்வதற்காகவே லண்டனின் சுற்றுப்புறப் பிரதேசங் களில் நிலங்களுக்கு வேலியமைக்க வேண்டிய அவசியமேற் பட்டது.

லண்டனைத் தவிர, விளைபொருள்களை வாங்கும் நகரங்கள் பல இருந்தன. ஒருசில நகரங்களே தங்களுக்குத் தேவைப்பட்ட உணவுப்பொருள்களைத் தாங்களே பயிர்செய்துகொள்ளும் நிலையில் இருந்தன. வேண்டிய அளவு விளைச்சல் இல்லாத பிரதேசங்களுக்கு

விளைச்சல் அதிகமாக இருந்த பிரதேசங்கள் விளைபொருள்களை விற்றுவந்தன. பத்தாண்டுகளுக்கொருமுறை நாடு முழுவதிலும் விளைச்சல் வேண்டிய அளவு இல்லாமல் இருந்தது எனக் கூறலாம். அக் காலங்களில் அதிகப்படியாக விளைபொருள்களை இறக்குமதிசெய்ய நேரிட்டது. விளைச்சல் மிகுதியாக இருந்த ஆண்டுகளில் உணவுத் தானியங்கள் ஏற்றுமதி செய்யப் பட்டுவந்தன. ஹன்டிங்டன்ஷீர் (Huntingdonshire), கேம்பிரிட்ஜ் ஷீர் (Cambridgeshire) மற்றும் அவுஸ் (Ouse) பள்ளத்தாக்குப் பிரதேசங்கள் ஆகியவை லின் (Lynn), வாஷ் (Wash) துறை முகங்கள் மூலம், ஏராளமான கோதுமையை ஸ்காட்லாந்து, நார்வே ஆசிய நாடுகளுக்கும், நெதர்லாந்தின் நகரங்களுக்கும் ஏற்றுமதி செய்தன. மத்திய இங்கிலாந்தின் வார்விக் ஷீரின் (Warwicikshire) தென்கிழக்கு பாகம் அவான் (Avon) நதிக்கும் ஹெட்ஜ் ஹில்லுக்கும் (Edgehill) இடையே இருந்த ஃபெல்டன் (Feldon) பிரதேசம் ஆகியவை மத்திய இங்கிலாந்தின் உணவுக் களஞ்சியம் என்று கருதப்பட்டன. அங்கிருந்து உணவுப்பொருள்கள் மேற்கே இருந்த மற்ற நகரங்களுக்கும் அனுப்பப்பட்டன. லீலண்டும், காம்டனும் குறிப்பிட்டதுபோல், அவான் நதிக்கும் வட மேற்கு திசையில் இருந்த வார்விக் ஷீரின் மற்றொரு பகுதி காடுகள் நிறைந்ததாகவும், இடையர்கள் வாழும் கிராமங்களை உடையதாக வும் இருந்தது. இப் பகுதிதான் ஆர்டன் காடு (Forest of Arden) என்று பெயர் பெற்றிருந்தது. இக் காட்டை மக்கள் நிறைந்த விளைநிலங்களில் இருந்து அவான் நதி பிரித்தது. இந் நதியின் கரையிலிருந்த ஊர்களில் பிறந்து வளர்பவர் நதியின் ஒரு கரையில் இயற்கையின் எழிலையும், மற்றொரு கரையில் மனிதப் பண்புகளை யும் காணும் வாய்ப்பை உடையவராய் இருந்தனர். பதினெட் டாம் நூற்றாண்டில் அதிகமுதலைச் செலவிட்டுப் பயிர்செய்யப் படும்வரை வேண்டிய அளவு கோதுமையைப் பயிர் செய்ய முடியாமலிருந்தது. நிலத்திற்கும் சீதோஷ்ண நிலைக்கும் தக்கவாறு ஓட்ஸ், கோதுமை, ரை, பார்லி ஆகிய தானியங்கள் பயிரிடப் பட்டன. வடக்குப் பாகத்தில் ஓட்ஸும், இங்கிலாந்தின் பல இடங்களில் ரையும் கோதுமையும் பயிரிடப்பட்டன. தென்மேற் குப் பகுதிகளில் ரை விளைவிக்கப்படவில்லை. எல்லா இடங்களிலும் பார்லி அதிகமாக விளைந்தது. அதில் பெரும்பங்கு பீர் (beer) என்ற மதுபானம் செய்வதற்கு உபயோகப்படுத்தப்பட்டது. மேற்குப் பகுதியில் ஆப்பிள் பழங்கள் அதிகமாகக் கிடைத்ததால், அதிலி ருந்து செய்யப்பட்ட செடர் (cider) என்ற மதுவை மக்கள் அருந் தினர். ஊர்செஸ்டர் ஷீரில் (Worcestershire) பியர் (pear) என்ற பழம் அதிகமாகக் கிடைத்ததால், அதிலிருந்து பெர்ரி (perry) என்ற மதுவைத் தயாரித்தனர். குளிர்ந்திருந்த இவ் வகை மது

வயிற்றைப் பெருக்கச் செய்தது என்று காம்ப்டன் கூறியுள்ளார். இங்கிலாந்தின் எல்லாப் பகுதிகளிலும் பலவித தானியங்களை மக்கள் பயிர்செய்தனர். அப்படி விளைந்த அத் தானியங்களின் மாவைக் கலந்து ரொட்டி செய்துகொண்டனர். ஐரோப்பாவில் பல சிறந்த நாடுகளைப்பற்றி அறிந்திருந்த ஃபைனஸ் மாரிசன் (Fynes Moryson) என்பார், எலிசபெத் அரசி இறந்த சிறிது காலத்திற்குள் கீழ்க்கண்டவாறு எழுதினர்.

'இங்கிலாந்தின் குடியானவர்கள், பார்லி, ரை ஆகியவற்றின் மாவைக்கலந்து செய்யப்பட்ட பழுப்பு நிறமான ரொட்டியை வெள்ளை ரொட்டிக்குப்பதிலாக விரும்பி உண்டனர். பழுப்பு நிற ரொட்டிதான் சீக்கிரம் ஜீரணம் ஆகாமல் வயிற்றில் அதிகநேரம் தங்கியது என்று அவர்கள் எண்ணினர். ஆனல், நகரத்தவர்களும் பிரபுக்களும் மிக்க வெள்ளை நிறமுடைய ரொட்டியை உண்டனர். இங்கிலாந்தில் எல்லாவிதமான தானியமும் அதிக அளவில் பயிரிடப்பட்டன.'[1]

'ஆங்கிலேயர்கள் சிறந்த இறைச்சியையும் கோழி, மீன் மற்றும் உண்ணுவதற்குச் சிறந்த பொருள்களையும், தேவைக்குமேல் உடையவராய் இருந்தனர். கிடைக்கும்போதெல்லாம் ஆங்கிலேயர் மான் இறைச்சியை உண்டனர். கோடைக் காலங்களில் ஆண் மானின் இறைச்சியை உண்டனர். கார் காலத்தில் புருக்களையும் உண்டனர். சமைக்கப்பட்ட மான் இறைச்சி ருசியுள்ள சிறந்த உணவாகக் கருதப்பட்டது. வேறெந்த நாட்டிலும் மான் இறைச்சி உண்பதைச் சாதாரணமாகப் பார்க்கமுடியாது. ஐரோப்பாவில் நான் சுற்றிவந்த நாடுகளில் இருந்த மான்களின் எண்ணிக்கையைவிட, இங்கிலாந்தில் மான்களின் எண்ணிக்கை அதிகமாக இருக்கக்கூடும். எந்த நாட்டிலும் இத்தனை புருக்கூடுகளை நான் பார்த்ததில்லை. இதைப்போலவே கொழுப்புள்ள பன்றிக் கறியை ஆங்கிலேயர் சிறந்த உணவாகக் கருதுகின்றனர். இதை வேறு எவரும் உண்பதில்லை. இங்கிலாந்தின் சமையல்காரர்கள் வறுத்த கறியைத் தயாரிப்பதில் பெயர்பெற்றவர்கள் ஆவர்.'

இந்த அனுபவம் மிக்க பிரயாணி, 'நமது நாட்டு மாட்டு இறைச்சியையும் ஆட்டு இறைச்சியையும், ஐரோப்பாவிலேயே

[1] ஹாரிசன் (Harrison) ஒரு தலைமுறைக்குமுன் அதைப்போலவே எழுதியுள்ளார். (கி.பி. 1577): 'நிலத்தில் இருந்து கிடைத்த தானியங்களைக்கொண்டு நாடு முழுவதிலும் ரொட்டி செய்தனர். பிரபுக்கள் சாதாரணமாகத் தங்கள் ஆகாரத்திற்குக் கோதுமையை உபயோகிக்கின்றனர். ஆனல், அவர்களது இல்லங்களில் பணிபுரிந்தோரும், அண்டையில் இருந்த ஏழைமக்களும், ரை, பார்லி முதலியவற்றை உபயோகித்தனர். விளைச்சல் அதிகமில்லாத காலங்களில் அவரை, பட்டாணி, ஓட்ஸ், ஓக் மரத்தின் பழங்கள் முதலியவற்றல் ரொட்டி செய்துகொண்டனர்.'

மிகச் சிறந்ததாகப் புகழ்கின்றனர். வெஸ்ட்பேலியா (Westphalia) நகரம் நீங்கலாக மற்ற இடங்களில் கிடைத்த பன்றி இறைச்சியை விட இங்கிலாந்தின் பன்றி இறைச்சி மிகச்சிறந்தது' என்றும் கூறியுள்ளார். அவர் மேலும் கூறியுள்ளதாவது: 'ஆங்கிலேயர் கோழிக்கறியைச் சாதாரணமாக உண்கின்றனர். வாத்துகளை, பயிர் அறுவடை செய்யப்பட்ட காலத்தில் அந் நிலத்தில் மேய்ந்து கொழுத்திருந்தபோதும், விட்சண்டையிடு (Whitsuntide) என்ற பண்டிகைக் காலத்தின்போதும் உண்டனர். முயல் கறி சோர்வை உண்டாக்குகின்றது என்று நினைத்தாலும், மான் இறைச்சியைப் போலவே வேகவைத்தும் வறுத்தும் உண்டனர். கோனி (cony) என்ற கொழுத்த முயல்களையும் வைத்திருக்கின்றனர். நான் மற்ற இடங்களில் சாப்பிட்ட இறைச்சிகள் அனைத்தையும்விட, அவ் வகை முயல்களின் கறி மிருதுவாக இருந்தது. ஜெர்மானிய கோனி முயல்களின் கறி, வறுத்த பூனைக் கறியைப்போல் இருக்கும்.'

இறைச்சியும், ரொட்டியும் முக்கிய உணவாகும். காய்கறிகளை இறைச்சியுடன் சிறிதே மக்கள் உண்டனர். கோஸ் கீரையை நீர்த்த குழம்பாக வைத்து உண்டனர். அப்போதுதான் சில தோட்டங்களில் உருளைக்கிழங்கு பயிர் செய்யப்பட்டுவந்தது. எனினும், உருளைக்கிழங்கு மற்றப் பயிர்களைப்போல் விளை நிலங்களில் பயிர் செய்யப்படவில்லை. மத்தியதரைக்கடல் பிரதேசத்திலிருந்து ஓர் அளவு சர்க்கரையானது வந்தபோதிலும் மாவில் செய்த பணியாரங்களும் சிறிதே வேகவைத்த பழங்களும் பிற்காலத்தில் அதிகமாக உபயோகிக்கப்பட்டதுபோல், அக் காலத்தில் உபயோகிக்கப்படவில்லை. பதினொன்று அல்லது பன்னிரண்டு மணிக்குப் பகல் சாப்பாட்டை முடித்தனர். இதற்கு ஐந்து மணி நேரம் கழித்து இரவுச் சாப்பாட்டை உண்டனர்.

ஒவ்வொரு கிராமமும் தனக்கு வேண்டிய விளைபொருள்களைப் பயிர்செய்துவந்தது. பயிர்த் தொழிலின் முக்கிய நோக்கம், கிராமத்தில் வாழ்ந்தோருக்குத் தேவைப்பட்ட பொருள்களை உற்பத்தி செய்வதாகும். ஆனால், கம்பளியும், உணவுப் பொருள்களும் கிராமத்தின் தேவைக்கன்றி, நாட்டின் மற்றப் பாகங்களிலும் வெளி நாட்டிலும் விற்கப்படுவதற்காகவும் தயாரிக்கப்பட்டன. கைத்தொழில்களுக்கு வேண்டிய பயிர்கள் மேலும் மேலும் அதிகமாகப் பயிர் செய்யப்பட்டுவந்தன. லிங்கன் ஷீரின் (Lincolnshire) பகுதிகளில் லினன் ஆடை தயாரிப்பதற்கு ஏற்ற சணல் பயிரிடப்பட்டது. எஸ்ஸெக்ஸ் (Essex) பிரதேசத்தில் பயிர் செய்யப்பட்ட ஊடு (woad), மேடர் (madder), சஃப்ரான் (saffron) என்ற பெயர் கொண்ட செடிகள் ஆடைகளுக்குச் சாயம்தோய்க்கப் பயன்பட்டன. இச் செடிகள் பயிர் செய்யப்படுவதற்குமுன், சாயத்தை

வெளிநாடுகளில் இருந்து இறக்குமதி செய்துவந்தனர். (சஃப்ரான் வால்டன் என்ற நகரம் சஃப்ரான் அங்குப் பயிரிடப்பட்டதால் அப் பெயரைப் பெற்றது).

இத்தகைய வியாபாரத்திற்காக நிலங்களுக்கு வேலிபோடவும், தனக்குத் தோன்றிய முறையில் பயிர் செய்யவும் அவசிய மேற் பட்டது. காடுகளழிக்கப்பட்ட நிலங்களிலும், வடிக்கப்பட்ட சதுப்பு நிலங்களிலும், கரம்பு நிலங்களிலும் மக்கள் வேலியமைத்து, அவர் அவர்களுக்குத் தோன்றியமுறையில் பயிர்செய்தனர். விளைச்சல் நிலம் அதிகரித்தும், வேலியற்ற பரந்த நிலங்களின் அளவும் பொதுமேய்ச்சல் நிலங்களின் அளவும் அதிகரிக்கவில்லை. பயிர் செய்யப்படாத கரம்பு நிலங்கள் அளவில் அதிகம் குறையவில்லை என்றாலும், விளைநிலங்களுடன் ஒப்பிட்டுப்பார்த்தால், முன்னிருந் ததைவிட அளவில் குறைந்தே இருந்தது என்று கூறலாம்.

தாழ்ந்த சதுப்பு நிலங்கள் இருந்த வட்டாரங்களில்தான், வட்டாரத்தின் தேவைக்குமேல் உள்நாட்டு வியாபாரத்திற்கும், வெளிநாட்டு வியாபாரத்திற்கும் விளைபொருள்கள் பயிர் செய்யப் பட்டன. சதுப்பு நிலங்களை அடுத்து இருந்த மேய்ச்சல் நிலங்களில் இருந்துதான் கம்பளி ஆடை தயாரிப்பதற்கு வேண்டிய கம்பளி கிடைத்தது. சில்டெர்ன்ஸ் (Chelterns), டார்செட் ஹைட்ஸ் (Dorset Heights), வீட் தீவு (Isle of Wight), காட்ஸ்வோல்டு (Cotswolds), லிங்கன் (Lincoln), நார்ஃபோக் (Norfolk) மலைச் சரிவுகள் ஆகியஇடங்கள் எப்போதும் சிறந்த கம்பளியைத் தயாரித் துக் கொடுத்தன. வெளிநாட்டு, உள்நாட்டுப் பிரயாணிகள் இம் மலைப் பிரதேசங்களை டியூடர் வம்சத்தினரின் காலத்தில் சுற்றிவந்த போது, ஐரோப்பாவில் வேறெங்கும் காணப்படாத அளவிற்கு எண்ணிக்கையிலும், பருமனிலும் மிகுந்து இருந்த ஆடுகளைக் கண்டனர். வளம்குறைந்த நிலங்களில் வளர்ந்த ஆடுகள் மெலிந்து இருந்தன. ஆனால். அவற்றின் மயிர் அடர்ந்த தோல் உலகத்திலேயே சிறந்ததாகக் கருதப்பட்டது.

டியூடர் காலத்தில் கால்நடைகளின் தேவை அதிகரித்ததால், மேலே கண்டவாறு, விளை நிலங்களை மேய்ச்சல் நிலங்களாக மாற்ற நேரிட்டது. பள்ளத்தாக்குகளில் வளர்ந்த செம்மறியாடுகள் நன்றாகக் கொழுத்திருந்தன. ஆனால், அவைகளினின்று கிடைத்த கம்பளியானது, மலைப் பிரதேசத்தில் வளர்ந்த செம்மறியாடுகளி னின்று கிடைத்த கம்பளியைப்போல் அவ்வளவு சிறந்ததாக இருக்க வில்லை. அப்படியிருந்தும் பள்ளத்தாக்குகளில் புதியனவாகத் தோன்றிய மேய்ச்சல் நிலங்கள் நஷ்டத்தைக் கொடுக்கவில்லை. மட்டமான கம்பளித்தேவை அதிகரித்ததாலும் ஆட்டிறைச்சியும்,

மாட்டிறைச்சியும் அதிகமாகத் தேவைப்பட்டதாலும், நஷ்டம் ஏற்படவில்லை. பருப்பு, தானியம் முதலியவைகளை அதிகமாக உணவில் உபயோகித்த அயல்நாட்டவர், ஆங்கிலேயர் மிகுந்த அளவு இறைச்சியை உண்பதைக் கண்டு வியந்தனர். இங்கிலாந்தின் மத்திய பிரதேசம், எலிசபெத் அரசியின் காலத்தில் தொடர்ந்து தானியங்களுடன், கால்நடைகளையும் உற்பத்திசெய்து நாட்டிற்கு அளித்துவந்தது. ரக்பி (Rugby) என்ற நகரில் ஏராளமான கசாப்புக் கடைக்காரர்கள் இருந்தனர். லீசெஸ்டர் ஷீரும், (Leicestershire) நார்தம்டன் ஷீரும் (Northamptonshire) கால்நடைச் சந்தைகளுக்குப் பெயர்போனவையாய் இருந்தன. நாட்டில் ஏராளமாக இருந்த கால்நடைகள், தோலைக்கொண்டு பல பொருள்களைத் தயாரித்த கைத்தொழில்களுக்கு உதவின. தெற்குப் பாகத்தில் இருந்த ஆங்கிலேயர்கள் தோலால்செய்த மிதியடிகளை உபயோகித்தனர். அயல்நாட்டவர் உபயோகித்துவந்த மரத்தால் செய்யப்பட்ட மிதியடிகளை ஆங்கிலேயர் வெறுத்தனர். வடக்குப் பாகத்தில் சிக்கன மனப்பான்மை உடைய ஆங்கிலேயர், கிளாக்ஸ் (Clogs) என்றழைக்கப்பட்ட மரத்தினால் ஆன அடிப்பாகத்தையுடைய மிதியடிகளை உபயோகித்துவந்தனர், ஸ்காட்லாந்தில் இளைஞர்களும், இளங் கன்னிகளும், காலில் மிதியடி இல்லாமல் நடந்தனர்.

குதிரைகள் அதிகமாகத் தேவைப்பட்டதால், குதிரை வளர்ப்பதை அதிகரிக்கவேண்டியிருந்தது. மாடுகளுக்குப் பதிலாக வண்டி இழுக்கவும், ஏர் உழவும் குதிரைகள் மெல்ல மெல்ல உபயோகத்திற்கு வந்துகொண்டு இருந்தன.[1] நாட்டின் செல்வப் பெருக்கின் காரணமாகச் சவாரி செய்வதற்கு மென்மேலும் அதிகமான குதிரைகள் தேவைப்பட்டன. யார்க் ஷீரின் (Yorkshire) பெரும்பகுதியிலும், கொடுஞ் செயல்களுக்குப் பெயர்போன புல் நிறைந்த நிலங்களைக்கொண்ட எல்லைப் பிரதேசங்களிலும், குதிரைகள், மாடு, மற்றக் கால்நடைகள் ஆகியவற்றை வளர்க்க வேண்டிய அவசியம் இருந்தது. இங்கே செம்மறி ஆடுகள் வளர்ப்பதைவிடக் குதிரைகளையும் மற்றக் கால்நடைகளையும் வளர்ப்பது அவசியம் என்று நினைத்தனர். பாசிபடிந்த நிலங்களில் இருந்து நடு இரவில் வந்து இப் பிரதேசங்களைச் சூறையாடியவர்கள் (Mosstroopers) அந்தக் கால்நடைகளைத்தான் கொண்டு சென்றனர்.

செம்மறியாடுகளும், மற்றக் கால்நடைகளும் இங்கிலாந்தில் ஏராளமாக வளர்க்கப்பட்டன என்றாலும், தற்கால நிலையைக்

[1] இப்படிக் குதிரைகள் உபயோகத்திற்கு வந்தது, டியூடர் வம்சத்தினரின் காலத்தில் தொடங்கி, ஹானோவர் வம்சத்தினரின் காலம்வரை நீடித்தது. ஆனால், விக்டோரியா அரசியின் காலத்தில்கூட, மாடுகளைக்கொண்டு ஏர் உழுவதைக் கண்டிருக்கிறார்கள்.

கொண்டு நோக்கின், பதினெட்டாம் நூற்றாண்டில் கால்நடை வளர்ப்பதில் மாற்றம் ஏற்படும்வரை, கால்நடைகள் எண்ணிக்கையில் குறைவாகவும் மெலிந்தும் இருந்தன என்று கூறலாம். ஏனென்றால், பனிக்காலத்தில் கால்நடைகளுக்குப் போதிய உணவு கொடுக்க வழியில்லாமலிருந்தது.

'கிருத்துமஸ் பண்டிகையில் இருந்து மே மாதம்வரை பலவீனமான கால்நடைகள் நசித்துப்போகின்றன' என்று தாமஸ் டஸ்ஸர் (Thomas Tusser) என்ற எலிசபெத் காலத்தில் வாழ்ந்த கவிஞர் எழுதியுள்ளார். இன்றும் நாட்டின் பாதிப்பாகத்தில் இருந்துவரும் வேலியமைக்கப்படாமல் பயிர் செய்யும்முறை கால்நடைகளுக்குப் போதுமான பாதுகாப்பையோ அல்லது போதுமான மேய்ச்சல் நிலங்களையோ அளிக்கவில்லை.

லிங்கன் (Lincon) நகரிலிருந்து கேம்பிரிட்ஜ் வரையும் கிங்ஸ் லின்னில் (King's Lynn) இருந்து பீட்டர்ஸ் பர்ரே வரையும் (Peterborough) பரவியிருந்த சதுப்பு நிலமானது ஒரு தனி உலகம் போல் காட்சி அளித்தது. எலிசபெத் அரசியின் ஆட்சிக்கால இறுதியில்பார்லிமெண்டில் ஃபென்லண்டு(Fenland)சதுப்புநிலத்தை வடித்துப் பயிர்செய்யக்கூடிய நிலமாக மாற்ற விவாதம் நடந்தது. ஆனால், அத்தகைய வேலைக்கு வேண்டிய பொருள் கிடைக்கும் வரை அவ் வேலை மேற்கொள்ளப்படவில்லை. ஸ்டூவர்ட் வம்சத்தினரின் காலத்தில், ஃபென்லண்டு சதிப்பு நிலத்தின் தென்பகுதியும், ஹானோவர் வம்சத்தினரின் காலத்தில் வடக்குப் பகுதியும் வடிக்கப்பட்டன. அங்கே வாழ்ந்தவர்கள், நீரிலும், நிலத்திலும் வாழ்பவராய் இருந்தனர். பருவ காலங்களுக்கு ஏற்றவாறு தங்கள் தொழிலை மாற்றிக்கொண்டனர்.

'கேம்பிரிட்ஜ் ஷீரின் வடக்குப் பாகம் முழுவதும் நதியால் சிறு தீவுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. கோடைக்காலத்தில் அழகிய புல்வெளிகள்போல் காட்சியளிக்கின்றன. பனிக்காலத்தில் இப் பாகம் முழுவதும் தண்ணீரின் அடியில் மூழ்கி இருக்கின்றது. இங்கே வாழும் மக்களும் மற்ற சதுப்புநில மக்களும் (சப்ஃபோக்கின் (Suffolk) எல்லையில் இருந்து லிங்கன் ஷீரில் (Lincolnshire) இருந்த வெயின் ஃபிளீட் (Wainfleet) நகரம் வரை, 68 மைல் நீளத்திற்குச் சதுப்பு நிலம் இருந்தது) முரட்டுத்தனம் உடையவராயும், மற்றவர் யாவரிடமும் பொறாமைகொண்டவராயும் இருந்தனர். அவர்கள் மற்றவரை உயர்ந்த பிரதேசத்தில் (Upland men) வாழ்வோர் என்று குறிப்பிட்டனர். நீண்ட கழிகளின் உதவியால் சதுப்பு நிலங்களில் கால்கள் படாமல் நடந்தனர். ஆடுமாடுகள் மேய்ப்பதும், மீன்பிடிப்பதும், கோழிகளை வேட்டையாடுவதும்,

அவர்கள் தொழிலாக இருந்துவந்தன. அவுஸ் (Ouse), கிராண்ட் (Grant), நென் (Nen) வெல்லாண்டு (Welland), கிளீன் (Glene), விதாம் (Witham) ஆகிய நதிகள், ஓடிக் கடலில் கலப்பதற்குப் போதிய வழியில்லாததால், பனிக்காலத்தில் இச் சதுப்பு நிலப் பகுதியை நீரில் ஆழ்த்துகின்றன. ஆனால், மற்றக் காலங்களில் இப் பகுதியைச் சிறந்த புல்லும் வைக்கோலும் உடையதாகச் செய்கின்றன இதை வேண்டிய அளவு வெட்டிஎடுத்துக்கொண்டு, நவீம்பர் மாதத்தில் மீதம் உள்ளவற்றை எரித்துவிடுகின்றனர். மறுபடியும் அடர்த்தியாக வளரச்செய்யவே இப்படிச் செய்தனர். நவம்பர் மாதத்தில் சதுப்புநிலம் முழுவதிலும் அடக்கமாக எரியும் தீயை அந் நிலங்களைச்சுற்றி வாழ்பவர் காண்பர். இந் நிலங்கள் அடுப்பெரிப்பதற்கு ஏற்ற அடிப்பாகத்தை உடைய புற்களையும் ஒரு வகைச் செடியையும் உடையவாய் இருக்கின்றன. அத்துடன் கூரை வேய்வதற்குத் தகுந்த கோரைகளையும் உடையவாயிருக்கின்றன. எல்டர், (elder) என்ற மரங்களும், தண்ணீரில் வளரக்கூடிய வில்லோ (willow) என்ற மரத்தைப்போன்ற மரங்களும் தானகவே அங்கே வளரும். நதிகளின் வெள்ளம் கரைகளைத் தாண்டிப் பாயாமல் இருக்கவும் அத்தகைய மரங்கள் கரைகள்மேல் வளர்க்கப்பட்டன. இம் மரங்கள் அடிக்கடி வெட்டப்பட்டாலும் திரும்பவும் பல கிளைகளுடன் வளர்ந்துவிடுகின்றன. இம் மரங்களைக் கொண்டுதான் கூடைகள் செய்கின்றனர்.' இவ் விதமாக காம்டன் கூறியுள்ளார். (காம்டன் எழுதிய 'பிரிட்டானிய' என்ற நூலில் பக்கம் 408: Camden's Britania, Gibson's edition).

சதுப்புநில மக்கள் காட்டுக் கோழிகளை மற்ற இடங்களுக்கு எடுத்துச்சென்று அதிக அளவில் விற்றுவந்தனர். டெகாய் (decoys) என்று சொல்லப்பட்ட முறையில் காட்டில் இருக்கும் வாத்துகளை நூற்றுக்கணக்கில் நீண்ட வலைகளைக்கொண்டு பிடித்தனர். ஆயிரக்கணக்கில் ஈல் (eel) என்ற மீன்களைக் குத்தகைப் பணமாகக் கொடுத்தனர். அங்கிருந்தோர், இச் சதுப்பு நிலத்தில் வாழ்ந்தோர் உண்மையிலேயே முரட்டுத்தனம் உடையவராய் இருந்தனரா என்று சந்தேகிக்க இடமுண்டு என்று காம்டன் கூறியுள்ளார். எப்படி இருப்பினும், பல நூலாசிரியர்கள் கருதியது போல், அவர்கள் குடியானவர்களைவிட முரட்டுத்தனம் வாய்ந்தவராக இருக்கவில்லை. சிறிது காலத்திற்குமுன் செய்யப்பட்ட ஆராய்ச்சியின் பயனுக டூம்ஸ்டே புத்தகம் (Domesday Book) எழுதப்பட்ட காலத்திலிருந்து சதுப்பு நிலங்களில் பண்ணைமுறை ஆட்சி விதிகளும், பழக்கங்களும் இருந்துவந்தன எனத் தெரியவந்திருக்கிறது. மடங்களுக்குக் குத்தகைப்பணம் கொடுத்தும், தொண்டுகள் புரிந்தும் வந்தனர். சதுப்புநில மக்கள், மடங்கள்

அழிக்கப்பட்டபின், மடங்களின் உரிமைகளை விலைக்கு வாங்கியவர்க்குக் குத்தகைப் பணத்தைக் கொடுத்துவந்தனர். மற்றப் பாகங்களில் வழங்கிவந்த சட்டங்கள், விதி ஆகியவற்றுக்குச் சதுப்பு நில மக்களும் கீழ்ப்படிந்து நடந்தனர். மற்றப் பாகங்களில் காணப்பட்ட பழக்கங்களும் அவர்களிடையே காணப்பட்டன. சாக்கடைகளின் கரைகளைத் தளராத உழைப்பினாலும் தங்கள் திறமையாலும் நல்லநிலையில் வைத்துக்கொண்டனர். அவர்கள் கால்வாய்களைச் சுத்தம் செய்துகொண்டே இருந்திராவிட்டால், கால்வாய்கள் பயனற்றவைகளாய்ப் போய் இருக்கும். லிங்கன் (Lincoln), லின் (Lynn), பாஸ்டன் (Boston), விஸ்பெக் (Wisbech), கேம்பிரிட்ஜ் (Cambridge), செயின்ட். இவ்ஸ் (St. Ives), பீடர்பரோ (Peterborough) ஆகியவையும் மற்றும் பல சிறிய நகரங்களும் ஒன்றிற்கொன்று கொண்டிருந்த தொடர்பு, நடத்திவந்த வியாபாரம் ஆகியவை, கால்வாய்கள் நல்லநிலையில் இருந்திராவிட்டால், பாதிக்கப்பட்டிருக்கும். சதுப்புநிலத்தில் காணப்பட்ட கால்வாய்களும் அவைகளின் கரைகளும் எவராவது ஒருவரால் உண்டாக்கப்பட்டவையாய் இருக்கும் என்று 'டாக்டர் டர்பி' (Dr. Darby) கூறியுள்ளார். சுருங்கச்சொல்லின், ஸ்டூவர்ட், ஹானோவர் வம்சத்தினரின் காலத்தில் இச் சதுப்பு நிலங்கள் வடிக்கப்பட்டு விளைநிலங்களாக மாற்றப்படுமுன்பே அப் பிரதேசம் பொருளாதார நிலையில் சிறந்திருந்தது.

இச் சதுப்பு நிலத்தின் நடுவே இலி கிருத்தவ ஆலயம் (Ely Cathedral) அமைந்திருந்தது. பல நூற்றாண்டுகளாக அது நீரிலே மிதந்து கொண்டிருந்தாற்போல் காட்சியளித்தது. அதன் மாடங்களும் ஒளிபொருந்திய கூரையும் தொலைவில் இருந்தோர்க்கும் தெரிந்தது. அதனையடுத்து அரண்மனை போன்றிருந்த வீட்டில் அக் கோயிலின் பிஷப் வசித்துவந்தார். அக் காலத்திலும் அவர் சில விஷயங்களில் அதிகாரம் செலுத்திவந்தார். ஆனால். மத சீர்திருத்த இயக்கமானது, பாதிரியார்களின் அதிகாரத்தை அழித்துவிட்டதெனலாம். அரசாங்கம் மதஸ்தாபனத்தை அடக்கி ஆண்டுவந்தது. லண்டனில் ஹால்பர்ன் (Holborn) பகுதியில் இலி ஆலயத்திற்கு வீடும், பழத்தோட்டங்களும் இருந்தன. இவற்றைத் தம் அன்பிற்குப் பாத்திரமான ஸர். கிரிஸ்டோபர் ஹட்டன் (Sir Christopher Hatton) என்பவருக்குக் கொடுக்கும்படி, பிஷப் காக்ஸ்ற்கு (Bishop Cox) எலிசபெத் அரசி உத்தரவிட்டார். காக்ஸ் இறந்தபிறகு, அவருடைய இடத்திற்கு வேறு ஒரு பிஷப்பை நியமிக்காமல், இலி கிருத்தவ ஆலயத்தின் வருமானம் அனைத்தையும் அரசாங்கம் பதினெட்டு ஆண்டுகாலத்திற்கு எடுத்துக்கொண்டது. எனினும், இலி கிருத்தவ ஆலயத்தில் பிஷப் ஆட்சி செலுத்தியபோதெல்லாம் சதுப்பு நிலம் முழுமை

யும் அவரது ஆதிக்கத்தின்கீழ் இருந்துவந்தது. ஆலிவர் கிராம்வெல் (Oliver Cromwell) பின் சதுப்பு நிலத்தை வடித்த பெட்ஃபோர்டு (Bedford) பிரபுக்கள் ஆகியோரின் காலம்வரை இவ்வாலயப் பிரபுக்கள் சதுப்பு நிலங்களில் செல்வாக்கு உடையவராய் இருந்தனர்.

எலிசபெத் ஆட்சிக்காலத்தில் வேல்சும், வடக்கு எல்லைப் பிரதேசமும்கூட, இங்கிலாந்தின் சமுதாயத்திலிருந்தும், பொருளாதார நிலையிலிருந்தும் மாறுபட்டிருந்தன. எனினும், அதிக வேறுபாடு இருந்தது என்று கூறுவதற்கில்லை. வடக்கு எல்லைப் பிரதேசத்தில் வாழ்ந்தோரைவிட. வேல்சில் வாழ்ந்தோர் தற்கால வாழ்க்கை நிலையை விரைவாக எட்டிப் பிடித்துக் கொண்டிருந்தனர்.

மலைநாட்டில் வாழ்ந்து வந்த முரட்டுத்தனம் வாய்ந்த வேல்ஸ் மக்கள் இடைக் காலம் முழுவதும் எல்லைகளைக்காக்க நியமிக்கப்பட்ட 'மார்சர் லார்ட்ஸ், (Marcher Lords) என்று அழைக்கப்பட்ட எல்லைக்காவல் பிரபுக்களுடன் அடிக்கடி சச்சரவில் ஈடுபட்டிருந்தனர். ரோஜாப்பூ அடையாளப் போரில் அப் பிரபுக்கள் பெரும் பங்கு ஏற்றுக் கொண்டதன் பயனாகத் தங்கள் உரிமைகள் பலவற்றை இழந்தனர். பதினைந்தாம் நூற்றாண்டிற்குள் அவர்களுடைய கோட்டைகளும் சொத்துகளும் அரசனின் கைகளுக்கு மாறின. அதனால் வேல்ஸ் இங்கிலாந்துடன் இணைக்கப்பட ஒரு சந்தர்ப்பம் ஏற்பட்டது. ஆனால், இவ் வேலையை வேல்ஸ் நாட்டு மக்களின் நாட்டுப்பற்றும் பழக்க வழக்கங்களும் பாதிக்கப்படாத வகையிலும், நேர்மையான முறையிலும் நிறைவேற்ற வேண்டியிருந்தது. டியூடர் வம்சத்தினரின் செயல்கள் அயர்லாந்து மக்களின் மனத்தைப் புண்படுத்தின. அதைப்போல, வேல்ஸ்சையும் இங்கிலாந்தையும் பிரிக்கக்கூடிய சூழ்நிலை இருக்கவில்லை. ஆங்கிலேயரும் வேல்ஸ் நாட்டவரும் மதத்தில் வேறுபட்டு இருக்கவில்லை. தவிரவும், வேல்ஸ் இங்கிலாந்தோடு இணைக்கப்பட்டவுடன், ஆங்கிலேயர் வேல்சில் குடியேறி, அந் நாட்டு மக்களின் நிலங்களைத் தமதாக்கிக் கொள்ளவில்லை. மேலும், பாஸ்வொர்த் (Bosworth) போரிற்குப்பிறகு, இங்கிலாந்தை ஆளத் தொடங்கிய டியூடர் வம்சத்தினர் வேல்ஸ நாட்டைச் சேர்ந்தவராவர். இதன் காரணமாக, வேல்ஸ் மக்கள் டியூடர் வம்சத்தினரின் ஆட்சியைத் தங்கள் ஆட்சியாகக் கருதினர்.

இந் நிலையில் எட்டாம் ஹென்றி வேல்சையும், இங்கிலாந்தையும் சட்டபூர்வமாக இணைத்தார். இரு நாடுகளுக்கும் ஒரே சட்டங்கள், அரசாங்கம் பார்லிமெண்ட் ஆகியவற்றை ஏற்படுத்தினார். இங்கிலாந்திலிருந்த கவுன்டி என்ற பிரிவுகள், வேல்ஸிலும்

ஏற்படுத்தப்பட்டன. அமைதிக் காவலர்களும் நியமிக்கப்பட்டனர். இங்கிலாந்தின் சட்டங்கள் வேல்ஸ் நாட்டிலும் அமுல் செய்யப் பட்டன. வேல்ஸ் நாட்டு ஜென்ட்ரிகள் இங்கிலாந்தின் பார்லி மெண்டில் அங்கத்தினர்களாக அமர்ந்தனர். வேல்ஸ் நாட்டிற் கென்று, ஸ்டார்சேம்பர் (Star Chamber) நீதிமன்றம், வடக்குப் பாகத்திற்கு என்றிருந்த நீதிமன்றம் ஆகிய நீதிமன்றங்களைப் போல், ஒரு நீதிமன்றம் ஏற்படுத்தப்பட்டது. இந் நீதிமன்றம் வேல்ஸில் அமைதியையும் ஒழுங்கையும் நிலைநாட்டியது. மார்சர் லார்ட்ஸ் (Marcher Lords) என்று அழைக்கப்பட்ட எல்லைக்காவல் பிரபுக்கள் மறைந்தபோது பண்ணை முறையாட்சி அவர்களுடன் மறைந்தது. மலைப்பிரதேசத்தில் வாழ்ந்த குடிகள் தங்கள் தலைவர் களால் ஆளப்பட்டுவந்தனர். அத் தலைவர்கள் ஆட்சியும் முடிவுற்றது. இரண்டு நூற்றாண்டுகளுக்குப்பின் ஸ்காட்லாந்தில் தலைவர்களின் ஆட்சி அழிக்கப்பட்டபோது தோன்றிய தீவிர எதிர்ப்பு வேல்ஸில் இருக்கவில்லை. எலிசபெத் அரசியின் காலத்தில் வேல்ஸ் இங்கிலாந்தின் ஒரு பாகமாக மாறிகொண்டு வந்தது. ஏற்கெனவே அரசாங்கத்தின் அமைப்பிலும், சமுதாய அமைப்பிலும், வேல்ஸ் இங்கிலாந்தைப்போலவே இருந்தது. இருப்பினும், வேல்ஸ் தனது சொந்த மொழியையும், இலக்கியத் தையும் இசையையும் இழந்துவிடாமல் பாதுகாத்துவந்தது.

பழங்காலக் குடிகளின் தலைவர்களும், எல்லைக்காவல் பிரபுக்களும், அக் காலத்தே புதிதாகத் தோன்றிய ஜென்ட்ரி களும் இணைந்து, வேல்ஸ்நாட்டின் ஜென்ட்ரி வகுப்பினராகத் திகழ்ந்தனர். இவ் வகுப்பினர் டியூடர் வம்சத்தினரின் அரசாட் சியை விரும்பினர். இங்கிலாந்தில் ஜென்ட்ரிகளுக்கு இருந்த உரிமைகள் அவர்களுக்கும் அளிக்கப்பட்டதுதான் அதற்குக் காரணமாகும். அந்த ஜென்ட்ரிகளில் சிலர் இங்கிலாந்தின் நிலச் சட்டங்களைப் பயன்படுத்திக்கொண்டு, பெரிய நிலப்பரப்பிற்கு அதிபதிகள் ஆகிவந்தனர். வருங்காலத்திலும் அதற்குப்பின் சிறிது காலத்திற்கும், அதிகச் செல்வமும் சொத்துகளும் இல்லாத ஜென்ட் ரிகள் அனேகர் இருந்தனர். வேல்ஸிலிருந்து படைத்தலைவர் மேஜர் ஜெனரல் பெர்ரி (Major General Berry), 100 பவுன் வருமானமுள்ள 50 ஜென்ட்ரிகளை எளிதில் கண்டுபிடித்து விடலாம்; ஆனால் 500 பவுன் வருமானமுள்ள ஐந்து ஜென்ட்ரிகளைக் கண்டுபிடிப்பது கடினமாகும் என்று கிராம்வெல்லிற்கு (Crom-well) எழுதினர். அதிக செல்வமற்ற வேல்ஸ்நாட்டு ஜென்ட்ரிகள், இங்கிலாந்திலிருந்த ஸ்குவீர்களின் (squires) நிலையில் இருந்தனர். இத்தகைய ஜென்ட்ரிகள் டியூடர் வம்சத்தினரின் காலத்திலும், ஸ்டூவர்ட் வம்சத்தினரின் ஆட்சிக்கால ஆரம்பத்திலும், செல்வ

நிலையில் இருந்தனர். ஆனால், பதினெட்டாம் நூற்றாண்டில் அவர்கள் கொஞ்சம் கொஞ்சமாக மறைந்துவந்தனர். அதனால் வேல்ஸ்சில் பெரிய நிலப்பரப்பிற்குச் சொந்தமான அதிக செல்வம் படைத்த ஜென்ட்ரிகளே காணப்பட்டனர்.

வேல்ஸ் மக்களில் பெரும்பான்மையோர் நிலத்தைக் குத்தகைக்கு எடுத்துக்கொண்டு, சிறிய அளவில் பயிர்செய்துவந்த குடியானவர் ஆவர். இங்கிலாந்தில் வியாபாரநிமித்தம் பெரிய பண்ணைகள் தோன்றியதுபோல், வேல்ஸ்சில் அதேசமயத்தில் அயர்லாந்தில் இருந்ததுபோல், பண்ணைகள் மிகச்சிறிய துண்டுகளாகப் பிரிக்கப்பட்டுக் குடியானவர்களால் பயிர் செய்யப்படவில்லை. வேல்சில் ஒவ்வொரு குடியானவனின் குடும்பமும் தங்கள் குடும்பத்தைக் காப்பாற்றிக்கொள்ளக்கூடிய அளவு நிலத்தைக் குத்தகைக்குப் பெற்றிருந்தன. அக் குடியானவர்க்கும் அவர்தம் நிலக்கிழார்களுக்கும் இடையே நல்ல உறவு இருந்துவந்தது. நிலக்கிழார்கள் நிலத்தை வளப்படுத்தியும் கிணறு, பாலம் முதலியவைகளைப் பழுது பார்த்தும் குடியானவர்களுக்கு உதவிவந்தனர். ஆனால், அயர்லாந்திலும் ஸ்காட்லாந்திய மலைப் பிரதேசங்களிலும் நிலக்கிழார்கள் இத்தகைய வசதிகள் செய்துகொடுக்காமலும் அதிகமான குத்தகைப் பணத்தை வசூலித்தும் செல்வராயினர்; ஏழ்மை நிலையையுடைய குடியானவர்கள் அதிகரித்தனர்.

இங்கிலாந்தில் மடங்கள் அழிக்கப்பட்டதுபோல், வேல்சிலும் அழிக்கப்பட்டன. அழிக்கப்பட்டமுறையும் அதன் விளைவுகளும் இருநாட்டிலும் ஒன்றாகவே இருந்தன. வடக்கே எழுந்த அருள் யாத்திரை (Pilgrimage of Grace) என்ற எதிர்ப்பு இயக்கத்தைப் போல் வேல்ஸ்சில் மடங்களை அழித்தபோது, எவ்வித எதிர்ப்பும் இருக்கவில்லை. மதச் சீர்திருத்தம் தங்களுக்கு நன்மையே அளிக்கும் என்பதை வேல்ஸ்சில் இருந்த உயர்ந்த வகுப்பினர் உணர்ந்து இருந்தனர். ஒன்றும் அறியாத குடியானவர்கள் மதச் சீர்திருத்தத்தைப்பற்றிக் கவலைப்படவில்லை. அவர்கள் லத்தீன் மொழியில் நடத்தப்பட்ட பிரார்த்தனைகளையும், ஆங்கில மொழியில் இருந்த பிரார்த்தனைப் புத்தகத்தையும் புரிந்துகொள்ளவில்லை. அதனால் மத விஷயங்களைப்பற்றி அவர்கள் அக்கறை எடுத்துக் கொள்ளவில்லை. எலிசபெத் அரசியின் ஆட்சிக்கால ஆரம்பத்தில் வேல்ஸ் மக்கள் கல்வியில் அக்கறையில்லாமலும் அறிவு வளர்ச்சியில்லாமலும் இருந்தனர். ஆனால், சிறிதுகாலத்திற்குள் ஆங்கிலேயர்களைப்போல், அவர்களும் ஜெஸ்யூட்டுகளின் (Jesuits) மதப் பிரசாரத்தால் பாதிக்கப்பட விருந்தனர். ஆனால், ஜெஸ்யூட்டுகள் வேல்ஸ்சிற்கு வராமற்போயினர். எலிசபெத்தின் அரசாட்சிக்கால

இறுதியில் டியூடர் வம்சத்தினர் தோற்றுவித்த மதஸ்தாபனம் வேல்ஸ் மக்களுக்குத் தொண்டுபுரியத் தொடங்கியது. மதஸ்தாபனம் பைபிளை வேல்ஸ் மொழியில் மொழிபெயர்த்து வெளியிட்டது. வேல்ஸ் மொழியில் பிரார்த்தனைப் புத்தகமும் வெளிவந்தது. இவ்வாறு பிராடஸ்டென்ட் மதத்தை வேல்ஸ் மக்கள் விரும்பும் வகையில் மதஸ்தாபனம் தொண்டு புரிந்தது. பதினெட்டாம் நூற்றுண்டில் கல்வித்துறையிலும், மதத்திலும் தோன்றிய இயக்கங்கள் மேற்கண்டவற்றின் அடிப்படையில்தான் தோன்றின.

டியூடர் வம்சத்தினரின் ஆட்சிக்காலத்தில் டிரென்ட் (Trent) நதிக்கு அப்பால், வடக்கே இருந்த பிரதேசம் வேறுபாடுடையதாக இருந்தது. ஸ்காட்லாந்தின் எல்லையில் அடிக்கடி தொல்லைகள் ஏற்பட்டன. ஆடை உற்பத்தியும் சுரங்க வேலையும் நடந்த பகுதிகளைத் தவிர, மற்றப் பகுதிகள் ஏழ்மைநிலையில் இருந்தன. பண்ணை முறை ஆட்சிக்காலத்து உறவுமுறை முழுமையும் நசித்துவிடவில்லை. மடங்களும், மதச்சீர்திருத்தத்திற்கு முன்பிருந்த மதஸ்தாபனமும் மக்களின் ஆதரவைப் பெற்றிருந்தன. இவை காரணமாக எட்டாம் ஹென்றியின் ஆட்சிக்காலத்தில் இவ் வடக்குப் பிரதேசம், இங்கிலாந்திலிருந்து வேறுபாடுடையதாயிருந்தது. எலிசபெத் அரசியின் ஆட்சிக்காலத்திலும் இவ் வேறுபாடு குறைந்த அளவில் இருந்துவந்தது. எட்டாம் ஹென்றியின் ஆட்சிக்கால ஆரம்பத்தில் வடக்கு எல்லைப்பகுதி, தங்களுக்குள்ளே சண்டையிட்டுக்கொண்ட குடும்பங்களைக்கொண்டதாக இருந்துவந்தது. அத்தகைய குடும்பங்களில் முக்கியமானவை, பெர்சி (Percy), நெவைல் (Neville) குடும்பங்களாகும். நார்தம்பர்லண்டு (Northumberland), வெஸ்ட்மூர்லண்டு (Westmorland) ஆகிய பகுதிகளில் ஏர்ல் (Earl) பதவி வகித்துவந்தவர் இவ் விரு குடும்பத்தினரின் தலைவராக இருந்துவந்தனர். இப் பகுதியில் இருந்த குடியானவர்கள் ஆயுதம்தாங்கிப் போர்புரியும் பழக்கம் உடையவராய் இருந்தனர், அத்துடன் தங்கள் தலைவர்களிடம் அன்பும் மதிப்பும் உடையவராய் இருந்தனர். இக் குடியானவர்கள் ஸ்காட்லாந்தியர் தங்கள் கால்நடைகளைக் கைப்பற்றிச் செல்லாவண்ணம் தடுக்க உபயோகிக்கப்பட்டனர். சில சமயங்களில் டியூடர் வம்சத்தினரையே எதிர்க்கவும் பயன்படுத்தப்பட்டனர். அருள் யாத்திரை (Pilgrimage of Grace) என்ற இயக்கம் (கி.பி. 1536) மடங்கள் அழிக்கப்படுவதைத் தடுக்கவும், அப் பிரதேசப் பிரபுக்களின் பலத்தை ஒழிக்க டியூடர் வம்சத்தினர் செய்த முயற்சியைத் தடுக்கவும் ஆரம்பிக்கப்பட்டது. தன் ஆட்சியை எதிர்த்து நடந்த இயக்கத்தை ஒடுக்கும்வகையில் அங்கே இருந்துவந்த நிலப்பண்ணை ஆட்சிமுறையை எட்டாம்

ஹென்றி அழித்தார். அதற்குப்பின் யார்க்ஷீர் (Yorkshire), மற்றும் எல்லையில் இருந்த கவுன்டி என்ற பிரிவுகள் ஆகியவற்றில் வார்டன்ஸ் ஆஃப் தி மார்ச்சஸ் (Wardens of the Marches) என்றழைக்கப்பட்ட எல்லை அதிகாரிகளை நியமித்து அரசனின் அதிகாரத்தை அப் பகுதிகளில் நிலைக்கச் செய்தார். அவர் செய்த ஏற்பாட்டை அவருக்குப்பின் அரச பதவிக்கு வந்தவர்கள் வடக்குப் பிரதேசமெங்கும், முக்கியமாக யார்க்ஷீரிலும் மாற்ற முற்படவில்லை. நார்த்தம்பர்லாந்தும், கம்பர்லாந்தும் (Cumberland) அமைதியாக இருக்கவில்லை. எட்டாம் ஹென்றி, ஆறும் எட்வர்ட் ஆகியோரின் கொள்கைகள் ஸ்காட்லாந்தில் பகைமையை வளர்த்தன. இங்கிலாந்திற்கும் ஸ்காட்லாந்திற்கும் இடையே நிரந்தரமான பகைமையும், சில சமயங்களில் போரும் இதன் காரணமாக ஏற்பட்டன. ஸ்காட்லாந்து எல்லையில் இருந்த ஷீர்கள் இதன் விளைவாகப் பல நாட்களுக்கு அமைதியற்றுக் குழப்பநிலையிலிருந்தன. மேரி அரசி பட்டத்திற்கு வந்தபோது, கத்தோலிக்க மதத்தின் செல்வாக்கு இப் பிரதேசத்தில் தலைகாட்டியது. அத்துடன் எட்டாம் ஹென்றியால் ஒடுக்கப்பட்ட பெர்சி (Percy) என்ற குடும்பமும் தலை தூக்கிற்று.

எலிசபெத் அரசி பட்டத்திற்கு வந்தபோது, நாட்டின் வடகோடியில் புதிய மதத்தினருக்கும் பழைய மதத்தினருக்கும் இடையே நடந்துவந்த சச்சரவு தொடர்ந்து நடந்துவந்தது. அதேபோல் அரசியின் அதிகாரமும் பிரபுக்களின் அதிகாரமும் ஒன்றை ஒன்று விஞ்ச முயன்றுவந்தன. முக்கியமாகக் கிழக்குக் கரையோரம் இருந்த நார்தம்பர்லாந்திலும், மேற்குக் கரையோரம் இருந்த கம்பர்லாந்திலும் இந் நிலை நிலவிவந்தது. இவைகளுக்கு இடையே இருந்த மிடில் மார்சஸ் (Middle Marches) என்ற பகுதி சிவ்வியட் (Cheviot) வட்டாரத்தில் இருந்த மலைப் பிரதேசத்தையும் சதுப்பு நிலத்தையும் உட்கொண்டிருந்தது. இந்த வட்டாரத்தில் இருந்த ரெடெஸ்டேல் (Redesdale) நார்த் டைன் (North Tyne) ஆகிய இடங்களில் முரட்டுத்தனம்வாய்ந்த, முழுதும் நாகரிகமடையாத மக்கள் வாழ்ந்துவந்தனர். இந்தப் பள்ளத்தாக்குகளில் கள்ளர்கள் வசித்தனர். இப் பள்ளத்தாக்குகளைப் புல்வெளிகள் நாகரிகமடைந்த பிரதேசங்களில் இருந்து பிரித்தன. இந்தப் பள்ளத்தாக்குகளில் வாழ்ந்த மக்கள் அரசனுடைய கட்டளைக்கோ அல்லது பெர்சி (Percy), நெவைல் (Neville), டாக்ரெஸ் (Dacres) ஆகிய குடும்பத்தினரின் அதிகாரத்திற்கோ பணிந்து போகவில்லை. இப் பள்ளத்தாக்குகளில் வாழ்ந்த போர்வீரர்கள் தங்கள் குடித் தலைவர்களுக்கே கட்டுப்பட்டிருந்தனர். குடும்பப்பற்று, குற்றவாளிகளுக்கும் அடைக்கலம் அளிக்கத் தூண்டியது. அத்துடன் சட்டத்தை மீறவும் துணிவு

அளித்தது. திருட்டுப்போன செல்வத்தை இந்தப் பள்ளத்தாக்குகளில் தேடிக் கண்டுபிடிக்க இயலாததாய் இருந்தது. திருடனை எவராவது கண்டுபிடித்தால், அவரைத் திருடனின் குடும்பம் பழி வாங்கிவிடும். சிறிய குடும்பங்கள் தங்களைத் திருடர்களிடமிருந்து காத்துக்கொள்வதற்காகக் நார்த் டைனில் (North Tyne) இருந்த சார்ல்டன் (Charlton) குடும்பத்தினரின் பாதுகாப்பைக் கோரினர். ஹால் (Hall), ரீட் (Reed), ஹெட்லி (Hedley), ரெடெஸ்டேல் (Redesdale) ஆகிய இடங்களில் வாழ்ந்த ஃபிளெட்சர் (Fletcher), சார்ல்ஸ்டன் (Charlton), டாட் (Dod), ராப்சன் (Robson), மில்போர்ன் (Milbourne), நார்த் டின்டேல் (North Tynedale) ஆகிய குடும்பங்களின் ஆட்சிதான் இப் பகுதியில் நிலவியது. அரசன் இப் பகுதியிலிருந்து வரிவசூலிக்க நினைத்தால், இக் குடும்பங்களின் உதவிகொண்டுதான் அப்படிச் செய்யமுடிந்தது.

கி.பி. 1542-லும், கி.பி.1550-லும் அரசனால் நியமிக்கப்பட்ட குழுவினர்கள் ரெடெஸ்டேல், நார்த்டைன் பள்ளத்தாக்குகளில் 1500 ஆயுதம் தாங்கிய வலிமைமிக்க வீரர் வாழ்ந்துவந்தனர் என்று குறிப்பிட்டுள்ளனர். (ஹாட்ஜ்சன் எழுதிய 'நார்த்தம்பர்லாந்து' என்ற நூலில் பக்கங்கள் 171-248; Hodgson's 'Northumberland', ii, pp. 171-248.) பயிர்செய்யத் தகுந்த நிலங்கள் அங்கே குறைவாக இருந்ததால், அங்கே வாழ்ந்த குடும்பங்களுக்குப் போதுமான உணவு கிடைக்கவில்லை. அதனால் ஸ்காட்லாந்தின் மலைப் பிரதேசத்தில் வாழ்ந்துவந்தவர்களைப்போல், கடலைச் சார்ந்திருந்த பிரதேசங்களில் புகுந்து கால்நடைகளைக் கடத்திச் செல்வதைத் தொழிலாகக் கொண்டனர். இவர்கள் ஸ்காட்லாந்தில் லிட்டஸ்டேல் (Liddesdale) என்ற பள்ளத்தாக்கில் வசித்துவந்த கள்வர்களுடன் தொடர்பு கொண்டிருந்தனர். இவ் விரு நாட்டுக் கள்வர்களும், தங்களைத் தண்டிக்க எவராவது வரின் தங்கள் நாட்டு எல்லையைக்கடந்து அடுத்த நாட்டிற்குச் சென்று அபாயம் தீரும் வரை அங்கேயே இருப்பர். எந்த ஆங்கிலேய அதிகாரியும் நார்த் டைன் (North Tyne) ரெடெஸ்டேல் ஆகியவற்றுள்ளும், லிட்டஸ்டேல் பள்ளத்தாக்கிலும் நுழைந்து, கள்வர்களைப் பிடிக்கத் தைரியம் இல்லாதவர்களாக இருந்துவந்தனர். கள்வர்கள் வசித்த வீடுகள் ஓக் மரத் திம்மைகளைக்கொண்டு கட்டப்பட்டிருந்தன. தீப்பிடிக்காமல் இருப்பதற்காகக் கோரைக்கிழங்கை அவைகளின்மேல் பரப்பி வைத்து இருந்தனர். இவ் வீடுகள் காடுகளின் நடுவே ஆழத்தை அறியமுடியாத பாசிபடர்ந்த இடங்களிலும் கட்டப்பட்டிருந்தன. இவ் வீடுகள் மாற்றார் வழியறிந்துபோக முடியாதவையாக இருந்தன. எட்டாம் ஹென்றி நியமித்த குழுவினர், இப் பிரதேசத்தைப் போரிட்டுப் பிடிக்கவேண்டும் என்று எடுத்துக் கூறவில்லை. அதற்கு

மாருக, ஹார்பாட்டில் (Harbottle), சிப்சேஸ் (Chipchase) என்ற கோட்டைகளில் வேல்தாங்கிய படையினரைப் போதுமான அள விற்குவைத்து, கள்வர்கள் சமவெளிகளில் புகுந்து கொள்ளையிடு வதைத் தடுக்கவேண்டும் என்று குறிப்பிட்டனர்.

எல்லைக் கோட்டின் இருபுறமும் வாழ்ந்த மக்களின் வாழ்க்கை தலைமுறை தலைமுறையாக எல்லாரும் விருப்பத்துடன் வாயால் பாடிவந்த கதைப்பாட்டுகள் தோன்றுவதற்குக் காரணமாய் இருந் தது. பல செய்யுட்கள் எலிசபெத் அரசியின் ஆட்சிக்காலத்திலும் ஸ்காட்லாந்தின் அரசி மேரியின் ஆட்சிக் காலத்திலும் தோன்றின. அங்கே நடந்த சம்பவங்களைப்பற்றி அச் செய்யுட்கள் எடுத்துக் கூறின. இக் கதைப்பாட்டுகள், ஷேக்ஸ்பியர் எழுதிய நாடகங் களினின்றும் முற்றிலும் வேறுபட்டவையாய் இருந்தன. இங்கி லாந்தின் தென்பாகத்துக் கதைப்பாட்டுகளில் காதலர்கள் அனேக மாக மணந்துகொண்டு இன்பவாழ்க்கை வாழ்வதாகச் சித்திரிக்கப் படுவர். வடக்குப் பிரதேசக் கதைப்பாட்டில் கதாநாயகனுக வருப வனின் நிலை வருந்தத்தக்கதாய் இருக்கும். தந்தையோ, தாயோ, தமையனோ அல்லது காதலில் போட்டியிடுபவரோ பாட்டுடைத் தலைவனிடம் முடிவில் இரக்கம் கொண்டவராகச் சித்திரிக்கப்படுவர். ஹோமர் (Homer) காலத்துக் கிரேக்கர்களைப்போல், எல்லைப் பிர தேசத்தில் வாழ்ந்தோர் இரக்கமற்றவராகவும், நாகரிகம் அற்றவராக வும், ஒருவரை மற்றவர் விலங்குகளைப்போல் குத்திக்கொள்ளும் இயல்புடையவராகவும் இருந்தனர். ஆனுல், பெருமையும், தன் மானமும் உடையவராகவும் நம்பிக்கைத் துரோகம் செய்யாதவராக வும் இருந்தனர். அத்துடன் இயற்கையாகவே, ஆடவர், பெண்டிர் முதலியோரின் வாழ்க்கையில் விதியின் விளையாட்டைச் சித்திரிக்கும் பாடல்களையும் தாங்கள் புரிந்த கொடுஞ் செயல்களால் பாதிக்கப்பட்டோரிடம் இரக்கம் தெரிவிக்கும் பாடல்களையும் புனையும் திறன் பெற்றிருந்தனர்.

எலிசபெத் அரசியின் அரசாட்சிக் காலத்தில் இங்கிலாந்தும், ஸ்காட்லாந்தும் முன்னிருந்ததைவிட, நெருங்கிய தொடர்பு கொண்டு இருந்தன. தம் நாட்டவரின் எதிர்ப்பிலிருந்தும் வெளி நாட்டவரின் எதிர்ப்பிலிருந்தும் இவ் விரு நாட்டு அரசாங்கமும் மதச் சீர்திருத்தத்தைக் காக்கவேண்டி இருந்ததுதான் அதற்குக் காரணமாயிருந்தது. இவ் விரு நாடுகளுக்குமிடையே நடந்து வந்த எல்லைப்போர் இப்போது நின்றது. இரு நாட்டவரும், பிற நாட்டுக் கால்நடைகளைக் கொள்ளையிடுவதும் குறைந்தது. ஆனுல், ரெடெஸ்டேல், நார்த்டைன் பள்ளத்தாக்குகளில் வாழ்ந்த ஆங்கிலேயக் கள்வர்கள் தொடர்ந்து சமவெளிகளைக் கொள்ளை

இட்டுவந்தனர். இதன் காரணமாக எலிசபெத் அரசியின் ஆட்சிக் காலத்தினிடையில் பழம்பொருள் சேகரிப்பாளர் காம்டன் ரோமானியர்களால் எழுப்பப்பட்ட சுவர்களின் அருகிலிருந்த ஹவுஸ்டெட்ஸ் (Housesteads) என்ற இடத்திற்குச் செல்ல முடியாமல் போய்விட்டது. நெதர்பியைச் (Netherby) சார்ந்த கிரகாம் குடும்பத்தினர், அண்டையில் இருந்த கம்பிரியா (Cumbria) பிரதேச மக்களின் பொருள்களைக் கொள்ளையிட்டு வந்தனர். கொள்ளை இடாமலிருக்கப் பணம்கேட்பதும், ஆட வரையும், பெண்டிரையும் தூக்கிச்சென்று அவரை மிகுந்த பொருள் பெற்றுக்கொண்டு விடுவிப்பதும், எலிசபெத் அரசியின் ஆட்சி முடியும்வரை சாதாரணமாக நடந்துவந்தது.

சதுப்பு நிலத்தில் இருந்துவந்த கள்வர்கள் கொள்ளையடிப்பது தொடர்ந்து நடந்துவந்தாலும், பெர்சி, டாக்ரி, நெவில் ஆகிய குடும்பங்களின் வலிமை, கி.பி. 1570ஆம் ஆண்டு அவரது கலகம் அடக்கப்பட்டதோடு ஒடுங்கியது. அதற்குப் பிறகு, நார்த்தம்பர் லாந்தும் கம்பர்லாந்தும், அரசாங்கத்தின் நம்பிக்கைக்குப் பாத்திர மான பிரபுக்களின் குடும்பங்களால் ஆளப்பட்டுவந்தன.

எல்லைக்கு முப்பது மைலுக்குள் எலிசபெத்தின் ஆட்சிக் காலத் தின் தொடக்கத்தில் கிருத்தவ ஆலயங்களில் மாஸ் என்றழைக்கப் பட்ட கத்தோலிக்கச் சடங்கு கத்தோலிக்கப் பிரபுக்கள், ஜென்ட்ரி கள் ஆகியோரின் பாதுகாப்பின்கீழ் நடத்தப்பட்டது. ஆனால், பிரா டஸ்டென்ட் மதமானது பெர்நார்ட் கில்பன் (Bernard Gilpin) போன்ற பிரசாரகர்களின் பிரசாரத்தின் காரணமாகப் பரவிவந்தது. கார்லைல் (Carlisle) நகரத்தைச்சார்ந்த பிஷப்புகள் மதத்தில் ஒருமைப்பாட்டை ஏற்படுத்தப் பாடுபட்டனர். ஆனால், அவ் வட்டாரங்களில் வாழ்ந்த, குதிரைமேல் இருந்து போர்புரியும் திறமைவாய்ந்த குடியானவர்கள், எவ்வித ஒழுங்கிற்கும் கட்டுப் பட்டவராய் இராததால், அவர்களைப் பணியச்செய்வது முடியாத காரியமாக இருந்தது. அவரிடையே மாறுதலைச் சிறிது சிறிதாகத் தான் கொண்டுவரவேண்டியிருந்தது.

எலிசபெத்தின் ஆட்சிக்கால இறுதிவரை கம்பர்லாந்திலும் நார்த்தம்பர்லாந்திலும் எல்லைகாப்போர் கூப்பிட்டபோது, அவர் களுக்கு ராணுவ சேவை செய்வதற்காகப் பல குடியானவர்களுக்கு நிலங்கள் அளிக்கப்பட்டிருந்தன. வடக்குப் பிரதேசத்தில் வாழ்ந்த இக் குடியானவர்கள், இவ் வகையில் அரசாங்கத்திற்குச் சேவை புரிந்தனர். அல்லது கொள்ளையிடுவதைத் தொழிலாகக்கொண்ட வருக்கு உதவிசெய்தனர். அவர்கள் தோலால் ஆன மேற்

சட்டையையும் இரும்பாலான தொப்பிகளையும் அணிந்து வேல், வில் அல்லது கைத்துப்பாக்கி முதலிய ஆயுதங்களுடன், பாசி படர்ந்த வழிகளை அறிந்து வேகமாகச் செல்லக்கூடிய, உள் நாட்டிலேயே வளர்க்கப்பட்ட குதிரைகளின்மேல் சவாரி செய்தனர்.

கி.பி. 1603-ல் முதலாம் ஜேம்ஸ் ஸ்காட்லாந்து, இங்கிலாந்து ஆகிய இரு நாடுகளுக்கும் ஒரே அரசனுகப் பட்டமேற்றபின், எல்லையின் இரு பக்கங்களிலும் இருந்த அரசாங்க அதிகாரிகள் சதுப்புநிலக் கொள்ளைக் கூட்டத்தினரை ஒடுக்கி, அக் கூட்டத்தினரால் கொடுமை இழைக்கப்பட்டுவந்த மக்களுக்கு அமைதியை அளித்தனர். நாவொர்த் (Naworth) நகரைச்சார்ந்த வில் ஹோவர்டு (Will Howard) கத்தோலிக்க மதத்தைச் சார்ந்தவர் ஆவார். அவர் ஜேம்ஸ் அரசனின் நம்பிக்கைக்குப் பாத்திரமான எல்லை அதிகாரியாக, மேற்கு எல்லையில் பணிபுரிந்துவந்தார். அவர் கிரஹாம் குடும்பத்தினரையும், மற்றக் கொள்ளைக் கூட்டத்தினரையும் எங்குச் சென்றாலும் கண்டுபிடிக்கக்கூடிய வேட்டை நாய்களைக்கொண்டு வேட்டையாடி அழித்தார். வடக்கு டைன், ரெடெஸ்டேல் பள்ளத்தாக்குகளில், அரசனின் சட்டங்கள் அமலுக்குக் கொண்டுவரப்பட்டன. பதினேழாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் நார்த்தம்பர்லாந்தில் வாழ்ந்த பிரபுக்கள், கோட்டைகளுக்குப் பதிலாகப் பண்ணைவீடுகள் கட்டிக்கொள்ளத் தொடங்கினர்.

எலிசபெத் அரசியின் ஆட்சிக்காலத்தில் முரட்டுத்தனமான மக்கள் வாழ்ந்துவந்த எல்லைப் பிரதேசம், நிலக்கரிச் சுரங்கவேலை நடந்துவந்த தெற்கு டைன் (South Tyne) நதிப் பிரதேசம், கிழக்கு டர்ஹாம் ஆகிய பிரதேசங்களை அடுத்து இருந்துவந்தது. ரோமானியர் இங்கிலாந்தைக் கைப்பற்றியதற்கு முன்பே தரை மட்டத்தில் இருந்த நிலக்கரியை எடுப்பது பழக்கமாய் இருந்தது. எலிசபெத் அரசியின் அரசாட்சிக் காலத்தில் நிலக்கரியைத் தோண்டி எடுக்க வேண்டியிருந்தது. அக் காலத்தில் நிலக்கரி தோண்டி எடுப்பது தற்காலத்தில் சுரங்கவேலை செய்வதைப் போலிருந்தது. லண்டன் நடத்திவந்த நிலக்கரி வியாபாரத்திற்காக நியூகாசிலில் (Newcastle) இருந்து நிலக்கரி, கலங்களில் ஏற்றி அனுப்பப்பட்டது. பெர்சி குடும்பத்தினரின் பண்ணை ஆட்சிக்குட்பட்ட மக்கள், சதுப்புநிலக் கள்வர்கள் ஆகியோர் கூடும் இடமாகவும் நியூகாசில் இருந்துவந்தது. (டியூடர் காலத்தில் எல்லையைப்பற்றி, 'விக்டோரியா கவுன்டி ஹிஸ்டரி', 'கம்பர்லண்டு' என்ற நூல்; ரெவெரெண்ட் ஜே. ஹாட்சன் எழுதிய 'ஹிஸ்டரி ஆஃப் நார்த்தம்பர்லண்டு' என்ற நூல்; டாக்டர் ராசெல்

ரீட் எழுதிய, 'நார்த் பார்ட்ஸ் அண்டர் தி டியூடர்ஸ்' என்பதை செடன் வாட்சன் தொகுத்துள்ள, 'டியூடர் ஸ்டடீஸ்' என்ற நூல் ஆகியவைகளில் காண்க; For the Border under the Tudors, see Victoria County History, Cumberland, Rev. J. Hodgson's Hist. of Northumberland, and Dr. Rachel Reid's 'North Parts under the Tudors in Tudor Studies, Edition Seton Watson, 1924).

எலிசபெத்தின் அரசாட்சிக் காலத்தில், வடக்கு எல்லேக்குத் தெற்கே இங்கிலாந்தின் பல பாகங்களில் இருந்த பண்ணைவீடுகள் ஒன்றிலிருந்து ஒன்று அளவிலும் அமைப்பிலும், வசதிகளிலும், மாறுபட்டு இருந்தன. இவை அனைத்தும் நாட்டில் நிலவிய அமைதியையும் பொருளாதார நிலையில் நாடு அடைந்திருந்த முன்னேற்றத்தையும் எடுத்துக்காட்டுகின்றன. செல்வமும் அதிகாரமும் பாதிரியார்களிடம் இருந்து, ஜென்ட்ரி வகுப்பினரின் கைகளுக்கு மாறின. அத்துடன் கட்டடக் கலைக்குப் பாதிரியார்கள் கொடுத்துவந்த ஆதரவை ஜென்ட்ரி வகுப்பினர் கொடுத்தனர். மதச்சார்புடைய கட்டடங்கள் கட்டப்பட்டுவந்த சிறந்தகாலம், முடிவுற்றது. புதிய மதஸ்தாபனம் பைபிளின் மதத்தை உயர்த்தியது. மதப் பிரசாரத்திற்கு மதிப்பளித்தது. ஆனால், ஆலயங்கள் கட்டுவதில் அக்கறை காட்டவில்லை; ஏற்கெனவே அழகிய கிருத்தவ ஆலயங்கள் இருந்தது அதற்குக் காரணமாகும். எலிசபெத் அரசியின் ஆட்சிக்காலக் கட்டடக்கலை கோதிக் கட்டடக் கலையின் அமைப்பும், கிரேக்க உரோமானிய அமைப்பும் கலந்ததாக இருந்தது. அதாவது பழைய ஆங்கிலேயக் கட்டடக்கலையும் புதிய இத்தாலியக் கட்டடக்கலையும் கலந்ததாக இருந்தது. எலிசபெத் அரசியின் ஆட்சித் தொடக்கத்தில் அழகுமிக்க கோதிக் கட்டடக் கலை அதிகமாகக் காணப்பட்டது. முக்கியமாக மதிலால் சூழப்பட்ட பழைய பண்ணைவீடுகளை அமைதியைக் கொடுக்கக்கூடியதும், அழகு வாய்ந்ததுமான வீடுகளாக மாற்றியமைப்பதில் கோதிக் கட்டடக்கலை உதவியது. உதாரணமாக பென்ஷர்ட் (Penshurst), ஹட்டன் ஹால் (Huddon Hall) ஆகியவற்றைக் குறிப்பிடலாம். ஆனால், எலிசபெத் அரசியின் ஆட்சிக்காலத்திலேயே இத்தாலியில் காணப்பட்ட கிரேக்க உரோமானியக் கட்டடக் கலையின்படி, லாங்லீட் (Longleat), ஆட்லி எண்டு (Audley End) ஆகிய அரண்மனைகள் கெனில்வொர்த் (Kenilworth) என்ற இடத்தில் இருந்த லீஸ்டர் குடும்பத்தின் கட்டடங்கள், மான்டகியூட் (Montacute) அரண்மனை ஆகியவை கட்டப்பட்டன. மான்டகியூட் அரண்மனை சாமர்செட் (Somerset) வட்டாரத்தில், அங்கேயே கிடைத்த கற்களைக்கொண்டு கட்டப்பட்ட பிரபுவின் இல்லமாகத் திகழ்ந்தது.

அது உலகிலேயே மிக அழகிய விசாலமான கட்டடங்களில் ஒன்ருகத் திகழ்கிறது.

பெரிய நகரங்களுக்கு அப்பால் புது முறையில் கட்டப்பட்ட 'ஆட்லி எண்டு' (Audley End) மற்றும் கிரெஷாம்ஸ் ராயல் எக்ஸ்சேன்ஜ் (Gresham's Royal Exchange) போன்ற பொதுக் கட்டடங்கள் கிரேக்க உரோமானியக் கட்டடக் கலையில் காணப்பட்ட நுண்ணிய வேலைப்பாடுகளை உடையனவாய் இருந்தன. வெளிப்புறங்களில் கல்லில் நுண்ணியவேலைப்பாடும் உட்புறத்தில் மரத்தில் நுண்ணிய வேலைப்பாடும் உடையனவாய் இருந்தன. இக் கட்டடக்கலைக்குச் சிறந்த உதாரணமாக, கேம்பிரிட்ஜில் கேயஸ் கல்லூரியின் 'கேட் ஆஃப் ஆனர்' 1575 (Gate of Honour at Caius College) என்ற நுழைவாயிலை எடுத்துக்காட்டலாம். அந் நுழைவாயிலுக்குக் காலத்தால் பிந்திய டிரினிட்டி கூடத்தின் (Hall of Trinity) கூரையும் உட்புறமும் மற்ருேர் உதாரணமாகச் சொல்லலாம். எலிசபெத்தின் ஆட்சிக்காலத்தில் கட்டப்பட்ட மாளிகைகள் அனேகமாக ஐரோப்பாவில் இருந்து இங்கிலாந்திற்குவந்த ஜெர்மானியரால் கட்டப்பட்டன. அவர்கள் அமைத்த கட்டடங்கள் மிகவும் சிறந்தனவாக இல்லாததால், பல கைதேர்ந்த உள்நாட்டுக் கொற்றர்களையும், சிற்பிகளையும்கொண்டு கட்டடங்கள் கட்டப்பட்டன.

நாட்டுப்புறங்களில் கட்டப்பட்ட மாளிகைகளைத் தவிர, எண்ணிறந்த சிறிய பண்ணைவீடுகள் பலவிதமாகப் பலவிதப் பொருள்களைக்கொண்டு கட்டப்பட்டன. சில கற்களைக்கொண்டும், மற்றும் சில கறுப்பு, வெள்ளை நிற மரங்களைக்கொண்டும், கற்களும், மரங்களும் அதிகமாகக் கிடைக்காத இடங்களில் செங்கற்களைக்கொண்டும் கட்டப்பட்டன. சீஷிரில் (Cheshire) இருந்த மோரிடான் (Moreton) கட்டடத்தின் பழைய கூடமானது கருப்பும், வெள்ளையுமான மரத்தைக்கொண்டு கட்டப்பட்டது.[1] சாளரங்களில் கண்ணுடிக்குப் பதிலாகக் கம்பிகளைக் குறுக்கும் நெடுக்குமாகப் பொருத்தினர். முற்காலத்திலிருந்ததைவிடச் சாளரங்கள் பெரியனவாக இருந்தன. இதன் காரணமாக அறைகளுக்குள்ளும், நல்ல வெளிச்சமிருந்தது.

[1] ஹாரிசன் (Harrison) (1577) கீழ்க்கண்டவாறு எழுதுகின்ருர்: 'பிரபுக்களின் பழைய பண்ணைவீடுகளும், சாதாரண வீடுகளும் உறுதியான மரத்தைக் கொண்டு கட்டப்பட்டு இருந்தன. இவைகளைக் கட்டுவதில் உள்நாட்டுத் தச்சர்களையே உபயோகித்தனர். ஏனெனில், அவர்கள் அயல்நாட்டில் இருந்தவரைவிட, தேர்ச்சியுடையவராய் இருந்தனர். ஆனல், சிறிது காலத்திற்குமுன் கட்டப்பட்ட கட்டடங்கள் எல்லாம் சாதாரணமாகச் செங்கற்களைக் கொண்டோ அல்லது இரண்டையும் கலந்தோ கட்டப்பட்டன. அறைகள் விசாலமாக அமைக்கப்படுகின்றன. தொழில் செய்யும் இடம் வசிக்குமிடத்திற்குத் தொலைவில் அமைக்கப்படுகின்றது.'

சாளரங்களில் பொருத்தப்பட்டிருந்த கம்பிகளுடன் கண்ணுடியையும் உபயோகித்தனர். டியூடர் வம்சத்தின் ஆட்சிகாலத் தொடக்கத்தில் சாளரங்களின் நாற்புறமும் இருந்த சட்டங்கள் ஓக் (oak) மரத்தினுல் ஆனவையாய் இருந்தன. அவை பூவேலைப்பாடு உடையனவாயிருந்தன. சாளரங்களில் கம்பிகளும் பொருத்தப்பட்டிருந்தன. ஆனுல், அதற்குப்பிறகு மரத்தில் பூவேலைக்குப் பதிலாகக் கண்ணுடி பொருத்தப்படுவதை விரும்பினர் என்று ஹாரிசன் குறிப்பிட்டுள்ளார்.

முற்காலத்தில் சிறந்த கண்ணுடிகள் வெளிநாட்டில் இருந்து தருவிக்கப்பட்டன. எலிசபெத் அரசியின் அரசாட்சிக் காலத் தொடக்கத்தில் கண்ணுடி செய்யும் தொழிலானது, நார்மண்டி (Normandy), லோரைன் (Lorraine) ஆகிய பிரதேசங்களில் இருந்துவந்த அயல்நாட்டுக் கைத்தொழிலாளிகளைக்கொண்டு மேலும் முன்னேற்றமடைந்தது. வீல்டு (Weald), ஹாம்ப்ஷீர் (Hampshire), ஸ்டாஃபோர்டுஷீர் (Staffordshire) லண்டன் முதலிய இடங்களில், சாளரங்களுக்கு வேண்டிய கண்ணுடிகள் மட்டுமின்றி, பாட்டில்களும், மதுபானம் முதலியவைகள் அருந்தும் கோப்பைகளும் தயாரிக்கப்பட்டன. முராஞே (Murano) என்ற இடத்திலிருந்து வெனிஸ் நகர வியாபாரிகள் கொண்டு வந்த கண்ணுடிச் சாமான்களைப்போல் அவ் விடங்களில் தயார் செய்தனர். வெள்ளையடிக்கப்பட்டிருந்த கூரைகளில் சிற்பவேலை செய்யப்பட்டது. சிலவிடங்களில் அச் சிற்பங்களுக்கு வர்ணம் தீட்டப்பட்டது. தங்கத் தகடுகளைக்கொண்டும் அழகு செய்யப்பட்டன. சுவர்களைத் திரைச் சீலைகளைக்கொண்டு அழகு செய்தனர். திரைச் சீலைகள், வர்ணம் தீட்டப்பட்டவைகளாயிருந்தன. பலவித சம்பவங்கள், செடிகள், மிருகங்கள் ஆகியவை அத் திரைச் சீலைகளில் தீட்டப்பெற்றன. சில இடங்களில் திரைச் சீலைகளுக்குப்பதிலாக ஓக் மரத்திலும், கிழக்கு நாடுகளில் (பால்டிக் நாடுகள்) இருந்து கொண்டுவரப்பட்ட வெயின்ஸ்காட் (wainscot) என்ற ஒருவகை மரத்திலும் சிற்பவேலை செய்தனர்.

இதைவிடச் சிக்கனமான வழியில் சுவர்களை அலங்கரிப்பதை ஃபால்ஸ்டாஃப் (Falstaff) என்பார் தமக்கு விருந்து அளித்த சீமாட்டிகளுக்குத் தெரிவித்தார். அதாவது சுவர்களில் வண்ண ஓவியங்களைத் தீட்டுவதாகும்.

விருந்தளித்த சீமாட்டி : 'நான் உண்ணும் பாத்திரத்தையும், உணவுஉண்ணும் அறையின் திரைச் சீலைகளையும் அடகுவைக்கத் தயாராக இருக்கவேண்டும்'

ஃபால்ஸ்டாஃப் : 'கண்ணுடிக் குவளைகள் குடிப்பதற்குப் போதும். படுக்கையைச் சுற்றித் தொங்கவிடப்பட்டிருக்கும் திரைச் சீலைகள், மற்றும் சுவர்களை அலங்கரிக்கும் திரைச் சீலைகள் ஆகியவை தேவையில்லை. அதைவிடச் சுவர் களில் ஏதாவது கதையில்வரும் சம்பவத்தைத், தீட்டு வதும் ஜெர்மனியர் வேட்டையாடுவதைத் தீட்டுவதும் பன்மடங்கு உயர்ந்ததாக இருக்கும்'.

பிரபுக்களின் வீடுகளில்கூடச் சட்டமிடப்பட்ட படங்கள், ஒரு சிலவே இருந்தன. குடும்பத்தாரின் படங்கள் சட்டமிடப்பட் டிருந்தன. ஆனால், பெரும் செல்வந்தர்களின் மாளிகைகளில் ஓவியங்கள் வெனிஸ் நகரத்தில் இருந்ததுபோலிருந்தன. ஓவியத் தைக்கண்டு திகைத்துப்போன கிரிஸ்டோபர் ஸ்லை (Chirstopher Sly) என்பாரை நோக்கி, ஒரு பிரபுவின் பணியாள் கீழ்வருமாறு கூறினுன் : 'நீங்கள் சித்திரங்களை விரும்புகிறீர்களா? நெளிந்து ஓடும் ஓடையின் கரையில் உடோனிஸ் அமர்ந்திருப்பதையும் அதை செஜ் (sedge) கோரையினிடையே மறைந்துகொண்டு சிதரேயா காண்பதையும் சித்திரிக்கும் ஓவியத்தைத் தருவித்துக் கொடுக்கிறேம்.' சாதாரண மக்களின் வீடுகளில் அதிக மாறுதல் ஏற்படவில்லை. அவர்களின் குடிசைகள் முன்போலவே, முக் கோண வடிவத்தில் முகப்பை உடையனவாயும், மரத்தால் கூரை வேயப்பெற்றனவாயும் இருந்தன. குறுக்கும் நெடுக்குமாக மரச் சட்டங்களை அமைத்து அவைகளுக்கிடையில் களிமண், முதலிய வற்றைக் கொட்டி அவ் வீடுகளின் சுவர்கள் கட்டப்பட்டிருந்தன.

மேரி அரசியின் ஆட்சிக்காலத்தில் இந்த வகையில் கட்டப் பட்ட வீடுகளைக்கண்டு ஸ்பெயின் நாட்டினர் வியந்தனர். இவ் வீடுகளில் மக்கள் மிகுதியான உணவு சாப்பிட்டதைக் கண்டு மேலும் வியந்தனர். அவர்களில் பெயர்பெற்ற ஒருவர் கூறிய தாவது : 'இந்த ஆங்கிலேயர் அவர்களுடைய வீடுகளைக் குச்சி களையும், குப்பையையும்கொண்டு கட்டுகின்றனர். ஆனல், தங்கள் அரசனைப்போலவே போரிடுவதில் திறமையுள்ளவர்களாக இருக் கின்றனர் (ஹாரிசன் எழுதியுள்ளார்). எலிசபெத் அரசியின் காலத் தில் பாட்டு, இசை, நாடகம் ஆகியவற்றில் சிறப்பு எய்திய ஆங்கி லேயர், சித்திரக் கலையில் அந்த அளவிற்குத் தேர்ச்சி பெற்றவராக இருக்கவில்லை. கெட்டியான துணியில் அரசியின் உருவப் படத்தையும் அரச சபையினரின் உருவப் படங்களையும் கைதேர்ந்த ஓவியர்கள் வரைந்திருப்பினும், அக் கலை மற்றக் கலைகளைப்போல் சிறப்பெய்தவில்லை. சிறிய உருவப் படங்களை வரையக் கற்றுக் கொடுக்கும் பள்ளி ஒன்றை, நிகலஸ் ஹில்லியர்ட் (Nicholas

Hilliard) என்ற, எக்ஸிடர் (Exeter) நகரவாசி ஒருவரின் புதல்வர் ஏற்படுத்தினர். சிறிய உருவப் படங்களுக்கு நல்ல மதிப்பு அக் காலத்தில் இருந்தது. அரசியின் சிறிய உருவப்படத்திற்கு அரச அவையினர், நாற்பதில் இருந்து நூறு பொன் நாணயங்கள்வரை தரக் காத்திருந்தனர். தங்கள் குடும்பத்தினர் நண்பர்கள் ஆகியோரின் சிறிய உருவப்படங்களையும் மக்கள் விரும்பியதால் அக் கலைக்கு அதிக மதிப்பு இருந்துவந்தது. சிறிய உருவப் படங்களைத் தீட்டும் கலை மூன்றும் ஜார்ஜின் அரசாட்சியின் இறுதிக்காலத்தில் வாழ்ந்த காஸ்வேயின் (Cosway) காலம்வரை உயர்ந்த நிலையில் இருந்துவந்தது. புகைப்படம் ஏற்பட்டபோது தான் இக் கலை நசித்துப்போயிற்று. விஞ்ஞானத்தின் முன்னேற்றம், மற்றக் கலைகளின் அழிவைத் தேடியதுபோல் இக் கலையின் அழிவிற்கும் காரணமாய் இருந்தது.

மக்கள் விநோதமாகவும் அதிகவிலை உள்ளதாகவும் இருந்த ஆடையை உடுத்திவந்ததைக் கருத்தில்கொண்டு வசைப் பாட்டுகள் எழுதப்பட்டன. இத்தாலியிலும், ஃபிரான்சிலும் உடை அணிவதில் ஏற்பட்ட புதுமையை ஆங்கிலேயர் அப்படியே ஏற்றுக் கொண்டனர். எலிசபெத் அரசியின் ஆட்சிக்காலத்தில் வாழ்ந்த பிரபுக்கள் தங்கள் உடையில் புதுமையைப் புகுத்துவதற்குத் தையற்காரனை நம்பியிருக்கவேண்டியிருந்தது. விதவிதமான தங்கச் சங்கிலிகளையும், சிறிய நகைகளையும், ஆண்களும் பெண் களும் அணிந்துகொண்டனர். இருபாலரும் கழுத்தைச் சுற்றிச் சிறியவும், பெரியவுமான ரஃப் (ruff) என்றழைக்கப்பட்ட மடிப்பு களைக் கொண்டிருந்த ஆடையை அணிந்தனர். செல்வரே அத்தகைய புதுமையான ஆடையை அணிந்துகொண்டனர். எல்லா வகுப்பினரும் தாடி வளர்த்துவந்தனர்.

பிரபுக்கள் தங்கள் ஆடைகளுடன் கத்திகளை அணிய உரிமை பெற்றிருந்தனர். தன் எதிரியை, தன்னுடைய ஆட்களைக் கொண்டு கொல்லும் பழக்கமானது மறைந்துவந்தது. அதற்குப் பதிலாக ஒருவர் மற்றவரைத் தனித்து எதிர்த்துச் சண்டை புரியும் வழக்கம் பரவிக்கொண்டிருந்தது. இப்படிச் செய்வதுதான் மதிக்கக் கூடிய செயலென்று கருதினர். தம்மைக் காத்துக்கொள்வதற் காகவும் எதிரியைத் தாக்குவதற்கும் வாள் அல்லது அதைப் போன்ற ஆயுதங்களை ஆங்கிலேயர் வைத்திருந்தனர். இப்படி வைத்திருப்பதை ஆங்கிலேயர் மற்ற நாட்டவரிடமிருந்து கற்றுக் கொண்டனர். நீண்ட வாளோ அல்லது சிறிய வாளோ கொண்டு பலவிதமாகக் கூச்சலிட்டுக்கொண்டு ஒருவர்மேல் ஒருவர் பாய்ந் தனர்.

வியாபாரம் தொடர்ந்து பெருகிவந்ததாலும், பயிர்த்தொழில் மேம்பட்டு வந்ததாலும், பொதுவாக நாட்டில் செல்வம் பெருகிவந்த தாலும், சாலைகளில் போக்குவரத்து அதிகரித்தது. குதிரைச் சவாரி செய்தும், நடந்தும் பல வகுப்பினர்கள் வியாபார நிமித்த மாகவும், பொழுதுபோக்கிற்காகவும், ஓர் இடத்தில் இருந்து மற்றோர் இடத்திற்குச் சாலைவழியே போய் வந்துகொண்டிருந் தனர். இடைக்காலத்தில் யாத்திரை செல்லும் பழக்கம், பிரயாணம் செய்வதற்கும் வேடிக்கை பார்ப்பதற்காக மற்ற இடங்களுக்குச் செல்வதற்கும் மக்களின் ஆவலைத் தூண்டிவிட்டிருந்தது. யாத்திரைபோகும் பழக்கம் நின்றுவிட்டபிறகும், மேற்கூறிய காரணங்களுக்காகப் பிரயாணம் செய்யும் பழக்கம் தொடர்ந்து இருந்துவந்தது. வியாதியைத் தீர்க்கும் சக்திவாய்ந்த நீர் ஊற்றுகள் இருக்குமிடத்திற்குச் செல்வது யாத்திரை செல்வதற்குப் பதிலாகத் தோன்றியது. முன்பே, காம்டன் கூறியுள்ளதுபோல், தொலைவில் டெர்பிஷீரில் (Derbyshire) இருந்த பக்ஸ்டன் (Buxton) பிரபுக்களும் ஜென்ட்ரிகளும் வந்து தங்கிப்போகும் இடமாக இருந்துவந்தது; அவ்விடத்து நீரைக் குடிப்பதற்காகவே அவர்கள் அங்குச் சென்றுவந்தனர். ரூஸ்பரியில் (Shrewsbury), ஏர்ல் (Earl) பதவி வகித்துவந்தவர், வெளியூர்களிலிருந்து வந்தவர்கள் தங்கு வதற்காக விடுதிகள் கட்டிவைத்தார். இப்படிச் செய்வதன்மூலம் மேலும் அதிகமான பிரயாணிகள் அவ் விடத்திற்கு வர வழி செய் தார். பாத் (Bath) என்ற நகரத்திற்கு, பாக்ஸ்டன் நகரத்திற்குச் சென்ற அளவு மக்கள் செல்லவில்லை. பாத் நகரத்தின் நீரும் வியாதியைக் குணப்படுத்தும் சக்திவாய்ந்ததாக இருந்தது என மக்கள் நினைத்தாலும், அங்குத் தங்குவதற்கு வசதியில்லாததால் அதிகமாக அங்கு மக்கள் போகவில்லை.

எலிசபெத் அரசியின் ஆட்சிக் காலத்தில் இங்கிலாந்தில் இருந்த சத்திரங்கள், பிரயாணிகளுக்கு வசதி செய்துகொடுப்பதில் தனிப்பட்ட அக்கறை உடையனவாய் இருந்தன. ஐரோப்பாவின் பாதியைச் சுற்றிய ஃபைனஸ் மாரிசன் (Fynes Moryson) அங் குள்ள சத்திரங்களில் பிரயாணிகள் எப்படி உபசரிக்கப்பட்டனர் என்பதைக் குறித்துள்ளார்.

‘ இங்கிலாந்தின் மிக ஏழ்மையான கிராமங்களில் இருந்த சத்திரங்களிலும், பிரயாணிகளுக்கு உணவும், பொழுதுபோக்கிற்கு வசதியும், பணிவிடைகளுக்கு ஆட்களும் கிடைத்ததுபோல், உலகில் வேறெங்கும் கிடைப்பதில்லை. ஒரு பிரயாணி சத்திரத்தில் வந்திறங்கியதும், ஒரு பணியாள் பிரயாணியின் குதிரையை அழைத்துச்சென்று, அதனுடலைத் தேய்த்துக் கொடுத்து, அதன்

பிறகு அதற்குத் தீனி கொடுப்பான். இந்த வேலையை, அப் பணி யாள் சரியாகச் செய்கிருனு என்று சத்திரத்தின் உரிமையாளரோ அல்லது அவரது நம்பிக்கைக்குப் பாத்திரமான பணியாளோ கவனித்து வருவார். இதற்கிடையில் மற்ருெரு பணியாள் பிரயாணியை அழைத்துச்சென்று ஓர் அறையில் விடுப்பார். அறையில் இருந்த குளிர்காயும் நெருப்பைக் கிண்டிவிடுவார். மூன்ருவது பணியாள், பிரயாணியின் மிதியடிகளைக் கழற்றி அவைகளைச் சுத்தம் செய்வார். இதன்பிறகு சத்திரத்தின் உரிமை யாளராவது அல்லது அவர் மனைவியாவது பிரயாணியைக் காணவருவார். பிரயாணி ஒரு பொதுஇடத்தில் மற்றவர்களுடன் சேர்ந்து உண்ணுவதாய் இருந்தால், அவரது உணவிற்காக ஆறு பென்ஸ் கொடுக்கவேண்டியிருக்கும்; சில இடங்களில் நான்கு பென்ஸ் கொடுத்தால் போதும். பிரபுக்கள் மற்றவரோடு சேர்ந்து உண்ணுவதை இழிவாகக் கருதுவர். அவர்கள் தங்களுக்குக் கொடுக்கப்பட்ட அறையிலேயே உண்ணுவர். தமக்குவேண்டிய உணவை அவர்கள் சமைக்கச் சொல்வர். அவர் உணவு உண்ணும்போது சத்திரத்தின் உரிமையா ளரோ அல்லது அவர் மனைவியோ அவர் அறைக்கு வந்து அவருடன் பேசிக்கொண்டிருப்பர். சத்திரத்தில் விருந்தினர்கள் அதிகம் இருந்தால் அவரது அறைக்குவந்து விசாரித்துவிட்டுச் செல்வர். அறையில் வேறுயாராவது அவருடன் இருந்தால் அவரைப் பாட்டுப்பாடச் செய்வர். இதற்குமாருகப் பிரபு தனிமை யில் இருந்தால், பாடகர்கள் காலைநேரத்தில் அவர் அறைக்கு வந்து பாடி, அவருக்குப் பொழுதுபோகச் செய்வர். எவரும் இவ் வளவு வசதிகளைத் தமது வீட்டில்கூட எதிர்பார்க்க முடியாது. பிரயாணி தன்னையும் தன் குதிரையையும் கவனித்துக்கொண்ட வர்க்கு ஒரு சில பென்ஸ் இனுமாகக் கொடுப்பாரேயாஞல், அவர் கள் உங்கள் பிரயாணம் இன்பமானதாக இருக்கட்டும் என்று கூறி வழியனுப்புவர்.'

மேற்கூறியவாறு மனமார்ந்த வரவேற்பு அளிக்கப்பட்டாலும், இவையெல்லாம் கெட்ட எண்ணத்தை மனத்தில்கொண்டு செய் தனவாய் இருக்கலாம். ஷேக்ஸ்பியர் தமது நாடகமொன்றில், ரோசெஸ்டர் (Rochester) என்ற இடத்தில் இருந்த சத்திரத்தில் விடியற்காலையில் பேசியபேச்சின் வாயிலாகச் சத்திரங்களில் நடந்த மெச்சத்தகாத செயல்களைப்பற்றிக் குறிப்பிடுகின்ருர். 'சார்லஸ் வெயின்' (Charles Wain) புதிதாகக் கட்டப்பட்டு இருந்த புகைக்கூண்டின்மேல் ஏறிவிட்டடர். ஆனுல், 'குதிரைகள் தயாராகவில்லை' என்று பேசிக்கொண்டனர் என்று ஷேக்ஸ்பியர் எழுதியதில் இருந்து, பணியாட்கள் சரிவர வேலைசெய்யவில்லை

என்பது புலப்படுகின்றது. உண்மையிலேயே பிரயாணிகள், சுத்த மான அறைகளில் தங்கச் செய்யப்படவில்லை. மேலும், ஃபைனஸ் மாரிசன் கவலையில்லாமல் சத்திரத்தில் தூங்கியதுபோல் தூங்க முடியவில்லை. ஏனென்ருல், பிரயாணிகளின் வசதிகளைக் கவனித்துக் கொள்ளும் அதிகாரி சில சமயங்களில் கெட்ட எண்ணம் உடையவ ராக இருந்தார். அவர்களே பிரயாணிகளைக் கள்வர்களுக்குக் காட்டிக் கொடுத்தனர்.

ஷேக்ஸ்பியர் சத்திரங்களைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளதை, வில்லி யம் ஹாரிசன் எழுதியுள்ளவை ஊர்ஜிதப்படுத்துகின்றன. ஹாரிசன் பிரயாணிகளுக்குக் கொடுக்கப்பட்ட உணவு, மதுபானம், படுக்கை முதலியவைகளைப்பற்றிப் புகழ்ந்து கூறுகிருர். சுவர்கள் திரைச் சீலைகளால் அலங்கரிக்கப்பட்டு இருக்கின்றன என்றும், பிரயாணி யிடம் அவர் தங்கியிருந்த அறையின் சாவியைக் கொடுத்தன ரென்றும் கூறியுள்ளார். மேலும், ஐரோப்பாக் கண்டத்தில் பிரயாணி கள் நடத்தப்பட்ட விதத்தைவிட, இங்கிலாந்தில் நல்லமுறையில் நடத்தப்பட்டனரென்றும் குறித்துள்ளார். ஆனல், சில சமயம் வேண்டியதைச் செய்யக் காத்திருக்கும் பணியாட்களும் சத்திரத் தின் உரிமையாளர்களும் கள்வர்களுடன் தொடர்பு கொண்ட வராய் இருந்தனர். பிரயாணி பிரயாணத்தைத் தொடங்குமுன், சத்திரத்தில் உள்ளோர் அன்புடன் விசாரணை செய்தது, பிரயாணி மறுநாள் எவ் வழியாகப் போகப்போகிருர், எவ்வளவு பணம் கொண்டு செல்கிருர் என்பதை அறிந்துகொள்ளும்பொருட்டே ஆகும். செக் என்று அழைக்கப்பட்ட தாள்கள் வழக்கத்தில் இல்லாத அக் காலத்தில் பிரயாணிகள், தங்கம், வெள்ளி நாணயங் களை வியாபார நிமித்தம் தங்களுடன் கொண்டு சென்றனர், சத்திரத்திலிருந்த வேலையாட்கள் பிரயாணிகள் வைத்திருந்த சாமான்களனைத்தையும் அடுக்கி ஒழுங்காக வைக்கும்முறையில் கனத்தைக்கொண்டு, பிரயாணி என்ன பொருள்களை எவ்வளவு வைத்து இருக்கிருரென்று அறிந்துகொள்வர். இப்படி அறிந்து கொண்டதை வெளியே இருந்த தங்கள் கூட்டாளிகளுக்கு அறிவிப்பர். சத்திரங்களில் களவு ஏதும் நடக்காததால், அவை களின் பெயர் கெடுவதில்லை. கள்வர்கள் பிரயாணிகள் சில மைல் தூரம் பிரயாணம் செய்தபிறகு, மறைவிடங்களில் இருந்து தாக்கிப் பொருளைப் பறிப்பர். இதனல் இவை ஒன்றுமறியாத மனிதர் நஷ்டம் அடைந்தனர். உதாரணமாக முந்நூறு தங்க நாண யத்தை எடுத்துக்கொண்டு பிரயாணம் செய்த ஃபிராங்லின் என்பாரை ரோஸ்டர் சத்திரத்துப் பணியாள், பால்ஸ்டாபிற்கும் அவர் கூட்டத்தினருக்கும் காட்டிக்கொடுத்தான்.

சத்திரங்களைப் பிரயாணிகள் மாத்திரம் உபயோகிக்கவில்லை. பண்ணைவீடுகளிலிருந்தவர்களும் அவர்தம் விருந்தினர்களும், வீட்டில் உணவு உண்டபிறகு, அண்மையில் இருந்த சத்திரத்திற்குச் சென்று அங்கே அதிக நேரம், உள் அறை ஒன்றில் குடிப்பதில் பொழுதைக் கழித்தனர். அயல்நாட்டு மதுபானங்கள் கிடைப்பது அரிதாய் இருந்ததால், ஸ்குவீர் வகுப்பினர் சத்திரங்களுக்குப் போயினர். எலிசபெத் அரசி இறந்த பிறகும், பெரும் செல்வராய் இல்லாத ஜென்ட்ரிகள் இப் பழக்கத்தை உடையவராய் இருந்தனர். எக்காலத்திலும், இடைநிலை வகுப்பினரும் தாழ்ந்த வகுப்பினரும், சத்திரங்களில் ஒன்று கூடினர்.

எலிசபெத் அரசியின் ஆட்சிக்காலத்து இலக்கியத்தையும், வரலாற்றையும் ஆராய்வோமானால், பலவித வகுப்பினரிடையே ஒற்றுமையும், நெருங்கிய தொடர்பும் முற்காலத்தைவிட அதிகமாக இருந்ததென்று எண்ணத்தூண்டும். அக்காலத்தில் குடியானவர்கள் கலகம் செய்யவில்லை. சமுதாயத்தில் இருந்த மக்களனைவரும் ஒரேநிலையில் இருக்கவேண்டும் என்ற கருத்துத் தோன்றாத காலம் அது. ஜேன் ஆஸ்டின் பிற்காலத்தில் இருந்ததாகக் கூறியது போல், உயர்ந்த வகுப்பினர் பிறருடன் கலவாமலும், மற்றவரை மதிக்காமலும் இருக்கவில்லை. ஷேக்ஸ்பியரின் காலத்தில் வகுப்புப் பிரிவுகள் இன்றியமையாதவை எனக் கருதப்பட்டது. உயர்ந்த வகுப்பினர், தாழ்ந்த வகுப்பினர் தங்களுக்கு அடங்கி நடக்க வேண்டும் என்ற மனப்பான்மை உடையவராய் இருக்கவில்லை. இத்தகைய மனப்பான்மை பதினெட்டாம் நூற்றுண்டிலும், பத்தொன்பதாம் நூற்றுண்டின் ஆரம்பத்திலும் காணப்பட்டது. தர்மப் பள்ளிக்கூடங்கள் இம் மனப்பான்மையை வெளிப்படுத்துகின்றன. எலிசபெத் அரசியின் ஆட்சிக்காலத்தில் எல்லா வகுப்பைச் சார்ந்த மாணவர்களும் ஒன்று சேர்ந்து, இலக்கணப் பள்ளிகளில் கல்விபயின்றனர். பதினெட்டாம், பத்தொன்பதாம் நூற்றுண்டுகளில் தர்மப் பள்ளிகள், கிராமப்பள்ளிகள், பெயர்பெற்ற பொதுப்பள்ளிகள் ஆகியவற்றில் உயர்ந்த வகுப்பினரும், தாழ்ந்த வகுப்பினரும் பிரிக்கப்பட்டுக் கல்வி பயின்றுவந்தனர். எலிசபெத்தின் ஆட்சிக்காலத்தில் வாழ்ந்த ஆங்கிலேயர்கள், ஒருவர் மற்றவரைச் சந்தேகத்துடன் நோக்காமலும், உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்ற மனப்பாங்கு இல்லாமலும், வாழ்ந்துவந்தனர்.

ஒரு வகுப்பு மற்றமற்ற வகுப்புகளினின்று தனித்து நிற்கவில்லை. மேலும். தகப்பனும் மகனும் அதேவகுப்பைச்சார்ந்தவராய் இருக்கவேண்டும் என்ற கட்டாயம் இல்லாமலிருந்தது. தனி மனிதரும் குடும்பங்களும் ஒரு வகுப்பில் இருந்து மற்றொரு

வகுப்பினராக மாறிக்கொண்டிருந்தனர். செல்வம் பெருகியதாலோ அல்லது செல்வத்தை இழந்ததாலோ அல்லது தொழிலின் மாற்றத்தினாலே, இத்தகைய மாற்றம் ஏற்பட்டது. இடைக்காலத்தில் பிரபுக்களும், குடியானவர்களும் ஒருவர்க்கொருவர் சம்பந்தமில்லாதவராக இருந்தனர். ஃபிரான்சிலும் இத்தகைய நிலை கி.பி. 1789 வரை நீடித்தது. ஆனால், டியூடர் வம்சத்தினரின் காலத்தில் ஒரு வகுப்பினர் மற்ற வகுப்பினரிடமிருந்து முழுமையும் விலகி இருக்க முடியவில்லை. இடைநிலை வகுப்பைச் சார்ந்தவர் பலவிதத் தொழில்கள் செய்பவராய் இருந்தனர். அவரது எண்ணிக்கையும் அதிகமாக இருந்தது. அவர்கள் தங்களைவிட உயர்ந்தோரிடமும், தாழ்ந்தோரிடமும், வியாபாரம் அல்லது தொழில்மூலம் தொடர்பு உள்ளவராய் இருந்தனர். சமுதாயத்தில் எல்லாரும் ஒரே பொருளாதார நிலையிலில்லை. அதற்குமாறாக யாவரும் சுதந்திர மனிதராக இருந்தனர். ஒவ்வொருவரும், தமக்குத் தகுந்த தொழிலைத் தேர்ந்தெடுத்துக்கொண்டனர். ஒவ்வொருவரும் தமக்கு விருப்பமானவருடன் பழகும் உரிமையுடையவராய் இருந்தனர். ஷேக்ஸ்பியரின் காலத்தில் இங்கிலாந்தின் சமுதாயம் இந் நிலையிலிருந்தது. ஷேக்ஸ்பியரும் தம் இலக்கியத்தில் இத்தகைய சமுதாயத்தைச் சிறந்ததாக ஏற்றுக்கொண்டிருக்கிறார். பலவகுப்பினர், பலதொழில்களைச் செய்துவந்த ஆடவர், பெண்டிர் அனைவரும் அவரது கவனத்தை ஒரே அளவில் ஈர்த்தனர். இருப்பினும் மனிதவாழ்க்கையின் நலத்திற்கு வகுப்புகள் அவசியம் என்று அவர் நினைத்தார்.

ஜென்ட்ரி வகுப்பினரில் சிறுபான்மையோராகப் பிரபுக்கள் இருந்தனர். அவர்கள் சில உரிமைகளைப் பெற்றிருந்தனர். ஆனால், அவர்களும் அரசாங்கத்திற்கு வரி கொடுக்கவேண்டி இருந்தது. அவர்கள் தங்கள் வீட்டில் பல பணியாட்களை வைத்திருக்க வேண்டி இருந்தது. மற்றவர்களுக்குத் தாராளமாக உதவி செய்யக் கடமைப்பட்டிருந்தனர். ரோஜாப்பூ அடையாளப் போர் நடந்த காலம்வரை அவர்கள் படைவைத்திருந்தனர். அரசியலில் அதிகாரமும் உடைவராய் இருந்தனர். டியூடர் வம்சத்தினரின் காலத்தில், பிரபுக்களின் நிலைக்கு உயர்த்தப்பட்டோரின் எண்ணிக்கை குறைவாகவே இருந்தது. பிரபுக்கள் சபையின் அங்கத்தினராய் இருந்தவர்கள், எலிசபெத் அரசியின் ஆட்சிக் காலத்தில் குறைந்த அளவு நிலத்திற்கே உரிமையுள்ளவராய் இருந்தனர். டியூடர் வம்சத்தினரின் ஆட்சிக்கு முற்பட்ட பிளாட்டாஜனட் வம்சத்தினரின் காலத்திலும், டியூடர் வம்சத்தினரின் ஆட்சிக்குப் பிற்பட்ட ஹானோவர் வம்சத்தினரின் காலத்திலும் பிரபுக்கள் அதிக அளவு நிலங்களை வைத்திருந்தனர். விலைவாசி உயர்வினால்

மற்ற வகுப்பினரைவிடப் பிரபுக்கள் அதிகமாகப் பாதிக்கப்பட்டனர். பிற்காலத்தில் பெட்ஃபோர்டில் (Bedford) டியூக் பதவியில் இருந்தோரும் மற்றவரும் ஏழை ஜென்ட்ரிகள், சிறிய நிலங்களை வைத்திருந்தோர் ஆகியோரின் நிலங்களை வாங்கித் தங்கள் சொத்தை அதிகரித்ததுபோல் அக் காலத்தில் செய்யமுடியவில்லை. இவை காரணமாக டியூடர் வம்சத்தினரின் காலத்தில் பிரபுக்களின் சபை முற்காலத்திலும், பிற்காலத்திலும் இருந்ததைப்போல் அவ்வளவு அதிகாரமுடையதாக இருக்கவில்லை. முக்கியமாக மடங்கள் அழிக்கப்பட்டதால் மடத்தலைவர்களான ஆபட்டுகள் பிரபுக்கள் சபையில் இருந்து மறைந்தனர். அப்போது பிரபுக்கள் சபையின் அதிகாரம் குறைந்தது. பழைய பிரபுக்கள் தங்கள் செல்வாக்கை இழந்துவிட்டிருந்தனர். புதியதாக உயர்த்தப்பட்ட பிரபுக்கள் பழைய பிரபுக்களின் நிலையை எட்டாமல் இருந்தனர்.

எலிசபெத் அரசியின் ஆட்சிக்காலம் பிரபுக்களின் நலனுக்கு உகந்ததாய் இல்லாவிட்டாலும், ஜென்ட்ரி வகுப்பினருக்கு மிகவும் நன்மை பயக்கும் காலமாக இருந்தது. பழைய பிரபுக்களின் செல்வமும், அதிகாரமும் குறைந்ததால் ஜென்ட்ரி வகுப்பினரின் எண்ணிக்கை, செல்வம், செல்வாக்கு அனைத்தும் அதிகரித்தன. மடங்களின் சொத்துகள் பலருக்குக் கிடைத்ததும் மற்றொரு காரணமாகும். வெளிநாட்டு வியாபாரத்தினால் செல்வம் பெருகியதும், பயிர்த்தொழிலில் ஏற்பட்ட முன்னேற்றமும் ஜென்ட்ரி வகுப்பினர் உயரக் காரணங்களாய் இருந்தன. டியூடர், ஸ்டூவர்ட் வம்சத்தினரின் காலங்களில், ஸ்குவீர் என்ற நலம்படைத்த ஜென்ட்ரி வகுப்பினர் மற்ற வகுப்பினரிடமிருந்து ஒதுங்கி வாழவில்லை. நாட்டுப்புற மக்களைப்போலும் வாழ்க்கை நடத்தவில்லை. இயோமென் வகுப்பினர், வியாபாரிகள், வழக்கறிஞர்கள் ஆகியோர் தங்கள் தொழிலில் செல்வத்தைப் பெருக்கி அதைக்கொண்டு நிலத்தை வாங்கி ஜென்ட்ரி வகுப்பினராக மாறிக்கொண்டனர். அதேசமயத்தில் பண்ணைவீடுகளில் வசித்த உயர்ந்த வகுப்பினரின் இளைய புதல்வர்கள், கைத்தொழில் அல்லது வியாபாரம் கற்றுவந்தனர். இவ்விதமாகப் பழைய குடும்பத்தினர் புதிய சமுதாயத்திலே தங்களுக்கும் ஓர் இடத்தைத் தேடிக்கொண்டனர். அதைப்போலவே, நகரத்தில் வாழ்ந்த வியாபாரிகள், வழக்கறிஞர் முதலானோர், நாட்டுப்புறங்களில் சொத்தைச் சேர்த்து அதனால் அந்த வட்டாரங்களுடன் தொடர்புள்ளவர் ஆயினர். மேற்கிலும் வடக்கிலும், நாட்டுப் புறங்களில் வாழ்ந்தோர் நகரத்தலைவருடன் தொடர்பில்லாது வாழ்ந்துவந்தனர். லண்டன் அருகிலிருந்த கவுன்டிகள் லண்டனுடன் வியாபாரத் தொடர்பு கொண்டிருந்தன. லண்டன் நகர வாழ்க்கை அக் கவுன்டி மக்களின் வாழ்க்கையைப் பாதித்தது.

ஹானோவர் வம்சத்தினரின் ஆட்சிக்காலத்தில் ஜென்ட்ரிகள் இளைய புதல்வர்களை வியாபாரம் கற்க வெளியூர்களுக்கு அனுப்பி வைப்பது குறைந்திருந்தது. இதற்கு ஒரு காரணம் சிறிய அளவு நிலம்படைத்த ஸ்குவீர் வகுப்பினர் குறைந்துகொண்டே (அனேகமாக மறைந்துவிட்டனரென்று கூறலாம்) வந்ததாகும். பதினெட்டாம், பத்தொன்பதாம் நூற்றுண்டுகளில், வியாபாரத்தில் ஈடுபடுவது இழிவானது என்று ஜென்ட்ரிகளில் சிலர் நினைத்தது தவருன எண்ணமாகும். ஏனென்றுல், அனேக ஜென்ட்ரி குடும்பங்கள் வியாபாரத்தால்தான் உயர்ந்த நிலையை அடைந்திருந்தன. அனேக ஜென்ட்ரிகள் தொடர்ந்து வியாபாரத்தில் ஈடுபட்டு வந்தனர். இதை அவர் பெண்டிர் அறிந்திராமல் இருக்கலாம். எலிசபெத் அரசியின் ஆட்சிக்காலத்தில் வியாபாரத்தில் ஈடுபடுவதை ஜென்ட்ரிகள் இழிவானதாகக் கருதவில்லை. லண்டனில் வியாபாரிகளிடம் வியாபாரம் கற்றுவந்தவரில் அநேகர் உயர்ந்த வகுப்பினரின் பிள்ளைகளாக இருந்தனர் என்று ஸ்டோ (Stow) என்பவர் தம் நூலில் குறிப்பிட்டுள்ளார். அவர்கள் தங்கள் எஜமானருக்குக் கீழ்ப்படிந்து உழைத்துவந்தனர். அப்படிச் செய்வதன் மூலம் தங்கள் எஜமானருடன் கூட்டுச்சேர்ந்து வியாபாரம் செய்யச் சந்தர்ப்பம் ஏற்படும் என்று கருதினர். ஆனுல், ஓய்வு நேரங்களில் விலையுயர்ந்த ஆடைகளையும் ஆயுதங்களையும் தரித்து வெளியில் சென்றனர். அத்துடன் நடனம், தனித்துச் செய்யும் சண்டை, இசை ஆகியவைகளைப் பயின்று வந்தனர்.

'வட்டாரக் கிருத்துவ ஆலயங்களில் காணப்படும் எலிசபெத் அரசி, முதலாம் ஜேம்ஸ் மன்னர் ஆகியோரின் ஆட்சிக்காலக் கல்லறைகள், பல ஸ்குவீர்களின் செல்வநிலைக்குக் காரணம் என்னவென்று எடுத்துக்காட்டுகின்றன. அவர்கள், லண்டன் அல்லது ஏதாவது ஒரு நகரத்தில் வாழ்ந்தவர் என்றும் அந் நகரில் உயர்ந்த ஆடை வியாபாரம் செய்தவர் அல்லது சிறு பொருள்களை விற்றவர் என்றெல்லாம் கல்லறைகளின்மேல் குறிக்கப்பட்டுள்ளன. அக் காலத்திற்குப்பிறகு அப்படிக் குறிக்கப்பட்டிருப்பதைக் காண்பது அரிதாகும்' (டபிள்யூ. ஜே. ஆஷ்லி எழுதிய, 'இகனுமிக் ஆர்கனைசேஷன் ஆஃப் இங்கிலண்டு' என்ற நூலில் பக்கம் 131; W. J. Ashley. Economic Organisation of England, p. 131.)

நிலம்படைத்த ஜென்ட்ரிகள், வியாபாரிகளுடன் நெருங்கிய தொடர்புகொண்டிருந்த அக் காலத்தில், பிரபுவின் அந்தஸ்து நிலம் படைத்தவருக்கு மாத்திரமிருக்கவில்லை. ஷேக்ஸ்பியர் இளைஞனுக வாழ்ந்தகாலத்தில் எப்படி அந்த அந்தஸ்திற்கு மற்ற

வரும் உரியவராயிருந்தனர் என்று ஹாரிசன் எடுத்துக் கூறு கின்றார்.

'எவர் ஒருவர் நாட்டின் சட்டங்களைப் படித்து வழக்கறிஞ ராகவோ அல்லது சர்வ கலாசாலையில் படிப்பதிலேயே காலத்தைக் கழிக்கும் பேராசிரியராகவோ அல்லது விஞ்ஞானத்தில் தேர்ந்தவ ராகவோ அல்லது போர்முனையில் தளபதிக்கு ஆலோசனை கூறு பவராகவோ அல்லது நாட்டிற்கு நன்மை பயக்கும் வகையில் ஆலோசனை கூறுபவராகவோ இருக்கிறாரோ அவர், பிரபுக்களுக்கும் நிலம்படைத்தவருக்கும் உரித்தான 'மாஸ்டர்' (Master) என்ற பெயரிட்டு அழைக்கப்படுவர். அந்த அந்தஸ்தை ஒருவருக்கு அளிப்பதால் அரசன் எதையும் இழந்துவிடுவதில்லை. ஏனென்றால், அப் பெயரால் அழைக்கப்பட்டவர்கள், பிரபுக்களைப்போல் வரியை யும், பிரபுக்கள் சில சந்தர்ப்பங்களில் அரசனுக்குக் கொடுத்த பரிசுத் தொகையையும் கொடுத்தனர். தங்கள் அந்தஸ்தைக் காப்பாற்றிக்கொள்வதற்காக அவர்களும் மேற்கூறியவற்றை உளநிறைவோடு கொடுக்கின்றனர்.'

பிரபுவின் அந்தஸ்தில் இருந்த ஒருவர் கடைகளில் தரப்படும் சீட்டில் குறிப்பிட்ட தொகையை மாத்திரம் கொடுக்காமல், அதற்கு மேலும் தாராளமாகக் கொடுக்கவேண்டி இருந்தது. எதையாவது வாங்கும்போது தெரிந்தும் அதிக விலை கொடுக்கவேண்டும். இப்படியெல்லாம் செய்வதற்காக, மற்றவர்கள் அவரைக் கண்டால் தங்கள் தொப்பியைச் சற்றே தூக்கி மரியாதை செய்வதுடன், 'மாஸ்டர்' என்றழைப்பர். இப்படி மரியாதை செய்தாலும் அவருக்குப் பின்னால், அவருடைய தந்தை தானியங்களை எடுத்துக்கொண்டு வியாபார ஸ்தலத்திற்கு சவாரி செய்துகொண்டு போவதை முன்பு பார்த்திருக்கிறோம் என்று இழிவாகப் பேசுவர்.' ஜென்ட்ரிகளுக்கு மக்களாகவே மதிப்புக் கொடுத்தனர். உயர்குடியைச் சார்ந்தவர் என்பதற்காக மதிக்கப்பட்டவர் ஒருசிலரே. பிரபுவின் அந்தஸ்தை உடையவராய் இருப்பதற்குப் பழங்காலம் தொட்டுச் செல்வராய் இருந்திருக்க வேண்டும் என்று பொதுவாகக் கருதப்பட்டது. பழங் காலம் என்று குறிப்பிடுகையில் வெகுகாலமாக என்ற பொருள் அதற்குத் தருவதற்கில்லை என்று பேராசிரியர் டானி (Tawney) குறித்துள்ளார்.' (Ec. Hist Rev. 1941, pp. 2-4.)

ஹாரிசன் பிரபுக்களைப்பற்றிக் கூறிவிட்டு நகரத்தைப்பற்றியும் வியாபாரிகளைப்பற்றியும், அவர்கள் முன்னைவிட அநேக இடங்களில் வியாபாரம் செய்துவந்ததைப்பற்றியும் கீழ்க்கண்டவாறு விளக்கி யிருக்கின்றார்:

'முற்காலத்தில் ஸ்பெயின், போர்த்துகல், ஃபிரான்சு, டென் மார்க், நார்வே, ஸ்காட்லாந்து, ஐஸ்லாந்து முதலிய நாடுகளுடன் மாத்திரம் வியாபாரம் செய்துவந்தனர். இப்போது கிழக்கு இந்தியத் தீவுகளுக்கும், மேற்கிந்தியத் தீவுகளுக்கும் போய்வருகின் றனர். அத்துடன் கானரி தீவுகள் (Canaries), புதிய ஸ்பெயின் (New Spain), கதே (Cathaia), மஸ்கோவியா (Moscovia), டார் டாரியா (Tartaria) முதலிய பிரதேசங்களுக்கும் சென்று அங்குள்ள பொருள்கள் பலவற்றை நம் நாட்டிற்குக் கொண்டுவருகின்றனர்.

பாரிஷ்களிலிருந்த கிருத்தவ ஆலயங்களில் காணப்பட்ட கல்லறைகள், வியாபாரிகள் சமுதாயத்தில் எந்த நிலையில் இருந் தனர் என்பதை எடுத்துக்காட்டுகின்றன. கல்லறைகளில் பிரபுக் களின் சிலைகளைப்போலவே வியாபாரிகளின் சிலைகளும் ஸ்தாபிக் கப்பட்டிருந்தன. அச் சிலைகளின் அடியில் அவர் மக்கள் வரிசை யாய் மண்டியிட்டுக்கொண்டு இருப்பதுபோல் செதுக்கப் பட்டிருந்தனர். மருத்துவ நிலையங்களும், தர்மசாலைகளும், பள்ளி களும் அவர்களால் ஸ்தாபிக்கப்பட்டன என்று கல்லறைகளில் பொறிக்கப்பட்டிருந்தன. நாடகக் கொட்டகையை நடத்திவந்த வராய் இருந்தாலும், செல்வம் திரட்டித் தம்முடைய சொந்த ஊரில் வந்து தம் கடைசிநாட்களைக் கழித்து இறப்பாரேயானால், அவருடைய உருவச்சிலையும் கிருத்துவ ஆலயத்தின் கிழக்குப் பாகத்தில் வைக்கப்படும்.

வியாபாரிகளுக்கு அடுத்தபடியாக, இயோமென் வகுப்பினரை ஹாரிசன் குறிப்பிடுகின்றார். அவர்களில் சிலர் நாற்பது ஷில்லிங் வருமானம் கொடுக்கக்கூடிய நிலத்திற்கு உரிமையுள்ளவராயும், அந்த நிலத்தைத் தாமே பயிர்செய்பவராயும், பாராளுமன்றத் தேர்தலுக்கு ஓட்டுரிமை உள்ளவராயும் இருந்தனர்.

'ஆனால், அனேகமாக இயோமென் வகுப்பினர், பிரபுக்களின் நிலத்தைப் பயிர்செய்பவராய் இருந்தனர். கால்நடைகளை வளர்த்தும், வியாபார ஸ்தலங்களுக்குத் தங்கள் பொருள்களை எடுத்துச்சென்று விற்றும், வேலையாட்களை வைத்துக்கொண்டு உழைத்தும் பெரும் செல்வராயினர். அதனால், செலவாளி களாக இருந்த பிரபுக்களின் நிலங்களை அவர்களால் விலைக்குவாங்க முடிந்தது. அத்துடன் தங்கள் புதல்வர்களைப் பள்ளிகளுக்கும், சர்வகலாசாலைகளுக்கும் அனுப்பிவைத்தனர். 'இன்ஸ் ஆப் கோர்ட்' என்று அழைக்கப்பட்ட வழக்கறிஞர்கள் இருந்த இடத் திற்குத் தங்கள் புதல்வர்கள் வருங்காலத்தில் வழக்கறிஞர்களாக ஆவதற்காக அனுப்பிவைத்தனர். தங்கள் புதல்வர்கள் பிரபுக்

களாக இருக்கவும் தொழில் ஏதும் செய்யாமல் வாழவும் வேண்டிய அளவு நிலத்தை வாங்கிச் சேர்த்தனர்.

இன்றும் இங்கிலாந்தின் பல பாகங்களிலும் எலிசபெத் அரசியின் ஆட்சிக்கால அரண்மனைகளைக் காணலாம். டியூடர், ஸ்டுவர்ட் ஆகிய வம்சத்தினரின் காலங்களில் நடுத்தர அளவில் கட்டப்பட்ட சிறிய பிரபுக்களின் பண்ணைவீடுகளையும் ஏறக்குறைய அதே அளவில் கட்டப்பட்ட, இயோமென் வகுப்பினரின் வீடுகளையும் காணலாம். அக் கட்டடங்களில் தற்போது நிலத்தைக் குத்தகைக்கு எடுத்துக்கொண்டு பயிர்செய்யும் குடியானவர் வசித்துவந்தனர். எலிசபெத்தின் ஆட்சிக்காலம்முதல் கி.பி. 1660 வரை சிறிய பிரபுக்கள், நிலத்தைச் சொந்தமாகக்கொண்ட இயோமென் வகுப்பினர் ஆகியோரின் எண்ணிக்கை அதிகரித்துவந்தது என்பதை, அத்தகைய வீடுகள் நினைவூட்டுகின்றன. பெரிய பிரபுக்களின் சொத்துகள் அதே சமயத்தில் குறைந்துகொண்டிருந்தன என்பதையும் அவை விளக்குகின்றன, அக் காலம், நாட்டுப்புறங்களில் வசித்த மத்திய வகுப்பினருக்கு மிகவும் அனுகூலமான காலமாக இருந்தது என்று கூறலாம்.

வியாபாரிகளுக்கும் இயோமென் வகுப்பினருக்கும் அடுத்தபடியாக, நான்காவது வகுப்பினரான, நகரத்திலும் நாட்டுப்புறத்திலும் கூலிக்கு வேலை செய்துவந்தவர் இருந்தனர்.

இங்கிலாந்தில் அடிமைகளோ அல்லது அடிமை நிலையில் இருந்த குடியானவரோ எவரும் இருக்கவில்லை. ஹாரிசன், 'இத் தீவில் எவர் காலெடுத்து வைக்கின்றனரோ அவர் சுதந்திரம் உடையவராக இருப்ப'ரென்று பெருமையுடன் கூறியுள்ளார். இங்கிலாந்தில் காலெடுத்து வைத்தவுடன் அடிமையாய் இருப்பினும், அவர் சுதந்திரம் உள்ளவர் ஆவார் என்ற கருத்தை சாமர்செட் (Somersett) என்ற அடிமையின் வழக்கில், இரண்டு நூற்றுண்டுகளுக்குப் பிறகு, மான்ஸ்ஃபீல்டு (Mansfield) பிரபு ஊர்ஜிதம் செய்தார். அதன் காரணமாக நீக்கிரோக்களும் இங்கிலாந்தில் அடியெடுத்து வைத்தால் சுதந்திர மனிதராகமாற வழி பிறந்தது.

ஏதாவது ஒரு தொழில் செய்து கூலி பெற்றுவந்த வகுப்பினர் முன்பிருந்ததைப்போல் அடிமை நிலையில் இருக்கவில்லை. அவர்களுக்கு அரசியலைப்பற்றி விவாதிக்கவோ அல்லது தீர்மானிக்கவோ உரிமையில்லை என்று ஹாரிசன் குறித்துள்ளார். இருப்பினும் அவர்கள் வாளா இருக்க அனுமதிக்கப்படவில்லை. நகரங்களில், இயோமென் வகுப்பினருக்குப்பதில், இவ் வகுப்பினர் ஜூரிகளின்

முன் சாட்சியம் கூறவேண்டி இருந்தது. கிராமங்களில் இருந்த கிருத்தவ ஆலயங்களின் பிரதிநிதியாகவும், காவல்துறையினராக வும், பீர் என்ற மது சரியானமுறையில் தயாரிக்கப்படுகிறதா என்று கவனிப்பவராகவும் பணிபுரிந்துவந்தனர். இடைக்காலத் தில் குடியானவர்கள் அடிமைநிலேயில் இருந்தபோதும் கிராமவாசி கள் தங்கள் கிராமப் பணிகளேக் கவனித்துக்கொண்டனர். பண்ணேவீடுகளில் வழக்குகள் விசாரிக்கப்பட்டுத் தீர்ப்பளிக்கப் பட்டது. கிரிஸ்டோபர் ஸ்லியைப் (Christopher Sly) போல் இருந்த சாதாரணமனிதர்கள்கூட, அம் மன்றங்களில் மூடியில்லாத கல்லால் செய்யப்பட்ட பாத்திரத்தில் மதுவை அளித்ததற்காகச் சத்திரத்தின் தலேமீது குற்றம் சாட்டலாம். லீட் மன்றத்தில் (Court Leet) வேலியிடப்படாத நிலத்தையும், மேய்ச்சல் நிலத்தையும் என்ன செய்வது என்பதைப்பற்றி, கிராமத்திலிருந்த அனேவரும் விவா தித்து முடிவு செய்தனர். இங்கிலாந்தில் கிராமவாசிகள் உரிமை களேமட்டும் உடையவராயிருக்கவில்லே. அவர்கள் சில பணிகள் புரியவேண்டியும் இருந்தது. கிராமங்களில் அனேகர் ஏழைகளாக இருந்தனர். சிலர் மேல்வகுப்பினரின் கொடுமையின் காரண மாகச் சீர்குலேந்து நின்றனர். ஆனுல், இடைக்காலப் பண்ணே முறை ஆட்சியில் எல்லா வகுப்பினரிடையேயும் ஒருவிதச் சுதந்திர உணர்ச்சி நிலவுவந்தது. பதினெட்டாம் நூற்ருண்டில் நிலத்திற்கு வேலியமைத்து ஒதுக்கியது கிராம வாழ்க்கையைச் சீர்குலேயச்செய்தது. அப்போது அவ் வுணர்வு மக்களிடையே மறைந்தது.

அவர்கள் எடுத்துக்கொண்ட ராணுவப்பயிற்சி ஆங்கிலேயரின் தன்மான உணர்ச்சியையும், பிறர் உதவியை எதிர்பார்க்காத குணத்தையும் எடுத்துக்காட்டுகின்றது, வாட்டர்லூ (Waterloo) போரிற்குப்பிறகு நீண்டகாலத்திற்கு நாட்டில் அமைதியும், பாதுகாப்பும் நிலவின. அதனுல் கட்டாய ராணுவப் பயிற்சி இல்லாமல் இருப்பதும் ஓர் உரிமை என்று கருதினர். ஆனுல், வாட்டர்லூ போருக்குமுன் இதற்குமாருன கருத்து நிலவிவந்தது. இடைக்காலத்தின் பிற்பகுதியில் ஆங்கிலேயர் வில்வித்தையில் கொண்டிருந்த திறனும், நகரத்திலும், நாட்டுப்புறத்திலும் இருந் தோர் நாட்டுப்படையில் சேவைபுரியவேண்டும் என்ற கட்டுப் பாடும், ஆங்கிலேயரிடையே ஒரு தனிப்பட்ட சுதந்திர உணர்ச் சியை உண்டாக்கின. ஃப்ருவாசார்ட் (Froissart) ஃப்வார்டஸ்கு (Fortescue) முதலிய எழுத்தாளர்கள் இதை ஆங்கிலேயரிடையே காணப்பட்ட தனிப் பண்பாகுமென்று குறித்துள்ளனர். தாங்கள் திறமையுடன் உபயோகித்த நீண்ட வில்லுக்குப்பதிலாகக் கைத் துப்பாக்கியை உபயோகிப்பது அதிகரித்து வந்தது. ஆயின்,

ஆங்கிலேயரிடையே முன்பிருந்த சுதந்திர உணர்ச்சி எலிசபெத் அரசியின் ஆட்சிக் காலத்திலும் நிலவி வந்தது.

'இங்கிலாந்தில் ஒவ்வொரு கிராமமும், நான்கு வீரரைப் போருக்கு அனுப்பத் தேவையான ஆயுதங்களை வைத்திருந்தன; வில், துப்பாக்கி, வேல், கோடரி முதலிய ஆயுதங்கள் ஒவ்வொன்றை ஒவ்வொருவருக்குக் கொடுத்து நான்கு வீரரைப் போருக்கு அனுப்பும் நிலையிலிருந்தன. பாரிஷ் என்ற பிரிவில் இருந்த அனைவரும்கூடி இவ் வாயுதங்கள் எங்கே வைக்கப்பட வேண்டும் என்று நிச்சயித்தனர். ஒரு மணி நேரத்திற்குள் அவைகளை வீரர்கள் எடுத்துக்கொண்டும் கவசம் தரித்துக்கொண்டும், போரிற்குப் புறப்படும்வகையில் அவை வைக்கப்பட்டு இருந்தன.' இவ்வாறு ஹாரிசன் குறித்துள்ளார்.

லார்டு லெப்டினென்ட் என்ற கவுன்டியின் புதிய அதிகாரிகள், ஷீர்களில் மக்கள்படையைத் திரட்டி ஷெரிப் என்ற அதிகாரிகளுக்குப் பதிலாக அப் படைகளுக்குத் தலைமைதாங்கி நடத்த கி.பி. 1557-ல் நியமிக்கப்பட்டனர். அவ் வதிகாரிகளும் அவர்களுக்குக் கீழ்ப்பட்ட அதிகாரிகளும் அடிக்கடி மக்களின் எண்ணிக்கை, போர்க்கவசம், போர்த்தளவாடம் முதலியவற்றைக் கவனித்துவந்தனர். எலிசபெத் அரசியின் சிக்கனம், இவ் வட்டாரப் படைகளினால் ஏற்பட்ட செலவுகளை வட்டார மக்களே அனேகமாக ஏற்கச் செய்தது. எனினும், போர்க்காலத்தில் மக்கள் படை திரட்டப்பட்டுவந்தது. வடக்கே எர்ல் பதவியிலிருந்த அதிகாரிகள் கலகம்செய்தபோது 20,000 மக்கள் படையினர் அரசியையும், பிராடஸ்டென்ட் மதத்தையும் காக்கச் சேர்ந்தெழுந்தனர். அவர்கள் போர்க்களம் புகுந்ததும், கலகம் ஒடுங்கி விட்டது. அதைப்போல் இரண்டு மடங்கு வீரர், ஸ்பெயின் நாட்டுக் கப்பற்படையான 'ஆர்மடா' (Armada) இங்கிலாந்தை அடைவதற்குமுன்பே தயாராக நின்றனர். அபாயம் நெருங்க நெருங்க நாள்தோறும் புதிய வீரர்கள் படையில் சேர்ந்துவந்தனர். அதனால் அரசாங்கம் ஒரு படையை வைத்திருக்காவிட்டாலும், இங்கிலாந்து பாதுகாப்பற்றதாக இருக்கவில்லை. ஒவ்வொரு வட்டாரமும் ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கை உடைய படையை அனுப்ப வேண்டியிருந்தது. சொத்துள்ள மனிதர் ஒவ்வொருவரும் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட வீரரை அனுப்பவேண்டியிருந்தது. நாட்டிற்குச் சேவைபுரியத் தாங்களாகவே முன்வந்த வீரரையும், கட்டாயத்தின்மேல் சேர்க்கப்பட்ட வீரரையும் கொண்டிருந்தது, மக்கள் படை.

இத்தகைய மக்கள் படை, கடல்கடந்து வெளி நாட்டிற்குச் சென்று போர்புரியத் தகுதியற்றதாக இருந்தது. நூற்றாண்டுப் போருக்கும் கிராம்வெல்லின் (Cromwell) காலத்திற்கும் இடைப் பட்ட காலத்தில் ஐரோப்பாக்கண்டத்தில் சம்பளத்திற்கு வேலை செய்யும் போர்வீரராக ஆங்கிலேயர் இருந்துவந்தனர். டச்சுக் காரரும் மற்ற நாட்டவரும் சம்பளம் கொடுத்து ஆங்கிலேயரை நீண்டகாலத்திற்கு வைத்துக்கொண்டனர். அவ் ஆங்கிலேயரே ஐரோப்பாவில் நடந்த போர்களில் வெற்றியடைந்தனர்.

ஸ்பெயின் நாட்டுப்படை அதிருஷ்டவசமாக இங்கிலாந்தில் இறங்கமுடியாமல் போயிற்று. இதற்குமுன் ஆங்கிலேயர் நீண்ட வில்லைக்கொண்டு மற்ற நாட்டவரை வென்றுவந்தனர். எலிசபெத் அரசியின் ஆட்சிக்காலத்தில், நீண்ட வில்லை உபயோகித்துவந்த வில்லாளிகளுக்குப்பதிலாக, கைத்துப்பாக்கியை உபயோகித்துவந்த வீரர்கள் படையில் காணப்பட்டனர். துப்பாக்கியைக்கொண்டு தொலைவிலுள்ள குறியையும் சுட முடிந்தது. மேலும் துப்பாக்கியைத் தொடர்ந்து விரைவாகச் சுடவும் ஆங்கிலேயர் கற்றிருந்தனர். அத் துடன் துப்பாக்கியின் குண்டு இரும்புக் கவசத்தையும் துளைக்கக் கூடியதாக இருந்தது. அரசியின் ஆட்சிக்காலத் தொடக்கத்தில் லண்டன் நகரைச்சார்ந்த மக்கள் படையிலும் வில்லாளிகளே இருந் தனர். ஆனால், படையின் முக்கிய பகுதியில் துப்பாக்கி வீரரும், பைக் (pike) என்ற நீண்ட வேல்போன்ற ஆயுதம் தாங்கியவரும் தான் இருந்தனர். இதற்கு அடுத்த தலைமுறையில், ஆர்மடா படை எடுத்தபோது, லண்டனைச் சேர்ந்த 6,000 வீரர்களில் ஒருவர்கூட, வில்லாளிகளாக இருக்கவில்லை. அனைவரும் துப்பாக்கி வீரராகவே இருந்தனர். ஆர்மடாவின் படையெடுப்பு நடந்தபின், பத்து ஆண்டுக்காலம் கழித்து, ஷேக்ஸ்பியர், தாமெழுதிய நாடக மொன்றில் ஃபால்ஸ்டாஃப் (Falstaff) என்பார் காட்ஸ்வோல்டு (Cotswold) மக்களை வில்வீரர்களுக்குப் பதிலாகத் துப்பாக்கி வீரரை அனுப்பும்படி கேட்பதாக எழுதியுள்ளார். கி.பி. 1595-ல் அரசரின் ஆலோசனைச் சபையான பிரிவி கவுன்சில் (Privy Council) வில்லை ஓர் ஆயுதமாகப் போர்வீரர்களுக்கு வட்டாரங்கள் அளிக்கக் கூடாது என்று உத்தரவிட்டது. அதன் காரணமாகப் போரில் இங்கிலாந்தின் கை ஓங்கியிருந்தகாலம் முடிவுற்றது.

விளையாட்டிலும், வில்களுக்குப் பதிலாகத் துப்பாக்கி உபயோகிப்பது மெதுவாகப் பழக்கத்திற்கு வந்துகொண்டிருந்தது. கி.பி. 1621ஆம் ஆண்டில் கான்டர்பரியில் ஆர்ச்பிஷப் பதவியில் இருந்த பாதிரியார், தம்முடைய வில்லைக்கொண்டு ஆண் மானை வீழ்த்துவதற்குப்பதிலாக வேட்டை நிலத்தைக் காப்போனை, குறி

தவறி அம்பெய்து வீழ்த்தினர். ஆனால், அவரது காலத்தில் அனேகமாகக் காட்டுக்கோழிகளைச் சுட்டுவீழ்த்தும் விளையாட்டுப் போட்டிகளில் நீண்ட துப்பாக்கியை உபயோகப்படுத்திவந்தனர். பறந்துகொண்டிருக்கும்போதே, பறவையைச் சுட்டுவீழ்த்துவது அரிதான காரியமாக எண்ணப்பட்டது.

எலிசபெத் அரசியின் ஆட்சிக்காலத்தில், மதத்தின் காரணமாக நாட்டில் சச்சரவு இருந்தாலும் அயல் நாட்டவர் இங்கிலாந்தின்மீது படையெடுத்தாலும் நாட்டில் அமைதி நிலவிவந்தது. அதற்கு அரசாட்சியின் பலமே காரணமாகும். பிரிவி கவுன்சில் என்றழைக்கப்பட்டுவந்த அரசியின் ஆலோசனைசபை, டியூடர் வம்சத்தினரின் காலத்தில் அரசாட்சியை நடத்திவந்தது. பிரிவி கவுன்சிலைச்சார்ந்த நீதிமன்றங்களும் அரசாட்சியின் பலத்திற்குக் காரணமாய் இருந்தன. ஸ்டார்சேம்பர் (Star Chamber), தி கவுன்சில்ஸ் ஆஃப் வேல்ஸ் அண்டு ஆஃப் தி நார்த் (The Councils of Wales and of the North), சான்சரி கோர்ட் (Chancery Court), கோர்ட் ஆஃப் ஹை கமிஷன் (Court of High Commission) என்பவை அந் நீதிமன்றங்களாகும். ஸ்டூவர்ட் வம்சத்தினரின் ஆட்சிக்காலத்தில் அந்த நீதிமன்றங்கள் அழிக்கப்பட்டன. அரசாங்கத்திற்குச் சாதகமாகத் தீர்ப்பு அளித்துவந்ததும், தனி மனிதனின் உரிமையைப் பாதிப்பதாக இருந்துவந்ததும் அவை அழிக்கப்படுவதற்குக் காரணங்களாய் இருந்தன. ஆனால், டியூடர் வம்சத்தினரின் ஆட்சிக்காலத்தில் அதே நீதிமன்றங்கள் ஆங்கிலேயரின் உரிமைகள் நிலைக்கவும், சட்டங்களுக்கு மக்கள் மதிப்புக் கொடுக்கவும், ஆங்கிலேயப் பொதுச் சட்டத்தை எல்லா நீதிமன்றங்களும் எவ்விதப் பயமும் இல்லாமல் உபயோகிக்கவும் உதவின. வட்டாரங்களில் நீதிபதிகளையும், ஜூரிகளையும். மக்களின் கூட்டமும் வட்டாரத்தில் இருந்த பிரபுவும் பயமுறுத்திக் குற்றவாளியை விடுதலைசெய்ய நிர்பந்தித்ததையும், தங்களுக்குச் சாதகமாகத் தீர்ப்பு அளிக்கக் கட்டாயப்படுத்தி வந்ததையும் கவுன்சிலும் அதைச் சேர்ந்த நீதிமன்றங்களும் அடியோடு நிறுத்தின. அப்படிப் பிரிவி கவுன்சில் செய்தது, மக்களுக்குச்செய்த ஒரு சேவை என்றே கூறலாம். அரசரின் நீதிமன்றங்கள் தற்காலத்திற்கு ஏற்ற சட்டங்கள் பலவற்றை இயற்றின. அச் சட்டங்கள் பிற்காலத்தில் நாட்டின் சட்டங்களுடன் சேர்க்கப்பட்டன.

அயல் நாடுகளின் பண்ணைமுறை ஆட்சிச் சட்டங்கள், இடைக் கால இங்கிலாந்தின் பொதுச் சட்டங்களைப்போல் சிறந்தனவாக இருக்கவில்லை. தற்காலச் சமுதாயத்திற்கும் பண்ணைமுறை ஆட்சிச்சட்டங்கள் ஏற்றவையாக இல்லை. ஆகையால்

அயல் நாடுகளில் பண்ணைமுறை ஆட்சிச் சட்டங்கள் அடியோடு அழிக்கப்பட்டன. அச் சட்டப்படி மக்கள் பெற்றிருந்த உரிமைகளும் அத்துடன் அழிக்கப்பட்டன. பண்ணைமுறை ஆட்சிச் சட்டத்திற்குப் பதிலாக, ரோமானியரின் சட்டத்தை ஏற்றுக் கொண்டன. அயல் நாடுகள், ரோமானியரின் சட்டம் சர்வாதிகார ஆட்சிக்குகந்ததாகும். ஆனால், இங்கிலாந்தில் மக்களின் உரிமையை ஏற்றுக்கொண்ட இடைக்கால சட்டத்தைப் பாதுகாத்து, அதைத் தற்காலத்திற்கு ஏற்றதாகச் செய்து, அத்துடன் வேண்டியவைகளைச் சேர்த்துப் பெரிதாக்கினர். அதற்குமேலாக அச் சட்டத்தைப் பிரிவி கவுன்சிலும், அதைச்சார்ந்த நீதிமன்றங்களும் அமலுக்குக் கொண்டுவந்தன. அதனால் பழங்காலச் சட்டமும், பழைய பார்லிமெண்ட்டும் புத்துயிர் பெற்றன.

இதைப்போலவே, டியூடர் வம்சத்தினரின் ஆட்சிக்காலத்தில். அரசாட்சியில் பழையனவும் புதியனவும் இணையவும், வட்டார உரிமைகளும் அரசனின் அதிகாரமும், ஒன்றுக்கொன்று முரண்பாடு இல்லாமலிருக்கவும் பிரிவி கவுன்சில் செய்துவைத்தது. மத்திய அரசாங்கத்தின் விருப்பப்படி வட்டாரங்கள் நடந்துகொள்ள ஏற்பாடு செய்யப்பட்டது. ஆனால், ஃபிரான்சில் நடந்ததுபோல் இங்கிலாந்தில் நடக்கவில்லை. ஃபிரான்சில் அரசாங்க அதிகாரிகள் வட்டாரங்களை ஆள அனுப்பப்பட்டனர். இங்கிலாந்திலோ, வட்டாரங்களிலேயே இருந்த ஜென்ட்ரி வகுப்பினரை அமைதிக் காவல்காரர்களாகக்கொண்டு, மத்திய அரசாங்கம், வட்டாரங்களைத் தன் விருப்பத்திற்கு இணங்கச்செய்தது. அமைதிக் காவலர்கள் அரசாங்கத்தின், அரசியல், சமய நோக்கங்களைச் செயல் படுத்தினர்; நீதி வழங்கினர்; வட்டார அரசாங்கங்கள் செய்ய வேண்டிய வேலைகளனைத்தையும் கவனித்துவந்தனர்; உதாரணமாக, ஏழைகள் பாதுகாப்புச் சட்டம், தொழிலாளிகளின் சட்டம் ஆகியவற்றைச் செயல்படுத்திவந்தனர். விலைவாசிகளையும், தொழிலாளரின் கூலிகளையும் நிச்சயித்தனர். வட்டார அதிகாரிகள் தங்கள் விருப்பம்போல் வட்டாரங்களை ஆட்சிசெய்ய வழியிருக்கவில்லை. மத்தியஅரசாங்கம் வட்டார அரசாங்கத்தில் தலையிடக் கூடாது என்று இருக்கவுமில்லை. பார்லிமெண்டால் இயற்றப்பட்ட சட்டங்கள் நாடு முழுவதிலும் அமலுக்குவந்த காரணத்தால் வட்டாரங்கள் எல்லாவற்றிலும் ஒரேவகையான அரசாங்கம் நிலவ வழிசெய்யப்பட்டது. அமைதிக் காவலர்கள் ஒவ்வொரு ஷீர் எனப்பட்ட வட்டாரங்களிலும் அச் சட்டங்களை அமலுக்குக் கொணர்ந்தனர். அவர்கள் சரிவர அமலுக்குக் கொணரவில்லை என்றால், பிரிவிகவுன்சில் வட்டார ஆட்சியில் தலையிட்டு ஒழுங்கை ஏற்படுத்தியது. அமைதிக் காவலர்கள், தாங்களே சட்டத்தை

நிர்ணயிப்பவராக, ஹானேவர் வம்சத்தினரின் காலத்தில் இருந்ததுபோல், டியூடர் வம்சத்தினரின் காலத்தில் இருக்கவில்லை. ஸ்குவீரின் அதிகாரமும், வட்டாரத் தேவைகளும் மத்திய அரசாங்கத்தின் முழுக் கண்காணிப்பின்கீழ் இருந்தன.

எலிசபெத் அரசியின் ஆட்சிக்காலத்திலும், ஸ்டூவர்ட் வம்சத்தினரின் ஆட்சித் தொடக்கத்திலும், ஏழைகளும், வேலையற்றவரும் பாதுகாக்கப்பட்ட விதத்தைப்போல், வேறொன்றும் குறிப்பிடத்தக்கதாய் இராது. டியூடர் வம்சத்தினரின் ஆட்சித் தொடக்கத்தில் இருந்ததைவிடக் கி.பி. 1559ஆம் ஆண்டிற்கும் கி.பி. 1640ஆம் ஆண்டிற்குமிடையில் பொதுவாக வாழ்க்கைநிலை நன்ருகவே இருந்துவந்தது. ஆனால், வாழ்க்கை நிலையில் அடிக்கடி தாழ்வு ஏற்பட்டுவந்தது. வேலியமைத்து நிலத்தை ஒதுக்கிவந்ததால் வட்டாரங்களில் ஜனத்தொகை குறைந்துவந்தது. நாட்டுப்புறங்களில் கைத்தொழில் வளரவளர, அனேகர் பாதிக்கப்பட்டனர். முதலாளி தாம் தயாரித்துவந்த பொருள்களின் விற்பனை குறைந்தாலும், தொழிற்சாலையைத் தொடர்ந்து நடத்திவந்தார். தயாரிக்கப்பட்ட பொருள்களைச் சேர்த்துவைத்து நிலைமை மாறியதும் விற்க நினைத்தார். தன் வீட்டிலேயே தானே தயாரித்த பொருள்களை விற்கமுடியாதநிலை ஏற்பட்டால், சிறிய தொழிலாளி தொடர்ந்து தன் தொழிலை நடத்தமுடியாத நிலையில் இருந்தான். எலிசபெத் அரசியின் ஆட்சிக்காலத்தில் கஷ்டம் நேர்ந்தபோதெல்லாம் சிறிய தொழிலாளி பாதிக்கப்பட்டான். உதாரணமாக, நெதர்லாந்தை ஆண்டுவந்த ஸ்பெயின் தேசத்து கவர்னர்களுடன் சச்சரவு ஏற்பட்டபோது, அவர்கள் ஆன்ட்வெர்ப் (Autwerp) துறைமுகத்தில் ஆங்கிலேயர் வியாபாரம் செய்வதைத் தடைசெய்தனர். அதனுல் ஆடை வியாபாரிகள் நெசவுத் தொழிலாளியிடம் இருந்து நெய்த ஆடையை விலைக்கு வாங்குவதையும், அவர்களுக்குக் கம்பளி நூல் அளிப்பதையும் நிறுத்தினர். அதன் விளைவாக நெசவுத் தொழிலில் ஈடுபட்டு இருந்தவர், தங்கள் தொழிலை நிறுத்திவைக்க நேரிட்டது. மொத்தத்தில் ஆடை வியாபாரம் அதிகரித்திருந்தபோதிலும், ஆடைநெய்யும் தொழிலில் அடிக்கடி நெசவாளர் வேலையற்று இருக்கநேரிட்டது.

இத்தகைய நிலையைச் சமாளிக்கவே, நீண்டகாலமாக இயற்றப்பட்டுவந்த சட்டங்களை ஒன்றுசேர்த்து ஏழைகள் பராமரிப்புச் சட்டமாக உருவாக்கப்பட்டது. பிரிவி கவுன்சிலின் கடுமையான கண்காணிப்பின்கீழ், அச் சட்டங்கள் வட்டாரங்களில் அமைதிக் காவலர்களால் அமல்நடத்தப்பட்டுவந்தன. பிரிவி கவுன்சில் ஏழைகளைப் பராமரிப்பதில் மிகுந்த அக்கறை கொண்டிருந்தது.

ஏனென்றால், நாட்டின் அமைதி ஏழைகளின் பராமரிப்பைப் பொறுத்திருந்தது. எட்டாம் ஹென்றியின் ஆட்சிக்காலத்தில் மக்களுக்குத் தொல்லை கொடுத்துக்கொண்டிருந்த அங்க ஊறு அற்ற பிச்சைக்காரர்களின் கூட்டம் நாட்டில் மேலும் காணப்படவில்லை. ஏழைகளின் பராமரிப்பிற்காகக் குறிப்பிட்ட காலங்களில் தவறாமல் கட்டாயமாக வரி வசூலிக்கப்பட்டது. அப்படித் திரட்டப்பட்ட தொகையிலிருந்து, ஏழைகள் பராமரிக்கப்பட்டனர். அத்துடன் ஏழைகளைப் பராமரிப்பதற்காக ஒவ்வொரு பாரிஷ் என்ற பிரிவிலும் நியமிக்கப்பட்ட, ஓவர்சீர் (overseer) என்று அழைக்கப்பட்ட அதிகாரிகள், ஏழைகளுக்கு வேலைகொடுக்கத் தேவைப்பட்ட பொருள்களை வாங்கிவைக்கக் கட்டாயப்படுத்தப்பட்டனர். உதாரணமாக, சணல், கம்பளி, நூல், இரும்பு முதலியவற்றை ஏழைகளுக்கு வேலைகொடுக்கப் போதுமான அளவு வைத்திருக்க வேண்டும் (கி.பி. 1601–ல் இயற்றப்பட்ட சட்டம்).

பற்றுக்குறைக் காலங்களிலும், கி.பி. 1594-ல் இருந்து கி.பி. 1597 வரை தொடர்ந்து விளைச்சல் குறைந்த காலத்திலும், பிரிவி கவுன்சில் எப்போதும்போல், அமைதிக் காவலர்களைக்கொண்டு, தானியங்களின் விலைகளை நிர்ணயித்தது. வெளிநாட்டில் இருந்து தானியங்களை இறக்குமதிசெய்து பஞ்சம் கொடுமையாக இருந்த இடங்களுக்கு அது அனுப்பிவைத்தது. ஏழைகளைப் பராமரிப்பதிலும் பஞ்சகாலத்தில் தானியங்களை விநியோகிப்பதிலும் குறைஇருந்தது. குறைகள் சில வட்டாரங்களில் அதிகமாகவும், சில வட்டாரங்களில் குறைவாகவும் இருந்தன. இப்படிக் குறைகளிருப்பினும், நாடு முழுவதிலும் ஏழைகளைப் பராமரிக்கவும், பஞ்சகாலத்தில் தானியங்களை விநியோகிக்கவும் சட்டபூர்வமாகவும் நடைமுறையிலும் வழி இருந்தது. ஏழைகளைப் பராமரிக்க இருந்த ஏற்பாடு இங்கிலாந்தில் பழங்காலத்தில் இருந்ததைவிடச் சிறந்ததாக இருந்தது. அத்துடன் பல தலைமுறைக்காலத்திற்குப் பிறகு ஃபிரான்சிலும், ஐரோப்பாக் கண்டத்தில் இருந்த மற்ற நாடுகளிலும் ஏழைகளைப் பராமரிக்க ஏற்படுத்திய முறைகளைவிடவும் சிறந்ததாக இருந்தது. (இ. எம். லியோனார்ட் எழுதியுள்ள 'இங்லீஷ் புவர் ரிலீஃப்' என்ற நூல்; E. M. Leonard, 'English Poor Relief' டபிள்யூ. ஜே. ஆஷ்லி எழுதியுள்ள 'இகெனமிக் ஆர்கனைசேஷன் ஆஃப் இங்கிலாண்டு' என்ற நூல்; W. J. Ashley, Economic Organisation of England).

அமைதிக் காவலர்கள் நீதிவழங்குதல், ஆட்சிசெய்தல் முதலிய பலதரப்பட்ட அதிகாரங்களை உடையவராய் இருந்ததால், இங்கிலாந்தில் அவர்கள் செல்வாக்கு மிகுந்தவராய் விளங்கினர்.

அனேகமாக அவர்கள் பார்லிமெண்டின் அங்கத்தினராகத் தேர்ந் தெடுக்கப்பட்டனர். அவர்கள் தங்கள் அனுபவத்திலிருந்து சட்டங்களிலும் அரசியல் கொள்கைகளிலும் இருந்த குறைகளை எடுத்துக்கூறும் நிலையில் இருந்ததுதான் அதற்குக் காரணம். அவர்கள் அரசாங்க அதிகாரிகள் ; ஆனல், அரசாங்கத்திலிருந்து சம்பளம் பெறவில்லை. அதனல் தங்கள் வாழ்க்கையை நடத்து வதற்கு அரசாங்கத்தை நம்பியும் இருக்கவில்லை. அவர்கள் தங்களுக்குச் சொந்தமான நிலங்களிலேயே வாழ்ந்துவந்தனர். நிலத்தின் வருமபடியைக்கொண்டு வாழ்க்கை நடத்தினர். அண்டையில் வாழ்ந்த ஜென்ட்ரி வகுப்பினரும், ஷீர் என்ற பிரிவில் வாழ்ந்த சாதாரண மக்களும் தங்களைப்பற்றி நல்ல அபிப்பிராயம் கொள்ளவேண்டும் என்று பாடுபட்டனர். ஆகையால், ஸ்டுவர்ட் வம்சத்தினரின் ஆட்சிக்காலத்தில் நாட்டுப்புறங்களில் வாழ்ந்த நிலக்கிழார்கள் அரசனின், அரசியல், சமயக் கொள்கைகளைத் தீவிரமாக எதிர்த்தபோது, அரசனுக்கு நாட்டுப்புறங்களை அடக்கி ஆளத் தகுந்தவர் இல்லாமல் போயினர். அப்படித்தான் கி.பி. 1688-லும் நடந்தது. ஆனல், கி.பி. 1588-ல் அப்படி நடக்க வில்லை. சில ஜென்ட்ரிகள் முக்கியமாக வடக்கு, மேற்குப் பகுதிகளில் வாழ்ந்தோர், எலிசபெத் அரசியின் மதச் சீர்திருத்தத்தை வெறுத் தனர். ஆனல், பெரும்பான்மையான ஜென்ட்ரிகள் புதிய மதத்தை ஏற்றுக்கொண்டிருந்தனர். அவர்களில் அமைதிக்காவலராக இருந்தவரை அரசாங்கம் உபயோகித்து, எதிர்த்தோரை இணங்கச் செய்யவோ அல்லது கைது செய்யவோ முடிந்தது. அரசாங்கச் சம்பளம் பெற்றுவந்த அதிகாரிகளை லண்டன் நகரில் இருந்து வட்டாரங்களுக்கு அனுப்பி அவ் வேலையைச் செய்யவைத்திருந் தால், அரசாங்கத்திற்குப் பெரிய எதிர்ப்பு இருந்திருக்கும். அத்துடன் அரசாங்கத்திற்கு அதிக செலவையும் உண்டாக்கி யிருந்திருக்கும்.

# 7. ஷேக்ஸ்பியரின் காலத்தில் இங்கிலாந்தின் நிலை

## (1564—1616)

## இரண்டாம் பாகம்

மதமும் சர்வகலாசாலைகளும்—எலிசபெத் அரசியின் காலத்தில் அரசாங்கம் மேற்கொண்ட சமுதாய நலப்பணி—கைத்தொழிலும், கடல் வாணிபமும்—ஷேக்ஸ்பியர்.

(எலிசபெத் அரசி கி.பி. 1558—1603; ஆர்மடா படையெடுப்பு, கி.பி. 1588.)

ஷேக்ஸ்பியர் வாழ்ந்த காலமானது இங்கிலாந்தின் பொற்காலம் என்று கூறப்படுகிறது. கடல் பிரயாணம் செய்வதிலும், புதிய நாடுகளைக் கண்டுபிடிப்பதிலும், இசை, பாட்டு, நாடகம் முதலியனவற்றிலும், பொதுவாக வாழ்க்கையிலும், அக் காலத்தில் ஆங்கிலேயர் சிறந்து விளங்கினர். மக்கள் சச்சரவுகள் இன்றி இயைந்து வாழ்ந்தனர் என்றும் ஆக்கும் திறன் உடையவராய் இருந்தனர் என்றும் கூறலாம். ஆனால், மதத்தைப் பொறுத்தவரை அக் காலம் பிரசித்திபெற்ற காலமாக இருக்கவில்லை. மேலும் மக்களிடையே மதசம்பந்தமான ஒருமைப்பாடும் இருக்கவில்லை. அக் காலத்தில் வாழ்ந்தோரில் ஹூக்கர் (Hooker) ஒருவரே தலைசிறந்த வேதாந்தி எனக் கூறலாம். எனினும், ஸ்பெயின், ஃபிரான்சு, ஜினீவா, இத்தாலி, நெதர்லாந்து ஆகிய நாடுகளில் மதத்தின் காரணமாகத் தோன்றிய சச்சரவுகள் விளைத்தகேட்டை நினைக்குங்கால், இங்கிலாந்தில் அதே காரணத்திற்காகத் தோன்றிய சச்சரவுகள் அத்தகைய கேட்டை விளைவிக்கவில்லை என்று கூறலாம். அரசியின் மதக்கொள்கையும், பெரும்பான்மையான ஆங்கிலேயரின் நல்லறிவும், மக்களின் வாழ்க்கையை மதவெறி பாதிக்காதவாறு காத்தன. லாங்லண்டு (Langland), மில்டன் (Milton), வோர்ட்ஸ்வொர்த் (Wordsworth), பிரௌனிங் (Browning) ஆகியோர் தாங்கள் வாழ்ந்த காலத் தத்துவக் கருத்துகளைத் தம் இலக்கியங்களில்

பிரதிபலித்ததுபோல், ஷேக்ஸ்பியரும், எட்மண்டு ஸ்பென் சரும் (Edmund Spenser) அக் காலத் தத்துவக் கருத்துகளைத் தங்கள் நூல்களில் எடுத்தாண்டனர். பியூரிடன் (Puritan), ரோமன் (Roman), ஆங்கிலிகன் (Anglican) மதங்களைச்சார்ந்த தீவிரவாதிகள் வாழ்ந்த காலத்திலே ஷேக்ஸ்பியரும் வாழ்ந்தார். எலிசபெத் அரசியின் ஆட்சிக்காலத்தில் எந்த மதக் கொள்கை யும் அதிகாரபூர்வமானதாகத் திணிக்கப்படவில்லை. ஷேக்ஸ்பி யரும், அரசியும் மதக்கொள்கைகளில் பிடிவாதமுடையவராய் இருக்கவில்லை.

எலிசபெத் அரசியின் ஆட்சிதொடங்கிய ஆண்டில் சமுதாயத் தில் ஒரு நெருக்கடி ஏற்பட்டது. கிரான்மர் (Cranmer) உலகிற்கு அளித்த 'ஆங்கிலப் பிரார்த்தனைப் புத்தகம்' (English Prayer Book) திரும்பவும் கிருத்தவ ஆலயங்களில் உபயோகிக்கப்பட வேண்டும் என்று கட்டளையிடப்பட்டது. லத்தீன் மொழியில் இதுவரை நடத்தப்பட்ட பிரார்த்தனைகளுக்குப்பதிலாக, அப் புத்தகத்தில் கண்ட பிரார்த்தனைகளை ஆங்கிலமொழியில் நடத்தவேண்டி யிருந்தது. பிரார்த்தனை நடத்தப்படும் மொழி மாற்றியமைக்கப் பட்டாலும், பிரார்த்தனை நடத்திவந்த பாதிரியார்கள் மாற்றப்பட வில்லை. அப்போது நாட்டில் பணிபுரிந்து வந்த 8000 வட்டாரப் பாதிரியார்களில் 200 பேர்மட்டுமே வேலையில் இருந்து விலக்கப் பட்டனர். வட்டாரப் பாதிரியார்கள் பிரார்த்தனைமொழியை மாற்றியமைத்த சட்டத்திற்குக் கீழ்ப்படிந்தனர். அப்படி அவர்கள் சட்டத்திற்குக் கீழ்ப்படிந்ததால், வட்டாரங்களில் அவர்களுக்கு இருந்த மதிப்பும் குறையவில்லை. பாதிரியார், நடுவயதினராக இருந்தால் மேலிடத்தில் இருந்துவரும் கட்டளைகளுக்கு ஏற்ப மதச் சடங்குகளை மாற்றி அமைத்துக்கொள்வதில் பழக்கப்பட்டவ ராக இருந்தார். சில பாதிரியார்கள் மடங்களில் வாழ்ந்த துறவிய ராகவோ அல்லது ஊர்ஊராகச் சுற்றிவந்த துறவியராகவோ இருந்து பாதியார்களாக மாறியவராய் இருந்தனர். அதனால் அவர்கள் மதக்கொள்கைகளிலும், சடங்குகளிலும் மாற்றங்களுக்குப் பழக்கப்பட்டவராக இருந்தனர். எலிசபெத் அரசி பட்டமேற்ற ஆண்டில் வேலையிலிருந்த பாதிரியார்களில் அனேகர் (Protes- tant) மதத்தில் நம்பிக்கையற்றவராக இருந்தனர். ஆனால், அதே சமயத்தில் போப்பின் அதிகாரத்தை மதிக்காதவராயும் இருந்தனர். மதக்கொள்கைகளில் எவை சரியானவை என்பதைத் தாமே நிச்சயித்துக்கொள்ளும் எண்ணமற்றவராகவும் அவர்கள் இருந் தனர். அப்படியானால் மதக்கொள்கைகளில் எவை சரியானவை என்பதை அறிந்துகொள்ள, அவர்கள் யாரை நோக்கி இருந்தனர் என்ற வினா எழலாம். அரசனின் வாயில் இருந்து வந்ததே

சரியென்று எண்ணவேண்டும் என்று அவர்கள் கற்பிக்கப்பட்டிருந்தனர். கி.பி. 1559ஆம் ஆண்டு மதக்கொள்கைகள் அரசன் வாயில் இருந்தே வந்தன. பாதிரியார்களும், மக்களும், அரசன், பார்லிமெண்ட், பிரிவி கவுன்சில் ஆகியோர் சரியென்று நிச்சயித்த மதக்கொள்கைகளை ஏற்றுக்கொள்வது ஒன்றே நன்மையானது என்று எண்ணினர்.

மாற்றங்கள் நிறைந்த அந்த நூற்றாண்டில் ஆங்கிலேயர் மதக்கொள்கைகளை அரசாங்கம் நிர்ணயிக்கவேண்டும் என்று எண்ணியிருந்தனர். இக் கருத்து தற்காலத்திற்கு முரணானதாகத் தோன்றும். ஆனால், அக் காலத்தில் பெரும்பான்மையோர் அதுவே சரியானது என்று எண்ணினர். எலிசபெத் அரசியின் ஆட்சித் தொடக்கத்தில் புகுத்தப்பட்ட மதத்தின் அடிப்படைக் கருத்தை பிஷப் ஜுவல் (Jewel) கீழ்க்கண்டவாறு குறித்துள்ளார்:

'துறவியாய் இருந்தாலும், மதப்பிரசாரகராக இருந்தாலும், தீர்க்கதரிசியாய் இருந்தாலும், கடவுளின் சீடராயிருந்தாலும், அரசனுக்கும் அவன் அதிகாரிகளுக்கும் அடங்கியவராவார். இதுதான் எங்கள் மதக்கொள்கை.'

அரசன், அவன் அதிகாரிகள் ஆகியோரின் அதிகாரம், மதத்தையும் நிர்ணயிக்கக்கூடியதாக இருந்தது. நாட்டில் ஒரே மதம் தான் இருக்கமுடியும் என்ற கருத்தை அனைவரும் ஏற்றுக்கொண்டனர். பியூரிடன்கள், ரோமானிய மதத்தைச் சார்ந்தவர் ஆகியோரைத்தவிர, மற்றவர் அனைவரும் அந்த ஒரே மதம் எதுவென்று அரசாங்கம் நிச்சயிக்கவேண்டும் என்ற கருத்துடையோராய் இருந்தனர்.

இடைக்காலத்திற்கும், தற்காலத்திற்கும் இக் கருத்து உகந்ததாய் இராவிட்டாலும், எலிசபெத்தின் ஆட்சிக்காலத்திற்கு அது உகந்ததாய் இருந்தது. எலிசபெத்தின் தந்தையின் ஆட்சிக் காலத்தில் மக்கள் பாதிரியார்களின் அதிகாரத்தை எதிர்த்து நடத்திய இயக்கத்தின் விளைவாகவே இக் கருத்து மக்களிடையே தோன்றியது. டியூடர் ஆட்சிக்காலத்தில் வாழ்ந்த ஆங்கிலேயர் மதப்பற்று அற்றவராய் இருக்கவில்லை. ஆனால், அவர்கள் பாதிரியார்களின் அதிகாரத்தை வெறுத்தனர். பாதிரியார்களின் அதிகாரத்தை வெறுத்ததன் காரணமாக, அவர்கள் அரசாங்கம் மதக்கொள்கைகளையும் சடங்குகளையும் நிர்ணயிக்கவேண்டும் என்று எண்ணினர். பாதிரியார்களும் மதம் அரசாங்கத்தால் நிர்ணயிக்கப்படவேண்டும் என்ற கருத்துடையவராய் இருந்தனர். பாதிரியார்

தனியான வகுப்பினராக இளமையில் இருந்து வளர்க்கப் படாமல், சாதாரண மக்களிடையே இருந்து பாதிரியார்களாகப் பணிபுரியச் செய்யப்பட்டு வந்ததுதான் அதற்குக் காரணமாய் இருந்தது.

எலிசபெத் அரசியின் ஆட்சித்தொடக்கத்தில் பாதிரியார்கள் அரசாங்கத்திற்குப் பணிந்துபோவோராக இருந்தனர். எனினும், பாதிரியார்களிடையே சிறுபான்மையோர் தீவிர பிராடஸ்டென்டு களாக இருந்தனர். அவர்களில் சிலர் ஸ்மித்ஃபீல்டு (Smithfield) என்ற இடத்தில் மேரி அரசி இறந்ததன் காரணமாக எரிக்கப் படாமல் தப்பியவராக இருந்தனர். மற்றும் சிலர் மேரி அரசியின் கொடுமைகளுக்குப் பயந்து வெளிநாடுகளுக்கு ஓடி, மேரி இறந்த பின் தாய்நாடு திரும்பியவராக இருந்தனர். அவர்கள் கால்வின் (Calvin) தோற்றுவித்த மதத்தவரிடையே காணப்பட்ட ஆர்வத் துடன் தாய்நாடு திரும்பியவராக இருந்தனர். அவர்கள் மதஸ்தா பனம் அரசாங்கத்திற்கு அடங்கியதாக இருக்கவேண்டும் என்ற எண்ணமற்றவராக இருந்தனர். போப்பின் அதிகாரத்தை ஆத ரிக்கும் அரசனுக இருந்திருந்தால், அவனுக்கு அவர்கள் கீழ்ப்படிந் திருக்க மாட்டார்கள். அவர்கள் எலிசபெத் அரசி போப்பின் அதி காரம் திரும்பவும் இங்கிலாந்தில் நுழையவிடமாட்டார் என்பதை அறிந்திருந்தனர். எலிசபெத் அரசி சமயமும் நேரமும் நேர்ந்த போது, மதத்தில் சீர்திருத்தம் செய்யும் எண்ணமுடையவராய் இருந்தார். இவற்றை பிராடஸ்டென்ட் தீவிரவாதிகள் ஏற்றுக் கொண்டனர். ரோம், ஸ்பெயின் ஆகியவற்றின் எதிர்ப்பில் இருந்து தாம் ஏற்படுத்திய மதத்தைக்காக்க அரசிக்கு அவர்கள் தக்க துணையாயிருந்தனர். ஆனால், மற்றொருவகையில் அவர்கள் எலிசபெத் ஏற்படுத்திய மதத்தின் எதிரிகளாக இருந்தனர்.

கி.பி. 1559-ல் வட்டாரங்களில் இருந்த பாதிரியார்கள், பார்லிமெண்ட், சட்டத்தின்மூலம் ஏற்படுத்திய மதத்தை ஏற்றவ ராக இருந்தனர். அவர்கள் தலைமுறை தலைமுறையாக வந்த தத்துவங்களை அறிந்தவராகவும், புதிய மதத்தில் ஊக்கமுள்ளவ ராகவும் இருக்கவில்லை. ஆனால், பிராடஸ்டென்ட் தீவிரவாதி களாக இருந்த பாதிரியார்கள் தங்கள் மதத்தில் மிகுந்த ஆர்வம் உள்ளவராக இருந்தனர். அவர்களே பல ஆண்டுக்காலம் பாதிரி யார்களிடையே மிகுந்த செல்வாக்குடையவராக இருந்தனர்.

எட்டாம் ஹென்றியின் ஆட்சிக்காலத்தில் பாதிரியார்களின் அதிகாரத்தை எதிர்த்து நடந்த இயக்கத்திற்குப் பிறகு, மக்கள் பாதிரியார்களைக்கண்டு பொறுமைப்படவோ அல்லது வெறுக்கவோ

செய்யவில்லை. அதற்குமாருகப் பாதிரியார்களுக்கு மதிப்புக் கொடுக்காமலும், அவரது சேவையைப் பெருமலும் விடுத்தனர். எலிசபெத் அரசியும் மதஸ்தாபனத்தின் நிலத்தையும், சொத்தையும் அபகரித்துவந்தார். அத்துடன் காலியான இடங்களில் புதிய பிஷப்புகளை நியமிக்காமல் காலியாகவே சில சமயம் வைத்திருந்தார். அப்படி வைப்பதால் அப் பிஷப்பிற்குச் சேரவேண்டிய வரும்படியைத் தாமே அடையலாம் என்ற காரணத்தால் அவர் அப்படிச் செய்தார். ஆர்ச்பிஷப் (Archbishop) பதவியில் இருந்தோர், அரசியின் ஆலோசகராக இருந்த வில்லியம் செசில் (William Cecil) என்பாரிடம் மதத்தைப்பற்றி விளக்கங்கள் பெற்று வந்தனர். அதேநேரத்தில் செல்வாக்குடையோர் பாதிரியார்களையும் மதஸ்தாபனத்தையும் நடத்திய விதத்தைப்பற்றி முறையிட்டனர். மதஸ்தாபனம் அரசாங்கத்தின் ஒரு பிரிவாக நடத்தப்பட்டு வந்தது. மதஸ்தாபனம் பணமுடையால் வருந்திய அரசனுக்கும், பேராசைபிடித்த பிரபுக்களுக்கும் இரையாக இருந்துவந்தது. வட்டாரங்களில் பாதிரியார்கள் ஸ்குவீர் என்ற வகுப்பினருக்கு அடங்கியிருக்கவேண்டியிருந்தது. லவ்ஸ் லேபர் லாஸ்ட் (Love's Labour's Lost) என்ற நூலின் ஆசிரியர், சிலசமயம் அன்பாகவும் சிலசமயம் மரியாதை இன்றியும் வட்டாரப் பாதிரியார்கள் மக்களால் நடத்தப்பட்டனர் என்று குறித்துள்ளார்.

மேற்கூறியவற்றில் இருந்து பாதிரியார்களின் நிலை சிறிது சிறிதாகத்தான் உயர்ந்தது என்று ஊகிக்கலாம். எலிசபெத் அரசியின் ஆட்சிக்கால இறுதியில் ஆங்கிலிகன் (Anglican) மதப் பாதிரியார்கள் மக்களால் நன்கு மதிக்கப்பட்டனர். அவர்கள் தாங்கள் எடுத்துக் கூறியவைகளில் நம்பிக்கை உடையவராயும் இருந்தனர். ஸ்டூவர்ட் வம்ச அரசர்கள் மதஸ்தாபனத்திற்குச் சலுகை காட்டிய போது, திரும்பவும் பாதிரியார்கள் கர்வம் பிடித்தவராக இருந்தனர் என்று மக்கள் குறைகூறினர். கான்டர்பரி ஆலயத்தின் ஆர்ச்பிஷப்பாக இருந்த வில்லியம் லாடு (William Laud) ஸ்குவீர் வகுப்பினரின் அதிகாரத்தை எதிர்க்கும்படி செய்தார்.

எலிசபெத் அரசியின் ஆட்சிக்காலத்தில் திரும்பவும் பாதிரியார்கள் மணந்துகொள்ள அனுமதிக்கப்பட்டனர். இது சமுதாயத்தில் ஏற்பட்ட முக்கிய மாறுதலாகும். கி.பி. 1553-ல் அனேக பாதிரியார்கள் ரோமன் கத்தோலிக்க மதம் திரும்பவும் ஸ்தாபிக்கப்படுவதை வரவேற்றனர். ஆனால், அவர்களில் பலர் மேரி அரசியின் ஆட்சிக்காலத்தில் வேலையில் இருந்து நீக்கப்பட்டனர். அவர்கள் ஆரும் எட்வர்டின் ஆட்சிக்காலத்தில் மணந்துகொண்டு குடும்பம் நடத்திவந்ததே அதற்குக் காரணமாய் இருந்தது. எலிசபெத்

அரசியின் ஆட்சியில் பாதிரியார்கள் மணந்துகொண்டு குடும்பம் நடத்த அனுமதிக்கப்பட்டனர். 'மடங்களின் நிலங்களையும் சொத்துக்களையும் பெற்ற மக்கள் அவைகளை இழக்காமல் இருப்பதற்காக மதச்சீர்திருத்த இயக்கத்தை ஆதரித்தனர் என்று முன்னர்க் கண்டோம். அதேபோல் மணந்துகொண்டு குடும்பம் நடத்திவந்த பாதிரியார்கள் தங்கள் குடும்ப நலனைக்கருதி மதச்சீர்திருத்தத்தை ஆதரிக்கத் தலைப்பட்டனர். மதச்சீர்திருத்த இயக்கம் முடிவில் வெற்றிபெற்றதற்கு அதுவும் ஒரு காரணமாக இருந்தது என்று கூறலாம்.' மேரி அரசியின் ஆட்சிக்காலத்தில் எஸ்ஸெக்ஸ் பிரதேசத்தில் வேலையிலிருந்து நீக்கப்பட்ட பாதிரியார்களின் பொருளாதார நிலையைப்பற்றி ஆராய்ந்த ஹில்டா கிரீவ் கீழ்க்கண்டவாறு எழுதியுள்ளார்: ('Miss Hilda Grieve's study of the personal fortunes of the clergy in Essesx deprived under Mary. R.H.S 1940.)

'திருமணம் செய்துகொள்ள அனுமதிக்கப்பட்டது நேர்மையான பாதிரியார்களுக்கு அனுகூலமாக இருந்தது. இவ் வனுமதி கொடுக்கப்பட்ட காலத்திலிருந்து பாதிரியார்களின் இல்லங்களில் குழந்தைகள் நல்லமுறையில் வளர்க்கப்பட்டுவந்தனர். அந்தக் குழந்தைகள் வளர்ந்து பலதுறைகளிலும் நல்லமுறையில் பணியாற்றினர். அவர்கள் பிற்காலத்தில் நேர்மையான பாதிரியார்களாகவும் பணியாற்றினர். ஆனால், முதன்முதலில் பாதிரியார்களின் மனைவியர் மதிப்பிற்கு உரியவராக, அரசியாலும் மக்களாலும் கருதப்படவில்லை. காலம் கழிந்த பின்னரே பாதிரியார்களின் மனைவியரும், பாதிரியார்களைப்போலவே மதிப்புடன் நடத்தப்பட்டனர்.'

பாதிரியார்கள் ஏழ்மைநிலையில் இருந்தனர். அதனால் மனைவியையும் மக்களையும் காப்பாற்றும் பொறுப்பும் சேர்ந்தபோது அவர்கள் இன்னலுற்றனர். பாதிரியார்கள் ஏழைகளாக இருந்ததால் அவர்கள் பிரபுக்களின் பெண்களை மணக்கமுடியாத நிலையில் இருந்தனர். மதச் சீர்த்திருத்த இயக்கத்தின் விளைவாகச் சமுதாயத்தில் குழப்பநிலை தோன்றியது. பிரபுக்களின் பெண்களும் நல்ல குடும்பத்துப் பெண்களும் பாதிரியார்களையும், எளியோரையும் மணந்துகொண்டனர். ஆங்கிலிகன் மதத்தில் மிகுந்த பற்றுக்கொண்ட கிளாரென்டன் (Clarendon) என்பார், அப்படி அவர்கள் பாதிரியார்களையும், எளியோரையும் மணந்தது, குழப்பநிலையை நன்கு விளக்குகின்றது எனக் கூறியுள்ளார். ஹானோவர் வம்சத்தினரின் ஆட்சிக்காலத்தில்தான் பாதிரியார்களின் பொருளாதார நிலையும் அந்தஸ்தும் உயர்ந்தன. ஜேன் ஆஸ்டென் (Jane Austen) எழுதியுள்ள நாவல்களில் பாதிரியார்களும், ஸ்குவீர்களும் ஒரு வகுப்பைச் சார்ந்தவராகத் தோன்றுவதைக் காண்கிறோம். ஆனால், டியூடர்,

ஸ்டூவர்ட் வம்சங்களின் ஆட்சிக்காலங்களில் அவர்கள் வெவ்வேறு வகுப்பினராக இருந்தனர்.

பாதிரியார்களின் வேலையைப் பெறுவதற்காகப் பணம் கொடுப்பதும், ஒருவரே பல வட்டாரங்களின் பாதிரியாராக இருப்பதும் பாதிரியார்களிடையே காணப்பட்டன. இச் செய்கைகளுக்கு அவரது ஏழ்மைநிலையே காரணமாய் இருந்தது. இங்கிலாந்தில் போப்பின் அதிகாரம் மறுக்கப்பட்டபோதும் மேற்கண்ட பழக்கங்கள் மறைந்துவிடவில்லை. ஃபிரான்சு, இத்தாலி ஆகிய நாட்டவரை இங்கிலாந்தில் பாதிரியாராக நியமிக்கும் பழக்கம் ஒன்றே மறைந்தது.

எலிசபெத் அரசியின் ஆட்சிக்காலத்தினிடையில் ஸ்பெயின் தேசத்துக் கப்பற்படையான ஆர்மடா (Armada) படையெடுத்தது; அத்துடன் ஸ்காட்லாந்தின் அரசியான மேரி (Mary Queen of Scots) சிரச்சேதம் செய்யப்பட்டாள். அச் சமயத்தில் ஒருவருக்கொருவர் மதத்தில் வேறுபட்டதன் காரணமாக நாட்டில் மக்களிடையே பீதி நிலவியது. கத்தோலிக்க மதத்தில் தொடர்ந்து பற்று வைத்திருந்த ஜென்ட்ரிகளின் இல்லங்களில் ஜெஸ்யூயிட் (Jesuit) மதப் பிரசாரகர்கள் இருந்துகொண்டு கத்தோலிக்க மதப் பிரசாரத்தை முழு முயற்சியோடு செய்துவந்தனர். ஒவ்வொரு நாளும் நாட்டிற்கு ஏதாவது தீங்குநேரிடும் என்று மக்கள் எதிர்பார்த்தனர். ஸ்பெயின் நாட்டவர் படையெடுக்கக்கூடும் என்றும், கத்தோலிக்க மதத்தை ஆதரித்துக் கலகம் நிகழக்கூடும் என்றும் மக்கள் எதிர்பார்த்தனர். அரசியே கொலைசெய்யப்படலாம் என்றும் எதிர்பார்த்தனர். ஜெஸ்யூயிட் மதப் பிரசாரகர்கள் பண்ணைவீடுகளில் மாறுவேடத்திலும் மறைந்தும் நடமாடிவந்தனர். சிலசமயம் அமைதிக் காவலர்களால் துரத்திப் பிடிக்கப்பட்டுச் சிரச்சேதம் செய்யப்பட்டனர்.

இதற்கிடையில் பியூரிடன் மதத்தை ஏற்றுக்கொண்டவர் பலர் வட்டாரங்களில் பாதிரியார்களாகவும், அமைதிக் காவலர்களாகவும் பணியாற்றிவந்தனர். அவர்கள் உள்ளிருந்தே மத ஸ்தாபனத்தின் அமைப்பை மாற்றியமைக்க அரும்பாடுபட்டனர். அவர்கள் பிஷப்புகளை வெறுத்தனர். தங்கள் கருத்துகளை விரிவுரைகள்மூலமும் பிரார்த்தனைக் கூட்டங்கள்மூலமும் பரப்பிவந்தனர். அரசாங்கம் அச் செயல்களைத் தடைசெய்திருந்தும் அவர்கள் அச் செயல்களில் ஈடுபட்டிருந்தனர். 'லண்டனில் வாழ்ந்த ஒவ்வொரு வியாபாரியின் இல்லத்திலும், இரவில் மதப் பிரசாரக் கூட்டங்கள் இரகசியமாக நடத்தப்பட்டனவென்றும், அதன்

காரணமாகப் பணிப்பெண்கள் எங்கள் இல்லங்களில் மாறுபட்ட மதக் கொள்கைகள் போதிக்கப்பட்டனவென்று இயம்பினர்" என்றும், எலிசபெத் அரசியே கூறியிருக்கின்ருர். கவுன்டி எனப் பட்ட பல பிரிவுகளில் பியூரிடன் மதப் பாதிரியார்கள், பார்லிமெண் டின் உதவியைக்கொண்டு பிஷப்புகளின் அதிகாரத்தை அழிப்பதற் காக ஒன்றுகூடிக் கூட்டங்கள் நடத்திவந்தனர்.

பியூரிடன் மதத்தவர், தேர்தல் பிரசாரம் செய்வதிலும், பார்லி மெண்ட் அங்கத்தினரைத் தங்கள் கருத்துகளை ஏற்றுக்கொள்ளச் செய்வதிலும், போராட்டம் நடத்துவதிலும் ஏற்கெனவே தேர்ச்சி பெற்றிருந்தனர். கி.பி. 1584-ல் பாதிரியார்கள், நகராட்சி மன்றத்தினர், அமைதிக்காவலர்கள் ஆகியோரைப் பார்லிமெண் டிற்கு மதஸ்தாபனத்தைப்பற்றி முறையிடத் தூண்டினர். காமன்ஸ் சபையிலும் (House of Commons), பிரிவி கவுன்சிலிலும் (Privy Council) இருந்த அங்கத்தினரில் பாதிப்பேர் அவருடைய மதக் கொள்கைகளை ஏற்கச் செய்யப்பட்டனர். ஆனால், எலிசபெத்தின் மனத்தை மாற்றமுடியாமற் போயிற்று. அது இங்கிலாந்திற்கு நன்மையாகவே முடிந்தது. அரசி பிடிவாதமாகப் பியூரிடன் மதத் தைப் புகுத்த இடமளிக்கவில்லை. அதற்குமாருக பியூரிடன் மதத் தைப் புகுத்த அரசி இசைந்திருந்தால், பிராடஸ்டென்ட் மதத்தவ ருக்கும், கத்தோலிக்க மதத்தவருக்கும் உள்நாட்டுப்போர் மூண் டிருக்கும். அதைப் பயன்படுத்திக்கொண்டு ஸ்பெயின் வெற்றி பெற்றிருக்கும். கி.பி. 1640-ல் இங்கிலாந்து பலம் பொருந்திய நாடாக விளங்கியது. அத்துடன் பிராடஸ்டென்ட் மதமும் பல முள்ளதாகவிருந்தது. அதனால் நாட்டிற்கு ஒரு தீங்கும் நேராமல், ஆங்கிலிகன் மதஸ்தாபனத்தை அழித்து, பியூரிடன் மதத்தை ஸ்தாபிக்கவும், மறுபடியும் பியூரிடன் மதத்திற்குப் பதிலாக ஆங்கிலிகன் மதத்தை ஸ்தாபிக்கவும் முடிந்தது.

எலிசபெத் அரசியும், ஆர்ச்பிஷப் விட்கிஃப்ட்டும் (Whitgift) ஆங்கிலிகன் மதத்தை நிலைநிறுத்தினர். எலிசபெத்தின் ஆட்சி முடிவுறுமுன் பியூரிடன் மதத்தினர் பணியவைக்கப்பட்டனர். ராபெர்ட் ப்ரௌனி (Robert Browne) என்பாரைப் பின்பற்றிய ப்ரௌனிஸ்ட் (Brownist) என அழைக்கப்பட்டோர் ஒரு சிலரே இருந்தனர். அவர்கள் மக்களால் வெறுக்கப்பட்டனர். பியூரிடன் தீவிரவாதிகளில் சிலர் சிரச்சேதம் செய்யப்பட்டனர். மற்றும் சிலர் சிறையில் அடைக்கப்பட்டனர். அப்படிச்செய்தும் பெரும்பான்மை யான பியூரிடன் மதப் பாதிரியார்களும், ஜென்ட்ரிகளும், வியா பாரிகளும் அரசியிடம் விசுவாசமுள்ளவராக இருந்தனர். ஆனால், அரசியைவிடப் புத்திக் கூர்மையும், வருங்காலத்தை முன்கூட்டியே

அறியும் திறனும் உடையவர் இருந்திருந்தால், பிடிவாத குணம் படைத்தவரும், ஒருமைப்பாடு இல்லாதவருமான ஆங்கிலேயரை எவ்வளவு காலம் ஒரே மதத்தை ஏற்கச் செய்யமுடியும் என்பதை எண்ணிப் பார்த்திருப்பார். எல்லா மதங்களுக்கும் அங்கீகாரம் கொடுக்கவேண்டியநிலை ஏற்படலாம் என்பதை அவர் உணர்ந் திருப்பார். பதினெட்டாம் நூற்றுண்டில் வால்டேர் (Voltaire) இங்கிலாந்திற்கு விஜயம் செய்தபோது, இங்கிலாந்தில் எண் ணிறந்த மதங்கள் இருந்ததைக்கண்டு வியந்தார்.

ஆனுல், எலிசபெத் தம் மக்களை ஒரே மதத்தினராக்க முடியும் என்று எண்ணினுர். அந்த ஒரு மதம் பைபிளை அடிப்படையாகக் கொண்டதாகவும் பாதிரியார்களின் அதிகாரத்தை ஏற்றுக்கொண்ட தாகவும் மக்கள் தங்கள் பகுத்தறிவு, உலகஞானம் ஆகியவற் றைக்கொண்டு உணரக்கூடியதாகவும் இருந்தது என்று ஹூக்கர் இயம்பினுர். வாழ்க்கையில் எந்தச் செயலுக்கும் பைபிளின் அங்கீ காரம் வேண்டும் என்று வற்புறுத்திய பியூரிடன் மதம், பாதிரியார் கள் கூறியதையே செய்யவேண்டும் என்று வற்புறுத்திய கத்தோ லிக்கமதம் ஆகியவைகளைவிட, அம் மதம் மக்களுக்கு உகந்ததாய் இருந்திருக்கக்கூடும். அப்படியே இருந்தாலும், அம் மதத்தையே அனைவரும் ஏற்கவேண்டும் என்று கட்டாயப்படுத்துவது தீங்கை விளைவிக்கக்கூடியதாய் இருந்தது. ஒரே மதத்தை மக்கள் ஏற்க வேண்டும் என்ற கட்டாயம் ஒரு நூற்றுண்டுக் காலத்திற்கு மக்க ளிடையே பகைமையையும் சச்சரவையும் ஏற்படுத்தியது. அத் துடன் அனேகர் சிறையில் அடைக்கப்பட்டு, தங்கள் சொத்துகளை இழக்க நேரிட்டது; அனேகர் சிரச்சேதத்திற்கு உள்ளாக வேண்டி இருந்தது. மற்றும் பலர் போரில் இறக்கநேரிட்டது. மேலும், மக்கள் தங்கள் அரசியல் உரிமைகளையும் இழக்க நேரிட் டது. பார்லிமெண்டும் அழிந்தது. மனிதனின் வரலாறு உண்மை யிலேயே விந்தையானதாக இருக்கின்றது. அதேபோல் ஒரு நாட்டின் எதிர்காலமும் அறியமுடியாததாய் இருக்கின்றது.

நாம் இன்றும் பிரார்த்தனைப் புத்தகத்தை உபயோகித்து வருவ தால், எலிசபெத்தின் ஆட்சிக்காலத்தில் பிரார்த்தனைகள் எவ்வாறு நடத்தப்பட்டன என்பதை ஊகிக்கலாம். கிருத்தவ ஆலயத்தினுள் கிழக்குக்கோடியில் மற்றப் பகுதிகளில் இருந்து ஒதுக்கப்பட்ட பீடத்திற்குப்பதிலாக ஒரு மேஜை இருந்ததாக முதலில் எண்ணிக் கொள்ளவேண்டும். பிரார்த்தனைகளும், துதிப் பாடல்களும் குரலை உயர்த்தி, தாழ்த்திப் பாடப்படவில்லை. பிரார்த்தனைகள் உரை நடையில் செய்யப்பட்டன. துதிப்பாடல்கள் பாடப்பட்டன. பிராடஸ்டென்ட் மத வழிபாட்டிலே பலர்கூடித் துதிப்பாடல்களை

இசைப்பது விரும்பத்தக்கதாய் இருந்தது. ஆனால், தற்காலத்தில் பாடப்படும் துதிப்பாடல்களுக்குப் பதிலாக, ஸ்டெர்ன்ஹோல்டு (Sternhold), ஹாப்கின்ஸ் (Hopkins) ஆகியோர் இசையமைத்துக் கொடுத்த பாடல்களையே பாடினர். அவர்களின் இசையமைக்கப் பட்ட பாடல்கள் பல தலைமுறைக்காலத்திற்கு மக்களால் மிகவும் விரும்பப்பட்டுவந்தன. ஆனால், இன்றோ அவர்கள் பாடல்கள் அனைத்தையும் மக்கள் மறந்துவிட்டனர் எனக் கூறலாம். அவர் களால் இசையமைக்கப்பட்ட நூறாவது துதிப்பாடல் ஒன்றே இப்போதும் மக்களால் பாடப்பட்டு வருகிறது.

> ‘உலகத்தில் வாழும் மக்கள் அனைவரும் கடவுளை நோக்கி மன நிறைவுடன் கூடிய குரலில் பாடுகின்றனர். கடவு ளுக்குப் பயபக்தியுடன் தொண்டு செய்யுங்கள். அவரது பெருமையை எடுத்துக்கூறுங்கள். அவர் முன்னே வந்து பாடிக் களிப்படையுங்கள்.’

எலிசபெத்தின் ஆட்சிக்காலத்தில் இசையமைக்கப்பட்ட துதிப்பாடல்கள் நான்குவகை ராகங்களில் அமைந்திருந்தன. ஒவ்வொரு பாடலிலும் அந் நான்கு ராகங்களும் பயன்படுத்தப் பட்டன. கான்டஸ் (Cantus), ஆல்டஸ் (Altus), டெனர் (Tenor), பாசஸ் (Bassus) என்பவை அந்த ராகங்களின் பெயர்களாகும். ஒவ்வொருவரும் ஒரு பாட்டில் தன் குரலுக்கேற்ற ராகம் அமைக்கப் பட்ட பகுதியைச் சிரமம் இல்லாமலும், பாடிப்பழகாமலும் பாட முடிந்தது. பலர்சேர்ந்து பாடும்போது, கம்பிகளைக்கொண்ட இசைக் கருவிகளையும் (viols) குழலைப்போன்ற இசைக்கருவி களையும் உடன் இசைப்பதும் உண்டு.[1]

பிரார்த்தனைகளின்போது, பாதிரியார்கள் நீதிபோதனை செய் வது வழக்கமாய் இருந்தது. பியூரிடன் பாதிரியார்கள் அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு தங்கள் மதக்கருத்துகளைப்

[1] பியானோக்களும், ஹார்மோனியங்களும் சாதாரணமாக வட்டார ஆலயங் களில் ஹானோவர் வம்சத்தினரின் ஆட்சிக்காலத்தில் உபயோகிக்கப்படவில்லை. துதிப்பாடல்கள் பலவித இசைக்கருவிகளின் இசையோடு பாடப்பட்டன.

ஹார்டி (Hardy) என்பார், ‘ரிடர்ன் ஆஃப் தி நேடிவ்’ (Return of the Native) என்ற நூலின் ஐந்தாம் அத்தியாயத்தில் இசைக்கருவிகளின் இசை யோடு துதிப்பாடல்கள் எப்படிப் பாடப்பட்டன, என்பதைக் கீழ்வருமாறு எடுத் துக் காட்டியுள்ளார்.

‘ஒரு ஞாயிற்றுக்கிழமை இயேபிரைட் (Yeobright) என்பார் கம்பிகளையுடைய தம் இசைக்கருவியை எடுத்துவந்திருந்தார். அன்றைக்கு 138 ஆவது துதிப் பாடல் பாடப்பட்டது. அப் பாட்டின் ஓர் அடியை இசைக்கும்போது, இயே பிரைட்டின் வாசிப்பில் களைகட்டியது. அந்தநேரத்தில் அவர் இசைப்பது தம் கருவியை இசைக்கும் வில்லைக்கொண்டு இரண்டாக அறுத்துத் தள்ளுவதைப் போல் தோன்றியது. கருவியின் உரத்த ஒலி சாளரங்களையெல்லாம் புயல் காற்றில் ஆடுவதுபோல் அசையச் செய்தது.’

பரப்பலாயினர். இத்தகைய நீதிபோதனை ஒருமணி நேரத்திற்கு அல்லது இரண்டுமணி நேரத்திற்கு நடத்தப்படும். அதிகம் கற்றிராத மற்றப் பாதிரியார்கள், ஹோமிலி (Homily) எனப்பட்ட சாதாரண நீதிபோதனைகளை அச் சந்தர்ப்பங்களில் எடுத்துக் கூறுவர். இத்தகைய நீதிபோதனைகள் மதக் கொள்கைகளைப் பரப்ப உதவியது. மதக் கொள்கைகளுடன் அரசியல் கருத்துகளையும் வெளியிட உதவியது.

வாரம் ஒருமுறை ஆலயத்திற்குச் செல்வதை அரசாங்கம் கட்டாயப்படுத்தியது. அப்படி ஆலயத்திற்குச் செல்லாதவர் சட்டப்படி அபராதம் செலுத்தவேண்டியிருந்தது. ஆனால், அபராதம் ஒழுங்காக வசூலிக்கப்படவில்லை. எனினும், ஆலயத்திற்கு வாராத சத்தோலிக்கரிடமிருந்து தவறாமல் அபராதம் வசூலிக்கப்பட்டது. அவரவர் தன்னிச்சைப்படி நடக்க ஆர்வம் கொண்ட மக்களையுடைய சமுதாயத்தில், எல்லாரும் ஞாயிற்றுக் கிழமைகளில் ஆலயமணியின் ஓசைகேட்டவுடன் ஆலயத்திற்குச் செல்ல விருப்பமுடையவராய் இருந்தனர் என்று கூறமுடியாது.

கார்ன்வாலில் (Cornwall) வாழ்ந்துவந்த ஜான் டிரெவெலியன் (John Trevelyan) என்பார், அபராதம் செலுத்துவதைத் தவிர்ப்பதற்காக, ஆலயத்திற்குத் தவறாமல் செல்வார். பிரார்த்தனையையும் ஸ்டெர்ன்ஹோல்டும், ஹாப்கின்சும் இசையமைத்துக் கொடுத்த துதிப்பாடல்களையும் பொறுமையாகக் கேட்டுக்கொண்டிருப்பார். ஆனால், பாதிரியார் நீதிபோதனையை ஆரம்பிக்குமுன் ஆலயத்தைவிட்டு வெளியேறுவார். அப்படி வெளியேறுமுன் பாதிரியாரைப் பார்த்து, 'நீங்கள் கூறவேண்டியதைக் கூறி முடித்த பின், என் வீட்டில் விருந்துண்ண வாருங்கள்' என்று அழைத்துவிட்டுச் செல்வார். தமக்குப் பழக்கமான பிராடஸ்டென்ட் மதத்தைச் சார்ந்த பெண்மணிகளைப் பார்த்து, 'நீங்கள் மேரி அரசியின் ஆட்சிக்காலத்தில் துன்பப்பட்டதைவிட, அதிகமாகத் துன்பம் அனுபவிக்கப்போகிறீர்கள்' என்று பயமுறுத்துவார். அத்துடன் விறகின் விலையேறப்போகிறது என்று கூறுவதின்மூலம் அவர்கள் சுட்டெரிக்கப்படுவர் என்று பயமுறுத்துவார். அத்தகையவரைப் பற்றிப் பல கதைகள் சொல்லப்படுகின்றன. [Trevelyan Papers. Camden Soc., P. II, (1863, pp. 113-118) and Pt. III (1872, p. XXII)].

எலிசபெத்தின் நீண்டகால ஆட்சியில் இளைய சமுதாயம் பிராடஸ்டென்ட் மதத்தில் மிகுந்த ஆர்வம்காட்டத் தலைப்பட்டது. அவர்கள் சிறுவயதில் இருந்தே பைபிளைப் படிக்கவும், பிரார்த்

தனைப் புத்தகத்தில் இருந்தபடி, பிரார்த்தனை செய்யவும் கற்பிக்கப் பட்டிருந்தனர். ஸ்பெயின் நாட்டினின்றும் போப், ஜெஸ்யூயிட்டு ஆகியோரிடமிருந்தும் நாட்டைக் காப்பாற்றும் பணியில் அவர்கள் பங்கு கொண்டிருந்தனர். இவையே அவர்களைப் பிராடஸ்டென்ட் மதத்தில் ஆர்வமுடையவராக இருக்கச் செய்தது. பைபிளைப் படிப்பதும், குடும்பப் பிரர்த்தனை செய்வதும் ஆங்கிலேயருக்குப் பழக்கமாகிக்கொண்டுவந்தது. எலிசபெத்தின் ஆட்சி தொடங்கிப் பத்தாண்டுகள் முடிவதற்குள், ரோகர் ஆசாம் (Roger Ascham), 'பள்ளி ஆசிரியர்' (SchoolMaster) என்ற பெயருள்ள தமது நூலில், 'இந்த லண்டன் நகரிலே கடவுளின் கட்டளைகள் மிகுந்த அக்கறையுடன் சொல்லித்தரப்படட்டும்; பிரார்த்தனைகள் பயபக்தியுடன் நடத்தப்படட்டும்; இவை இத்தாலியில் ஆலயங்களில் வாரத்திற்கு ஒருமுறை நடத்தப்பட்டதற்குப் பதிலாகத் தினந்தோறும் மக்களின் வீடுகளிலேயே நடத்தப்படட்டும்,' என்று எழுதினர். வீட்டிலேயே குடும்பத்தினர் வழிபடுவது இங்கிலாந்தின் மற்றப் பாகங்களைவிட, லண்டன் நகரில் சாதாரணமாக நடந்துவந்தது. இப் பழக்கம் விரைவாக நாடு முழுவதும் பரவிவந்தது.

எலிசபெத், மேரிக்குப்பின் பட்டத்திற்குவந்த ஆண்டில், பியூரிடன் மதமானது, ஜெனீவாவில் (Geneva) இருந்தும், ரைன் நதிப் (Rhineland) பிரதேசத்தில் இருந்தும், இங்கிலாந்திற்குக் கொண்டுவரப்பட்ட அன்னிய மதமாக இருந்தது. ஆனல், எலிசபெத் இறப்பதற்குள், ஐரோப்பாவில் காணப்படாத பழக்கங்களையுடைய மதமாக மாறிற்று. உதாரணமாக, ஞாயிற்றுக்கிழமைகளைக் கண்டிப்புடன் ஓய்வுநாளாக, ஆங்கிலேயப் பியூரிடன்கள் கருதத் தொடங்கினர். ஆங்கிலிகன் மதமும் எலிசபெத்தின் ஆட்சிக் காலத்தில் ஓர் உருப்பெற்று, இங்கிலாந்தில் வேரூன்றியது. கி.பி. 1559-ல் ஆங்கிலிகன்மதம் ஒரு மதமாகவே கருதப்படவில்லை. அதைப் பியூரிடன்களுக்கும் கத்தோலிக்கருக்கும் இடையே சமாதானத்தை ஏற்படுத்த, எலிசபெத் கையாண்ட முறை என்றே கருதினர். ஆனல், எலிசபெத்தின் ஆட்சி இறுதியில் அது ஒரு மதமாகவே மாறியது. நாற்பது ஆண்டுக்காலமாக ஆலயங்களில் ஆங்கிலிகன் மதப்படி பிரார்த்தனைகள் நடத்தப்பட்டுவந்ததால், மக்கள் அவற்றை மிகவும் விரும்பத் தலைப்பட்டனர். ஆங்கிலிகன் மதத்தின் தத்துவத்தை, 'எக்லெஸ்டியாஸ்டிகல் பாலிடி' (Ecclesiastical Polity) என்ற நூலில், ஹூக்கர் அழகாக எடுத்து எழுதிவந்தார். ஜியார்ஜ் ஹெர்பெர்ட் (George Herbert) ஆங்கிலிகன் மதத்தின் கவிஞராக விளங்கினர்.

பாதிரியார்களும், மற்றவரும் எலிசபெத்தின் ஆட்சி இறுதியில் முன்பிருந்ததைவிடக் கல்வியில் தேர்ந்தவராய்க் காணப்பட்டனர். இதற்கு இலக்கணப் பள்ளிகளும், சர்வகலாசாலைகளும் காரணமாய் இருந்தன. பெரும்பான்மையான மக்கள் கல்வி அறிவு அற்றவராய் இருந்தனர்; அல்லது கிராமங்களில் பெண்கள் நடத்திவந்த பள்ளிகளில் எழுதப்படிக்கக் கற்றவராய் இருந்தனர். பல வகுப்பைச்சார்ந்த புத்திசாலிப் பிள்ளைகள், ஒன்ருக இலக்கணப்பள்ளிகளில் லத்தீன் மொழியில் கல்வி கற்றுவந்தனர். பிற்காலத்தில் காணப்பட்டதுபோல், வகுப்புகள் ஒன்றில் இருந்து மற்ருென்று பிரிக்கப்பட்டிருக்கவில்லை.

கி.பி. 1530-க்கும் 1560-க்கும் இடையே பொருளாதாரம், மதம் ஆகியவற்றின் காரணமாகத் தோன்றிய தொல்லைகளினுல், நாட்டில் இருந்த நிறுவனங்களைப்போல் சர்வகலாசாலைகளும் பாதிக்கப்பட்டன. சர்வகலாசாலைகளின் செல்வம் குறைந்தது. அவற்றில் கல்வி கற்றுவந்தவரின் எண்ணிக்கையும் குறைந்தது. பார்லிமெண்டின் சட்டம் ஒன்று நடுவயதில் இருந்த பாதிரியார்கள் பலரை, அவரவர் வட்டார ஆலயங்களுக்குத் திரும்பிப் போகச் செய்தது. ஆனுல், அவர்கள் எப்போதும்போல் தங்கள் ஆலயப் பணிகளைக் கவனிப்பதற்குப் பதிலாகச் சர்வகலாசாலைகளுக்குச் சென்று, தங்கள் நேரத்தை இழிவானமுறையில் கழித்து வந்தனர். இடைக்காலத்திலே கல்வியில் சிறந்துவிளங்கிய ஆக்ஸ்ஃபோர்டு, கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலைகள் அத் தொல்லைகள் இருந்த காலதில் சிறப்பற்று இருந்தன.

எலிசபெத்தின் ஆட்சியில் அவ் விரு சர்வகலாசாலைகளும், உள்நாட்டுப் போர் (Civil War) மூளும்வரை முன்போலவே சிறப்புற்றிருந்தன. அவை முன்பிருந்ததைவிட மதச் சார்பற்றவையாக இருந்தன. பட்டப்படிப்பிற்குப் படித்துக்கொண்டிருந்த மாணவர்களில் பெரும்பான்மையானேர் பாதிரியார்களாக விரும்பவில்லை. ஆக்ஸ்ஃபோர்டு, கேம்பிரிட்ஜ் ஆகிய கலாசாலைகளில் தேர்ச்சி பெற்று, எலிசபெத்தின் ஆட்சிக்காலத்தில் சிறந்து விளங்கியவரின் எண்ணிக்கை, அரசாங்கத்தில் பதவிவகித்த குடும்பத்தினர் கலாசாலைக் கல்வியைப்பற்றிக் கொண்டிருந்த நல்ல கருத்தை வெளிக்காட்டுகின்றது. உயர்ந்த குடும்பத்தில் பிறந்தவர், நல்ல உத்தியோகம்வகிக்க நினைத்தால், அதிலும் முக்கியமாக அரசாங்க உத்தியோகத்தில் அமர நினைத்தால், மேற்கூறிய சர்வகலாசாலைகள் இரண்டினில், ஒரு சர்வகலாசாலையில் சேர்ந்து படித்தனர். கலாசாலையைவிட்டு வெளியேறும்போது அவர் லத்தீன் மொழியில் நல்ல பயிற்சி பெற்றவராக வெளிவந்தார். ரோமானியர் காலத்துப்

பழங்கதைகளையும் தெரிந்தவராக வெளிவந்தார். அத்துடன் கிரேக்க மொழியைப் பேசும் அளவிற்குக் கற்றவராகவும், கணிதமும் தத்துவமும் தெரிந்திருந்தவராகவும் வெளிவந்தார். சிட்னி (Sidney), ராலே (Raleigh), காம்டன் (Camden), ஹாக்லூட் (Hakluyt) ஆகியோர் ஆக்ஸ்ஃபோர்டில் படித்தவராவார். செசில் (Cecil), பேகன் (Bacon) குடும்பத்தினரும், வால்ஷிங்காம் (Walsingham), ஸ்பென்சர் (Spenser), மார்லோ (Marlowe) ஆகியோர் கேம்பிரிட்ஜில் படித்தவராவார். அமைதிக்காவலராக இருந்த மாஸ்டர் சைலன்ஸ் (Master Silence) என்பார், தன் மகன் வில்லை (Will) ஆக்ஸ்ஃபோர்டில் பட்டப்படிப்பிற்காக விட்டுவைத்திருக்கிறார். அதன்பிறகு சட்டப்படிப்பு படிக்க 'இன்ஸ் ஆஃப் கோர்ட்' (Inns of Court) என்று அழைக்கப்பட்ட நிறுவனங்களுக்கு அனுப்பிவைப்பார். இப் படிப்பு முடிந்ததும் கிளாஸ்டர்ஷீரில் (Gloucestershire) தம் தந்தைக்குப்பிறகு அமைதிக்காவலர் பணியை ஏற்பார்.

கல்வி கற்பதில் இருந்த மேம்பாடே, அரசாங்க உத்தியோகத்தில் இருந்தோரின் குடும்பங்களுக்கும், சர்வகலாசாலைகளுக்கும் நெருங்கிய தொடர்பை ஏற்படுத்தியது. இடைக்காலத்தில் மாணவர்கள் விடுதிகளில் இருந்துகொண்டு கலாசாலைகளில் கல்வி கற்றுவந்தனர். அவர்கள் அதனால் தங்களைக் கண்காணிப்பாரற்றுக் கொடிய பழக்கங்களைக் கற்றுக்கொண்டனர். அதனால் பெற்றோர்கள் கலாசாலைகளில் படிக்க அனுப்புவதற்குத் தயங்கினர். ஆனால், எலிசபெத் ஆட்சிக்காலத்தில் கல்லூரிப் படிப்புமுறை விரைவாகப் பரவிவந்தது. ஆக்ஸ்ஃபோர்டிலும் கேம்பிரிட்ஜிலும் கல்லூரிகள் ஸ்தாபிக்கப்பட்டு மாணவர் கடுமையான கட்டுப்பாட்டின்கீழ் வைக்கப்பட்டிருந்தனர். இதற்குமுன் இரு சர்வகலாசாலைகளிலும் எவ்விதக் கட்டுப்பாடுகளும் இருக்கவில்லை. பாடம் கற்பிப்பதிலும் மிகுந்த அக்கறைகாட்டாமல் இருந்தன. அதனால் பெரும்பான்மையான மாணவர் நல்ல தேர்ச்சியடைய முடியாமற் போயிற்று. கல்லூரிகளிலும் தற்காலத்தில், 'காலேஜ் டியூடர்' (College Tutor) என்று அழைக்கப்படும் ஆசிரியர்கள் இருக்கவில்லை. ஆனால்,மாணவர்களின் பெற்றோர், 'ஃபெலோஸ்' (Fellows) என்று அழைக்கப்பட்ட கல்லூரியைச்சார்ந்தவரைத் தங்கள் மக்களுக்கு வீட்டில் பாடம்சொல்லிக்கொடுப்பவராகவும், கவனித்துக்கொள்வோராகவும் (guardian) நியமித்தனர். அத்தகையோர் சுமார் ஆறு மாணவர்களைத் தங்களிடம் வைத்துக்கொண்டனர். மாணவர்கள் சிலசமயம் அவர் வீட்டிலேயே அவருடன் துயின்றனர். அவருக்கும், மாணவர்களுக்கும் இருந்த உறவு, தலைமைக் கைத்தொழிலாளிக்கும், தொழிற் கற்றுவந்தோருக்கும் இடையே இருந்த உறவைப்போல் இருந்தது.

கல்லூரி ஆசிரியர் அன்றிக் கல்லூரியைச்சார்ந்தவரிடம் ஐந்து அல்லது ஆறுபேர் ஒன்ருகப் பாடங்களைக் கற்றுவந்தது பொதுவாக நன்மைபயத்தது எனக் கூறலாம். ஆனல், குறைவான தொகையைக் கொடுத்த மாணவரை அதிகம் கவனிக்காமல், மிகுந்த பணம் கொடுத்த மாணவரை அக்கறையுடன் கவனிப்பது அவ் வாசிரியர்கள் சிலரின் பழக்கமாய் இருந்தது. செல்வரின் புதல்வர்கள் 'ரூஃப்' (ruff) எனப்பட்ட கழுத்துப்பட்டைகளையும், வெல்வெட், பட்டு முதலியவற்ருல் ஆன ஆடைகளையும், வாளையும் அணிந்து கொள்ள விரும்பினர். இவைகளை அணிவது கல்லூரி விதிகளுக்கு முரணுனதாக இருப்பினும், அவர்கள் அதை விரும்பினர். அத்துடன் விடுதிகளில் அளவளாவும் அறைகளில் சீட்டு ஆடுவதும் சூதாடுவதும் அவரின் பழக்கமாய் இருந்தது. மேலும், ஒருவருடன் ஒருவர் கத்திச்சண்டை போடுவதும், கோழிகளைச் சண்டையிடச் செய்வதும், நாய்களைவிட்டுக் கரடியைத் துன்புறுத்தச் செய்வதும் அவர்களின் வேடிக்கைகளில் சிலவாகும். 'வீட்டிலேயே பாடம் கற்பித்த ஆசிரியர்களுக்குக் கொடுக்கவேண்டிய தொகை அதிகமாக இருந்ததால், ஏழைமக்கள் தங்கள் மக்களைக் கல்லூரிப் படிப்புப் படிக்கவைக்கச் சிரமப்பட்டனர் என்றும், செல்வரின் மக்கள் தங்கள் விருப்பம்போல் நடந்துகொண்டாலும், தமக்குக் கிடைக்கும் பெருத்த தொகையின் காரணமாக, அவர்களை அவ் வாசிரியர்கள் கண்டிப்பதில்லை' என்றும், கி.பி. 1758-ல் வில்லியம் செசில் (William Cecil) கூறியுள்ளார்.

எலிசபெத்தின் ஆட்சியின் தொடக்கத்தில் பாதிரியாராகவிருந்த ஹாரிசன் கீழ்வருமாறு குறிப்பிட்டுள்ளார்:

'பிரபுக்கள், செல்வர் ஆகியோரின் மக்கள் சர்வகலாசாலைகளுக்கு இழிவைத் தேடித் தருகின்றனர். தங்களுடைய அந்தஸ்தையும், தங்களுக்குக் கொடுக்கப்பட்ட சலுகையையும் பயன்படுத்திக்கொண்டு, கூச்சலிட்டுக்கொண்டு கும்மாளமடித்தனர். அதனுல் அமைதியான சூழ்நிலை கெடுகின்றது. உயர்ந்த ஆடைகளை அவர்கள் உடுத்துவதில் அக்கறைகாட்டினர். அவரது கவனம் இவ்வாறு படிப்பில் இருந்து மற்றச் செயல்கள் புரிவதில் திரும்பியிருந்தது. அவர்கள் செய்த தவறுகளுக்காகக் குற்றம் சாட்டப்பட்டால், தாங்கள் பிரபுக்களின் மக்கள் என்றுகூறித் தப்பித்துக் கொள்கின்றனர். இத்தகைய செயல், மற்றவரின் உள்ளத்திலே மிகுந்த வருத்தத்தை உண்டுபண்ணுகிறது'.

கண்டும் காணுததுபோல் கல்லூரி அதிகாரிகள் இருந்திராவிட்டால், வெளியே சுற்றுவதிலும், அரச அவையின் உல்லாச

வாழ்க்கையிலும் பழக்கப்பட்ட செல்வரின் மக்கள் கல்லூரிகளில் கல்வி கற்றிருக்க முடியாமல் போயிருக்கும். கல்லூரி விதிகள் பள்ளி மாணவர்களுக்கு ஏற்றனவாய் இருந்தன.[1] கி.பி. 1571-ல் சர்வ கலாசாலையின் துணைவேந்தர் (Vice-Chancellor) குளங்களிலும், ஆறு களிலும் நீச்சல் அடிப்பதைத் தடைசெய்தார். நீச்சல் அடிப்பது அபாயகரமானது என்ற காரணத்தால் அவர் அப்படிச் செய்திருக்க லாம். விளையாட்டுகளும் உடற்பயிற்சிகளும் ஒழுங்கானமுறையில் நடத்தப்படவில்லை. விளையாட்டுப் போட்டிகள் நடத்தப்படவில்லை; அல்லது அவைகளுக்கு ஊக்கம் அளிக்கப்படவில்லை. இளைஞர் களால் பொழுதுபோக்கில்லாமல் இருக்கமுடியாததால் அவர்கள் கல்லூரி விதிகளை மீறியதில் ஆச்சரியமில்லை. இடைக்காலத்தில் சர்வகலாசாலையில் அத்தகைய விதிகள் ஏதும் இருக்கவில்லை.

ஆதரவு அளிப்பது சாதாரணமாக இருந்த அந்த நாட்களில், நெருங்கியவர்களுக்கு ஆதரவு அளிப்பது எதிர்பார்க்கக்கூடியதே. செல்வாக்கும் செல்வமும் இருந்தவரின் மக்களுக்கு உபகாரச் சம்பளங்கள் கொடுக்கப்பட்டன. கல்லூரிகளின் வேலைகளை முடித்துத்தரும் வழக்கறிஞர்களின் மக்களுக்கும் உபகாரச் சம்பளங்கள் கொடுக்கப்பட்டன. கல்லூரிகள் செல்வத்தில் பெருகி வந்தன. ஆனால், சர்வகலாசாலைகள் ஏழ்மை நிலையிலேயே இருந்துவந்தன. எலிசபெத்தின் ஆட்சிக்காலத்தில், அவர் தந்தை, கேம்பிரிட்ஜில் ஏற்படுத்திய 'டிரினிடி' (Trinity) கல்லூரி, கிரைஸ்ட் சர்ச் (Christ Church) என்ற இடத்திலிருந்த டாம் குவாடு (Tom Quad) கல்லூரிக்குப் போட்டியாக இருந்துவந்தது.

ஒரு தலைமுறைக்குப்பிறகு, முதலாம் ஜேம்சின் ஆட்சிக் காலத்தில், கேம்பிரிட்ஜில் இருந்த செயின்ட் ஜான் (St. John) கல்லூரியில் சைமன் டி' ஈவ்ஸ் (Simon d' Eeves) என்பார் படித்து வந்தார். அவர் காலத்தில் பட்டப்படிப்பிற்குப் படித்துவந்தோரின் பொழுதுபோக்குகள் உலாவுதல், நீச்சல் அடித்தல், ஓட்டப் பந்தயம், மணி கட்டப்பட்டிருக்கும் கயிற்றை இழுத்தல், கால்பந்து ஆட்டம் முதலியனவாக இருந்தன. இந்த விளையாட்டுகள் கல்லூரிகளின் பின்புறத்தில் மாணவர்கள் சண்டையிட்டுக் கொள்வ தற்கு வாய்ப்பளித்தன.

ஓர் அறையில் நான்கு அல்லது அதற்குமேற்பட்ட எண்ணிக் கையுள்ள மாணவர் துயின்றனர். ஏழை மாணவர்கள் அனேக

[1] எலிசபெத்தின் ஆட்சிக்காலத்தில் பதினாறுவயதிலே பட்டப்படிப்பிற்குக் கல்லூரிக்கு வந்தனர். ஆனால், பெரும்பான்மையான மாணவர்கள் இரண்டு அல்லது மூன்று வயது இளையவராக இருந்தனர். அவ் விளவயதினருக்குக் கல்லூரிப் படிப்பு பாரமாக இருக்கும் என்பதை மக்கள் உணர்ந்துவந்தனர்.

மாகப் பாதிரியார்கள் வேலையை மேற்கொண்டனர். செல்வரின் மக்கள் மற்ற வேலைகளை மேற்கொண்டனர். டான் (Don) என்று அழைக்கப்பட்ட கல்லூரி ஆசிரியர்கள் பாதிரியார்களாக இருக்க வேண்டியிருந்தது. சட்டம் பாதிரியார்கள் மணம் புரிந்துகொள் வதை அங்கீகரித்திருந்தாலும், அவ்வாசிரியர்கள் மணமாகாதவராய் இருக்கவேண்டியிருந்தது. பத்தொன்பதாம் நூற்றுண்டின் இறுதியில் கிளாட்ஸ்டன் (Gladstone) காலத்தில் சட்டம் இயற்றப்பட்ட வரை ஆக்ஸ்ஃபோர்டு, கேம்பிரிட்ஜ் ஆகிய சர்வகலாசாலைகளில் இருந்த ஆசிரியர்கள் மணந்துகொள்ளாமலே இருந்தனர். தினந் தோறும், கல்லூரியில் இருந்த அனைவரும் கல்லூரி ஆலயத்தில் பிரார்த்தனைக்குக் கூடவேண்டும் என்று கட்டாயப்படுத்தப் பட்டனர்.

அக் காலத்தில் பாட்டும் நாடகமும் மக்களின் வாழ்க்கையில் ஒரு முக்கிய இடம்பெற்றிருந்தன. பட்டப்படிப்பிற்குப் படித்து வந்த பலர், பாட்டிலும் நாடகத்திலும் ஊக்கம் காட்டினர். உதாரணமாக, கார்பஸ் (Corpus) கல்லூரியில் இருந்த கிட் மார்லோவும் (Kit Marlowe) கிரைஸ்ட் சர்ச் (Christ Church) கல்லூரியில் படித்து வந்த ஃபிலிப் சிட்னியும் (Philip Sydney) அவ்வாறு இருந்தனர். நாடகங்கள், மாணவர்களால் நடிக்கப்பட்டுவந்தன. சில நாடகங்கள் லத்தீன் மொழியில் நடத்தப்பட்டன. கி.பி. 1597-ல் கல்லூரி மாணவர்களால், பட்டணத்தவரை இழிவுபடுத்த நடித்த நாடகத்தைப்பற்றி, கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலையின் வரலாற்றில் ஃபுல்லர் (Fuller) கீழ்வருமாறு குறித்துள்ளார்:

‘ நகரத்தவர் தங்களை இழிவுபடுத்தினர் என்று நினைத்து, அம் மாணவர்கள் அவர்களைப் பழிவாங்க நிச்சயித்தனர். அதற்காக ஒரு நகைச்சுவை நாடகத்தைத் தயாரித்தனர். அதற்குக் கிளப் லா (Club law) என்று பெயர் கொடுத்தனர். கிளேர் ஹால் (Clare Hall) கூடத்தில் அந் நாடகம் நடத்தப்பட்டது. நாடகத்திற்கு நகரத் தலைவரையும் மற்றவரையும் தங்கள் பெண்டிருடன் வரும்படி அழைத்தனர். நகரத்தவரை மேடையின்முன் விட்டுவிட்டு அவரைச் சுற்றி மாணவர் இருந்தனர். நாடகத்திற்காக், நகரத்தவரிடமிருந்தே அவர்களின் ஆடைகளைக் கடன்வாங்கி வந்திருந்தனர். அதனுல் மாணவர்கள் மேடையின்மேல் முழுக்கமுழுக்க நகரத்தவரைப்போலவே காட்சியளித்தனர். நாடகத்தில் நகரத்தவரின் பழக்கவழக்கங்கள், அவர்கள் நடந்துகொண்டமுறை, அவர்கள் உபயோகித்த வார்த்தைகள், கேலிப்பேச்சுகள் ஆகியவற்றை ஏளனமானமுறையில் நடித்துக்காட்டினர், நகரத்தவரால் நாடகத்தைத் தொடர்ந்துபார்க்க மனமில்லை. வெளியே எழுந்து

போவதற்கு வழியும் இல்லாமல் மாணவர் சூழ்ந்துகொண்டிருந் தனர். அதனால் வேறு வழியின்றிக் கடைசிவரை நாடகத்தைப் பார்த்துவிட்டுச் சென்றனர்.'

நகர்சபை, தன் குறைகளைப் பிரிவி கவுன்சிலிடம் எடுத்துக் கூறியது. அரசியின் புத்திக் கூர்மையுள்ள ஆலோசகர்கள், நாடகத் தில் பிரதான பாத்திரம்தாங்கி நடித்தவர்களைத் தனிமையில் அழைத்துக் கண்டித்தனர். ஆனால், நகரத்தவர் மாணவர்களை மேலும் தண்டிக்கவேண்டும் என்று வற்புறுத்தினர். அதனால் அரசி யின் ஆலோசகர்கள் தாங்களே கேம்பிரிட்ஜிற்குவந்து, நாடகத்தை மறுமுறை நடத்தச்சொல்லிப் பார்த்துத் தண்டனையை நிச்சயிப்ப தாகக் கூறினர். இந்தப் பதில் நகரத்தவரை மேலும் வற்புறுத்தாமல் வாளாவிருக்கச் செய்தது.

மேற்குறிப்பிட்ட நிகழ்ச்சி நகரத்தவருக்கும், சர்வகலாசாலை மாணவருக்கும் இடையே வெகுகாலமாக இருந்துவந்த வெறுப்பை யும், அதேசமயம் அவரிடையே இருந்த நெருங்கிய தொடர்பையும் எடுத்துக்காட்டுகின்றது. எலிசபெத்தின் ஆட்சிக்காலத்தில் கேம்பிரிட்ஜில் வாழ்ந்துவந்தவரின் எண்ணிக்கை குறைவாக இருந்தது. அதனால் சர்வகலாசாலையிலும், நகரத்திலும் இருந்த முக்கியமானவர்கள் ஒருவரை ஒருவர் அறிந்திருந்தனர். கி.பி. 1586-ல் கேம்பிரிட்ஜின் ஜனத்தொகை 6500 ஆக இருந்தது. அதில் 1500 பேர் சர்வகலாசாலையைச் சேர்ந்தவராக இருந்தனர்.

காம் நதிக்கப்பால் இருந்த நிலங்களில் சில ஏக்கர்களை ஒவ் வொரு வியாபாரியும் பயிர்செய்து வந்தான். நகரத்தை அடுத்து இருந்த நாட்டுப்புறங்களில் வசித்தோர் சிறு நிலப்பரப்பைப் பயிர் செய்துவந்தனர். சாலையின் இரு பக்கங்களிலும் இருந்த கடை களும், பண்ணைவீடுகளும் களிமண்ணாலும், மரச் சட்டங்களாலும் கட்டப்பெற்றிருந்தன. அக் கட்டடங்களுக்குப்பின்னால் குறுக்கும் நெடுக்குமான குறுகிய பலவழிகளும் திறந்தவெளி முற்றங்களும் இருந்தன. இன்றும் செங்கற்களைக்கொண்டு சாலையைச்சார்ந்து கட்டப்பெற்ற முகப்புகளின்பின்னால் சிதைந்துபோன அவ் வழிகள், முற்றங்கள் ஆகியவற்றின் சின்னங்களைக் காணலாம். அத்தகைய நகரில்தான் ஹாப்சன் (Hobson) வசித்துவந்தார். கி.பி. 1568-ல் அவர் தந்தை ஒரு வண்டியையும் எட்டுக்குதிரைகளையும் விட்டுச் சென்றார். ஹாப்சன் பொருள்களை ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குக் கொண்டு செல்லும் தொழிலில் ஈடுபட்டிருந்தார். சிறிய அளவில் தம் தொழிலைத் தொடங்கிய அவர், குதிரைகளும், வண்டிகளும்கொண்ட ஒரு 'போக்குவரத்துச் சாதனத்தையே

ஏற்படுத்தினர். அவரது போக்குவரத்துச் சாதனம் கிழக்கு ஆங்கிலியா பிரதேசத்தில் பிரசித்தி பெற்றதாக விளங்கியது. அவரது பெயரில் ஆங்கிலமொழியில் ஒரு சொற்றொடரே உண்டாக்கப்பட்டது (Hobson's Choice). கேம்பிரிட்ஜ் நகரத்திற்குத் தண்ணீர் கொண்டுவரும் கால்வாய் அவரது பெயரால் அழைக்கப்படுகிறது. மில்டன் (Milton) இளைஞராக இருந்தபொழுது அவரைப்பற்றி இரண்டு பாடல்கள் எழுதியுள்ளார்.

கேம்பிரிட்ஜ், சர்வகலாசாலையின் இடமாக இருந்ததால் பெயர் பெற்று விளங்கியது. அங்கே, செப்டம்பர் மாதத்தில் நடத்தப்பட்ட சந்தையின் காரணமாகவும் அது பெயர் பெற்றிருந்தது. புதிய அங்காடித் தெருவிற்கும் காம் நதிக்குமிடையே இருந்த, அறுவடை செய்யப்பட்டிருந்த நிலத்தில் சந்தை நடத்தப்படும். சந்தை மூன்று வாரங்களுக்கு நடக்கும். இங்கிலாந்தின் வடக்கு, தெற்குப் பாகங்களில் இருந்து நில மார்க்கமாகவும், கடல், நதி ஆகியவற்றின் வழியாகவும் கொண்டுவரப்பட்ட பொருள்கள் சந்தையில் விற்கப்பட்டன.

சந்தையில் வரிசைவரிசையாகக் கடைகள் அமைக்கப்பட்டன. வடக்குப் பாகத்தைச் சேர்ந்தவர்கள் கம்பளியையும் கம்பளி ஆடைகளையும் விற்பனை செய்தனர். தென்பகுதியினரின் கடைகளில் ஹாப்ஸ் (Hops) என்றழைக்கப்பட்ட வாசனைப்பொருள் விற்கப்பட்டது. நெதர்லாந்து, பால்டிக் கடல்பிரதேசம் ஆகியவற்றில் இருந்தும் லண்டனில் இருந்தும் பெரிய வியாபாரிகள் சந்தைக்குத் தங்கள் பொருள்களைக் கொண்டுசென்று விற்றனர். ஆடை, கம்பளி, உப்பிடப்பட்ட மீன், உணவுதானியம் ஆகியவற்றில் பெருமளவில் வியாபாரம் செய்தனர். பொருள்களை ஊர் ஊராக எடுத்துச்சென்று விற்கும் வியாபாரிகள் இல்லாத அக் காலத்தில், அத்தகைய சந்தைகள் அவசியமாக விருந்தன. ஸ்டூர்பிரிட்ஜ் (Stourbridge) என்ற இடத்தில் நடத்தப்பட்ட சந்தை, இங்கிலாந்திலேயே பெரிய சந்தையாக விளங்கியது. எல்லாவிதமான பொருள்களும், அச் சந்தைகளில் மொத்தமாகவும் சில்லறையாகவும் விற்கப்பட்டன. மகிழ்ச்சியோடு சிக்கனமாக வாழ்க்கை நடத்திய குடும்பப் பெண்கள் வெகுதூரத்தில் இருந்தும் அச் சந்தைகளுக்கு வந்தனர். தங்களுக்குத் தேவைப்பட்ட பொருள்களை வாங்கிச் செல்வதற்காகவும், பலவித வேடிக்கைகளைக் காண்பதற்காகவும் அவர்கள் அங்குக் கூடினர். உழவர்களும், பெய்லிஃப் (bailiff) என்ற அதிகாரிகளும் அச் சந்தைக்குச் சென்றனர். ஸ்டூர்பிரிட்ஜில் நடத்தப்பட்ட சந்தை சர்வகலாசாலையின் மேற்பார்வையில் நடத்தப்பட்டது. சந்தையைச் சர்வகலாசாலைத் துணைவேந்தர் (Vice-Chancellor) ஊர்வலமாக வந்து திறந்துவைப்பார்.

நாட்டின் செல்வநிலை உயர்வதற்கு நல்ல மதிப்புள்ள நாணயம் தேவைப்பட்டது. எலிசபெத்தின் தந்தை நாணயத்தின் மதிப்பைக் குறைத்தார். அதன் காரணமாக ஆறும் எட்வர்ட், மேரி ஆகியோரின் ஆட்சிக்காலத்தில் பொருள்களின் விலை பன்மடங்கு அதிகரித்தது. தொழிலாளரின் கூலி அதிகரிக்காமல் அப்படியே இருந்தது. அதேபோல் குத்தகைப்பணமும் அதிகரிக்காமல் அப்படியே இருந்தது. அதனால் தொழிலாளரும், நிலத்தைக் குத்தகைக்கு விட்டவரும் விலைவாசிகளின் உயர்வைச் சமாளிக்க முடியாமல் அவதியுற்றனர். கி.பி. 1559-ல் மதப்பிரச்சினைக்கு ஒரு தீர்வு கண்டபின், எலிசபெத் நாணயத்தின் மதிப்பைக் குறைத்ததால் ஏற்பட்ட தொல்லைகளைத் தீர்க்க நிச்சயித்தார். கி.பி.1560-ல் மதிப்புக் குறைந்திருந்த நாணயங்களை அரசாங்க அதிகாரிகளிடம் கொடுத்துவிட்டுப் புதிய, மதிப்பு அதிகமாகவிருந்த நாணயத்தைப் பெற்றுக்கொள்ளும்படி கட்டளையிட்டார். மற்ற எல்லா விஷயங்களிலும் திறமைவாய்ந்த அரசர்கள்கூட நாணயச் சீர்திருத்த முயற்சியில் படுதோல்வியடைந்திருக்கின்றனர். ஆனால், எலிசபெத்தும், பிரிவி கவுன்சிலும் திறமையுடன் நாணயச் சீர்திருத்தத்தைச் செய்துமுடித்தனர். நாணயத்தின் மதிப்பை உயர்த்திய நாளில் இருந்து பொருள்களின் விலை மேலும் அதிகரிக்காமல், ஒரே நிலையில் இருக்கத் தலைப்பட்டன. எனினும், எலிசபெத்தின் ஆட்சிக்காலத்தில் பொருள்களின் விலைகள் சிறிது சிறிதாக உயர்ந்துகொண்டே போயின. முதலாம் ஜேம்ஸ், முதலாம் சார்லஸ் ஆகியோரின் ஆட்சிக்காலத்தில் விலைவாசிகள் விரைவாக அதிகரிக்கத் தலைப்பட்டன. அமெரிக்காவில் இருந்து தங்கமும் வெள்ளியும் கொண்டுவரப்பட்டதே அதற்குக் காரணமாகும். ஆனால், தொழிலாளிகளின்கூலி விலைவாசிகளுக்கு ஏற்றவாறு உயர்ந்துகொண்டே வந்தது. அதேபோல், குத்தகைக்காலம் முடிந்தவுடன், நிலக்கிழார்கள் திரும்பவும் குத்தகைக்கு விடும்போது அதிகக் குத்தகைப்பணம் கேட்கமுடிந்தது. விலைவாசிகள் திடீரென்று உயராமல், சிறிது சிறிதாக உயர்ந்துவந்ததால், வியாபாரமும் கைத்தொழிலும் பெருக வழியேற்பட்டது. புதிய பொருள்களைத் தயாரிக்கவும், அப் பொருள்களை விற்பனைசெய்யப் புதிய வியாபார ஸ்தலங்களைத் தேடிப்பிடிக்கவும் ஆங்கிலேயர் முற்பட்டனர்.

எலிசபெத்தின் ஆட்சியில், ஈயம், செம்பு, தகரம், இரும்பு, நிலக்கரி ஆகிய கனிப்பொருள்களில் சுரங்கவேலை மிகவும் பெருகியது. லேக் டிஸ்டிரிக்ட் (Lake District) என்றழைக்கப்பட்ட பிரதேசத்தில் ஜெர்மானியச் சுரங்கவேலை செய்பவர் செம்பைத் தோண்டியெடுத்தனர். மெண்டிப் மலைகளில் (Mendip hills)

மேலும் மேலும் அதிகமான ஈயம் கிடைத்தது. பிரிஸ்டல் (Bristol) நகர மக்கள் ஈயத்தை ஏற்றுமதி செய்துவந்தனர். கார்ன்வால் (Cornwall), டெவான் (Devon) ஆகியவிடங்களில் இருந்த எண்ணிறந்த தகரச்சுரங்கங்கள் செல்வத்தைப் பெருக்கிவந்தன. உப்பு தயாரிப்பதும் இரண்டுமடங்கு அதிகரித்தது. இங்கிலாந்தில் கிடைத்த இரும்பு, உலகத்திலேயே சிறந்ததாகக் கருதப்பட்டது. இங்கிலாந்தில் கிடைத்த இரும்பு உறுதியான போர்க்கருவிகள் தயாரிக்க உதவியது. உறுதியான இரும்பை நாட்டின் பாதுகாப்பிற்காகவே கடவுள் கொடுத்திருக்கிறார் என்று, கி.பி. 1601-ல் காமன்ஸ் சபையில் ஒருவர் கூறினார். கடற்படைக்குப் பீரங்கிகளும் வெடிமருந்தும் தேவைப்பட்டன. வெடிமருந்து செய்யத் தேவைப்பட்ட பொருள்கள் இங்கிலாந்திலேயே கிடைத்தன. ஸ்டூவர்ட் வம்சத்தினரின் ஆட்சிக்காலத்தில், கிழக்கிந்தியக் கம்பெனி (East India Company) கீழை நாடுகளில் இருந்து வெடிமருந்து தயாரிக்க வேண்டிய பொருள்களை அதிக அளவில் கொண்டுவந்தது.

கைத்தொழில்கள் நடத்துவதற்கு மரம் தேவைப்பட்டது. இரும்பு, ஈயம், கண்ணாடி முதலியவற்றில் பொருள்கள் செய்வதற்கு மிகுதியான கட்டையும், அடுப்புக்கரியும் எரிக்கப்பட்டன. 'காடுகள் அழிக்கப்பட்ட நிலையில் கண்ணாடித் தொழிற்சாலைகள் காடுகளுக்கு அருகில் அமைப்பதற்காக ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு மாற்றப்பட்டுவந்தன' என்று வூர்செஸ்டரைச் (Worcester) சார்ந்த ஒருவர், எலிசபெத்தின் ஆட்சிக்கால இறுதியில் குறிப்பிட்டார். உப்பு தயாரிப்பதற்காக, வூர்செஸ்டர்ஷீரில் இருந்த ஃபெகென்ஹாம் காடு (Feckenham Forest) அழிக்கப்பட்டது என்று காம்டன் குறித்துள்ளார். பல ஆயிரம் ஆண்டுகளாக, சஸ்ஸெக்சில் (Sussex) இருந்த வீல்டு (Weald), சர்ரே (Surrey), கென்ட் (Kent) ஆகிய இடங்களில் இருந்த காடுகளில் இருந்த மரத்தைவெட்டி அடுப்புக்கரி செய்துவந்தனர். அதனால் அங்கிருந்த காடுகளில் மரங்களின் எண்ணிக்கை மிகவும் குறைந்துவந்தது. இரும்புப் பொருள்கள் செய்வதற்கே அக் காடுகளில் கிடைத்த அடுப்புக்கரியைப் பயன்படுத்திவந்தனர். காடுகள் அழிந்ததற்கு மற்றொரு காரணமும் இருந்தது. கென்ட் பிரதேசத்தில் ஹாப்ஸ் செடி படர்வதற்காக மரங்களை வெட்டிக் கால்கள் நட்டனர். ஹாப்சை உலர்த்துவதற்காக, அடுப்பெரிக்கத் தேவைப்பட்ட அடுப்புக்கரியும் மரங்களை வெட்டித் தயாரிக்கப்பட்டது.

வீடுகளில் குளிர்காய்வதற்கும், உணவுப் பொருள்களைச் சமைப்பதற்கும் விறகு உபயோகிக்கப்பட்டது. நாட்டின் வருங்

காலம், கடல் வாணிபத்தைப் பொறுத்திருக்கின்றது என்பதை மக்கள் உணர்ந்திருந்தனர். கடல் வாணிபம் அதனுல் ஆண்டு தோறும் பெருகிவந்தது. ஆனுல், துறைமுகங்களுக்கு அருகில் இருந்த காடுகளைக் கப்பல்கட்டுவதற்குப் பயன்படுவதற்காக அழிக்கப்படாமல் காப்பது கடினமான காரியமாக இருந்தது. ஏற்கெனவே பெம்பிரோக் (Pembroke) ஷீர்வரை, கடலோரம் இருந்த காடுகள் அழிக்கப்பட்டு விளைநிலங்களாகவும் மேய்ச்சல் நிலங்களாகவும் மாற்றப்பட்டு வந்தன. எனினும், தொழிற்சாலை களில் அடுப்பெரிக்கவும், வீட்டில் அடுப்பெரிக்கவும், கப்பல் கட்டவும் தேவைப்பட்ட மரம் இங்கிலாந்தில் இருந்தது. மேலும், சில காலத்திற்கு அவை போதுமானதாக இருந்தது. ஆனுல், நாட்டில் இருந்த அத்தனை மரங்களையும் உபயோகிக்க முடியவில்லை. குதிரை வண்டிகளில் தொலைவில் இருந்த மரங்களைக்கொண்டு வருவது மிகவும் கடினமாகவும், அதிகப் பொருள் செலவழிப்பதாக வும் இருந்தது. தவிரவும் சாலைகள், மரத்திம்மைகளை ஏற்றிக் கொண்டு வண்டிகள்செல்ல ஏற்றனவாய் இருக்கவில்லை. கால் வாய்கள் அல்லது ஆறுகள்மூலம் கட்டைகளைக் கொண்டுவருவதே எளிதாகவும், சிக்கனமானதாகவும் இருந்தது. மரங்களைத் தொலை வில் இருந்து கொண்டுவருவது கடினமாக இருந்ததால், தொலைவில் இருந்த காடுகள் அழிக்கப்படாமல் இருந்தன. முக்கியமாக மேற்கே இருந்த மலைப்பிரதேசங்களில் காடுகள் அப்படி இருந்தன. அதைத் தான் இல் பென்செரோசோ (Il Penseroso) என்ற நூலில் அதன் ஆசிரியர் குறிப்பிடுகின்ருர்:

> ‘கூரிய கோடரியைக்கொண்டு, பெருமூச்சுடன் பைன் (pine), ஓக் (oak) மரங்கள் வெட்டப்படாததால், வனதேவதை கள் அக் காடுகளில் இருந்துகொண்டு அங்குச் செல்வோரை பயமுறுத்தி வந்தன.’

விறகு தீர்ந்துபோன வட்டாரங்களில் ஏழைகள் குடிசைகளில் குளிர்காய்வதற்கு வழியில்லாமல் குளிரில் வருந்தினர். அத்துடன் பலவகைப்பட்ட உணவு சமைப்பதற்கு வழியில்லாமல் ரொட்டி யையும் பாலாடைக்கட்டியையும் உண்டனர். அதேபோல் பொருள் களைத் தயார்செய்தோர், தங்கள் உற்பத்தியைப் பெருக்கமுடியாமல் தவித்தனர். ஆகையால் விறகு கிடைக்கும் இடங்களைத் தேடிச் சென்று அங்கே தொழிற்சாலைகள் அமைக்கப்பட்டன. இரும்புத் தொழிற்சாலைகள் கூடியசீக்கிரம் ஆர்டன் (Arden) காட்டில் அமைக்கப்பட்டு அங்குக் கிடைத்த விறகை அடுப்பெரிக்க உபயோ கப்படுத்தவிருந்தன.

விறகு கிடைப்பது அரிதாகவே, எலிசபெத்தின் ஆட்சிக்காலத்தில் வீடுகளிலும், தொழிற்கூடங்களிலும் நிலக்கரி உபயோகிக்கப்பட்டது. ஆனால், நிலக்கரிச் சுரங்கங்கள் இருந்த இடங்களுக்கு அருகில் இருந்தோரும், கால்வாய் அல்லது நதியின் கரையில் வாழ்ந்தோருமே நிலக்கரியைக்கொண்டு அடுப்பெரிக்க முடிந்தது. இதற்குக் காரணம் நல்ல போக்குவரத்துச் சாதனம் இல்லாமையேயாகும். நிலக்கரி சில இடங்களுக்குக் கடல்வழியே அனுப்பப்பட்டதால், கடல்நிலக்கரி (Sea-Coal) என்று பெயர் பெற்றது. இந்தக் கடல்நிலக்கரியை, லண்டன், தேம்ஸ் நதிப் பள்ளத்தாக்கு மற்றும் நதிக்கரை அல்லது கடலோரம் இருந்த மக்கள் உபயோகித்தனர். உதாரணமாக, டிரென்ட் (Trent), செவர்ன் (Severn), ஹம்பர் (Humber) ஆகிய நதிகளின் கரையில் இருந்தோர் நிலக்கரி உபயோகிக்க முடிந்தது. அதற்குக் காரணம், நிலக்கரி நதியின் மார்க்கமாகக் கொண்டுவரப்பட்டதேயாகும். விறகு எரிக்க ஏற்றவாறு அமைக்கப்பட்ட புகைபோக்கிகள், நிலக்கரி உபயோகத்தில் வந்ததால் மாற்றி அமைக்கவேண்டியிருந்தது. அப்படி மாற்றி அமைக்கும்வரை, நிலக்கரியின் புகை மக்களுக்குத் தொந்தரவாக இருந்தது. எலிசபெத்தின் ஆட்சிக் காலத்தில் புகைபோக்கிகளின் எண்ணிக்கை பெருகியதற்குக் காரணம், நிலக்கரியை மக்கள் அதிகமாகப் பயன்படுத்தியதேயாகும். நிலக்கரியை உபயோகிக்க இரும்பாலான அடுப்புகள் தேவைப்பட்டன. அவ் வடுப்புகள் சஸ்ஸெக்ஸ் (Sussex) இரும்புப் பட்டறைகளில் தயார் செய்யப்பட்டன. எலிசபெத்தின் ஆட்சிக் காலத்தில் நிலக்கரியைக்கொண்டு இரும்பை உருக்க முயற்சி செய்யப்பட்டது. பல தொழில்களில் நிலக்கரி உபயோகத்திற்கு வந்தது. ஆனால், நிலக்கரியின் விலை மலிவாக இருந்த இடங்களிலேயே அப்படிச் செய்யப்பட்டது. கி.பி. 1578-ல் சாராயம் காய்ச்சுபவர், சாயம் தோய்ப்பவர், தொப்பி தயாரிப்பவர் ஆகியோரும் மற்றத் தொழிலில் ஈடுபட்டிருந்தோரும், ஏற்கெனவே தங்கள் அடுப்புகளை மாற்றியமைத்து, அதில் கடல்நிலக்கரியைக் கொண்டு எரித்தனர் என்று கூறப்பட்டது.

லண்டன் மட்டுமன்றி, நெதர்லாந்தும் மற்ற அயல் நாடுகளும், டைன்சைடு (Tyneside), டர்ஹாம் (Durham) முதலிய பிரதேசங்களில் இருந்து நிலக்கரியைப் பெற்றன. வெளி நாடுகளுக்கு அனுப்பப்பட்ட நிலக்கரி அனேகமாக அயல்நாட்டுக் கலங்களில் கொண்டுசெல்லப்பட்டது. ஆனால், வெளிநாடுகளுக்கு அனுப்பப்பட்ட நிலக்கரியின் அளவைவிடப் பெரிய அளவில் லண்டனுக்கு அனுப்பப்பட்ட நிலக்கரியானது, டைன் நதிக்கரையைச் சார்ந்த நிலக்கரி வியாபாரிகளின் கலங்களிலேயே அனுப்பப்

பட்டது. போதுமான ரஸ்தாக்கள் இல்லாததால் ஒவ்வொருவரும் கனமான பொருள்களை முடிந்தவரை கடல் மார்க்கமாகவும், நதியின் மார்க்கமாகவும் அனுப்பிவந்தனர். எலிசபெத்தின் ஆட்சி இறுதியிலும், கடல் மார்க்கமாக நடத்தப்பட்ட உள்நாட்டு வியாபாரம், வெளிநாட்டு வியாபாரத்தைவிட நான்கு மடங்காக இருந்தது.

வடக்கே இருந்த துறைமுகங்களுக்கும், லண்டனுக்கும் இடையே வியாபாரநிமித்தம் செலுத்தப்பட்ட கலங்களும், கார்ன்வால் (Cornwall), டெவான் (Devon) ஆகியவிடங்களில் நடத்தப்பட்ட மீன்பிடிக்கும் தொழிலும் மாலுமிகளுக்கு வேலை கிடைக்க வழிசெய்தன. மீன்பிடிப்போர் மூடுபனியால் மறைந்துகிடக்கும் நியூஃபவுண்டுலாந்து (Newfoundland) கரையோரத்திற்கும் சென்று காட் (cod) மீன்பிடித்துவந்தனர். எலிசபெத்தின் ஆட்சிக்காலத்தில் ஹெர்ரிங் (herring) மீன்பிடிப்பது கிழக்குக் கரையோரம் முக்கியத் தொழிலாக இருந்தது. நார்விக் (Norwich) பிரதேசத்தின் கோடியில் இருந்த யார்மத் (Yarmouth) துறைமுகப்பட்டினத்தில், மைகல்மஸ் (Michaelmas) பண்டிகையின்போது நடத்தப்பட்ட சந்தைக்கு மக்கள் திரள்திரளாகப் போயினர் என்றும், அங்கே அளவிலடங்கா ஹெர்ரிங் மீன்களும், மற்றவகை மீன்களும் விற்கப்பட்டன என்றும் காம்டன் குறித்துள்ளார்.

மீனவர், அரசாங்கத்தின் அபிமானத்தைப் பெற்றிருந்தனர். வியாபாரக் கலங்களையும் போர்க் கலங்களையும் செலுத்துவதற்கு அவர்கள் அடிக்கடி உதவிவந்ததே அதற்குக் காரணமாகும். வாரத்தில் சில நாட்களில் மீன்உணவைச் சாப்பிடவேண்டும் என்ற சட்டங்கள் எலிசபெத்தின் ஆட்சிக்காலத்தில் இயற்றப்பட்டன. லென்ட் (Lent) உபவாசத்தின்போதும், வெள்ளிக்கிழமைகளிலும் மக்கள் எவரும் இறைச்சி உண்ணக்கூடாது என்று சட்டம் பிறப்பிக்கப்பட்டது. சில சமயங்களில் புதன் கிழமைகளிலும் இறைச்சி உண்பது தடைசெய்யப்பட்டது. இந்தச் சட்டங்கள் மதத்தின் காரணமாக அன்றி, அரசியல் காரணமாகவே இயற்றப்பட்டன என்று வெளிப்படையாகக் கூறப்பட்டது. கரையோரம் சீர்குலைந்திருந்த நகரங்களைச் சீர்பெருகச் செய்வதற்காகவும், மாட்டு, ஆட்டு இறைச்சி உண்பதைக் குறைப்பதற்காகவும், இச் சட்டங்கள் பிறப்பிக்கப்பட்டன. இறைச்சியை மக்களுக்கு அளிப்பதற்காக விளைநிலங்கள் மேய்ச்சல் நிலங்களாக மாற்றப்பட்டு வந்தன. அதைத் தடுப்பதற்காகவும் அவை இயற்றப்பட்டன. இச் சட்டங்களை மீறியவர் தண்டிக்கப்பட்டனர். கி.பி. 1563-ல் லண்டன் நகரப் பெண்மணி ஒருத்தி தன் கடையில், லென்ட்

உபவாசத்தின்போது இறைச்சி விற்றதற்காகக் கொடுமையாக தண்டிக்கப்பட்டாள் (Pilloried) என அறிகிறோம். கி.பி. 1571-ல் பல பாகங்களிலும் இச் சட்டங்கள் எப்படி அமல் செய்யப்பட்டன என்பதைப்பற்றி அமைதிக்காவலர்கள் அனுப்பிய அறிக்கைகளை ஆராய்வதில் பிரிவி கவுன்சில் ஈடுபட்டிருந்தது என்பதையும் அறிகிறோம். பலநூற்றுண்டுக்காலமாக மக்கள் உபவாசங்களை அனுசரிப்பதில் பழக்கப்பட்டிருந்ததால், அதைப் பயன்படுத்திக் கொண்டு மீன் உணவைச் சாப்பிடும் நாட்களை அதிகரிப்பது எளிதான காரியமாக இருந்தது. மலைப்பிரதேசங்களில் குறிப்பிட்ட நாட்களில் மீன் உணவையே சாப்பிட முடிந்திருக்காது என்று கூறலாம். ஏனென்றால், கடலில் இருந்து பிடிக்கப்பட்ட மீன்கள் அப் பிரதேசங்களுக்கு உடனடியாகக் கொண்டுசெல்ல முடியாதனவாய் இருந்தன. எனினும், உப்பிட்டு உலர்த்தப்பட்ட மீன், நாட்டின் உட் பகுதியில் இருந்த நகரங்களுக்கு அனுப்பப் பட்டுவந்தது. நார்த்தான்ட்ஸ் (Northants), பக்ஸ் (Bucks) ஆகிய பிரதேசங்களிலும், அச் சட்டங்கள், கி.பி. 1571-ல் அமைதிக் காவலர்களால் அமல் செய்யப்பட்டதைக் காண்கிறோம். மீன் உண்பதில் இருந்த கட்டாயம், இடைக்காலத்தில் இருந்து வந்த, மீன் பிடிக்கப்பட்டுவந்த குட்டைகளையும் குளங்களையும் தொடர்ந்து பாதுகாக்க உதவியது. அக் குட்டைகள் இருந்த இடங்களை இன்றும் பழைய பண்ணைவீடுகளின் அருகில் காணலாம்.

மேற்கூறிய முறைகளைக் கையாண்டு எலிசபெத்தின் ஆலோசகராக இருந்த செசில் (Cecil) என்பார், மீனவர்களின் நலனைக் காக்கவும், கடல் வாணிபத்தைக் காக்கவும் பாடுபட்டார். கடலிலே கலங்களைச் செலுத்தியவர், தரைப்படையிலும் சேர்ந்து நாட்டிற்குச் சேவைசெய்யக் கட்டாயப்படுத்தக்கூடாது என்று அவர் கட்டளையிட்டார். கடல்வாணிபச் சட்டங்களை (Navigation Laws) அமல் செய்தார். அதன்படி அயல்நாட்டுக் கலங்கள், இங்கிலாந்தின் வடக்குப் பகுதியில் இருந்து தென் பகுதிகளுக்குப் பொருள்கள் கொண்டுவருவதைத் தடுத்து நிறுத்தினர். ஆங்கிலேயரின் வியாபாரக் கப்பல்கள் ஏற்றுமதி செய்யப்பட்ட பொருள்கள் அனைத்தையும் கொண்டுசெல்லும் நிலையில் இருக்கவில்லை. ஆங்கிலேயர் தங்கள் கலங்களிலேயே ஏற்றுமதி செய்யப்பட்ட பொருள்களை வெளிநாடுகளுக்கு எடுத்துச்செல்லவேண்டும் என்பதை அறிவுறுத்தவே கடல்வாணிபச் சட்டங்கள் அமலுக்குக் கொண்டுவரப்பட்டன.

எலிசபெத்தின் ஆட்சிக்காலத்தில் செசிலும், பிரிவி கவுன்சிலும், பார்லிமெண்டின் ஒத்துழைப்புடன் பல விஷயங்களை,

நகராட்சிகளின் கட்டுப்பாட்டில் இருந்து அரசாங்கத்தின் கட்டுப் பாட்டிற்குக் கொணர்ந்தனர்.

இடைக்காலத்தில் ஒவ்வொரு நகரத்திலும், நகரசபை அல்லது தொழிற்சங்கம், தொழிலாளரின் கூலியையும், பொருள்களின் விலையையும் நிர்ணயித்ததுபோல், தலைமைத் தொழிலாளி, ஜர்னி மேன் (journeyman) என்று அழைக்கப்பட்ட கூலிக்கு வேலைசெய்த தொழிலாளி, தொழில் கற்றுவந்தவர் ஆகியோரிடையே இருந்த உறவையும் நிர்ணயித்தது. குறிப்பிட்ட இடத்தில் வியாபாரம் செய்ய வியாபார உரிமையையும் அது வியாபாரிகளுக்கு வழங்கி யது. மேலும், வியாபார விதிகளையும் அது நிச்சயித்தது. ஆனால், பதினான்காம் நூற்றாண்டிலே அரசாங்கம் இவ் விஷயங்களை, நகரசபை, தொழிற்சங்கம் ஆகியவற்றின் கைகளில் விட்டுவைக் காமல், தானே இவ் விஷயங்களின் கட்டுப்பாட்டை மேற்கொண் டது. மூன்றாம் எட்வர்ட், ஃபிரான்சிலும் நெதர்லாந்திலும் கையாண்ட வெளிநாட்டுக் கொள்கை, ஆங்கிலேயரின் வியா பாரத்தைப் பாதித்தது. அரசாங்கம் தானே கட்டுப்பாடுகளை மேற் கொள்வதற்கு ஒரு காரணமாய் இருந்தது. அத்துடன் தொழி லாளரின் சட்டம் (Statute of Labourers) நாடு முழுவதிலும், ஒரு தொழிலாளிக்கு அதிகப்படியான கூலி எவ்வளவு கொடுக்கலாம் என்பதை நிர்ணயிப்பதில் அடைந்த தோல்வியும் காரணமாய் இருந்தது.

எலிசபெத்தின் ஆட்சிக்காலத்தில் வட்டாரங்களில் இருந்த அமைதிக்காவலர்கள், அந்தந்த வட்டாரங்களில் தொழிலாளருக்குக் கொடுக்கக்கூடிய அதிகப்படியான கூலியையும், பொருள்களின் விலைகளையும் நிர்ணயித்தனர். அதனால் நாடுமுழுவதிலும் ஒரே அளவு கூலியும் விலையும் இருக்கவில்லை. வியாபாரமும் கைத் தொழிலும் நகரசபையின் கட்டுப்பாட்டில் இருந்துவிடுவிக்கப்பட்டு, அரசாங்கத்தின் கட்டுப்பாட்டின்கீழ்க் கொண்டுவரப்பட்டன. இந்த மாற்றத்திற்குப் பல காரணங்கள் இருந்தன. பல நகரங்கள் சீர்குலைந் திருந்ததும், தொழில்கள் நகரங்களில் இருந்து நாட்டுப்புறங்களுக்கு மாறியதும் ஒரு காரணமாகும். நாட்டுப்புறங்களில், நகரசபையைப் போல் எந்த நிறுவனமும் இல்லாததால், தொழில்களின் கட்டுப் பாட்டை அரசாங்கம் மேற்கொள்ளவேண்டிய அவசியம் ஏற் பட்டது. தொழிற்சங்கங்களும் சீர்குலைந்தது ஒரு காரணமாய் இருந்தது. ஆறாம் எட்வர்ட் தொழிற்சங்கங்களின் சொத்து களைப் பறிமுதல்செய்யச் சட்டம் இயற்றியது அவற்றை அடியோடு சீர்குலையச் செய்தது. அரசனின் அதிகாரம் அதிகரித்ததும், அரசாங்கத்தின் கட்டுப்பாடு நாட்டின் எல்லா பாகத்திலும் பரவக் காரணமாய் இருந்தது.

இவைகளுக்கும் மேலாக எலிசபெத்தின் ஆட்சியில் மக்கள் தாங்கள் அனைவரும் ஒரே நாட்டவர் என்று உணர்ந்ததும் ஒரு காரணமாகவிருந்தது. இனியும், தாம் வாழ்ந்துவந்த நகரம், தன்னைச்சார்ந்த தொழிற்சங்கம், தான் பயிர்செய்த நிலத்தின் உரிமையாளரான பிரபு ஆகியோரிடம் விசுவாசமுள்ளவராக இருப்பதைவிட, நாட்டிற்கும் அரசிக்கும் விசுவாசமுள்ளவராக இருப்பதே சிறந்தது என மக்கள் கருதத் தலைப்பட்டனர்.

இந்தச் சூழ்நிலையில் அரசாங்கம், தொழிலாளரின் கூலியையும் பொருள்களின் விலையையும் கட்டுப்படுத்துவதை மேற்கொண்டது. தொழில் கற்றுவந்தவர்கள் எத்தனைக்காலம் தொழில் கற்க வேண்டும் என்பனவற்றை நிச்சயிப்பதையும் வியாபாரம் செய்ய உரிமை வழங்குவதையும், வியாபாரம் செய்வதில் அனுசரிக்க வேண்டிய விதிகளை நிர்ணயிப்பதையும் அரசாங்கம் மேற்கொண்டது. இதன் காரணமாக ஒவ்வொரு நகரமும், தொழிற்சங்கமும் மற்றவைகளுடன் போட்டியிடுவது நின்றது. முதல் வைத்திருந்தோர் நாட்டின் எப்பாகத்திலாவது தொழிலைத் தொடங்கவும், வியாபாரம் செய்யவும் வசதியேற்பட்டது.

எலிசபெத்தின் ஆட்சிக்காலத்தில் நகரமும், தொழிற்சங்கமும் வெளிநாட்டவர்வந்து குடியேறுவதற்கு விதித்த கட்டுப்பாடுகளை அரசாங்கம் தளர்த்தியது. அனேகமாக வெளிநாட்டிலிருந்து வந்தவர் பிராடஸ்டென்ட் மத அகதியாகவிருந்தனர். அவர்கள் பொருள்கள் தயாரிக்கப்படும்முறையில் மாற்றங்களை ஏற்படுத்தினர். டியூடர் வம்சத்தினரின் காலத்தில் மக்கள் தொழில் புரிவதில் அதிகமான சுதந்திரத்தைப் பெற்றிருந்தனர்.

தொழில்புரிவதில் ஆங்கிலேயர் பெற்றிருந்த சுதந்திரம் பூரணமானதன்று. அரசாங்கம் ஒரு பொருளைத் தயார்செய்யவும், வியாபாரம் செய்யவும் உரிமையளித்தது. அதேசமயம், பொருள்களைத் தயாரித்தவரும், வியாபாரியும், பொதுநலனைக்கருதி சில விதிகளை அனுசரிக்க வேண்டியிருந்தது. தொழில் கற்றோரின் நிலை, கற்க வேண்டிய காலஅளவு முதலியவற்றை நாடுமுழுவதிலும் ஒரே வகையானதாக அரசாங்கம் அமைத்தது.

கி.பி. 1563-ல் தொழிலாளரின் சட்டம் (Statute of Artificers) தொழில்கற்கும் தொழிலாளர் ஒவ்வொருவரும் தலைமைத் தொழிலாளியின்கீழ் ஏழு ஆண்டுக்காலம் கற்கவேண்டும் என்று கட்டளையிட்டது. நகரத்தில் தொழில்கற்ருலும், நாட்டுப்புறத்தில் தொழில் கற்ருலும் அதே ஏழு ஆண்டுக்காலம் தொழில் கற்கவேண்டி

யிருந்தது. அந்த ஏழு ஆண்டுக்காலத்திற்குள் தலைமைத் தொழிலாளி, தன்னிடம் தொழில் கற்றோரைத் திறமையுள்ளவராக மாற்ற வேண்டும். அச் சட்டத்தின் நோக்கங்கள் என்னவென்றால், இளைஞர்கள் நல்ல திறமை அடையவேண்டும் என்பதும், அவர்கள் செய்யும் பொருள்கள் சிறந்ததாக இருக்கவேண்டும் என்பதுமாகும். இருபத்திமூன்று வயது ஆகும்வரை இளைஞர்கள் பொறுப்பற்றவராகவும், தமக்குத்தாமே எது நன்மைபயக்கும் என்பதை அறிந்துகொள்ள முடியாதவராயும் இருந்தனர் என்று கருதப்பட்டது. இருபத்துநான்கு வயதிற்குப்பிறகு இளைஞர்கள் மணந்துகொள்ளலாம். அத்துடன் தாமே தொழில் நடத்தலாம் ; அல்லது வேறு யாரிடமாவது கூலிக்கு வேலைசெய்யலாம்.

தொழில் பயின்றுவந்த இளைஞர்கள் திறமைசாலிகளாவது, அவரது தலைமைத் தொழிலாளியைப் பொறுத்திருந்தது. சில தலைமைத் தொழிலாளிகள், தொழில் கற்றுவந்தோரிடம் கடுமையாக நடந்துகொண்டனர். ஆலிவர் டிவிஸ்ட் (Oliver Twist) என்ற பெயர்கொண்ட நாவலில், மூன்றும் அத்தியாயத்தில் காண்பதுபோல் அமைதிக்காவலர்கள் தலையிட்டுத் தலைமைத் தொழிலாளிகளை நல்லமுறையில் தொழில்பயின்றோரை நடத்தச் செய்தனர். பொதுவாகச் சொல்வோமானால் தலைமைத் தொழிலாளி, தொழில் பயின்றுவந்தோர் ஆகியோரிடையே இருந்த உறவு நல்ல முறையில் இருந்துவந்தது. அத்துடன் சமுதாயத்திற்கு நன்மை பயப்பதாயும் இருந்தது. தொழில் கற்றுவந்தபோதுதான் ஆங்கிலேயர் வாழ்க்கையில் எப்படி வாழவேண்டும் என்பதையும் கற்றுக்கொண்டனர். பள்ளிப் படிப்பு முடித்துவிட்ட இளைஞர்கள் வாழ்க்கையில் வாழ அறிந்துகொள்ளவும், தொழிற்கல்வி பெறவும், தலைமைத் தொழிலாளியிடம் தொழில் பயின்றது உதவியாக இருந்தது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் தொழிற்புரட்சி ஏற்படும் வரை, இம் முறையான பயிற்சி நாட்டில் இருந்துவந்தது. தொழிற்புரட்சியின் காரணமாக, அரசாங்கம் தொழில் நடத்துவதிலும், வியாபாரத்திலும் தலையிடக்கூடாது என்ற கருத்து (laissez-faire) நிலவத் தொடங்கியது. அதனால் இளைஞர்கள் ஒழுங்கானமுறையில் பயிற்சிபெறுவது முடியாமற்போயிற்று. இந் நிலை இன்றும் சரி செய்யப்படவில்லை.

எலிசபெத்தின் ஆட்சிக்காலத்தில் ஆங்கிலேயர் கடல்களைக் கடந்து வெகுதூரம் சென்றது ஒரு மிகவும் முக்கியமான நிகழ்ச்சியாகும். ஆங்கிலேய வியாபாரிகள் தொலைவில் புதிய வியாபாரத் தலங்களைத் தேடிக்கொண்டனர். அப்படி அவர்கள் தேடிப் பிடித்த வியாபாரத்தலங்களில் சில இங்கிலாந்து இருந்தவிடத்

திற்கு மறுபக்கத்தில் இருந்தன. ஆங்கிலேயர் அதுவரை நெதர் லாந்துடனும் ஃபிரான்சுடனுமே முக்கியமாக வியாபாரம் செய்து வந்தனர். புதிய வியாபாரஸ்தலங்கள் கண்டுபிடிக்கப்பட்டபின் மக்களின் மனநிலையில் ஒரு மாற்றம் தோன்றியது. அரச அவை யிலும், நகரிலும், பார்லிமெண்ட்டிலும், பண்ணைவீட்டிலும், தொழிற் சாலையிலும், பயிர்செய்யப்பட்ட நிலத்திலும் கடலுக்கப்பால் இருந்த நாடுகளைப்பற்றியே பேசப்பட்டது. டிரேக் (Drake), ஃப்ரோபிஷர் (Frobisher), ராலே (Raleigh) முதலியவர்களைப்பற்றியும், புதிய நாடுகளைக் கண்டுபிடிப்பதில் இருந்த உற்சாகம், லாபம் ஆகியவற் றைப்பற்றியும், நாட்டின் பாதுகாப்பிற்கும், செல்வநிலைக்கும் கடல் ஆதிக்கம் அவசியம் என்பதைப்பற்றியும் மக்கள் பேசிக்கொண் னர். புதிய நாடுகளில் குடியேறுவதால் தனிப்பட்டோருக்கு ஏற் படக்கூடிய நன்மைகளையும், அதனுல் நாட்டின் பலம் அதிகரிக்கக் கூடும் என்பதையும் மக்கள் விவாதித்தனர். இவற்றின்முன் கலேயை (Calais) இழந்ததை ஆங்கிலேயர் ஒரு பொருட்டாக மதிக்கவில்லை.

ஆங்கிலேயர் புதியனவற்றை எதிர்நோக்கி நின்றனர். ஷேக்ஸ்பியர் வாழ்ந்தகாலத்தில், தியாகிகளின் வாழ்க்கையைச் சித்திரித்த ஃபாக்ஸ் (Fox) என்ற எழுத்தாளரைத்தவிர, வேறு ஒருவர் மக்களின் சிந்தனையைத் தூண்டிவிட்டார் என்றால், அவர் ஹாக்லூட் (Hakluyt) என்பாராகும். அவர் ஆங்கிலேயரின் கடல் யாத்திரைகளைப்பற்றியும், அவர் கண்டுபிடித்த நாடுகளைப்பற்றியும் எழுதினர் ('The Principal Navigations, Voyages and discoveries of the English Nation'.) ஆர்மடா படையெடுப்பு நடந்து ஓர் ஆண்டிற்குப்பிறகு அந் நூல் வெளியிடப்பட்டது. பத்து ஆண்டு களுக்குப்பின்னர், அந் நூல் மூன்றுதொகுதிகளாக வெளியிடப் பட்டது. ஹாக்லூட் ஆங்கிலேய மாலுமிகளின் துணிகரச் செயல் களை விளக்கியதன்மூலம், துணிகர உள்ளம்படைத்த இளைஞர், அறிஞர், அரசியல்வாதிகள், வியாபாரிகள் ஆகியோரின் கவனத் தைப் புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட நாடுகளின்பால் திருப்பினர். மலைப்பிரதேசங்களில் வாழ்ந்துவந்த ஸ்குவீர் வகுப்பினரும், குடி யானவர்களும், புதிய நாடுகளுக்குச்சென்றால் அளவில்லாச் செழிப் பான நிலங்களைப் பயிர்செய்து செல்வராகலாம் என்று மனக் கோட்டை கட்டத் தொடங்கினர்.

ஹம்ப்ரி கில்பர்ட் (Humphrey Gilbert), நியூஃபவுண்டுலாந் திலும் ராலே வெர்ஜினியாவிலும் (Virginia) ஆங்கிலேயரைக் குடி யேறச் செய்ய முயன்றாலும், எலிசபெத்தின் ஆட்சிக்காலத்தில், ஆங்கிலேயர் எங்கும் குடியேறவில்லை. வட அமெரிக்காவின் மித

சீதோஷ்ண நிலை, அங்கே குடியேற்றங்களை ஏற்படுத்தலாம் என்று அரசாங்கத்தை நினைக்கத் தூண்டியது. கி.பி. 1584-ல் மேற்கே இருந்த நாடுகளில் குடியேறுவதைப்பற்றி எழுதி, ஹாக்லூட் அரசியின் அபிமானத்தைப் பெற்றார். இதற்கிடையில் ஆங்கிலேயர் அட்லாண்டிக் மகா சமுத்திரத்தில் அடைந்த வெற்றியும், கண்டுபிடித்தவைகளும் அடுத்த தலைமுறைக்காலத்தில் ஆங்கிலேயர் குடியேறுவதற்கு வழிசெய்து கொடுத்தன.

ஆங்கிலேயர் ஸ்பெயினுடன் நடத்திய போரில் கண்ட வெற்றி, வருங்காலத்தில் ஆங்கிலேயர் பல துறைகளில் முன்னேறுவதற்குக் காரணமாய் இருந்தது. அலெக்சாண்டர் (Alexander), பிசாரோ (Pizarro), நெப்போலியன் (Napoleon) ஆகியோரின் தலைமையின் கீழ் அந் நாட்டவர் பிற நாடுகளைப் பிடித்ததை, ஆங்கிலேயர், ஸ்பெயின் நாட்டவரை முரியடித்து வெற்றிகண்டதுடன் ஒப்பிட்டுக் கூறமுடியாது. எலிசபெத், மேற்குறிப்பிட்டவர்களைப்போலவும், தன் முன்னோர்களில் ஒருவரான ஐந்தாம் ஹென்றியைப் போலவும் பிறநாடுகளின்மேல் போர்தொடுத்து வெற்றிகாணும் திறமையுடையவராய் இருக்கவில்லை, நாடக மேடைகளில் அஜின் கோர்ட் என்றவிடத்தில் தாங்கள் அடைந்த வெற்றியைப்பற்றி ஞாபக மூட்டப்பட்டாலும், ஆங்கிலேயர் திரும்பவும் ஐரோப்பாக் கண்டத்தில் போர்புரிந்து நாடுகளைப் பிடிக்கவோ அல்லது ஸ்பெயின் தமது என்று கூறிக்கொண்ட அமெரிக்காவில் தங்களுக்கு இடம்பெறவோ நினைக்கவில்லை. ஆங்கிலேயர் ஸ்பெயின் கப்பற்படையை முரியடித்து வெற்றிகண்டது. ஆங்கிலேயரின் கப்பல் செலுத்தும் திறமையையே எடுத்துக்காட்டுகின்றது. தனிப்பட்ட ஆங்கிலேய மாலுமிகள் அரசியுடன் ஒத்துழைத்தது அவ் வெற்றிக்குக் காரணமாய் இருந்தது. சீசரைப்போல் (Caesars) பல நாடுகளை வென்று ஒரு சாம்ராஜ்யத்தை ஏற்படுத்துவது டிரேக்கின் எண்ணமன்று. புதிய கண்டத்திலும், பழைய கண்டத்திலும் ஸ்பெயினுக்குச் சொந்தமான நாடுகளில் கொஞ்சமேனும் கைப்பற்ற அவர் நினைக்கவில்லை. அவருடைய எண்ணமெல்லாம் கொள்ளையடிப்பதிலும், வியாபாரம் செய்வதிலும், தன்னிஷ்டம்போல் கடல்களில் கலங்களைச்செலுத்தும் உரிமையை உடையவராய் இருப்பதிலுமே இருந்தது. மேற்கிந்தியர் திரிந்துவந்த ஐரோப்பியர் எவராலும் பிடிக்கப்படாத நாடுகளில், ஆங்கிலேயரைக் குடியேறச் செய்வதைத் தனது கடைசி காரியமாக நினைத்தார். எலிசபெத்தின் குடிமக்கள் போரில் வெற்றிகாண்பதில் ஊக்கம் காட்டியிருந்தால் அவர்கள் வருங்காலத்தில் வடஅமெரிக்காவில் குடியேறுவதற்குப் பதிலாக, ஸ்பெயினுக்குச் சொந்தமான தென்அமெரிக்க உஷ்ணப் பிரதேசங்களைப் பிடிப்பதில் தங்கள் ஊக்கத்தைச் செலவிட்டிருப்பர்.

ஸ்பெயின் இங்கிலாந்தின்மேல் படையெடுக்க அனுப்பிவைத்த கப்பற்படையான ஆர்மடா, பெரியசேனை ஒன்றைத் தாங்கிவந்தது. அதேபோல் ஆங்கிலேயரின் கப்பற்படையும் ஒரு பெருத்த சேனையைத் தாங்கிச்சென்று ஆர்மடாவை முறியடித்திருந்தாலும், ஸ்பெயினுக்குச் சொந்தமான குடியேற்ற நாடுகளைப் படைவலி கொண்டு ஆங்கிலேயர் தங்கள் ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டுவந்திருந்தாலும், இன்று நாம் காணும் அமெரிக்க ஐக்கிய நாடுகள் (U.S.A.), கானடா (Canada), ஆஸ்திரேலியா ஆகிய நாடுகள் தோன்றியிருக்காது. அத்துடன் ஆங்கிலேயர் ஒரு பெரும் படையைக்கொண்டு போர்களில் வெற்றிபெற்றிருந்தால், ஆங்கிலேயர் ஒரு பெரிய படையை வைத்திருப்பதிலேயும், அரசனின் அதிகாரத்தைப் பலப்படுத்துவதிலும் தங்கள் கவனத்தைச் செலவிட்டிருப்பர்.[1]

எலிசபெத்தின் ஆட்சிக்காலத்தில் ஆங்கிலேயர் கொண்டிருந்த கடல் ஆதிக்கம், ஆங்கிலேயரைச் சுதந்திரத்தைப் போற்றுபவராக மாற்றியது. அரசன் கடற்படையைக்கொண்டு உள்நாட்டில் மக்களை ஒடுக்கி ஆளமுடியாதென்பது அனைவரும் அறிந்ததே. இங்கிலாந்தில் அரசன் படைஒன்றை வைத்திருக்கவில்லை. முதலாம் சார்லசின் காலத்தில் நடந்த உள்நாட்டுப் போரில் (Civil War) அரசனின் கப்பற்படை, அரசனோடு சேராமல், பார்லிமெண்டுடன் சேர்ந்துகொண்டது. ஆங்கிலேயரின் கடலாதிக்கத்திற்குத் தனிமனிதரின் துணிகரமும், முயற்சியும் காரணமாயிருந்தன. அமெரிக்காவை அடுத்திருந்தகடல்களில் டிரேக்(Drake), ஹாக்கின்ஸ் (Hawkins) முதலியோர் தங்கள் இஷ்டம்போல் கலங்களைச் செலுத்திவந்தனர். லண்டனில் பல வர்த்தகக் குழுக்கள் ஸ்தாபிக்கப்பட்டுத் தொலைவிலிருந்த நாடுகளுடன் வியாபாரம் செய்ய முயலப்பட்டது. இவை ஆங்கிலேயரிடையே, பிறர் உதவியை எதிர்பார்க்காத தன்மையையும், தங்களைத் தாங்களே ஆண்டுகொள்ள விரும்பும் குணத்தையும் ஏற்படுத்தின.

நகரங்களில் தோன்றிய வர்த்தகக் குழுக்களும், போர்புரிவதில் தேர்ந்த மாலுமிகளும், நாட்டில் மிக்க மதிப்புடையவராக மாறினர். டிரேக்கும், அவருடைய தோழர்களும், அவரைப்போன்ற துணிகர

[1] கி. பி. 1759-ல் ஆங்கிலேயர் படைவலியால்தான் ஃபிரெஞ்சுக்காரர்களை முறியடித்து ஃபிரெஞ்சு கானடா (French Canada) வைக் கைப்பற்றினர். ஆனால், அதற்குள் ஆங்கிலேயர், தனிமனிதரின் உரிமைகளை நாட்டிலும், வெளியிலும் போற்றுபவராக மாறிவிட்டிருந்தனர். எலிசபெத்தின் ஆட்சிக்காலத்திலும், ஸ்டுவர்ட் வம்சத்தினரின் ஆட்சிக்காலத்திலும், அரசியல் அமைப்பும், சமுதாயமும் மாற்றத்தை ஏற்கக்கூடியவையாக இருந்ததால், ஆங்கிலேயர் உரிமையைப் போற்றுபவராகவோ அல்லது உரிமைக்காகப் போராடுவதை விட்டுவிட்டவராகவோ மாறியிருக்கக்கூடும்.

மாலுமிகளும், நாட்டின் தலைசிறந்த வீரர்களாகக் கருதப்பட்டனர். இந்த வீரர்களும், அவர்களுடன் சேர்ந்த வியாபாரிகளும் பிராடஸ்டெண்ட் மதத்தைச் சார்ந்தவராக இருந்தனர். இவர்கள் ஸ்பெயினுக்குச் சொந்தமான கப்பல்களைக் கொள்ளையிடும்போது, ஸ்பெயின் நாட்டவரின் கைகளில் சிக்கினால், இன்குவிசிஷனின் (Inquisition) கட்டளைப்படி வதைத்துக் கொல்லப்பட்டனர். ஆனால், ஆங்கிலேயக் கொள்ளைக்காரருடன், ஃபிரஞ்சு நாட்டில் ஹுக்நாட் (Huquenot) என்று அழைக்கப்பட்ட பிராடஸ்டெண்டுகளும், கடல் பிச்சைக்காரர்கள் (Sea-Beggars)என்று அழைக்கப்பட்ட டச்சு பிராடஸ்டெண்டுகளும் சேர்ந்துகொண்டனர். இந்த நட்பு ஐரோப்பிய நாடுகளான, இங்கிலாந்து, ஹாலந்து ஆகியவற்றை ஸ்பெயின் நாட்டு அரசன் பிலிப்பின் (Philip) சர்வாதிகாரத்தில் இருந்து காத்தது. ஆங்கிலேயரிடையேயும். டச்சு. ஃபிரஞ்சுக்காரர்களிடையேயும், பிராடஸ்டெண்ட் மதம், ஸ்பெயின் நாட்டவரை எதிர்க்கும் உணர்ச்சியை ஏற்படுத்தியதே, அவர்கள் பிலிப்பிடமிருந்து தப்பியதற்கு ஒரு காரணமாக இருந்தது. ஸ்பெயினைக் கடலிலே தோற்கடித்த மாலுமிகள் எவரையும் மதிக்காதவர். அவர்கள் தங்கள் தலைவருக்கு அடங்கிநடந்தனர். அவரிடம் விசுவாசமுள்ளவராகவும் நடந்துகொண்டனர். அரசியைத் தங்கள் எல்லாரின் தலைவி என்று அவர்கள் கருதினர். அவர்கள் தங்கள் உயிருக்கஞ்சாமல் கடல்மேல் சென்றனர். கடற்போர், கப்பல் உடைதல், கடல்விபத்து ஆகியவற்றில் அவர்கள் இறக்கக்கூடும். அக் காலக் கப்பல்களில் போதுமான உணவுப்பொருள்கள் இருக்கவில்லை. கிடைத்த உணவும் சிலசமயம் உண்ண முடியாததாக இருந்தது. கப்பல்கள் சுகாதாரமற்றவையாய் இருந்ததால், தொத்து வியாதிகள் ஏற்படக்கூடியவையாய் இருந்தன. இத்தனை அபாயங்களுக்கும் அஞ்சாமல் மாலுமிகள் கடலிலே தொலைதூரம் சென்று வந்தனர்.

டியூடர் வம்சத்தினரின் காலத்தில் ஆங்கிலேயர் தாங்கள் உபயோகித்துவந்த போர்க்கருவிகளை மாற்றிக்கொண்டனர். நீண்ட வில் உபயோகிப்பதை ஆங்கிலேயர் விட்டுவிட்டனர். அதற்குப் பதிலாக பீரங்கிகள் ஒரு பக்கத்தில் வரிசையாக அமைக்கப்பெற்ற கலங்களை உபயோகிக்கத் தலைப்பட்டனர். நீண்ட வில்லை ஆங்கிலேயர் உபயோகித்துவந்தபோது, ஐரோப்பாவில் இருந்த போர் வீரர் அனைவரையும் விடப் போர்வன்மையில் தேர்ந்தவராக இருந்தனர். அத் திறமை அவர்களை நூறு ஆண்டுக்காலத்திற்கு ஃபிரான்சுடன் போர்புரியத் தூண்டியது. பீரங்கிகளைத் தாங்கிய கலங்கள் இங்கிலாந்தின் மேன்மைக்கு வழிகாட்டின. புதிய நாடுகளை, இங்கிலாந்திற்கு அதனால் தேடிக்கொடுக்க முடிந்தது. பீரங்கிகளை

வரிசையாக ஒரு பக்கத்தில் அமைக்கப்பட்ட கலங்கள் போர் முறையையே முற்றிலும் மாற்றியமைத்தன. அதுவரை போர்வீரர்கள் தங்கள் கலங்களை எதிரியின் கலங்களுக்கு அருகே ஓட்டிச்சென்று, எதிரியின் கலத்தில் ஏறித் தரையில் போரிட்டதுபோல் கலத்தின் தளத்திலே போரிட்டு எதிரியை முறியடிப்பர். ஆனால், பீரங்கிகளைத் தாங்கிய கலங்களை உபயோகித்தபோது, மாலுமிகள் பீரங்கிகள் இருந்த தங்கள் கலங்களின் பக்கங்கள் எதிரியின் கலங்களை நோக்கும்வண்ணம் திருப்பிச் சுட்டனர். அதுவரை இருந்தது போல், கலங்கள் இரு படையினரும் போரிடும் தளங்களாக இருக்கவில்லை. அதற்குமாறாகப் பீரங்கிகளைத் தாங்கிச் செல்பவையாக மாறின.

இந்த மாறுதலை, ஐரோப்பாவில் இருந்த மற்ற நாட்டவரைவிட, ஆங்கிலேயர் விரைவில் புரிந்துகொண்டு நன்கு பயன்படுத்தினர். ஸ்பெயின் நாட்டவர் ஒருகலம், எதிரியின் கலத்தினருகே சென்று அதை நகரவிடாமல் செய்து, போர்வீரர்களை அதனுள் அனுப்பிப் போர்புரியும் மத்தியதரைக்கடல் பிரதேசப் போர்முறையைக் கடைப்பிடித்து வந்தனர். கி.பி. 1571-ல் ஸ்பெயின் நாட்டவர், லெபான்டோ(Lepanto)என்ற இடத்தில் துருக்கியக் கப்பற்படையை முறியடித்தனர். அந்தக் கடற்போரில், பழங்காலத்தில் கிரேக்கர்கள், சலாமிஸ் (Salamis) என்ற இடத்தில் பாரசீகரை முறியடித்தபோது, உபயோகித்த முறையை ஒத்த முறையைக் கையாண்டே, ஸ்பெயின் நாட்டவர் வெற்றிபெற்றனர். ஸ்பெயின் நாட்டு அரசரான பிலிப் இங்கிலாந்தின்மீது படையெடுக்க எண்ணியபோது, அட்லான்டிக் மகாசமுத்திரத்தில் செலுத்தக்கூடிய கலங்களைக்கொண்ட கப்பற்படையைத் தயார் செய்தார். அப்படியிருந்தும், ஸ்பெயின் நாட்டவர் பழங்காலப் போர்முறையை உபயோகித்து வந்ததால், பயனடைய முடியவில்லை. பிலிப் அனுப்பிவைத்த ஆர்மடா என்ற பெயர்பெற்ற கப்பற்படையைக் கலங்களில் இருந்த தரைப்படை என்று குறிப்பிடலாம். கலங்களில் இருந்த போர்வீரர்கள் எண்ணிக்கையில் மாலுமிகளைவிட அதிகமாக இருந்தனர். அப் போர்வீரர்கள், மாலுமிகளைக் கேவலமாக நடத்தினர்.

இதற்குமாறாக, ஆங்கிலேயரின் கடற்படைக்குத் தலைமை தாங்கிய ஹோவர்டு (Howard), ஃப்ரோபிஷர் (Frobisher), ஹாக்கின்ஸ் (Hawkins), டிரேக் (Drake) முதலானோர் சிறந்த மாலுமிகளாவர். அத்துடன் கலங்களில் இருந்த அத்தனை ஆங்கிலேயரும் அவர்களுக்கு அடங்கிநடந்தனர். கலங்களில் போர்வீரர் ஒருசிலரே இருந்தனர். அவர்கள் தங்களுக்கு இடப்பட்ட

வேலையை செய்யக் கடமைப்பட்டவராய் இருந்தனர். டிரேக் உலகத்தைச் சுற்றிவந்தபோது (கி.பி. 1577-1580) தம்முடன் வந்த பிரபுக்களையும் மற்ற மாலுமிகள் செய்த வேலைகளைச் செய்ய வைத்தார். இக் கட்டுப்பாடு கலங்களில் இருந்த அனைவரும் ஒருவருக்கொருவர் சமம் என்ற எண்ணத்தை வளர்த்தது. ஆனால், ஸ்பெயின் நாட்டுக் கலங்களில் இருந்த உயர்ந்த அதிகாரி, அபாயத்தில் இருந்து கலங்களைக் காப்பாற்றவேண்டிய தருணத்திலும் தமது அந்தஸ்திற்குக் கீழ்ப்பட்ட வேலைகளைச் செய்ய மாட்டார். இரு நாட்டுச் சமுதாயநிலையில் இருந்த வேறுபாடு போரின் முடிவை நிச்சயிக்கக்கூடியதாய் இருந்தது.[1]

ஆர்மடா படையெடுப்பிற்கு இருபது ஆண்டுகளுக்குமுன்பே சமுத்திரங்களில் கலங்களைச் செலுத்தவும், பீரங்கிதாங்கிய கலங்களைக்கொண்டு எதிரியின் கலங்களைத் தாக்கவும், ஆங்கிலேயர் நன்கு பழக்கப்பட்டிருந்தனர். இப் பழக்கம் ஆங்கிலேயருக்குப் பலவிதங்களில் ஏற்பட்டிருந்தது. சிலர் அரசனின் கப்பற்படையில் பணிபுரிந்து அப் பழக்கத்தைக் கற்றனர். சிலர் வியாபார நிமித்தம் தொலைவான நாடுகளுக்குச்சென்று சமுத்திரங்களில் கலங்களைச் செலுத்தும் பயிற்சிபெற்றனர். மற்றும் சிலர் புதிய நாடுகளைக் கண்டுபிடிக்கும் ஆர்வத்தில் தொலைதூரம் சென்று கலங்களைச் செலுத்துவதில் தேர்ச்சி பெற்றிருந்தனர். வியாபாரக் கப்பல்கள் கடலில் செல்லும்போது, மற்ற நாட்டுக் கப்பல்களின் தாக்குதலில் இருந்து காத்துக்கொள்ள வேண்டியிருந்தது. அதனால் வியாபாரக் கப்பல்களும் அதன் மாலுமிகளும் கடற்போரில் பயிற்சி பெற்றிருந்தனர். அத்தகைய வியாபாரக் கப்பல்கள், ஆர்மடாவை எதிர்த்துப் போர்புரிந்ததில் பெரும்பாகத்தைத் தாங்கின. எனினும், அரசியின் போர்ப் பயிற்சிபெற்ற, போருக்கென்றே இருந்த கப்பல்கள் இருந்திராவிட்டால், ஆங்கிலேயருக்கு வெற்றி கிட்டியிராது.

எட்டாம் ஹென்றி, அரசரின் கடற்படையைத் தோற்றுவித்தார். ஆனால், ஆறும் எட்வர்ட், மேரி ஆகியோரின் ஆட்சிக் காலத்தில் அக் கடற்படை நன்கு கவனிக்கப்படாமையால் சீர்குலைந்தது. எலிசபெத்தின் ஆட்சியில் கடற்படை திரும்பவும் நல்ல நிலையை அடைந்தது. எனினும், அவரது ஆட்சியின் முதல்

[1] ஹாக்கின்சும் அவருக்குப்பின்னால் வந்தவரும் ஆஃப்ரிக்காக் கண்டத்தில் இருந்த நீக்கிரோக்களை, அமெரிக்காவில் இருந்த ஸ்பெயின் நாட்டுக் குடியேற்றங்களில் அடிமைகளாக விற்றுவந்தனர். ஆனால், ஆங்கிலேய மாலுமிகள் அடிமைகளாக இருக்கவில்லை; அவர்கள் பூரண சுதந்திரம் உடையவராக இருந்தனர். ஃபிரான்சு, ஸ்பெயின் ஆகிய நாட்டவர், தங்கள் கலங்களைச் செலுத்த அடிமைகளை உபயோகித்ததை ஆங்கிலேயர் வெறுத்தனர். ஆங்கிலேயர் கலங்களைச்செலுத்த அடிமைகளை உபயோகிப்பது சரியன்று என்று நினைத்தனர்.

இருபது ஆண்டுக் காலத்தில் விரைவாகக் கப்பல்துறைகள் சீர் செய்யப்படவில்லை. எலிசபெத் பட்டத்திற்கு வந்தபோது அரசாங் கத்தின் பொக்கிஷம் காலியாக இருந்தது. எலிசபெத் அதிகமான வரியை மக்களிடமிருந்து வசூலிக்கத் தைரியமில்லாதிருந்தார். அவரது அரசாட்சி நிலைக்க எலிசபெத் சிக்கனத்தைக் கடைப்பிடித் தார். அவர் சிக்கனமாகக் கடற்படைக்கென்று சேர்த்த செல்வத் தில் பெரும்பகுதி நன்கு செலவிடப்படாமல், வீணாக்கப்பட்டது. செசிலும், பிரிவி கவுன்சிலில் அங்கம் வகித்தோரும் பணம் செல விடுவதில் கவனமாகத்தான் இருந்தனர். ஆனால், அவர்களால் கப்பல்துறைகளில் இருந்த ஊழல்களைக் கண்டுபிடித்து நீக்க முடிய வில்லை. கி.பி. 1578-ல் ஜான் ஹாக்கின்சைக் (John Hawkins) கப்பல் கட்டுவதையும், கப்பல்களை நல்ல நிலையில் வைத்திருப் பதையும் கவனிக்க நியமித்தார். ஆர்மடா படையெடுப்பு நடப் பதற்குப் பத்து ஆண்டுகளுக்குமுன்பு ஹாக்கின்ஸ் கப்பல்துறை களில் தம் முழுத்திறமையைக் காட்டிக் கப்பற்படையின் பலத்தைப் பெருக்கினர். அவரது சேவை, டிரேக் பசிபிக், அட்லாண்டிக் சமுத்திரங்களில் நாட்டிற்காக என்ன செய்தாரோ அதை ஒத்திருந்தது.

முடிவில் அரசியால் கொடுக்கப்பட்ட தொகை நல்லமுறையில் கப்பல்கட்டுவதற்குப் பயன்படுத்தப்பட்டது. ஹாக்கின்ஸ் கப்பல் கட்டும் துறையில் இருந்த ஊழல்களை அடியோடு ஒழித்தார். ஹாக்கின்ஸ், டிரேக்கைப்போலவே, ஆப்பிரிக்காவிற்கும், அமெரிக் காவிற்கும் இடையே தாம் வியாபாரம் செய்துவந்த காலத்தில் கலங்களைச் செலுத்துவதில் நல்ல அனுபவம் பெற்றிருந்தார். அந்த அனுபவத்தைக்கொண்டு, அக்காலக்கடற்போர் முறைக்கேற்றவாறு புது வகையான கப்பல்களைக் கட்டுவித்தார். ஆனல், பழங்காலக் கடற்போர்முறையில் நம்பிக்கை வைத்திருந்தோர், கப்பல்கள் பெரியனவாகவும் எதிரியால் அழிக்கமுடியாதனவாகவும் இருக்க வேண்டும் என்று கூறினர். அத்துடன் கப்பல்களில் ஏராளமான போர்வீரர்களுக்கு இடம் வேண்டும் என்றும் அவர்கள் வாதித் தனர். எனினும், ஹாக்கின்ஸ் பெரிய, கனமான கப்பல்கள் கட்டு வதை ஏற்கவில்லை. உயரத்தில் குறைவாகவும், அகலத்தைவிட நீளம் அதிகமாகவும், அனேக பீரங்கிகளைக் கொண்டனவாகவும், சுலபமாகச் செலுத்தக்கூடியவுமான கப்பல்களை, எதையும் பொருட் படுத்தாமல் அவர் கட்டிவந்தார். அந்த வகையான கப்பல்கள் ரிவெஞ் (Revenge) என்று அழைக்கப்பட்டன. பல ஆண்டுகளுக் குப்பிறகு அக் கப்பல்கள் ஒருநாள், ஓர் இரவு போர்புரிந்து, ஸ்பெயின் நாட்டுக் கப்பற்படையை வென்றபோது, அக் கப்பல்களை உருவாக்கியவர் புகழப்பட்டனர்.

அக்காலம் துணிகரமான செயல்களுக்குப் பெயர்போனதாக விருந்தது. துணிகரத்தால் உந்தப்பட்டு ஆங்கிலேயர் தூரநாடு களுடன் வியாபாரம் செய்ய முற்பட்டனர். தங்கள் நாட்டிற்கு அருகில் இருந்துவந்த வியாபாரஸ்தலங்களுடன் தொடர்ந்து வியாபாரம் செய்ய முடியாமல் போனதும் அதற்குக் காரணமாய் இருந்தது. எலிசபெத் பட்டமேற்பதற்குச் சில மாதங்களுக்கு முன்னரே, கலே (Calais) துறைமுகத்தை ஆங்கிலேயர் இழந்தனர். அதனால் ஸ்டேபிள் கழகம் தொடர்ந்து கம்பளி வியாபாரத்தை நடத்தமுடியாமற் போய்விட்டது. கம்பளியை ஏற்றுமதி செய்து வந்த வியாபாரிகள், கலே இழக்கப்பட்டதால் பெருத்த நஷ்டத் திற்குள்ளாயினர். அத்துடன் மக்கள், கம்பளியை ஏற்றுமதி செய்வதை முன்போல் ஆதரிக்கவில்லை. கம்பளி ஏற்றுமதி செய் வதற்குப் பதிலாகக் கம்பளி ஆடையைத் தயாரித்து, அவற்றை ஏற்றுமதி செய்வதை ஆதரித்தனர்.

கலே துறைமுகத்துடன் நடந்துவந்த வியாபாரம் நின்றாலும், பழங்காலந்தொட்டு, நெதர்லாந்தில் இருந்த புரூஜ் (Bruges), ஆன்ட்வொர்ப் (Antwerp) ஆகிய பட்டினங்களுடன் நடந்துவந்த வியாபாரம் பாதிக்கப்படவில்லை. இப்பட்டினங்களுக்கு, கம்பளியும், கம்பளி ஆடையும் ஏற்றுமதி செய்யப்பட்டுவந்தன. ஆனால், சில ஆண்டுகளுக்குள் அவற்றுடனும் வியாபாரம் செய்வது நின்றது. ஸ்பெயின் நாட்டின் பிரதிநிதியாகக் கிராவெல் (Grauvelle) என்பார் நெதர்லாந்தை ஆண்டுவந்தார். அவரோடு, எலிசபெத் துக்கும் பிரிவி கவுன்சிலுக்கும் பகை ஏற்பட்டது. அப் பகை மைக்குப் பல காரணங்கள் இருந்தன; ஆங்கிலேயர் ஆங்கிலக் கால்வாயில் கொள்ளையடித்தது; நெதர்லாந்தின் நகரங்களில் வாழ்ந்த பிராடெஸ்டென்டுகளுடன் ஆங்கிலேயர் கொண்டிருந்த நட்பு; ஸ்பெயின் நாட்டவர் கத்தோலிக்க மதம் அல்லாதவற்றை முழுமையும் வெறுத்தது ஆகியவையாகும். அத்துடன் ஸ்பெயின் நாட்டவரும், ஆங்கிலேயரும், ஒருவர் மற்றவரின் பொருளாதார நிலையைக் குலைக்க நினைத்ததுமாகும். ஆங்கிலேயர் கம்பளி ஆடை யில் நெதர்லாந்துடன் செய்துவந்த வியாபாரத்தைத் தடை செய் தால், ஆங்கிலேயரால் கம்பளி ஆடையை வேறெங்கும் விற்கமுடி யாமல் போகும் என்று கிராவெல் நினைத்தார். அத்துடன் அப்படிச் செய்துவிட்டால் ஆங்கிலேயர் கச்சாக் கம்பளியை நெதர்லாந் திற்கு அனுப்பநேரிடும்; அப்போது நெதர்லாந்து மக்கள் கம்பளி ஆடையைத் தாங்களே தயாரிக்கமுடியும் என்றும் கிராவெல் எண்ணி னார். ஆனால், ஆங்கிலேயர், நெதர்லாந்து தங்களுடன் வியாபாரம் செய்வதை நிறுத்திவிட்டால், செல்வத்தில் குன்றிவிடும் என்று நினைத்தனர்.

எலிசபெத்தின் முதல் பத்து ஆண்டுக் காலத்தில் மேற்கண்ட காரணங்களால், இங்கிலாந்திற்கும் நெதர்லாந்திற்கும் இடையே நடந்துவந்த வியாபாரம் நின்றது. இப்படி வியாபாரம் நின்று இருபது ஆண்டுகள் கழித்தே, இங்கிலாந்திற்கும் ஸ்பெயினுக்கும் போர் மூண்டது. நெதர்லாந்துடன் வியாபாரம் செய்யமுடியாத தால், ஆங்கிலேயர் ஹாம்பர்க் (Hamburg) துறைமுகத்தின்மூலம் தங்கள் பொருள்களை ஐரோப்பாவிற்குக் கி. பி. 1567-ல் அனுப்பத் தொடங்கினர். ஆனால், இது தொடங்கிப் பத்து ஆண்டுகள் கழித்து, ஹன்சே நகரங்களின் (Hanse Towns) பொருமையாலும், போட்டியாலும் ஆங்கிலேயர் ஹாம்பர்குடன் வியாபாரத் தொடர்பு கொண்டிருக்க முடியாமற் போயிற்று.[1]

இவற்றின் காரணமாக, ஆடை தயாரிக்கும் தொழிலில் ஈடுபட்டிருந்த தொழிலாளர் அடிக்கடி தங்கள் வேலையை இழக்க நேரிட்டது. சிறிது சிறிதாகப் புதிய வியாபாரஸ்தலங்களை ஆங்கிலேயர் தேடிக்கொண்டனர். லண்டனில் புதிது புதிதாக வியாபாரக் குழுக்கள் தோன்றின. அவை, ரஷ்யா, பிரஷ்யா, (Prussia), பால்டிக் கடற்பிரதேசம், டர்கி (Turkey), லெவான்ட் (Levant) என்று அழைக்கப்பட்ட கிழக்கு மத்தியதரைக்கடல் பிரதேசம் ஆகியவற்றுடன் வியாபாரத் தொடர்பை ஏற்படுத்தின. ரஷ்யாவிலுள்ள நதிகளின் மார்க்கமாக ஆங்கிலேயர் பாரசீகத்தை (Persia) அடைந்தனர். அதேபோல் நன்னம்பிக்கை முனை (Cape of Good Hope) வழியாக இந்தியாவை அடைந்தனர். கி.பி. 1600-ல் எலிசபெத், கிழக்கிந்தியக் கம்பெனிக்கு (East India Company) ஒரு சாசனத்தை அளித்தார். நெதர்லாந்துடன் செய்துவந்த வியாபாரம் நின்றதனுல் சீர்குலையவிருந்த ஆங்கிலேயரின் வியாபாரம், புதிய நாடுகளுடன் ஏற்பட்ட வியாபாரத் தொடர்பினுல் பிழைத்துக் கொண்டது. லண்டன் நகரத்து வியாபாரிகளின் துணிகரமும், மாலுமிகளின் துணிகரமும் வியாபாரம் சீர்குலையாமற் பெருகியதற்குக் காரணமாய் இருந்தன.

கி. பி. 1589-ல் ஹாக்லூட், தாம் எழுதிய 'பிரயாணங்கள்' (Voyages) என்ற நூலை வால்ஷிங்ஹாம் (Walshingam) என்பவருக்கு அர்ப்பணித்தார். அதில் அவர் கீழ்கண்டவாறு பெருமையுடன் குறித்துள்ளார்.

[1] இ. இ. ரிச் என்பார், தம்முடைய 'தி ஆர்டினன்ஸ் புக் ஆஃப் தி மர்சென்ட் ஆஃப் தி ஸ்டேபிள்', என்ற நூலில் நெதர்லாந்துடன் வியாபாரத் தொடர்பு முறிந்ததையும் அதன் விளைவுகளையும் எடுத்துக் காட்டியுள்ளார். (E. E. Rich, the ordinance book of the Merchants of the Staple (1937), chap. IV.

'எலிசபெத்திற்குமுன் இங்கிலாந்தை ஆண்ட அரசர்கள் தங்கள் கொடியைக் காஸ்பியன் கடல் (Caspian Sea) பிரதேசத்தில் பறக்கவிட்டதில்லை. எலிசபெத்திற்குமுன் ஆண்ட அரசர்களில் எவர், எலிசபெத்தைப்போல், பாரசீக சக்ரவர்த்தியுடன் தொடர்பு கொண்டு ஆங்கிலேய வியாபாரிகளுக்கு வியாபார உரிமையை வாங்கிக் கொடுத்தனர்? இதுவரை யாராவது கான்ஸ்டான்டி நோபிளில் இருந்த துருக்கி நாட்டுச் சுல்தானின் அரண்மனை வாயிலில் ஆங்கிலேயப் பிரபுவைக் கண்டதுண்டா? சிரியாவில் (Syria) இருந்த டிரிபோலி (Tripoli), அலெப்போ (Aleppo), பாபி லன் (Babylon) பகாரா (Bakara) ஆகிய நகரங்களில் இதற்குமுன், ஆங்கிலேயரின் உரிமைகளைக் கவனித்துக்கொள்ள ஆங்கிலேய அதிகாரிகள் இருந்ததுண்டா? இதற்குமுன் ஆங்கிலேயர் கோவாவை (Goa) அடைந்தனர் என்று கேள்விப்பட்டதுண்டா? தென் அமெரிக்காவில் இருக்கும் பிளாடா (Plata) நதியின் முகத் துவாரத்தில் இதுவரை ஆங்கிலேயரின் கப்பல்கள் நங்கூரம் பாய்ச்சியிருந்ததுண்டா? மகெலான் (Magellan) ஜலசந்தியில் ஆங்கிலேயரின் கப்பல்கள் போய்த் திரும்பிவந்ததுண்டா? புதிய ஸ்பெயினின் (New Spain-South America) பின்பாகக் கடற்கரை யையும், சிலி (Chile), பெரு (Peru) ஆகிய நாடுகளின் கடற்கரை யையும் ஆங்கிலேயரின் கலங்கள் இதுவரை தொட்டதுண்டா? பசிபிக் மகாசமுத்திரத்தைக் கடந்து லூசோன் (Luzone) தீவில் இறங்கி, பிறகு மொலுகஸ் (Maluccas), ஜாவா (Java) முதலிய நாட்டு அரசரிடம் உரிமைகள் பெற்று, பான் (Bon) முனையைச் சுற்றி, செயின்ட் ஹெலினு (St. Helena) தீவில் இறங்கி, அங்கிருந்து சைனுவில் கிடைத்த பொருள்களுடன் ஆங்கிலேயர், இவ் வரசியின் காலம்வரை தம்நாடு திரும்பியதுண்டா?'

எலிசபெத்தின் ஆட்சிக்காலத்தினிறுதியில் ஆங்கிலேயரின் வியாபாரமும் செல்வமும் பெருகிவந்தன. அத்துடன் ஆங்கிலேய ருடன் பழங்காலந்தொட்டுப் போட்டியிட்டுவந்தவர்கள் சீர் குலைந்து கொண்டிருந்தனர்.

ஸ்பெயினுக்குச் சொந்தமான நெதர்லாந்தின் செல்வநிலை, ஆங்கிலேயர் வியாபாரம் செய்யாமல் நிறுத்தியதால்மட்டும் சீர் குலைந்திருக்கமுடியாது. ஆங்கிலேயர் வியாபாரத்தை நிறுத்திய பின், ஆல்வா (Alva) என்பார் ஸ்பெயினின் பிரதிநிதியாக ஆண்டு வந்தபோது, மதத்தின் காரணமாக, பிராடஸ்டென்டுகள் பலவகை யிலும் துன்புறுத்தப்பட்டனர். அத்துடன் நெதர்லாந்து மக்கள், ஸ்பெயின் நாட்டவரை எதிர்த்துப் போரிடத் தொடங்கினர். இவை களின் விளைவாக, ஐரோப்பாவிலேயே சிறந்த வியாபார ஸ்தல

மாகவும், செல்வத்தில் கொழித்த நகரமாகவும் இருந்தவந்த ஆன்ட் வொர்ப் (Antwerp) நகரம் தன் நிலேயில் இருந்து சரிந்தது. ஸ்பெயினே எதிர்த்த ஆம்ஸ்டர்டாமும் (Amsterdam) அதைப் போன்ற மற்ற டச்சு நகரங்களும் செல்வத்தில் பெருகத் தொடங்கின. கொஞ்சகாலத்திற்குள் டச்சு மாலுமிகள் ஆங்கி லேயருடன் உலகில் எல்லாப் பாகத்திலும் போட்டியிடவிருந்தனர். ஆனல், எலிசபெத்தின் ஆட்சிக்காலத்தில் டக்சுக்காரர்கள் வியா பாரத்தில் போட்டியிடுபவராக இருப்பினும், ஆங்கிலேயர் மற்ற நாடுகளுடன் போரிடுவதில் டச்சுக்காரர்களின் உதவியை எதிர் பார்த்தனர்.

கீழை நாடுகளுடன் வியாபாரம் செய்துவந்த இத்தாலிய நகரங்கள் சீர்குலேந்துவந்தன. கீழை நாடுகளின் பொருள்கள் நிலமார்க்கமாகக் கிழக்கு மத்தியதரைக்கடல் பிரதேசங்களே வந்து சேரும். அங்கிருந்து இத்தாலிய வியாபாரிகள் அப் பொருள்களேக் கலங்களில் கொண்டுவந்து ஐரோப்பிய நாடுகளில் விற்பர். கீழை நாடுகளில் இருந்து நிலமார்க்கமாகப் பொருள்களேக் கொண்டு வருவதில் அனேக சிக்கல்கள் இருந்தன. அப் பொருள்களேக் கொண்டுவருவது மேலும்மேலும் சிரமமாகிக்கொண்டு வந்தது. அதனல் இத்தாலிய வியாபாரிகளின் வியாபாரம் மிகவும் பாதிக்கப் பட்டது. அத்துடன் போர்த்துக்கீசியர், டச்சுக்காரர், ஆங்கிலேயர் ஆகியோர் நன்னம்பிக்கை முனே வழியே சென்று கீழை நாடுகளே அடைந்தனர். அவ் வழியே கீழைநாட்டுப் பொருள்களே ஐரோப் பாவிற்குக் கொண்டுவந்து, இத்தாலிய வியாபாரிகளுக்குப் போட்டி யாக வியாபாரம் செய்தனர். இத்தாலிய வியாபாரிகளின் வியா பாரம் பாதிக்கப்பட்டதற்கு அதுவும் ஒரு காரணமாக விருந்தது; இத்தாலிய வியாபாரிகள் ஐரோப்பா முழுவதிலும் செய்துவந்த வியாபாரத்தைக் குறைத்துக்கொள்ள வேண்டியிருந்தது. வெனிஸ் (Venice) நகர வியாபாரிகள் இங்கிலாந்துடன் கொண்டிருந்த வியாபாரத் தொடர்பை நிறுத்திக்கொண்டனர். அதுவரை இங்கி லாந்தில் இருந்து காட்ஸ்வோல்டு (Cotswold) என்ற இடத்தில் தயாரிக்கப்பட்ட கம்பளியை வாங்கிவந்தனர். கடைசியாகக் கி.பி. 1587-ல் வெனிஸ் நகர வியாபாரிகள் சௌதாம்டனுக்கு (Southampton) அனுப்பிய கப்பல் நீடில்ஸ் (Needles) என்ற இடத்தில் மூழ்கியது. அத்துடன் இத்தாலிய நகரங்கள் ஐரோப்பா முழுவதும் இடைக்காலத்தில் நடத்திவந்த வியாபாரம் முடிவிற்கு வந்தது. மேலும், இத்தாலியும் இங்கிலாந்தும் கொண்டிருந்த வியாபாரத் தொடர்பும் நின்றது. சௌதாம்ப்டன் அதுவரை இத்தாலிய வியாபாரிகளின் கிடங்கைப் (depot) போல் இருந்து வந்தது. இத்தாலிய வியாபாரிகள் இங்கிலாந்துடன் நடத்திவந்த

வியாபாரத்தை நிறுத்தியதனால், சௌதாம்ப்டன் செல்வநிலையில் குறைந்தது. லண்டன் மேலும் செல்வத்தில் பெருகத் தொடங்கியது. மத்தியதரைக்கடல் பிரதேசத்தில் இருந்தும், கீழை நாடுகளில் இருந்தும் பொருள்கள், ஆங்கிலேயரின் கப்பல்களில் லண்டனுக்குக் கொண்டுவரப்பட்டதே அதற்குக் காரணம்.

அடுத்த நூற்றாண்டில் புகையிலை வியாபாரம் முக்கியத்துவம் அடைந்தது. அவ் வியாபாரத்தின் காரணமாக ஆங்கிலேயர் மற்ற நாடுகளில் குடியேறி வந்ததும் பெருகியது. பிரிஸ்டல் (Bristol) நகரம் செய்துவந்த வியாபாரமும் விரிவடைந்தது. ஆனால், எலிசபெத்தின் ஆட்சிக்காலம்வரை ஆங்கிலேயரின் குடியேற்றங்கள் எந்தப் பாகத்திலும் இருக்கவில்லை. எனினும், கி.பி. 1597-லேயே, ஃபிரஞ்சு, ஃபிளமிஷ் (Flemish), கார்னிஷ் (Carnish) மக்களின் கலங்களில், கார்ன்வால் (Cornwall) பிரதேசத்திற்குப் புகையிலை வந்திறங்கியது. இறக்குமதி வரி வசூலித்துவந்த அதிகாரிகளை விரட்டிவிட்டுப் புகையிலையை இறக்குமதி செய்தனர். மண்ணாலான நீண்ட குழாய்களில் வைத்துப் புகைபிடிப்பது எலிசபெத்தின் அந்திய காலத்தில் பழக்கமாய்விட்டது.

வெளிநாட்டு வியாபாரம் பெருகப்பெருக முதலாளித்துவமும் வளர்ந்து வந்தது. பழங்காலத்தில் நகரசபைகளும், தொழிற்சங்கங்களும் வியாபாரத்தைத் தங்கள் கட்டுப்பாட்டில் வைத்திருந்தன. முதலாளித்துவம் அவைகளுக்கு முரணானதாக விருந்தது.

'தொழிற்சங்கம், முதல் (capital) பெருகுவதற்கு உகந்ததாய் இருக்கவில்லை. தாங்கள் உபயோகித்தமுறைகளிலும், கட்டுப்பாடுகளுடன் வாழ்ந்த வாழ்க்கையிலும், இடைக்கால வியாபாரிகளும், தொழிலாளர்களும் பிற்காலத்தவரைவிடச் சிறந்திருந்தனர். ஆனால், தொழிற்சங்கங்கள் குறுகிய நோக்கம் உடையவையாய் இருந்தன. தொழிற்சங்கங்கள் வியாபாரத்தை விரிவாக்கவோ அல்லது மாற்றி அமைக்கவோ ஏற்றவைகளாய் இருக்கவில்லை. அதனால் முதலாளித்துவம் வளர வழியேற்பட்டது. முதலாளிகள் (capitalists) பழங்காலக் கட்டுப்பாடுகளைத் தகர்த்தெறிந்தனர்; வியாபாரத்தில் தனியுரிமை பெற்றிருந்தோருடன் போட்டியிட்டனர். நகரங்களுக்கு வெளியே தொழில்களை ஏற்படுத்தினர். அவரது செய்கை அளவிற்கு மீறியதாய் இருந்தது.' இவ்விதமாக ஃப்வே (Fay) என்பார் குறித்துள்ளார்.[1]

[1] சி ஆர். ஃப்வே, என்பார், 'ஆதம்ஸ்மித்தின் காலம்தொட்டு இந் நாள் வரை - கிரேட் பிரிட்டன்', என்ற நூலில் பக்கம் 127. (C. R. Fay, 'Great Britain from Adam Smith to the present day, p. 127.)

சாசரின் காலத்தில் கம்பளி வியாபாரத்தில் முதலாளித்துவம் ஏற்பட்டதை முன்னர்க் கண்டோம். வெளிநாடுகளுடன் வியாபாரம் செய்யக் கம்பெனிகள் எலிசபெத்தின் ஆட்சிக்காலத்தில் தோன்றிய போது முதலாளித்துவம் வளர்ந்தது. கம்பெனிகளில் இரண்டுவகை தோன்றின. ஒருவிதக் கம்பெனியைச் சார்ந்தவர் தனித்தனியே தங்கள் முதலைக்கொண்டு வியாபாரம் செய்தனர். ஆனால், அவர்கள் வியாபாரம் செய்வதில் கம்பெனியின் விதிகளின்படி செய்ய வேண்டியிருந்தது. இத்தகைய கம்பெனிகள் ரெகுலேடட் கம்பெனிகள் (Regulated Companies) என்று அழைக்கப்பட்டன. 'மர்செண்ட் அட்வென்சரர்ஸ்' (Merchant Adventurers) என்று அழைக்கப்பட்ட கம்பெனியும், பால்டிக், (Baltic), ரஷ்யா (Russia), லெவான்ட் (Levant) ஆகிய நாடுகளுடன் வியாபாரம் செய்துவந்த கம்பெனிகளும் அத்தகையன. மற்றொருவகை கம்பெனி, 'ஜாயின்ட்ஸ்டாக்' (Joint Stock) கம்பெனி என்று அழைக்கப்பட்டது. கிழக்கிந்தியக் கம்பெனி (East India Company) ஆஃப்ரிகன் (African), கம்பெனி ஹட்சன்ஸ் பே (Hudson's Bay) கம்பெனி ஆகியவை இரண்டாவது வகையைச் சார்ந்தவையாய் இருந்தன. இந்த இரண்டாம் வகைக் கம்பெனியில் பலர் தங்கள் முதலை ஒன்றாக வைத்து வியாபாரம் செய்தனர். வியாபாரத்தில் ஏற்பட்ட லாபம் அல்லது நஷ்டத்தைத் தங்களுக்குள் பகிர்ந்துகொண்டனர்.

இருவகைக் கம்பெனிகளுக்கும் அரசாங்கச் சாசனங்கள் வழங்கப்பட்டன. அச் சாசனங்கள் ஒவ்வொரு கம்பெனியும் எந்த பிரதேசங்களோடு வியாபாரம் செய்யவேண்டும் என்பதை நிர்ணயித்தன. அக் கம்பெனிகள் வியாபாரம் செய்துவந்த பிரதேசங்களுடன், கம்பெனிகளைச் சேராத தனி வியாபாரிகள் வியாபாரம் செய்வது தடைசெய்யப்பட்டது. கம்பெனிகள் தாங்கள் வியாபாரம் செய்துவந்த பிரதேசங்களில் கோட்டைகளைக் கட்டிக் கொண்டன. அக் கோட்டைகளையும், தங்கள் வியாபார உரிமைகளையும் காத்துக்கொள்வதற்குப் போர்வீரர்களை அக் கோட்டைகளில் வைத்திருந்தன. இவை காரணமாகக் கம்பெனிகள் மிக்க செல்வத்தைச் செலவழிக்க நேர்ந்தது. அரசரின் கடற்படை, தூர நாடுகளில் இருந்த கம்பெனிகளின் வியாபாரஸ்தலங்களுக்குப் பாதுகாப்புக் கொடுக்க முடியவில்லை. அதனால்தான் கம்பெனிகள் தங்கள் வியாபாரஸ்தலங்களைத் தாங்களே காத்துக்கொள்ள வேண்டியிருந்தது. அதனால் கம்பெனிகளுக்குக் குறிப்பிட்ட பிரதேசங்களில் வியாபாரம் செய்வதற்குத் தனி உரிமை கொடுப்பது அவசியம் என்றும் நியாயமானது என்றும் கருதப்பட்டது. எலிசபெத்தின் ஆட்சிக்காலத்தில் தோன்றிய இரு வகைக் கம்பெனிகளும், விக்டோரியாவின் ஆட்சிக் காலத்தில் நிறுவப்பட்ட

சார்டர்டு கம்பெனிகளைப் (Chartered Companies) பலவகையிலும் ஒத்திருந்தன.

விக்டோரியாவின் ஆட்சிக்காலத்தில் சார்டர்டு கம்பெனிகள் படையை வைத்திருந்தன. அத்தகைய படையைக்கொண்டு தான், ஜேம்ஸன் (Jameson) விக்டோரியாவின் அனுமதியின்றி ஆஃபிரிக்காவினுள் படையெடுத்துச் சென்றார். எலிசபெத்தின் ஆட்சிக்காலத்தில் தூர நாடுகளில் வியாபாரம் செழிக்கவேண்டு மானால், கம்பெனிகள் தங்கள் நலனுக்குத் தேவைப்பட்டவைகளைச் செய்துகொள்ள அனுமதிக்க வேண்டியிருந்தது. கம்பெனி, தான் வியாபாரஸ்தலம் வைத்திருந்த நாடுகளில் சரிவர நடந்துகொள்ள வில்லையானால், அதனால் ஏற்பட்ட விளைவுகள் கம்பெனியைத்தான் பாதித்தன. அந்த விளைவுகள் அரசாங்கத்தை எந்த விதத்திலும் பாதிக்கவில்லை.

கம்பெனிகள் அரசாங்கத்தின் உதவியைச் சிறிதே பெற்றிருந் தன. தம் முயற்சியைக்கொண்டு தங்கள் உரிமைகளையும், வியாபாரத்தையும் காத்துக்கொண்டன. வியாபாரஸ்தலங்களில் ஒழுங்கையும் அமைதியையும் தாங்களே கவனித்துக்கொண்டன. இக் கம்பெனிகள் ஆங்கிலேயரிடையே, தன்முயற்சியையும், தங்களைத் தாங்களே காத்துக்கொள்ளும் சக்தியையும், தங்களைத் தாங்களே ஆண்டு கொள்ளும் திறமையையும் வளர்த்தன. இந்திய நாட்டு வரலாற்றிலும் வடஅமெரிக்காவின் வரலாற்றிலும் இக் கம்பெனிகள் முக்கிய இடம் பெறுகின்றன. ஸ்டூவர்ட், ஹானோவர் வம்சங்களின் ஆட்சிக்காலத்தில் ஆங்கிலேயரின் பண்புகள் வளர்ச்சியடைவதற்கும் காரணமாய் இருந்தன. அத்துடன் அரசியலிலும், சமுதாயத்திலும் மாற்றங்களை ஏற்படுத்தின. எலிசபெத்தின் மரணத்திற்குப்பிறகு ஒரு தலைமுறைக்காலம் கழிந்தபின், பீடர் மண்டி என்பார் (Peter Mundy) ஏழுவகையில், இங்கிலாந்து மற்ற நாடுகளை விஞ்சியிருந்தது என்று குறிப்பிட்டார். அவைகளில், கடல் பிரயாணங்களும், புதிய நாடுகளைக் கண்டு பிடித்ததும் சிலவாகும். பிற நாடுகளுடன் வியாபாரம் செய்யப் பல கம்பெனிகள் தோன்றியிருந்தன. அவை உலகின் பல பாகங் களுக்கும் தங்கள் கப்பல்களை அனுப்பி வியாபாரம் செய்துவந்தன. அத்துடன் நிறுத்திவிடாமல் மேலும் தங்கள் வியாபாரத்தை அதிகரிக்க முயன்றுவந்தன.[1] இடைக்காலத்தில் இங்கிலாந்தின்

[1] மண்டியின் பயணங்கள், நான்காம் தொகுதி, பக்கம் 47-48. கம்பெனி களின் தோற்றத்தைப்பற்றி, லிப்சன் என்பார் எழுதியுள்ள இங்கிலாந்தின் பொருளாதார வரலாற்றில் இரண்டாம் தொகுதியில் காணலாம்.

(Mundy's Travels (Hakluyt Soc. 1924) IV, pp. 47-48. An account of the origin of these companies will be found in vol. II of Lipson's Economic History of England.)

பொருள்களை, இத்தாலியர், ஃபிரெஞ்சுக்காரர், ஜெர்மானியர் ஆகியோர் மற்றப் பாகங்களில் விற்றுவந்தனர். எலிசபெத்தின் ஆட்சிக்காலத்தில் ஆங்கிலேயர் தாங்களே உலகின் பல பாகங் களுக்கும் சென்று பொருள்களை விற்றுவந்தனர்.

ஷேக்ஸ்பியர், எலிசபெத்தின் ஆட்சிக்காலத்தில் தம்முடைய நாடகங்களை எழுதினர். பிற்காலத்தவர் எலிசபெத்தின் ஆட்சியின் சிறப்பிற்கு அதுவே காரணம் என்று நினைக்கின்றனர். ஆனால், அக் காலத்தில் அவர் வாழ்ந்ததுமட்டும் பெரிதன்று. ஷேக்ஸ்பியர், எலிசபெத்தின் ஆட்சிக்காலம், ஸ்டூவர்ட் வம்சத்தின் தொடக்க காலம் ஆகிய காலங்களில் அன்றி வேறு எந்தக் காலத்தில் வாழ்ந் திருந்தாலும் அவரால் சிறந்த நாடகங்களை இயற்றியிருக்க முடியாது. அவர் வாழ்ந்த காலத்தில் இருந்த மக்கள் எண்ணத் திலும், வாழ்க்கையிலும், பேச்சிலும் அவர்கள் இருந்ததுபோல் இல்லாதிருந்தால், ஷேக்ஸ்பியரால் சிறந்த நாடகங்களை இயற்றி யிருக்கமுடியாது. அத்துடன். ஆர்மடா படையெடுப்பிற்குப்பின் லண்டனில் இருந்த நாடகமேடைகள் ஓர் அளவு வளர்ச்சியடை யாமல் இருந்திருந்தாலும், ஷேக்ஸ்பியரால், பிற்காலம் போற்றி விரும்பிப் படிக்கக்கூடிய நாடகங்களைத் தோற்றுவிக்க முடிந்திராது.

ஷேக்ஸ்பியரின் காலத்தில் மக்கள் கதை சொல்வதற்கும், நடிப்பதற்கும் மற்றும் மக்களின் உணர்ச்சியைத் தூண்டுவதற்கும் செய்யுளை உபயோகித்தனர். உரைநடை அவற்றிற்குத் தகுந்த தாக எண்ணப்படவில்லை. ஷேக்ஸ்பியர் தம் நாடகங்களைச் செய்யுளில் இயற்றினர் என்றால் அதில் வியப்பொன்றும் இல்லை. அக் காலத்தில் பத்திரிகைகளும் நாவல்களும் நகரத்திலும், கிராமங் களிலும் விற்கப்படவில்லை. அதற்குப்பதிலாகக் கதைப்பாட்டுக் களும், பாட்டுக்களும் நகரத்தின் தெருக்களிலும் கிராமங்களிலும் விற்கப்பட்டுவந்தன. ஆட்டோலிகஸ்சும் (Autolycus) அவர் தம் தோழர்களும், கதைப்பாட்டுப் புத்தகங்களையும், பாட்டுப் புத்தகங் களையும் விற்றுவந்தனர். எண்ணிறந்த கதைப்பாட்டுகள் எழுதப் பட்டு வெளியிடப்பட்டன. பைபிள் கதைகளைக்கொண்டு சில கதைப்பாட்டுகள் எழுதப்பட்டிருந்தன. பழங்காலக் கதைகளைக் கொண்டும், வரலாற்று நிகழ்ச்சிகளைக்கொண்டும், எண்ணிறந்த கதைப்பாட்டுகள் எழுதப்பட்டன. சில அக் காலத்தே நடந்த நிகழ்ச்சியைச் சித்திரிக்கும் கதைப்பாட்டுகளாக விருந்தன. உதாரணமாக, ஆர்மடா படையெடுப்பு, வெடி மருந்துச் சதி (Gunpowder Plot) ஆகிய நிகழ்ச்சிகள் கதைப்பாட்டுகளாக உருவெடுத்தன. சில அக் காலத்தே நிகழ்ந்த கொலை அல்லது ஊரைவிட்டுக் காதலர்கள் ஓடியது ஆகிய நிகழ்ச்சிகளைச்

சித்திரிக்கும் கதைப்பாட்டுகளாக இருந்தன. தன் உணர்ச்சிப் பாடல்களும், காதல் கவிதைகளும் சாதாரணமாக மக்களால் பாடப்பட்டுவந்தன.

ஷேக்ஸ்பியர் தமது முதல் நாடகத்தை இயற்றுவதற்கு இருபது ஆண்டுகளுக்குமுன், நாடகங்கள் புதுமுறையில் நடிக்கப்பட்டன. அதற்கேற்ப நாடகங்களை நாடகாசிரியர்கள் எழுதத் தலைப் பட்டனர். அத்தகையோரில் மார்லோ (Marlowe) தலைசிறந் தவராவார். நடிப்பதில் பயிற்சிபெற்ற நடிகர்களைக்கொண்ட நாடகக் கழகங்கள் தோன்றியிருந்தன. இடைக்காலத்தில் கோமாளியும், ஊர் ஊராகச்சென்று நடித்துவந்தவரும் மிகைப் பட நடித்தனர். ஆனால், மேற்கண்ட நாடகக் கழகங்களைச்சார்ந்த நடிகர்கள் இயற்கையாகவும் அடக்கமாகவும் நடித்தனர். இத் தகைய நடிப்பிற்குப் பர்பீஜ் (Burbage) பெயர் பெற்றார். இந் நடிகர்கள் பலவித உணர்ச்சிகளையும் திறம்பட வெளிப்படுத்தினர். இந் நடிகர்களுடன் சிறுவர்களும் இருந்தனர். அவர்கள் இளவயதி லிருந்தே பெண்வேடம் தாங்குவதற்குப் பயிற்சியளிக்கப்பட்டிருந் தனர். அச் சிறுவர்களும், திறமையுடனும் உற்சாகத்துடனும் நடித்தனர்.

எலிசபெத்தின் ஆட்சிக்காலத்தினிடையில் நடிகரும் நாடகா சிரியரும், கவுரவமாகவும் செல்வராகவும் வாழ்வதற்கு வழி பிறந்தது. ஊர் ஊராகச் சுற்றிவந்த நாடகக் கழகங்களுக்குக் கல்வியறிவில் சிறந்திருந்த பிரபுக்கள் ஆதரவு கொடுத்தனர். பிரபுக் களின் கோட்டைகளிலும், பண்ணைவீடுகளிலும் நாடகக் கழகங் களுக்கு நல்ல வரவேற்பு இருந்தது. அவ்விடங்களில் இருந்த கூடங்கள் அல்லது நீண்ட தாழ்வாரங்களில் நாடகங்கள் நடிக்கப் பட்டன. லண்டனை அடுத்து தேம்ஸ் நதிக்கரையோரம் சவுத் ஊர்க் (Southwark) என்ற இடத்தில் இருந்த புல் வெளிகளில் அமைக்கப்பட்டிருந்த நாடகக் கொட்டகைகள் பெயர் பெற்றிருந் தன. அங்கே நடத்தப்பட்ட நாடகங்களைக் காணச் சாதாரண மக்களும், நாடகத்தின் அருமையை உணரக்கூடியவரும், குறை களைக் கண்டுபிடிக்கக் கூடியவருமான மக்களும் திரளாக வந்தனர். லண்டன் நகரவாசிகள் தங்கள் மனைவியருடனும், தொழில் கற்று வந்தோர் தங்கள் காதலிகளுடனும், லண்டன் பாலத்தைக் (London Bridge) கடந்து நாடகங்களைக் காணவந்தனர். உயர்ந்த குடும்பத்தினரும் நடையுடை பாவனைகளில் புதுமையை விரும்பி யவரும் ஒயிட் ஹாலில் (White hall) இருந்து, தேம்ஸ் நதி யைப் படகுகொண்டு கடந்துவருவர். இன்ஸ் ஆஃப் கோர்ட் (Inns of Court) எனப்பட்ட வழக்கறிஞர்களின் இருப்பிடங்களில்

இருந்து, இளம் வயதினரான வழக்கறிஞர்கள், நாடகத்தைப் பார்க்கவந்தனர்.

நாடகங்கள் பகலில் நடத்தப்பட்டன. திரைகளோ அல்லது விளக்குகளோ இருக்கவில்லை. நாடகமேடை திறந்தவெளியில் இருந்தது. நாடகம் பார்க்க வந்தோரில் முக்கியமானவர்கள் சாய்ந்துகொள்வதற்கு வசதியற்ற நாற்காலிகளில், நடிகர்களின் அருகில் அமர்ந்துகொள்வர். மற்றவர் திறந்தவெளியில் நின்று கொண்டு தலையை உயர்த்தியபடி இருந்து நாடகத்தைப் பார்ப்பர். வட்டவடிவமாக அமைக்கப்பட்டிருந்த நாடக அரங்கைச் சுற்றி இருந்த, கூரைவேயப்பட்டிருந்த தாழ்வாரங்களில் இருந்தும் மக்கள் நாடகத்தைப் பார்த்தனர். தாழ்வாரங்களில் பல வகுப்பைச் சேர்ந்த மக்கள் ஒன்றுகக் கூடியிருப்பர். அத்தகைய பல வகுப்பைச்சார்ந்த மக்களையும் மகிழ்விக்கும் வகையில் ஷேக்ஸ்பியர் நாடகங்களை இயற்ற வேண்டியிருந்தது.

நாடகத்தைப் பார்க்கவந்தவர் நல்ல கதை, ஆடம்பரம், கூச்சல், முரட்டுத்தனம், கோமாளித்தனம், நகைச்சுவை, உயர்ந்த இசை, உணர்ச்சியைத் தூண்டக்கூடிய செய்யுள் ஆகியவற்றை விரும்பினர் என்பதை ஷேக்ஸ்பியர் அறிந்துகொண்டார். இவை யனைத்தையும், மார்லோவும் அவரைச்சார்ந்தவரும் தங்கள் நாடகங்களில் இடம்பெறச் செய்திருந்தனர். ஷேக்ஸ்பியர். இவையனைத்தையும் தம் நாடகங்களில் இடம்பெறச் செய்து, இருபது ஆண்டுக்காலத்தில் நாடகங்களைச் சிறந்த நிலைக்குக் கொண்டுவந்தார்.

ஷேக்ஸ்பியரின் செய்யுள், மார்லோவின் செய்யுளைவிட உயர்ந்ததாய் இருந்தது. செய்யுளில் இருந்ததைப்போலவே அழகாக உரையாடலை உரைநடையிலும் அவர் இயற்றினுர். நாடகப் பாத்திரங்களின் குணநலன்கள் உள்ளத்தில் ஊன்றும் வகையில் நாடகங்களை ஷேக்ஸ்பியர் உருவாக்கினுர். கதையும், நிகழ்ச்சிகளும் பாத்திரங்களின் குணநலன்களுக்கு ஏற்றவாறு அமைக்கப்பட்டன. உதாரணமாக ஹாம்லெட் (Hamlet) நாடகத் தைக் கூறலாம். ஷேக்ஸ்பியரின் நாடகப் பாத்திரங்கள் உண்மை யிலேயே வாழ்ந்த ஆண்களும் பெண்களும் என நினைக்கும்படி நாடகங்களில் தோன்றுகின்றனர். இருநூறு ஆண்டுகளுக்குப் பின்னும் அவர் நாடகங்கள் நம்முடன் நிலைத்துவிட்டன. அவரு டைய நாடகங்கள், நாடகங்களாக நடத்தப்படுவதற்கு மேலாக, இலக்கியமாகப் படிக்கப்பட்டு வருகின்றன. இலக்கியங்களாகப் படிக்கப்பட்டாலும், நம் மனக்கண்முன்னே நாடகப் பாத்திரங்கள் மேடையில் தோன்றுவதுபோல் தோன்றி நடித்துக்காட்டுகின்றனர்.

எலிசபெத்தின் ஆட்சிக்காலத்தில் நாடகமேடை வளர்ச்சியடைந்திராவிட்டால், ஷேக்ஸ்பியரால் சிறந்த நாடகங்களை உலகிற்குத் தந்திருக்கமுடியாது என்று கூறலாம். அதனால் எலிசபெத்தின் ஆட்சிக்கால நாடகமேடையும், அக் காலத்தில் இங்கிலாந்தில் வாழ்ந்த மக்கள் நிலையும் போற்றற்குரியவையாய் இருக்கின்றன.

தற்காலத்தில் சமுதாய வரலாறுகளை எழுதும் வரலாற்று அறிஞர்களால் பழங்காலத்தில் வாழ்ந்த மக்கள், அவர்கள் எப்படி வாழ்ந்தனரோ அப்படியே சித்திரித்துக்காட்ட இயலாது. அவர்களால் செய்யமுடியாததை ஷேக்ஸ்பியர் செய்துகாட்டுகிருர். அவர் நாடகங்களில் அக் காலத்திலே வாழ்ந்த ஆண், பெண் இருபாலாரையும்பற்றி அறிகிரேும். இருபாலாரிடையே இருந்த உறவைப்பற்றியும், சமுதாயத்தில் பெண்களின் நிலையையும், எலிசபெத்தின் ஆட்சிக்காலத்தில் வாழ்ந்த பெண்களின் குணநலன்களையும், சமுதாய வரலாற்றிலே காண்பதைவிடத் தெளிவாகவும் அதிகமாகவும் ஷேக்ஸ்பியர் எடுத்துக்காட்டுகிருர்.

இங்கிலாந்தின் இடைக்காலத்திற்குப் பிந்திய வரலாற்றை அறிவதற்கு இலக்கியம் உதவிபுரிகிறது. இலக்கியங்களில், ஆண்கள், பெண்கள் ஆகியோரின் எண்ணங்கள், பேச்சு, செயல் ஆகியவற்றைப்பற்றி நூலாசிரியர்கள் எழுதியுள்ளனர். அவர்கள் தாங்கள் வாழ்ந்த காலத்தில் மக்கள் இருந்த நிலையையே தங்கள் நூல்களில் பிரதிபலிக்கின்றனர். இதன் காரணமாக, அத்தகைய இலக்கியங்கள் வரலாற்று நூல்களாக மதிக்கப்படவேண்டியவை ஆகின்றன. பதினேழாம் நூற்ருண்டிலே நெருங்கிய ஒருவரின் வாழ்க்கைக் குறிப்புகளையோ, வாழ்க்கை வரலாற்றையோ எழுதுவது சாதாரணமாகிக் கொண்டுவந்தது. இதற்கு உதாரணமாக இவ்லின் (Evelyn), பெப்பி (Pepy), பாஸ்வெல் (Boswell) ஆகியோரின் நூல்களை எடுத்துக்காட்டலாம். அவைகளும், ஃபீல்டிங் (Fielding), ஜேன் ஆஸ்டின் (Jane Austen) ட்ரோலூப் (Trollope), ஆகியோரின் நாடகங்களும் நாவல்களும், இவர்களைப்போல் நூற்றுக்கணக்கான நூலாசிரியர்கள் எழுதிய நூல்களும் சமுதாய வரலாற்றை அறிய உதவுகின்றன.

எவர் ஒருவர் தம் முன்னேர்களின் வாழ்க்கையைப்பற்றி அறிய ஆவல் கொள்கிருரோ, அவர் இலக்கியங்களை எடுத்துப் பார்ப்பாரேயானுல், அவருக்கு வற்ருத இன்பமும், அறிவும் பெருகும். அவ் விலக்கியங்களை எழுதிய ஆசிரியர்கள், ஒரு காலத்தில் தங்கள் இலக்கியங்கள் வரலாற்று நூல்களாகக் கருதப் படும் என்று நினைத்திருக்கமாட்டார்கள். அத்தகைய இலக்கியங்களில் சிறந்து நிற்பவை ஷேக்ஸ்பியரின் நாடகங்களாகும்.

# பொருட்குறிப்பு அகராதி

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 9 | 28 | ஆபட்டிகள் | ஆபட்டுகள் |
| 12 | 38 | குத்தகை | குத்தகையாகக் |
| 26 | குறிப்பு-7 | ரிசர்ச் | ரிமார்க்ஸ் |
| 27 | 31 | நாட் | நாட்டிய |
| 32 | 34 | கவலேகளேயும் | வலேகளேயும் |
| 41 | 19 | கொண்டன | கொண்டது |
| 42 | 30 | தாங்கள் | தங்கள் |
| 45 | 6 | அகதி | அதிக |
| 49 | 8 | அல்லது | அல்லாது |
| 57 | குறிப்பு-1 | தற்காலத்தில் | என்று தற்காலத்தில் |
| 62 | 33 | பாதிரியாரிடம்தான் | அத்தகைய பாதிரியாரிடம்தான் |
| 63 | 6 | பிற பாதிரியாரை | (இச் சொற்களே நீக்கவும்) |
| 64 | குறிப்பு-3 | என்ற | எழுதிய |
| 65 | 4 | நகரத்தில் | நரகத்தில் |
| 70 | 20 | சாப்சனேப்போல் | சாம்சனேப்போல் |
| 75 | 34 | — | (இருந்து வந்தன என்ற வார்த்தைக்குப் பிறகு இச் சொற்களேச் சேர்க்கவும்- 'துறவியின் வாழ்க்கையை மேற்கொண்ட பாதிரியார்களும்',) |
| 110 | 18 | தலேமுறை | தலேமுறைக்கு |
| 110 | 23, 24 | சொத்துகளேயும் | சொத்துகளே |
| 128 | 20 | அறிந்தான் | அளித்தான் |
| 131 | 33 | மக்கள் | (இச் சொல்லே நீக்கவும்) |
| 136 | 25 | தற்காலத்தின் | தற்காலம் |
| 137 | 20 | ராவி | ராலே |
| 148 | 20 | நாணயத்திள் | நாணயத்தின் |
| 158 | 12 | இளேஞரான | இளேஞராக |

| | | | |
|---|---|---|---|
| 161 | 21 | ஆஷாம் | ஆசாம் |
| 165 | 20 | ஏற்பட்ட ஆரம்பத்திலேயே | தொடங்கியபோதே |
| 198 | 15 | மாற்றப்பட்டு மதுவாக | மதுவாக மாற்றப்பட்டு |
| 199 | 37 | செடர் | சீடெர் |
| 209 | 8 | — | (வேல்சில் என்ற சொல்லை அடுத்து இவற்றைச் சேர்க்கவும் — 'பெரிய பண்ணைகள் இருக்கவில்லை') |
| 214 | 22 | கில்பன் | கில்பின் |
| 221 | 18 | ரூஸ்பரியில் | ஷ்ரூஸ்பரியில் |
| 221 | 33 | சத்திரங்களிலும் | சத்திரங்களில் |
| 222 | 37 | ஏறிவிட்டாடர் | ஏறிவிட்டார் |
| 226 | 23 | நலம்படைத்த | நிலம்படைத்த |
| 231 | 35 | ஃப்ருவாசார்ட் | ஃப்ருவாசார் |
| 234 | 2, 3 | போட்களில் | போட்டிகளில் |

